# புதிய எருசலேம் செய்தி

எக்காளசத்தம் - 13 ❋ ஜனவரி 1985



"புதிய எருசலேம் சபை"

"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ, நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள்.... விழித்திருங்கள்...உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்..."

மாற்கு 13 : 35-37

**EDITOR: CHIEF PASTOR N. LAZAR**

BOMBAY, INDIA

# பத்திரிகையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லோரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒருமனப்பட்டு கிறிஸ்துவுக்கேற்பான பூரண வளர்ச்சியடையும் படியாகவும் தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய்க் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும்; சபையானது வஞ்சக போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும் படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது.

(எபே.4:11-16)

## இதழின் உள்ளே



"புதிய எருசலேம் செய்தி" ஆவிக்குரிய பத்திரிகை வேண்டுபவர்கள் ஆண்டு சந்தா ரூ 10-00 மணியாடர் செய்து தங்கள் பெயரை பதிவு செய்து பெற்றுக் கொள்ளலாம்.

வெளிநாட்டு சந்தா ரூ 75. 00

# ஆசிரியர் உரை

"ஆதியிலே வார்த்தை இருந்தது, அந்த வார்த்தை தேவனிடத்தில் இருந்தது". ஆதியிலே தேவனிடத்தி லிருந்த வார்த்தை காலாகாலங்களிலிருந்த பரிசுத்தவான் களுக்கு வெளிப்பட்டு, எழுதப்பட்டு நமது கையில் ஒரு புத்தகமாக (Bible) வந்து கிடைத்துள்ளது. இந்த வார்த் தையே நமக்கு ஜீவனாக இருக்கிறது. ஜீவன் கொடுக்கிற தாக இருக்கிறது. இதாலன்றி நமக்கு வேறொருகதியில்லை. இது பூரணமானதும், திருப்தியாகவும் இருக்கிறது. இம்மைக்கும் மறுமைக்கும் வேண்டிய யாவற்றையும் இந்த வேதவாக்கியங்கள் மூலம் பெற்றுக்கொள்ளலாம். ஆகையால் தேவ ஊழியர்கள் இந்த வசனங்களையே (வேதாகமத்தி லுள்ள) பிரசங்கம் பண்ணவேண்டும். பாரம்பரியங்களையோ, சொந்த அல்லது மனிதர்களுடைய கருத்தையோ, அவி சுவாசத்தையோ பேசக் கூடாது. வசனத்தைப் பிரசங்கித் தால் தேவன் தம்முடைய கிருபையுள்ள வசனத்துக்கு சாட்சியாக அற்புதங்களையும், அடையாளங்களையும் நடப்பிப் பார் (அப். 14 : 3). அவர்கள் புறப்பட்டு போய் எங்கும் பிரசங்கம் பண்ணினார்கள். கர்த்தர் அவர்களுடனே கிரியை நடப்பித்து, "அவர்களால் நடந்த அடையாளங்களால் வசனத்தை உறுதிப்படுத்தினார்." ஆமென்! மாற் 16 : 20 ன்படி ஆகும். தேவனுடைய பிள்ளைகளே! வசனத் தையே பின்பற்றுங்கள். போலி கதைகளையும், கர்ண பாரம் பரியங்களையும் நம்பாதிருங்கள். பொய்யான அற்புத அடை யாளங்களையும் நம்பாதிருங்கள். கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் உங்களுக்கு நவ வருட வாழ்த்து தல்களைக் கூறிக்கொள்ளுகிறேன்.

கிறிஸ்துவுக்குள்,

N. Lazar

Chief Pastor N. LAZAR

# நீங்கள் பரிசுத்தாவியின் அபிஷேகம் பெற்றுவிட்டீர்களா?

சகோதரரே, நாங்கள் (பரிசுத்த ஆவியைப் பெற) என்ன செய்ய வேண்டும் என்றார்கள் (அப். 2 : 37). பரிசுத்த ஆவியைப் பெற என்ற வார்த்தை வேதாகமத்தில் இல்லை. ஆனால், அவர்கள் கேட்டது பரிசுத்த ஆவியைப் பெறவே கேட்டனர் என்பதை அப். 2 : 1-39 முடிய கவனமாய் வேதத்தைப் படிப்பவர்கள் உணர்ந்து கொள்ளலாம்.

நான் என்ன செய்ய சித்தமாயிருக்கிறீர் என்று சவுல் கேட்டார் (அப். 9 : 6). நான் இரட்சிக்கப்பட என்ன செய்ய வேண்டும் என்று சிறைச்சாலைக்காரன் கேட்டான் (அப்.16 : 30).

(1) கர்த்தராகிய இயேசுவானவர் தமக்கு விரோதமாய் தன்னுடைய சபைக்கு விரோதமாய் தன்னுடைய சித்தத்திற்கு விரோதமாய் தன்னுடைய பிள்ளைகளை தமஸ்குவில் கட்டி உபத்திரவப்படுத்த புறப்பட்டுள்ள தீவிர எதிரியான சவுலை இறைவன் இயேசு தரிசனமாகி ஆட்கொண்டார். சவுலின் முந்தியவழி தடைபட்டது. இப்பொழுது இயேசுவை விசுவாசித்து ஏற்றுக்கொண்ட சவுல் அவருக்கு தன்னுடைய மீதியான வாழ்க்கையை ஒப்புவித்து "ஆண்டவரே, நான் என்ன செய்ய சித்தமாயிருக்கிறீர்" என்றான் (அப்.9 : 1—6). அவனுக்கு கொடுக்கப்பட்ட கட்டளை: நீ பட்டணத்துக்குப் போ, நீ செய்ய வேண்டியது அங்கே உனக்குச் சொல்லப்படும் என்பதே. சீஷனாகிய அனனியா வந்து சவுல் செய்ய வேண்டியதைச் சொன்னார் (அப். 9 : 17; 22 : 12—16).

(2) சிறைச்சாலையில் அற்புதம் கண்ட சிறைச்சாலைக்காரன் ஆண்டவமாரே! நான் இரட்சிக்கப்பட என்ன செய்ய வேண்டும் என்று கேட்டதற்கு, கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசி அப்பொழுது நீயும் உன் வீட்டாரும் இரட்சிக்கப்படுவீர்கள் என்று சொல்லி, அன்று இரவே அவனுக்கும் அவன் வீட்டாருக்கும் ஞானஸ்நானமும் கொடுக்கப்பட்டது (அப், 16 : 30—33).

(3) மூன்றாவது சம்பவம் பெந்தெ-கொஸ்தே நாளில் பரிசுத்த ஆவியானவரால் அபிஷேகம் பெற்று, பரிசுத்த ஆவியால் நிரப்பப்பட ஆதிசபையாரின் அநுபவத்தைக் கண்ணால் கண்டு காதால் கேட்டு பிரமித்து நின்றவர்களுக்கு அப். பேதுரு பதினொருவருடன் கூட எழுந்து நின்று பிரசங்கித்தார். பிரசங்கத்தின் பொருள்: இது மதுபான வெறியல்ல. யோவேலின் தீர்க்கதரிசனப்படி பரிசுத்த ஆவி ஊற்றப்படுகிறது. நீங்கள் இயேசுவை கொலை செய்தீர்கள் ஆனால் தேவனே அவரை உயிரோடே எழுப்பினார். அதற்கு நாங்கள் சாட்சிகள். அவரைத் தேவன் உயர்த்தி தம்முடைய வலதுபாரிசத்தில் உட்காரச் செய்தார். அவர் அங்கிருந்து அவருடைய சீஷர்களாகிய எங்கள் மேல் நீங்கள் காண்கிறதும் [சரீரத்தில் அசைவு—வல்லமை] கேட்கிறதுமாகிய [அந்நிய பாஷை—செவியால் கேட்கக்கூடியது] இதைப் பொழிந்தருளினார் (அப். 2 : 14—33) என்றதும் இதைக் கேட்டவர்கள் எல்லோரும் இருதயத்தில் குத்தப்பட்டவர்களாய் நாங்கள் இந்த அநுபவத்தை (பரிசுத்த ஆவியை) பெற்றுக் கொள்ள என்ன செய்ய வேண்டும் என்றார்கள் (அப். 2 : 37).

அதற்கு அவர்களுக்கு கொடுக்கப்பட்ட பதில்: நீங்கள் ஒவ்வொருவரும் மனந்திரும்பி பாவமன்னிப்புக்கென்று இயேசுகிறிஸ்துவின் நாமத்தினாலே ஞானஸ்நானம் பெற்றுக் கொள்ளுங்கள் அப்பொழுது பரிசுத்த ஆவியின் வரத்தைப் பெறுவீர்கள். வாக்குத்தத்தமானது உங்களுக்கும், உங்கள் பிள்ளைகளுக்கும், தேவனாகிய கர்த்தர் வரவழைக்கும் தூரத்திலுள்ள யாவருக்கும் உண்டாயிருக்கிறது என்பதே (அப். 2 : 38, 39).

இந்நாட்களில் பரிசுத்த ஆவி பெற்றுக் கொள்ள அநேகருக்கு ஆசை. ஆனால் வேதம் சொல்லும் நிபந்தனைகளுக்கு மாறாய் ஆவியைப் பெற்று கொள்ள விரும்புகின்றனர். இதனால் பரிசுத்த ஆவியை அல்ல

அசுத்த ஆவியையே அநேகர் பெற்று (க்கொண்டு வருகின்றனர்)ள்ளனர். தேவன் அப்போஸ்தலர்களுக்கு காண்பித்த வழியை விட்டு விட்டு பரிசுத்த ஆவியைப் பெற அநேகர் முயற்சித்துக் கொண்டிருக்கின்றனர்.

மாதா வழிபாட்டையும், விக்கிரக ஆராதனையையும், பாவத்தையும் விடாத ரோமன் பெந்தெகொஸ்தே, தங்கள் பாவங்களையும், மனுஷீக சடங்காச்சாரங்களையும் விடாத பிராட்டஸ்டண்ட் பெந்தெகொஸ்தே, ஜாதி வெறியையும், மாய்மாலத்தையும், தற்பெருமையையும், பண ஆசை, பதவி ஆசையும் விடாத ஆவிக் கூட்டங்கள், பரிசுத்த ஆவி பெற்றிருக்கிறதாக கூறி குறி சொல்லும் ஆவியுடைய சங்கப் பிரசங்கிகள், மேடையேறி பேசி பிரசங்கித்து, தீர்க்கதரிசனம் சொல்லி சபை நடத்தும் ஸ்திரிகள் கூட்டம், இவர்களெல்லாரும் தாங்கள் பரிசுத்த ஆவி பெற்றிருக்கிறதாக எண்ணியுள்ளார்கள். தேவ ஆவியாகிய பரிசுத்த ஆவியானவர் சத்திய ஆவியாயிருக்கிறார்.

ஒருவனுக்குள் பரிசுத்த ஆவியானவர் வருகிறது அவனை சுத்தப்படுத்தவே. வேதாகமத்தை எழுத தூண்டிய தேவ ஆவியானவரே மனிதருள், முறையாக தேடுகிற மனிதருள் இறங்கி வருகிறார். தேவ ஆவியானவர் ஒருவரை நிரப்புவதன் நோக்கமே தேவ வசனத்துக்கு அவரைக் கீழ்ப்படியச்செய்யும் படிக்கே. ஒருவரில் இருப்பது, கிரியை செய்வது பரிசுத்த ஆவியா, தீய ஆவியா என்பதை எப்படி அறியலாமென்றால்; அவர் வசனத்துக்கு கீழ்ப்படிந்து வசனத்தின்படி செயலாற்றுவதினாலேயே அவருக்குள் இருப்பது தூய ஆவி அல்லது அசுத்த ஆவி என்பதை அறிய முடியும். வசனத்துக்கு கீழ்ப்படியாதவைகளெல்லாம் அசுத்த ஆவிகளே, அவைகள் அன்னியபாஷை பேசினாலும், தீர்க்கதரிசனம் சொன்னாலும், அற்புத அடையாளங்கள் செய்தாலும் அசுத்த ஆவிகளே. இதில் சந்தேகமே இல்லை.

ஆகையால் அப்போஸ்தலர்களுடைய ஆலோசனையின்படி மனந்திரும்பி பாவமன்னிப்புக்கென்று(இரட்சிப்பு) இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் ஞானஸ்நானம் (முழுகி) பெற்று, பரிசுத்தாவி பெற்றுக் கொள்ளலாம். அப். 2 : 1—4 முடிய காணப்படும் அநுபவத்துடன் அப்படி பரிசுத்தாவி பெற்றவர்கள் தொடர்ந்து அப்போஸ்தலரோடு ஐக்கியமாயிருந்து அப்போஸ்தலருடைய ஆலோசனையைப் பெற்று அவர்களோடு சேர்ந்து திருவிருந்து (நற்கருணை) ஆசரித்து ஆராதனை செய்வதினால் பரிசுத்த ஆவியைக் காத்துக் கொள்ளவும் (அப். 2 : 37—42). இல்லை என்றால் ஆவி உள்ள இடத்தில் சீக்கிரமாய் அசுத்த ஆவி உட்புகுந்து வஞ்சித்துப் போடும்.

பிரியமானவர்களே, நீங்கள் எல்லா ஆவிகளையும் நம்பாமல்; அந்த ஆவிகள் தேவனால் உண்டானவைகளோ என்று சோதித்து அறியுங்கள். உன்னிலுள்ள ஆவியைக் குறித்து எச்சரிக்கையாயிரு. அப்பொழுது பரிசுத்த ஆவியைப் பெறுவீர்கள் என்றிருக்கிறது.

ஞானஸ்நானத்துக்கு முந்தி அப்போஸ்தலருடைய உபதேசத்தால் பரிசுத்த ஆவியைப் பெற்றவர்கள் உடனே ஞானஸ்நானம் (முழுகுதல்) பெற்றார்கள், சபையானார்கள் (அப். 10 : 44—46).

ஞானஸ்நானம் பெற்றும் பரிசுத்த ஆவி பெறாதவர்கள் அப்போஸ்தலர்கள் தலையில் கைவைத்து ஜெபிக்க கேட்டு பரிசுத்த ஆவியைப் பெற்றுக் கொள்ளவும் (அப். 8 : 14—17). இயேசுவை விசுவாசித்தும் பரிசுத்தாவி பெறாதவர்கள் அப்போஸ்தல உபதேசம் பெற்று ஞானஸ்நானம் பெற்று, பரிசுத்த ஆவியைப் பெற்றுக் கொள்ளவும். (அப். 19 : 1—6).

நீங்கள் இயேசுகிறிஸ்துவின் வருகையில் எடுத்துக் கொள்ளப்படுவீர்கள் என்பதற்கு அச்சாரமும், முத்திரையும், பரிசுத்த ஆவியின் அபிஷேகமே (II கொரி. 1 : 21, 22; எபே. 1 : 13, 14).

பரிசுத்த ஆவியைப் பெற்றுக் கொள்ளுங்கள்.

---

"நீங்கள் பரிசுத்தராலே அபிஷேகம் பெற்று சகலத்தையும் அறிந்திருக்கிறீர்கள்"
—I யோ. 2 : 20

---

# "மனந்திரும்புதலும் பாவமன்னிப்பும்"

"மனந்திரும்புதலும் பாவமன்னிப்பும் இயேசுவின் நாமத்தில் உலகமெங்கும் பிரசங்கிக்கப்பட வேண்டும்" —லூக். 24 : 47.

பாவம் என்பது தேவனுக்கு விரோதமானதாகும். தேவன் நியாயப்பிரமாணத்தைக் கொடுக்கிறார். நியாயப்பிரமாணத்தை மீறுவதே பாவம். (1 யோவா 3 : 4). நியாயப்பிரமாணம் தெரியாதவர்களுக்கு தேவன் அவர்கள் மனதிலே நியாயப்பிரமாணத்தை எழுதியிருக்கிறார். குற்றமுண்டு, குற்றமில்லை என்ற மனசாட்சி தேவபிரமாணமாகவே இருக்கிறது. இதை மீறியே மனிதன் பாவம் செய்கிறான். போக்குச் சொல்ல இடமில்லை (ரோம. 2 : 11-15.)

மனிதனுடைய மனசாட்சியிலே தேவனுடைய பிரமாணம் எழுதப்பட்டுள்ளது. ஆதலால் அவர்கள் தங்களுக்குத் தாங்களே நியாயப்பிரமாணமாயிருக்கிறார்கள் (ரோம 2 : 15). மனிதன் பாவத்திலே பிறக்கிறான். பாவத்திலே வளருகிறான்; பாவத்தைச் செய்கிறான். வித்தியாசமே இல்லை, எல்லோரும் பாவம் செய்து தேவ மகிமையற்றவர்களானார்கள்—(ரோம. 3 : 23).

நான் பாவமே செய்யவில்லை என்று ஒருவரும் சொல்லக்கூடாது. பாவம் வார்த்தை, சிந்தனை, கிரியைகளிலே மூன்று விதமாய்ச் செய்யப்படுகிறது. இதற்குத் தப்பினவர்கள் ஒருவருமில்லை (ரோம. 3 : 9-23).

பாவத்தினால் மனிதனுக்கு தண்டனை உண்டாகிறது. தேவ ஐக்கியத்தை இழந்து போகிறான். இதனால் மனித உறவுகளிலும் முறிவு உண்டாகிறது. பாவத்தின் பலனாகிய துன்பம், துக்கம், வியாதி, மரணம் முடிவில் நரகம் போய்ச் சேருகிறான்.

மனிதனில் ஒரு ஆத்துமா உண்டு. அது பாவத்தை வெறுத்து பரிசுத்தத்தை, நீதியை, அன்பை நாடுகிறது. அதை அடைய மனிதன் பல விதத்திலும் முயற்சிக்கிறான். அந்த முயற்சியின் பிரதிபலனே மனிதனால் ஏற்பட்ட மதங்கள். இவைகள் பாவியான மனிதனின் குறைபாடுகளுள்ள சமயங்களும், சங்கங்களும், கொள்கைகளுமாகும்.

இவ்விதமாய் மனிதனுடைய பக்தியிலும் பாவம் நுழைந்து விட்டது. மனிதன் பாவ மன்னிப்பு பெறவோ சரியான வழி திறக்கப்படவில்லை. மனிதன் பாவத்திலிருந்தும், அசுத்த எண்ணங்களிலிருந்தும், தற்பெருமையிலிருந்தும் அறியாமையிலிருந்தும் விடுபட முடியவில்லை. ஆகையால் தேவன்தாமே புதிதும் ஜீவனும் வல்லமையுமுள்ள ஒரு மார்க்கத்தை மனுமக்களுக்கு காட்டும்படி - திறக்கும்படி ஜீவனையும், அழியாமையும் அருளும்படி இறைவனே உலகிற்கு இறங்கி வந்தார். அவரே கர்த்தராகிய இயேசு கிறிஸ்து. அவர் வந்து மனிதனின் பாவங்களுக்காக கல்வாரி சிலுவையிலே இரத்தம் சிந்தி மரித்து, அடக்கம் பண்ணப்பட்டு, மூன்றும் நாள் உயிர்த்தெழுந்தார். பரலோகத்துக்கு எழுந்து போகுமுன் தம்முடைய நாமத்திலே மனந்திரும்புதலும், பாவமன்னிப்பும் பிரசங்கிக்கப்பட வேண்டும் என்றார்—லூக் 24 : 47.

பாவமன்னிப்பு பெற முதலாவது மனிதன் பாவத்திலிருந்து மனந்திரும்ப வேண்டும். மனந்திரும்புதல் இல்லாமல் பாவமன்னிப்பு இல்லை. மனந்திரும்புதல் என்பது சத்திய வேதத்தின் முக்கிய செய்தியாகும். மனிதர்கள் தாங்கள் செய்கிற பாவத்தை விட்டு மனந்திரும்ப வேண்டும், ஆம், மனிதனே! நீ மனந்திரும்ப வேண்டும், மனுஷியே! நீ மனந்திரும்ப வேண்டும்.

மனிதன் பிறக்கும் போதே பாவ இழுப்புள்ளவனாய் பிறக்கிறான். உலகத்துக்கு நேராய் முகமும், தேவனுக்கு முதுகையும் காட்டிக் கொண்டு பிறக்கிறான். இப்போ நீ மனதில் திரும்ப வேண்டும். ஒரு தீர்மானம் எடுக்க வேண்டும். உன்னுடைய இஷ்டபிரகாரமான பக்தியை விட்டு மனந்

திரும்ப வேண்டும். உன்னுடைய பக்தி தெய்வ திருவசனத்தின்படி சரிதானா? சிலர் மனந்திருந்துகிறார்கள். இப்படிப்பட்ட சிலரை உலகில் காணலாம். தாங்கள் செய்வது தங்கள் குடும்பத்துக்கு, தங்கள் சரீரத்திற்கு, தங்கள் வாழ்க்கைக்கு நஷ்டத்தை உண்டாக்குகிறதென்று நினைத்து சிலர் பீடி, சிகரெட்டு, மதுபானம் பண்ணுதல், விபச்சார வேசித்தன, காம விகார நடத்தைகளை சிலகாலம் விட்டு மனந்திரும்புவர். பின்பு அதே செய்கைகளைத் திரும்பவும் தீவிரமாய் செய்ய ஆரம்பித்து விடுவார்கள். திரும்புகிறார்கள். ஆனால் உன்னதமானவரிடத்திற்கு அல்ல மோசம் போக்குகிற வில்லைப்போல் துவண்டு விடுகிறார்கள் என்கிறார் தேவன் (ஓசி. 7 : 16).

நீ தேவனண்டை தேவனுடைய ஆலோசனையின்படி திரும்ப வேண்டிய காரியங்களிலிருந்தெல்லாம் திரும்ப வேண்டும் உன்னுடைய பாரம்பரியங்களிலிருந்து திரும்ப வேண்டும். தவறான பாரம்பரியங்கள் பழக்க வழக்கங்கள் ஆச்சாரங்களிலிருந்து இயேசு கிறிஸ்துவின் இரத்தத்தினால் உனக்கு விடுதலையுண்டு (1 பேது. 1 : 18, 19). பாவம் என்று உனக்கு தோன்றுகிற எல்லாவற்றையும் விட்டு மனந்திரும்பு பாவ மன்னிப்பு வேண்டுமானால் விடுதலை வேண்டுமானால் பழக்க வழக்கங்களை விட்டு மனந்திரும்பு. உன்னை சாபங்களிலிருந்து விடுவிக்க தேவன் வல்லவராயிருக்கிறார். உன் நினைவுகளையும், செய்கைகளையும் விட்டு மனந்திரும்பு -ஏசா 55 : 6,7. உன் வழிகளை மாற்றிக் கொள். இரட்சிப்புக்கு அவசியமில்லாத சடங்காச்சாரங்கள், தேவ ஆலோசனையில்லாத வழிபாடுகள் எல்லாவற்றையும் விட்டு நீ மனந்திரும்பு உங்கள் திட்டங்கள், ஆசாபாசங்கள் நினைவுகளை விட்டு மனந்திரும்புங்கள் தேவனிடத்தில் மனந்திரும்புங்கள். தீமை செய்தலை விட்டு மனந்திரும்புங்கள். நன்மை செய்யப் படியுங்கள். தேவனுக்கு ஒப்புக் கொடுங்கள் -ஏசா. 1 : 16, 17. விக்கிரக ஆராதனையை விட்டு மனந்திரும்புங்கள்.

தேவன் என்று அல்லது தேவனைக் குறிக்கிறது, அல்லது தேவனுடைய சக்தி இதுவென்று நம்பி ஒரு சிலையையோ, படத்தையோ, குறி அடையாளத்தையோ இயற்கை சிருஷ்டியையோ விட்டு நீ மனந்திரும்பாத பட்சத்தில் நீ இறைவனிடமிருந்து பாவ மன்னிப்பு பெற முடியாது. ஊமையான விக்கிரத்தை விட்டு ஜீவனுள்ள தேவனிடத்தில் திரும்புங்கள் — 1 தெச. 1 : 9. எல்லா பாவங்களையும், எல்லா அக்கிரமங்களையும் விட்டு மனந்திரும்புங்கள் —எசேக். 18 : 20-22. திரும்புங்கள் வார்த்தைகளைக் கொண்டு திரும்புங்கள் —ஓசி. 14 : 1, 2. இயேசு கிறிஸ்துவை தேவனுடைய குமாரன் என்று அறிக்கை செய்யுங்கள், சபையினண்டை வாருங்கள். கிறிஸ்து இயேசுவை உங்கள் சொந்த தெய்வமாக ஏற்றுக் கொண்டு அறிக்கை செய்யுங்கள். அதோடு உங்கள் பாவங்களை வெளிப்படையாய் அறிக்கை செய்யுங்கள்—அப். 19 : 18.

பாவமன்னிப்பு பெற மனந்திரும்பி இயேசு கிறிஸ்துவை விசுவாசிக்க வேண்டும். ஒவ்வொரு ஆத்துமாவும் இவ்விதமாய் விசுவாசிக்க வேண்டும். இயேசு கிறிஸ்து என்னுடைய பாவத்திற்காய் கல்வாரி சிலுவையில் இரத்தம் சிந்திமரித்தார், அடக்கம் பண்ணப்பட்டார், உயிர்த்தெழுந்தார் என்று விசுவாசிக்க வேண்டும். மனந்திரும்புவதும் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசிப்பதும் மாத்திரமல்ல, தன் பாவங்களை அறிக்கை செய்ய வேண்டும். வெளிப்படையாய் அறிக்கை செய்து முழுகி ஞானஸ்நானம் பெற்றுக் கொள்ள வேண்டும். அப்பொழுது அவன் செய்த பாவங்களெல்லாம் மன்னிக்கப்படும்-அப் 2 : 38 ; 22 : 16.

தேவனுடைய தீர்மானத்தையும், திட்டத்தையும் திருச்சபையின் அஸ்திபாரங்களையும் அறியாத சபைகள் என்று சொல்லப்படுகிற சபையல்லாத சபாக்கள், அனுப்பப்படாத பிரசங்கிகள், அப்போஸ்தலனில்லாததால் அப்போஸ்தல உபதேச

மில்லாததால் பாவமன்னிப்பைப் பற்றி தெளிவில்லாதவர்களாயிருக்கிறார்கள். அப்படியே ஊழியமும் செய்கிறார்கள். பிரசங்கமும் செய்கிறார்கள் அதென்னவெனில் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசியுங்கள், மனந்திரும்பி (எது, எது பாவம் எதெதிலிருந்து மனந்திரும்ப வேண்டும் என்று தெளிவு கிடையாது. தெளிவுபடுத்துவதும் கிடையாது.) உங்கள் பாவங்களை நீங்கள் எங்கேயிருந்தாலும் சரி இயேசுவிடம் அறிக்கை செய்து ஜெபம் பண்ணுங்கள். நீங்கள் இரட்சிக்கப்படுவீர்கள். உங்கள் பாவங்கள் மன்னிக்கப்படும் என்று பிரசங்கம் பண்ணுகிறார்கள். இவர்கள் யாருக்குமே புதிய ஏற்பாட்டின் சத்தியத்தைப்பற்றி, சபையைப்பற்றி தெரியாது.

புதிய ஏற்பாட்டில் இயேசு கிறிஸ்துவோ, ஆதி அப்போஸ்தலர்களோ இப்படி ஒருபோதும் சொல்லவில்லை. நீங்கள் ஒவ்வொருவரும் மனந்திரும்பி பாவமன்னிப்புக்கென்று இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் ஞானஸ்நானம் பெற்றுக் கொள்ளுங்கள். அப்பொழுது...என்றே பிரசங்கித்தனர் (அப். 2 : 28—41).

இயேசுவை தரிசித்து மனந்திரும்பிய சவுலுக்கும் கொடுக்கப்பட்ட உபதேசம் என்ன? இப்பொழுதும் நீ தாமதிக்கிறது என்ன? எழுந்து ஞானஸ்நானம் பெற்று உன் பாவங்கள் போகக் கழுவப்படு என்றே சொல்லப்பட்டது (அப். 22 : 16).

ஒரு இடத்திலாகிலும் வேதம் ஒரு பாவியை நீ இயேசுவை நோக்கி பாவ அறிக்கை செய்து ஜெபம் பண்ணு, உன் பாவம் மன்னிக்கப்படும். உன்னை விட்டு அகற்றப்படும் என்று சொல்லப்படவில்லை.

ஆனாலும் இந்நாட்களில் புதிய ஏருசலேம் சபையைத் தவிர மற்ற பிரசங்கிகளெல்லாம் வேதத்திலில்லாததையே பிரசங்கிக்கின்றனர். ஆனபடியால் மனந்திரும்புதலும் பாவமன்னிப்பும் புதிய எருசலேம் தொடங்கி சகல தேசத்தாருக்கும் இயேசுவின் நாமத்தில் பிரசங்கிக்கப்படுகிறது.

(லூக். 21 : 47).

மனந்திரும்புங்கள், கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசியுங்கள். உங்கள் பாவங்களை அறிக்கையிட்டு, முழுகி ஞானஸ்நானம் பெற்றுக் கொள்ளுங்கள். அப்பொழுது உங்கள் பாவங்கள் மன்னிக்கப்படும். நீங்கள் இரட்சிக்கப்படுவீர்கள்.

"இஸ்ரவேலருக்கு மனந்திரும்புதலையும், பாவமன்னிப்பையும் அருளுகிறதற்காக, அவரை அதிபதியாகவும், இரட்சகராகவும் தமது வலது கரத்தினாலே உயர்த்தினார்"

—அப். 5 : 31.

---

# மோட்ச வழி

## குரு—சிஷ்ய உரையாடல்

(தொடர்ச்சி)

சிஷ்யன் : கிறிஸ்து மார்க்கமே மெய்யான மார்க்கம், சத்திய மார்க்கம் என்பதற்கு வேறெதாவது ஆதாரமுண்டா?

குரு : உண்டு. 1. எந்த மதமும் தோன்றிய காலத்திலிருந்து அப்பொழுது நடந்த சம்பவத்தைப் பற்றிய திட்டமான சரித்திர சான்றும் அதை நினைவு கூறும் சடங்கு ஆச்சாரமும் அந்நாள் முதற் கொண்டு தொடர்ந்து நடைபெற்று வந்திருக்க வேண்டும். அவ்வித ஆச்சாரம் கிறிஸ்து மார்க்கத்துக்கே உண்டு. (உ-ம்) திருவிருந்தாசாரம். மற்ற மதங்களுக்கு அப்படிப்படிப்பட்ட திட்டமான அடையாளம் கிடையாது. பிந்தியகாலத்தில் தியர் தியர் என்று யாரோ ஏற்படுத்திய வைபவங்களால்தான் மதங்கள் நிரம்பியுள்ளன.

2. ஒரு மதமானது மனிதனின் துர் சுபாவத்தை மாற்றி அவனை நல்லவனாகவும் பிறருக்கு உதவி செய்பவனாகவும் மாற்றி, அவனில் மூடப்பழக்க, வழக்கங்களை

மாற்றி அவனுடைய அறிவைப் பிரகாசிப்பிக்க வேண்டும். அவனை நல்ல குடிமகனாக மாற்ற வேண்டும். அந்த விதமாய் மனிதனை மாற்றியமைக்கும் வல்லமை கிறிஸ்தவத்தினால் மட்டும் நிகழ்கிறது.

3 கிறிஸ்தவம் ஒன்றே மனிதன் தன்னை சரியாய் அறியவும் தலைவனை (இறைவனை) அறியவும் செய்விக்கிறது. மனிதன் மெய் மனிதனாகிறான். தெய்வீக தொடர்பினால் தேவனுக்கு ஒப்பாக மாறுகிறான். நல் நம்பிக்கையுடையவனாக ஆக்கி வெற்றியுள்ள வாழ்க்கை வாழச் செய்கிறது.

சிஷ்யன் : அப்போ, கிறிஸ்தவம் ஒன்றே விமோசனம். அப்படித்தானே!

குரு : ஆம். வேறு வழியில்லை. மனிதன் மோட்சமடைய தேவன் அவனுக்கு வகுத்து கொடுத்த வழி. கிறிஸ்தவ மார்க்கம் ஒன்றே தான். இதில் உய்வடையாதவன் எதிலும் உய்வடையான். கிறிஸ்துவே வழி.

(தொடரும்)

| |
|---|
| "நாங்கள் முழு நிச்சயமாய் நம்புகிற சங்கதிகள்" —லூக். 1 : 1 |

# வேத பாடம்

ஆதி. 22 : 1, 2 ஆபிரகாமுடைய விசுவாசத்திற்கும், கீழ்ப்படிதலுக்கும், நம்பிக்கைக்கும் சோதனையுண்டாகிறது. தேவன் ஆபிரகாமை நோக்கி உனது சுதந்தரவாளியாகிய பிரிய குமாரன் ஈசாக்கை நான் காண்பிக்கிற மலையில் கொண்டு போய் எனக்காக தகன பலியிடு என்றார்.

22 : 3 ஆபிரகாம் உடனே கீழ்ப்படிந்தார். ஒருவருக்கும் விபரத்தைச் சொல்லாமல், பிள்ளையையும் துணைக்குச் சில வேலைக்காரரையும் அழைத்துக் கொண்டு அதிகாலையில் பிரயாணப் பட்டார். இறைவன் சொன்னதை சாராளுக்கும் ஆபிரகாம் அறிவிக்கவில்லை.

22 : 4, 5 மூன்றும் நாளில் தேவன் குறித்த இடத்திற்கு வந்தார்கள். தூரத்திலே அந்த இடத்தை ஆபிரகாம் கண்டார். அப்பொழுது ஆபிரகாம் வேலைக்காரரை நோக்கி இங்கே இருங்கள், நானும் பிள்ளையாண்டானும் அவ்விடமட்டும் போய் தொழுது கொண்டு திரும்பி வருவோம் என்றார் இதில் ஆபிரகாமுடைய விசுவாசத்தைக் காண்கிறோம். நாம் பிள்ளையை பலியிட்டாலும் தேவன் அவனை மறுபடியும் உயிரோடு எழுப்பித்தருவார் என்று விசுவாசித்தார்.

22 : 6 தகனபலிக் கட்டைகளை தன்மகன் தலையிலே தூக்கி வைக்கிறார். இந்த விஷயத்தில் ஈசாக்கு கிறிஸ்துவுக்கு முன்னடையாளமாயிருக்கிறார். கிறிஸ்து தாம் அறையப்படபோகிற சிலுவையை சுமந்தது போல ஈசாக்கும் தன்னைப் பலியிடப்போகிற கட்டைகளை சுமக்கிறார்.

22 : 7, 8 ஈசாக்கு தகனபலிக்கு ஆடு எங்கே என்று கேட்க, கர்த்தர் பார்த்துக் கொள்வார். தனக்கு தகனபலிக்கான ஆட்டைப் பார்த்துக் கொள்வார் என பதிலிருப்பதால் தேவன் எல்லாவற்றையும் முன்னமே ஆயத்தமாய் ஆயத்தப்படுத்தியுள்ளார் என நம்பிக்கையோடு தெரிவிக்கிறார்.

2 9-12 தேவன் குறிப்பிட்ட இடத்தில் பலிபீடம் கட்டி தன் மகன் ஈசாக்கையே பலி ஆடாக கட்டி ஆபிரகாம் பலிபீடத்தில் ஏற்றி பலியிடும்படி கத்தியை ஓங்கினார். உடனே வானத்திலிருந்து ஆபிரகாமே! என்று தேவன் கூப்பிட்டு பிள்ளையாண்டான் மேல் உன்கையைப் போடாதே என்றார். நீ உன் ஏக சுதனென்று பாராமல் அவனை ஒப்புக் கொடுத்தபடியால், நீ தேவனுக்கு பயந்தவன் என்று இப்பொழுது அறிந்திருக்கிறேன் என்றார். ஈசாக்கு வாலிபனாயிருந்தும் தன் தகப்பனுக்கு கீழ்ப்படிந்தது அவர் வளர்க்கப்பட்ட தேவபக்தியைக் காட்டுகிறது.

22 : 13, 14 ஆபிரகாம் பின்னாகப் பார்த்தபோது அங்கு ஒரு ஆடு புதரில் சிக்குண்டு இருந்தது. அதை தன் மகனுக்குப் பதிலாக பலியிட்டு அந்தஸ்தலத்திற்கு யேகோவாயீரே என்று பெயரிட்டார்.

22 : 15-18 தேவன் ஆபிரகாமை ஆசீர்வதிக்கிறார். நீ என் சொல்லுக்கு கீழ்ப்படிந்து இந்த காரியத்தை செய்தபடியால் என்று ஆசீர்வதிக்கிறார். காட்சி கண்டதினால், சொப்பனம் கண்டதினால் என்று இறைவன் சுட்டிக் காட்டாமல், நீ என் சொல்லுக்கு (வார்த்தைக்கு) கீழ்ப் படிந்தபடியினால் என்று சொல்லி ஆசீர்வதிக்கிறார்.

1. நான் உன்னை ஆசீர்வதிக்கவே ஆசீர்வதிப்பேன்.

2. உன் சந்ததியை நட்சத்திரங்களைப் போல பெருக்குவேன்.

3. உன் சந்ததியார் தங்கள் சத்துருக்களின் சுதந்தரங்களைக் கைப்பற்றுவார்.

4. உன் சந்ததிக்குள் (சந்ததியின் மூலம்) பூமியின் வம்சங்களெல்லாம் ஆசீர்வதிக்கப்படும் என்று என்பேரில் ஆணையிடுகிறேன் என்றார்.

22 : 19 ஆபிரகாம் தன் குமாரன் ஈசாக்குடன் தன் வேலைக்காரர்களிடம் திரும்பி வந்தார். அவர்கள் பெயர்செபாவிற்கு வந்து சேர்ந்தார்கள்.

22 : 20-24 ஆபிரகாமுடைய பழைய குடும்பங்களைப்பற்றி ஒரு மனிதன் அறிவிக்கிறான். குடும்பவிபரங்களையும் அறிந்து கொண்டுவந்தார் எனத்தெரிகிறது.

> "பலியைப் பார்க்கிலும் கீழ்ப்படிதல் முக்கியம்"
> *1 சாமு. 15 : 22*

மாதர் பகுதி

*(1984 நவம்பர் மாத தொடர்ச்சி)*

## ஸ்திரீகள்

அப்போஸ்தலர்களாகிய பேதுருவும், பவுலும் எழுதியுள்ளதின்படி கணவன் மேலான அதிகாரமுள்ளவன் என்றும் மனைவி கணவனுக்கு கீழடங்கி வாழ வேண்டும் என்பது வெளிப்படை. (எபே.5: 22-33; கொலே. 3: 18, 19; 1 தீமோ. 3: 9—15; 1 பேது.3:1—7.) சிலர் நினைப்பது போல் இந்த உபதேசம் காலங்கடந்ததல்ல, இது ரத்து செய்யப்படவுமில்லை. இது உலகத்தின் முடிவு மட்டும் நிலைத்திருக்கும். இது இக்காலத்

துக்கும் மிகவும் பிரயோஜனமானது. இந்தச் சட்டம் எழுத்தின் படியும், ஆவியின் படியும் எவ்வளவாக இருதரத்தினராலும் பின்பற்றப்படுகிறதோ, அவ்வளவாக கணவன்மாரும், மனைவிமாரும் உலகத்துக்கு நல்ல மாதிரிகளாயிருப்பார்கள். அவர்களுடைய குடும்ப வாழ்க்கை மிக மகிழ்ச்சியானதாக இருக்கும். பெண் ஆணுக்கு அடங்கி வாழ வேண்டும் என்னும் போதனையை மதித்து நடமுறைப்படுத்தி வாழ்வது சமாதானத்திற்கும், நல்லொழுக்கத்திற்கும், திருச்சபையின் நல் வாழ்வுக்கும், சமுதாயத்தின் நல் வாழ்வுக்கும் அவசியம் தேவையாகும்.

ஆண், பெண் இருபாலரும் ஒன்றோடொன்று ஏற்ற பண்புகளிலும் ஒப்பிடலாம். ஒரு பால் மற்றொன்றை விட மேலானது என்று சொல்லக்கூடாது. ஒவ்வொரு பாலுக்கும் மற்ற பாலிடம் இல்லாதது உண்டு. ஒன்று மற்றொன்றை நிறைவு செய்கிறது ஒன்று மற்றொன்றால் நிறைவு செய்யப்படுகிறது. இரண்டும் எதிலும் ஒன்று போல் இல்லை. இரண்டின் மகிழ்ச்சியும், முழுமையடைதலும் ஒன்று மற்றொன்றைக் கேட்பதையும், அதனிடத்தினின்று பெற்றுக்கொள்வதையும் சார்ந்திருக்கிறது. இவ்விதம் கேட்டு பெற்றுக் கொள்பவை ஒன்றிலின்றுதான் மற்றொன்றுக்கு கிடைக்கும்.

இவ்விரண்டின் தனிப்பண்புகளாவன: மனிதனுடைய சக்தி செயல் படக்கூடியது. முன்னேறும் இயல்பினது. காத்துக் கொள்ளும் இயல்பினது. அவன் செயல்படுத்தல், படைத்தல், கண்டு பிடித்தல், காத்தல் இவற்றில் மேற்பட்டவன். அவனது அறிவு துருவி துருவி நோக்கும். புதியன கண்டு பிடிக்கும் அவனுடைய சக்தி வீரச் செயல்களில் ஈடுபடும். போரிடுதல் நியாயமானது என்றால் போரிடும். போர் செய்து வெற்றி வாகை சூட வேண்டுமென்றால் அப்படிச் செய்யும். ஆனால் பெண்களின் சக்தி போர் செய்வதற்காக அன்று; ஆளப்படுவதற்காகும் அவர்களுடைய அறிவு கண்டுபிடிப்பதற்கு அல்லது படைப்பதற்கு அன்று, ஆனால் இன்பமான ஆணை இடுவதற்கு. ஒழுங்குபடுத்துவதற்கு தீர்மானங்கள் செய்வதற்காகும் ஆளபடியால் பெண்ணின் உயர்ந்த ஸ்தானம்—

(தொடரும்)

சபைகளில் உங்கள் ஸ்திரீகள் பேசாமலிருக்கக்கடவர்கள்; பேசும்படிக்கு அவர்களுக்கு உத்தரவில்லை, அவர்கள் அமர்ந்திருக்க வேண்டும் வேதமும் அப்படியே சொல்கிறது.

—1 கொரி. 14;34

# சாட்சி

என் பெயர் சின்னக்கண்ணு. நான் தமிழ் நாட்டில் உள்ள திருநெல்வேலி மாவட்டத்தில் கயத்தாறுக்கு அருகில் உள்ள வடக்கு சுப்பிரமணியபுரம் கிராமத்தில் வசித்துவருகிறேன். என்னுடைய குடும்பம் பரம்பரையாக இந்து. நான் உண்மையான கடவுளை அறியாதவனாக, சமாதானம் இல்லாதவனாக பாவத்தில் ஜீவித்து வந்தேன். பாவம் என்பது என்ன என்பதை அறியாதவனாக செவிட்டு விரியனைப் போல் இருந்து வந்தேன்.

கிறிஸ்தவர்கள் எங்கள் ஊருக்கு வந்தால் அவர்களை கேலி பேசுவதும், திட்டுவதுமாக இருந்து வந்தேன். நான் பள்ளி இறுதி வகுப்பை முடித்து கல்லூரியில் கொஞ்ச காலம் படித்து தோல்வி அடைந்தேன். வீட்டில் எல்லாரும் திட்ட ஆரம்பித்தனர். நான் என்ன செய்வது என்று அறியாமல் வழி தெரியாமல் ஒருபக்கம் தேர்வில் தோல்வி, மற்றொருபக்கம் பாவவேதனை. இனி என்ன செய்ய? மரித்து விடலாமா என்று சிந்தித்து சிந்தித்து அதிக கவலைக்கு உள்ளானேன். என்னுடைய வாழ்நாள் விடியும் பொழுது எப்பொழுது அடையும் என்றும், அடையும் பொழுது எப்பொழுது விடியும் என்று தேடிக் கொண்டு இருந்தேன். மேலும் இந்தப் பாவியின் மேல் கண்வைத்து ஆண்டவராகிய இயேசு கிறிஸ்து என்னைத் தேடி எனக்கு சமாதானம் கொடுக்க சித்தம்

கொண்டார். வால்பாறையில் (கோயம்புத்தூர் மாவட்டம்) உள்ள W. C. C என்ற இன்ஸ்டிடியூட்டில் நான் பெயிலான பாடங்களை எழுதும்படி அங்கு சென்று படித்து வந்தேன் அங்குள்ள (Principal) முதல்வர் முதல் அனைவரும் கிறிஸ்தவர்கள். குடும்பமாக அந்த பள்ளியை நடத்தினார்கள். கிறிஸ்துவைப் பற்றி எனக்கு எடுத்துக் கூறினார்கள்.

ஒரு நாள் நான் ஜெபத்தில் இருக்கும் போது ஆண்டவருக்கு என்னை ஒப்புக் கொடுத்தேன். என்னுடைய பாரங்கள் நீங்கின. எனக்கு எதுகிடைக்காமல் அலைந்தேனோ, தேடினேனோ அது கிடைத்தது. உள்ளத்தில் ஒரு தேவசமாதானம் உண்டாயிற்று. இதை நான் வணங்கின எந்த தெய்வமும் கொடுக்க முடியவில்லை. ஆனாலும் நான் சரியான சத்தியத்தை அறியாதவனாக இருந்ததினால் அதிக நெருக்கத்திற்கு உள்ளானேன். சென்னையில் Assembly of God Church க்கு சென்று வந்தேன். ஆனாலும் எனக்கு உள்ளத்திலே கலக்கம் இருந்தது. என்னுடைய இஸ்டத்திற்கு ஜீவிக்கிறவனாக காணப்பட்டேன். பிரச்சினைகளை Pastor இடம் சொன்னால் ஜெபியுங்கள், வேதம் வாசியுங்கள் என்று சொல்வார்கள். எல்லாம் கடைபிடித்தும் எனக்கு பூரண சமாதானம் இல்லை. சத்துருபோராட்டம் இருந்தது. அடிப்படை சத்தியத்தை அறியாதவனாக இருந்தேன் என் மனதை திருப்தி படுத்த பிரசங்கம் பண்ணவும், பாட்டுப் பாடுவதுமாக இருந்தேன். பின்பு பல சபைகளுக்கு அலைந்தேன். மெய்ச் சமாதானம் இல்லாதவனாக இருந்தேன்.

பின்பு எனக்கு பைத்தியம்பிடித்துஅலைந்தேன். கர்த்தருடைய பெரிதான கிருபையினாலே "புதிய எருசலேம் சபை" ஊழியர் சாமுவேல் ஐயா அவர்களை சந்திக்க ஆண்டவர் எனக்கு கிருபை செய்தார். அவர்கள் எனக்கு சத்தியத்தைக் குறித்து தெளிவாக எடுத்துக் கூறினார்கள். பின்பு தமிழ்நாட்டு பெரிய [Pastor S. Sundarraj [ஐயா அவர்களும் தீர்க்கதரிசி Pastor S. Yesudason ஐயா அவர்களும் எங்கள் ஊருக்கு வந்திருந்தார்கள். அவர்கள் எனக்காக ஜெபித்தார்கள். கர்த்தர் எனக்கு நல்ல சுகம் கொடுத்தார் மனக் கலக்கத்திலிருந்து விடுதலை பெற்றேன். அவர்களும் "புதிய எருசலேம் சபை"யின் காரியங்களை எனக்கு எடுத்துக் கூறினார்கள்.

நானும் வள்ளியூர் "புதிய எருசலேம் சபை" சென்று அங்கு தேவ அன்புகிரியை செய்வதை கண்டேன். கர்த்தருக்குள் ஞானஸ்நானம் பெற்று நான் "புதிய எருசலேம் சபை"யில் அங்கத்தினனாக இருக்கிறேன்.

கர்த்தர் என்னுடைய விவாகத்தையும் பரிசுத்த விவாகமாக ஆசீர்வதித்து குடும்பமாக கர்த்தருக்குள் இருக்கிறோம். எங்கள் ஊரிலும் சபை எழும்பவும் எங்கள் குடும்பம் அனைத்தும் இந்துவாக இருப்பதால் சந்திக்கப்பட ஜெபிக்குமாறும் கேட்டுக் கொள்ளுகிறேன் பாவத்தில் ஜீவித்த என்னை கர்த்தர் மீட்டார். இப்பொழுது என் பெயர் பீட்டர். அல்லேலூயா! அல்லேலூயா!! அல்லேலூயா!!!

---

"...பின்பு அந்த சீஷனை நோக்கி: அதோ உன் தாய் என்றார்"

—யோ. 19 : 27

---

## நான் அறிந்ததும் அடைந்ததுமான பாவமன்னிப்பு

கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசிக்கிற தேவ ஜனமே, "...இந்தக் கல்லின் மேல் என் சபையைக் கட்டுவேன்; பாதாளத்தின் வாசல்கள் (பாவம்) அதை மேற்கொள்வதில்லை"—மத். 16 : 18.

இந்த வார்த்தையின்படி தேவனால் ஏற்படுத்தப்பட்ட இயேசு கிறிஸ்துவின் சரீரமாகிய "புதிய எருசலேம் சபை"யின் மூலம் தேவனாகிய இயேசு அருளிச் செய்ததான பாவமன்னிப்பின் உபதேசத்தைப் பற்றி நான்

அறிந்ததும், இந்த உபதேசத்தின் மூலமாய் நான் அடைந்து கொண்டதுமான ஆத்மீக நன்மைகளை எழுதுவது எனக்கு நலமாய்த் தோன்றிற்று.

நான் என்னுடைய வாகனத்தில் அதி வேகமாக சென்று கொண்டிருந்தேன். அத்தியாவசியத்தினிமித்தம் 50 கிலோ மீட்டர் (KMPH) வேகத்துக்கு மேல் செல்லக்கூடாது என்பது அரசாங்கத்தால் விதிக்கப்பட்ட போக்குவரத்து விதி. இதை நான் மீறிச் சென்றேன். என்னைக் கவனித்த போலீஸ் அதிகாரி என்னைப் பிடித்து என் மீது வழக்கு (Case) போட்டு நடமாடும் நீதி மன்றத்திற்கு அழைத்துச் சென்றார். அங்கே நியாயாசனத்திற்கு முன் நிறுத்தப்பட்டேன். நீதிபதி "நீர் இந்த போக்குவரத்து விதியை மீறினதாக உம்மீது வழக்கு போடப்பட்டுள்ளது. இதை நீர் ஒப்புக் கொள்கிறீரா அல்லது மறுக்கிறீரா? எனக் கேட்டார்." பிரதியுத்தரமாக "நான் குற்றம் செய்தேன்" அதை ஒப்புக் கொள்கிறேன், இனிமேல் இப்படிச் செய்ய மாட்டேன் என்றேன்." உடனே அவர் நீர் புரிந்த குற்றத்திற்கு தண்டனையாக 100 ரூபாய் அபராதம் கட்ட வேண்டுமென தீர்ப்பு கூறினார். பணத்தை செலுத்தினேன். விடுதலை பெற்றேன். அதுவரை நான் தப்பிவிடாதபடி என்னைக் காத்து வந்த போலீஸ் அதிகாரிகள் என்னை விட்டு தூரம் போய் விட்டார்கள்.

"இச்சியாதிருப்பாயாக" என்று இறைவன் எனக்கு கட்டளை கொடுத்திருந்தார். நான் மீறினேன். கர்த்தர் உன்னோடு எனக்கு வழக்கு இருக்கிறது (மீகா 6 :2), வா வழக்காடுவோம் (ஏசா 1 : 8) என்று என்னை அழைத்து கர்த்தருடைய ஆலயமாகிய பர்வதத்திற்கு கொண்டு (ஏசா 2 : 2) சென்று நீ எழுந்து பர்வதங்களுக்கு முன் உன் வழக்கைச் சொல் (மீகா 6 : 1) என்று என்னுடனே சொல்லி விட்டு "பர்வதங்களே என்னுடைய வழக்கைக் கேளுங்கள்" (மீகா 6 : 2) என்றார். அங்கே நியாயாசனங்கள் போடப்பட்டிருந்தது (சங். 122 : 5). தேவனால் ஏற்படுத்தப்பட்ட நியாயாதிபதிகள் உட்கார்ந்திருந்தார்கள் (யோவா 20 : 21-23) அவர்களுக்கு முன் என் குற்றத்தை, மீறுதலை ஒப்புக் கொண்டு தெரிவித்தேன் (1யோவான் 1 : 9). எனக்குத் தண்டனை விதிக்கப்பட்டது. என்னுடைய தண்டனையை என் தகப்பனார் ஏற்றுக்கொண்டார் (ஏசா. 53 : 5) நான் விடுவிக்கப்பட்டேன். என் தகப்பனுடைய தியாகத்தால் நான் மீட்கப்பட்டேன். சிவேரென்றிருந்த என்னுடைய பாவங்கள் உறைந்த மழையைப் போல் வெண்மையாயிற்று. இரத்தாம்பரச்சிவப்பாயிருந்த என்னுடைய மீறுதல்கள் பஞ்சைப் போலாயிற்று (ஏசா. 1 : 18). என்னை இரட்சித்த என் இரட்சகராகிய இயேசுவுக்கு கோடா கோடி ஸ்தோத்திரம்.

நான் கிறிஸ்தவத்தை மிகவும் அற்பமாய் எண்ணுகிற ஒரு இந்து குடும்பத்தில் பிறந்தேன் என்னுடைய கல்லூரி வாழ்க்கையில் இயேசு கிறிஸ்துவை உறவினர் ஒருவர் மூலம் அறிந்து கொண்டேன். கிறிஸ்துவ மாணவர்கள் கிறிஸ்தவ போதனைக்குள் என்னை வழி நடத்தினர். அவர்கள் உங்கள் பாவங்களையெல்லாம், இயேசு கிறிஸ்துவிடம் சொல்லுங்கள் (ஜெபத்தில்), உடனே உங்கள் பாவங்கள் எல்லாம் மன்னிக்கப்பட்டு விட்டது என்று விசுவாசியுங்கள் என்று சொல்லித் தந்தார்கள். இன்னும் சிலர் : உங்கள் பாவங்களுக்காய் நீங்கள் அழுது, கண்ணீர் விட்டு இறைவனிடம் சொல்லுங்கள். இப்படி எல்லாம் செய்யும் போது தேவசமாதானம் உண்டாகுமென்றார்கள்.

அப்படியே செய்து பார்த்தேன். பாவ மன்னிப்பினால் உண்டான சமாதானம் எனக்கு உண்டாகவில்லை. அழ வேண்டுமென்று முயன்றேன் அழுகையும் வரவில்லை. தேவனுடைய கிருபை என் மேல் இருந்ததால், என்னில் அன்பு கூர்ந்த அவர் அவரைப் பற்றிக் கொண்டிருக்க இரக்கம் செய்தார். ஒரு பெந்தெகோஸ்தே சபைக்குச் சென்று என்னுடைய முந்தைய வாழ்க்கையையும், நான் மாறின விதத்தையும் சாட்சியாகக் கூறி அதன் பின் பிதா, குமாரன், பரிசுத்தாவியின் நாமத்தில்

ஞானஸ்நானமும் பெற்றுக் கொண்டேன். பின் அபிஷேகம் இறைவனுடைய வாக்குத்தத்தத்தின்படி பெற்றேன். கர்த்தருக்கு ஸ்தோத்திரம். கல்லூரியில் நான் பெற்ற அனுபவத்தை அனேகருக்குச் சொல்லி, பாவ மன்னிப்பினால் உண்டான சமாதானம் எனக்கே இல்லாதிருக்க, பாவங்களை இயேசு கிறிஸ்துவிடம் அறிக்கை செய்யுங்கள் உங்களுக்கு சமாதானம் உண்டாகும் என்று நான் கற்ற போதகத்தின் படியே போதித்தேன், "சமாதானமில்லா திருந்தும் சமாதானம் சமாதானம் என்று சொல்லி, என் ஜனத்தின் காயங்களை மேற்பூச்சாய் குணமாக்குகிறார்கள்" (எரே. 6 : 14) என்ற வசனத்திற்கொப்ப, இது என்னுடைய அறியாமையால் நடந்தது.

இப்படியிருக்க கிறிஸ்தவர்களிடம் அன்பு கொண்ட நான் எனது சொந்த ஊர் வந்திருக்கும் போது அங்குள்ள "புதிய எருசலேம் சபை"க்கு சென்றேன். அங்குள்ள போதகர்கள் என்னை ஏற்றுக் கொண்டு, விசாரித்தார்கள். முடிவில் ஜெபம் பண்ணப் போகிற சமயத்தில்: சகோதரரே, உங்கள் பாவங்களை வெளிப்படையாய் அறிக்கை செய்யுங்கள் என்றார்கள். மாறுத்தரமாக நான் ஏற்கனவே அறிக்கை செய்து விட்டேன் என்றேன். அறிக்கை செய்ய வேண்டிய முறை அப்படி அல்ல, வெளிப்படையாய் அறிக்கை செய்ய வேண்டுமென்றார்கள். எனக்கு ஒன்றும் புரியவில்லை. நான் யோசித்தேன், நாம் ஏற்கனவே அறிக்கை செய்த முறை தவறென்றால், இவர் சொல்லுகிறபடி செய்யலாம், சரி என்றால் இவரிடம் இன்னொரு முறை சொல்வதால் என்ன கெட்டுப் போகிறது.

என் பாவங்களை கேட்பதால் இவர் கெட்டுப் போனால் நமக்கென்ன? அவர் தானே அப்படி செய்ய சொல்லுகிறார் என தீர்மானித்து நினைவில் வந்த சில காரியங்களைச் சொன்னேன். அவரும் தீர்க்கதரிசனமாக "மன்னித்தேன்" என்று அவருக்குள்ளிருந்த ஆவியானவர் சொன்னார். ஜெபம் முடிந்ததும், தீர்க்கதரிசன வரம் பெற்ற உடன் ஊழியர் பரிசுத்த ஆவியினால் வெளிப்படுத்தல் பெற்று நான் சிறுபிள்ளையாயிருக்கும் பொழுது செய்ததான பாவங்களை வெளிப்படுத்திக் காண்பித்தார்.

அவைகளில் சில நான் முன்னால் அறிந்த உபதேசத்தின்படி ஏற்கனவே அறிக்கை செய்தவைகள். நாம் ஏற்கனவே அறிக்கை செய்தது மன்னிக்கப்பட்டிருக்குமானால் ஆண்டவர் இவரைக் கொண்டு ஏன் வெளிப்படுத்த வேண்டும்? மேலும் நான் அறிக்கை செய்ய மறந்துபோன பாவங்களையும் இவர் வெளிப்படுத்தி நாம் பரிசுத்தமடைய உதவி செய்கிறாரே. பரிசுத்த ஆவி தானே பரிசுத்தத்துக்குள் நடத்துவார். மேலும் பரிசுத்த அப். பவுலும், சபையார் செய்த பாவத்தையும், முன்பு செய்த பாவங்களையும் கண்டு பிடிக்கக்கூடிய கிருபையை ஆதாரமாய் கொண்டு, தேவன் தன்னோடே கூடப் பேசுகிறார் என்று நிரூபிக்கிறார் (II கொரி 13 : 2, 3).

ஆனபடியால் இவர்கள் சொல்லுகிறபடி நாம் செய்வோம் என தீர்மானித்து, ஒவ்வொன்றாக அறிக்கை செய்ய ஆரம்பித்தேன். இப்படி செய்ய ஆரம்பித்ததுதான், என் சிறு பிராய முதல் நான் செய்ததான அநேக அக்கிரமங்களும் வெளியே கிளம்பி வந்தன. என் எலும்பில் ஒட்டிக் கொண்டிருந்த வாலவயதின் பாவங்களெல்லாம் வெளியே வந்தன. அதற்கு பின்பு நான் தெரிந்து கொண்டேன், மனிதர்கள் பார்வையில் சன்மார்க்கனான நான் இறைவனுடைய பார்வையில் எவ்வளவு தீமைகள் செய்திருக்கிறேன் என அறிந்து மெய் மனஸ்தாபப்பட்டு, பக்கம் பக்கமாய் எழுதி வைத்து அப். 19 : 18 வசனத்தின்படி என்னுடைய செய்கைகளை எல்லாம் வெளிப்படுத்தி அறிக்கை செய்தேன்.

ஆகான் யோசுவாவினிடம் தேவசமுகத்தில் இன்னின்ன பிரகாரம் செய்தேன் என்று சொன்னபடி (யோசு. 7 : 19-21) நானும் அதிகாரம் பெற்ற தேவ ஊழியர் முன் என் பாவங்களை அறிக்கை செய்தேன். சபையில் அறிக்கை செய்யக் கூடியவைகளை (மற்றவர்களும் அறிந்திருந்த) சபையிலும், அப்படி

செய்யக் கூடாதவைகளை ஊழியர் முன்னிலையில் தேவ சமூகத்திலும் அறிக்கை செய்தேன்.

மோசே இஸ்ரவேலரால் உண்டுபண்ணப்பட்ட பொற்கன்று குட்டியை உடைத்து பொடியாக்கி கரைத்து குடிக்க கொடுத்தார். (காரணம் : அதில் ஒரு துண்டு இருந்தால் அதற்கும் ஜனங்கள் பூஜை செய்வார்களே - உபா. 32, 20). அவ்விதமாய் எனக்குள்ளிருந்த பாவத்தை Part, Part ஆக பிரித்து மிகவும் தெளிவாய் அறிக்கை செய்தேன். I யோவா 1 : 7, 8 வசனத்தின்படி இயேசு கிறிஸ்துவின் இரத்தம் என் பாவங்களை எல்லாம் நீக்கி என்னை சுத்திகரித்தது. நான் விரும்பாத தீமை செய்யக் காரணமாயிருந்த எனக்குள் வாசமாயிருந்த பாவம் இயேசு கிறிஸ்துவின் இரத்தத்தால் நீக்கப்பட்டது. இந்த கிறிஸ்துவின் ஆவியின் பிரமாணம் பாவம், மரணம் என்பவைகளினின்று என்னை விடுதலையாக்கிற்று (ரோம. 8 : 2). எனக்கு ஒப்புவிக்கப்பட்ட உபதேச சட்டத்திற்கு மனப்பூர்வமாய் கீழ்படிந்தேன், பரிசுத்த மடைந்தேன் (ரோம. 6 : 17, 18). இரக்கம் பெற்றேன் (நீதி 28 : 13). பாவமன்னிப்பினாலுண்டாகும் மெய் சமாதானமுண்டாயிற்று. நான் விடுதலை பெற முடியாமலிருந்த 'சீ' என்று சொல்லப்பட வேண்டிய அருவருப்புகள் என்னை விட்டு அகன்று போய் விட்டது. வெற்றியுள்ள பரிசுத்த வாழ்க்கை எளிதாய் கிருபையாய், அறிந்து கொண்ட சத்தியத்தால் உண்டானது (கொலோ 1 : 6).

இந்த உபதேசத்தை அறியுமுன் ஒரு பாவம் என்னில் வரும் போது என் மனசாட்சி என்னை வாதிக்கும். பரிசுத்தாவியானவர் துக்கப்படுவார். மனங்கசந்து ஆண்டவரே என்னை மன்னியும். இந்த பாவத்தை செய்து விட்டேன் என்று சொல்லுவேன். வாதிப்பு நீங்காது. திரும்பவும் சொல்லுவேன். பல முறை சொல்லுவேன் நிம்மதி இராது. உன்பாவம் மன்னிக்கப்பட்டது என்பது போன்ற வசனங்கள் கிடைக்காதா என வேதத்தை அலசுவேன் பிரயோஜனமிராது I யோவா 1 : 9. வசனத்துக்கு இறைவனிடம் சொன்னால் போதும் என்ற வியாக்கியானத்தின் படி ஒருமுறை அறிக்கை செய்தால் போதுமே. எத்தனை முறையப்பா அறிக்கை செய்ய வேண்டும்? என் ஆவி மனுஷனோடே என்றென்றைக்கும் போராடுவதில்லை அவன் மாம்சந்தானே (ஆதி. 6 : 3) என்றபடி ஆவியானவர் கொஞ்சக்காலம் உணர்த்தி விட்டு அமைதியாகி விடுவார். ஓ! தேவ சமாதானம் உண்டாயிற்று. கர்த்தர் மன்னித்திருப்பார் என விசுவாசித்து என்னையே ஏமாற்றிக் கொண்டேன். எனக்கு துக்கமுண்டு சந்தோஷமுண்டு என நான் ஏன் விசுவாசிக்க வேண்டும். அது தான் இருப்பது தெரிகிறதே அது போல் பாவபாரம் நீங்கிற்று என்று ஏன் பலவந்தமாய் விசுவாசிக்க வேண்டும் அது நீங்கினதைத் தான் உணர முடியுமே. காண்பதை விசுவாசிக்க வேண்டிய அவசியம் என்ன?

பாவமன்னிப்பின் உபதேசத்தை அறிந்த பின், என்னை (பரிசுத்தாவியை) துக்கப்படுத்துகிற பாவங்களை தேவ மனிதனிடத்திலோ தேவசபையிலோ வெளிப்படுத்தி ஒரு முறை அறிக்கை செய்தால போதும், நொருங்குண்டதும் நருங்குண்டதுமான இருதயத்தை ஒருபோதும் புறக்கணியாத தேவன் பாவத்தை மன்னித்து, பாவத்தைநீக்கி,இரட்சண்ய சந்தோஷத்தை திரும்பத் தந்து என் முகத்தை பிரகாசிக்கப் பண்ணுகிறதை அறிந்து, கிறிஸ்துவுக்குள் எப்போதும் சந்தோஷமாயிருக்கிறேன்.

வெட்கத்தை விட்டு வெளிப்படுத்தி எப்படி அறிக்கை செய்ய நேரிடுகிறது என்பதைக் குறித்து கர்த்தர் ஒரு வெளிப்படுத்தல் கொடுத்தார். ஒரு பிரசங்கி, ஆவியால் நிறைந்து பாவத்தை உணர்த்தி பிரசங்கிக்கிறான். கேட்டுக் கொண்டிருந்த ஒரு மனிதன் இருதயத்தில் குத்தப்படவே, அவன் இருதயம் நொறுங்குகிறது. சுற்றிலும் உள்ள மனிதர்கள் அவனுக்கு தெரியவில்லை. தன்னுடைய பாவமே பெரிதாய் தெரிந்தது. தான் எவ்வளவு பெரியவன் என்று தெரியவில்லை. தன் பாவம் எவ்வளவு பெரியது என்று தெரிந்தது. நிலை மறந்து எழுந்து நின்று நான் பாவம் செய்தேன் என்று கதறினான். தன்னுடைய குழந்தை இறந்து போனதால், இதயம் நொறுங்கி போன கனம் பெற்ற மனிதன் நிலைமறந்து அழுவதுபோல் அந்த மனிதன் அழுதான். மன்னிப்பு பெற்றான். இந்த காரியத்தைத் தான் தாவீது ராஜாவும் செய்தார் (II சாமு. 12: 13). பாவம் செய்யும் போது உனக்கு வெட்கமில்லை, அறிக்கை செய்ய உனக்கெதுக்கு வெட்கம்.

மேலும் பல ஆவிக்குரிய சபைகளைச் சேர்ந்த தேவ மனிதர்களின், சாட்சியின் எழுத்துக்களையும், வார்த்தைகளையும்கவனித்துப்பார்க்கையில், பரிசுத்தாவியால் (பரிசுத்தவான்களால்) அவர்களுடைய பாவங்கள் உணர்த்தப்பட்டு உடைந்த இதயத்தோடு தேவ சமூகத்தில் (வசனத்தை சொன்ன மனிதன் முன்னிலையில் அல்லது சபை முன்னிலையில்) தங்களுடைய வாய் திறந்து அறிக்கை செய்ததாக அறிய முடிகிறது. காலா காலங்களில் பரிசுத்தாவியானவரால் (வசனத்தால்)உணர்த்தப்படுகிறவர்கள் பாவ மன்னிப்பு பெற சத்தமிட்டு அழுது தங்கள் பாவங்களை அறிக்கை செய்த பொழுதே எழுப்புதல் உண்டாயிற்று. இவ்விதமாய் தேவ ஆவியானவர் நடத்தி வருகிறார் என்று அறிகிறேன். விருத்த சேதனம் பிதாக்கள் காலத்திலிருந்தே உண்டாயிருந்த போதிலும் மோசே இஸ்ரவேலருக்கு உபதேசமாய் நியமித்தது போல் (யோவா. 7 : 22) "புதிய எருசலேம் சபை" பாவமன்னிப்பு பெறும் வழியை உபதேசமாக ஏற்படுத்தியுள்ளது எனக் கண்டு கொண்டேன்.

மேலும் இந்த உபதேசத்தை அறியுமுன் பரிசுத்தாவியை அந்நியபாஷை அடையாளத்துடன் பெற்றிருந்தும், ஜெபம் பண்ணுகையில் அந்நியபாஷை பேச விரும்பியும், பேச முடியாதவனாய் வெகுநேரம் இறைவனிடம் கெஞ்சி கேட்டு சில வார்த்தைகள் பேசி இளைப்பாறுதல் அடைகிறவனாய் காணப்பட்டேன். இந்த உபதேசத்தின்படி என் பாவங்களை வெளிப்படையாய் அறிக்கை செய்த நாட்களிலிருந்து பரிசுத்தாவியின் நிறைவோடும், வல்லமையோடும் பல பாஷைகளைப் பேசிப்பரமானந்தமடையஇறைவன் கிருபை செய்துள்ளார்.

நன்மையான எந்த ஈவும் பரத்திலிருந்தே வருகிறது. தேவனிடம் ஒரு நன்மையைப் பெற்றுக் கொள்ள சகோதரர்களின் ஜெபத்தை வாஞ்சிக்கிறோம். பாவமன்னிப்பும் மன்னிக்க தயவு பெருத்த இறைவனால் அருளப்படுகிற மிகப் பெரிய ஈவு என அறிந்து கொண்ட நான், என்னுடைய மீறுதலை மற்றவர்களுக்கு தெரியப்படுத்தி எனக்காக வேண்டுதல் செய்யச் சொல்லி I யோவான் 5:16ன் படி ஜீவனை பெற்றுக் கொள்கிறேன்.

இந்த உபதேசத்தால் நான் அடைந்தது பாவ மன்னிப்பு, பரிசுத்த ஜீவியம்,

பரம சமாதானம், தெய்வீகத்தொடர்பு, பொல்லாங்களை ஜெயித்த வெற்றியுள்ள கிறிஸ்தவ வாழ்க்கை.

நீங்களும் இதைப் பெற்றுக் கொள்ள உங்களுக்கும் அறிவிக்கிறேன்.

இப்படிக்கு,
ஓர் தேவ ஊழியன்

“பூரணப் படுத்துமானால், ஆராதனை செய்கிறவர்கள் ஒருதரம் சுத்தமாக்கப்பட்ட பின்பு இன்னும் பாவங்கள் உண்டென்று உணர்த்தும் மனசாட்சி அவர்களுக்கு இல்லாதிருப்பதினால் அந்த பலிகளைச் செலுத்துகிறது நிறுத்தப்படுமல்லவா” —எபி.10:2

# ஜெபம்

(1984 நவம்பர் மாத தொடர்ச்சி)

ஜெபம் பண்ணும் போது நாம் நம்மை நமது சிருஷ்டி கர்த்தருக்கு முன்பாக தாழ்மையுள்ளவர்களாக காணப்படுதல் மிகவும் அவசியம். ஏனெனில் அவர் தாழ்மையுள்ளவர்களுக்கு கிருபை அளிக்கிறார்; பெருமையுள்ளவர்களுக்கு எதிர்த்து நிற்கிறார் (யாக். 4 : 6). மனாசே நெருக்கப்படுகையில் தன் தேவனாகிய கர்த்தரை நோக்கி கெஞ்சி, தன் பிதாக்களின் தேவனுக்கு முன்பாக மிகவும் தன்னைத் தாழ்த்தினான். (II நாளா 33 : 12) கர்த்தர் அவன் ஜெபத்தைக் கேட்டார். யாக்கோபு “கர்த்தருக்கு முன்பாகத் தாழ்மைப்படுங்கள்” (யாக். 4 : 10) என்றும், சாலொமோன் மேன்மைக்கு முன்னானது தாழ்மை என்றும் கூறுகின்றனர்.

தேவனிடத்தில் சேருகிறவன் அவர் உண்டென்றும், அவர் தம்மைத் தேடுகிறவர்களுக்குப் பலன் அளிக்கிறவரென்றும் விசுவாசிக்க வேண்டும். விசுவாசம் இல்லாமல் தேவனுக்குப் பிரியமாயிருப்பது கூடாத காரியம் (எபி. 11 : 6). நாம் எதையாகிலும் அவர் சித்தத்தின்படி கேட்டால் அவர் நமக்குச் செவி கொடுக்கிறாரென்று விசுவாசிக்க வேண்டும் (I யோவான் 5 : 15). நாம் விசுவாசமுள்ளவர்களாய் ஜெபத்திலே எவைகளைக் கேட்கிறோமோ அவைகளையெல்லாம் பெறுவோம் (மத். 21 : 22) என்று நம்ப வேண்டும். எவ்வளவாகிலும் அவன் சந்தேகப் படாமல் விசுவாசத்தோடே கேட்க வேண்டும் (யாக். 1 : 6) இரு மனமுள்ள மனுஷன் தான் கர்த்தரிடத்தில் எதையாகிலும் பெறலாமென்று நினையாதிருப்பானாக. ஆவியினாலே ஜெபம் பண்ணி அதன் பொருட்டு மிகுந்த மன உறுதியோடும் இருக்க வேண்டும் (எபே. 6 : 18).

கருத்தாய் ஜெபிக்க வேண்டும். அலசடிப்பட்ட எண்ணத்தோடே, ஏனோதானோ என்றோ ஜெபிக்கக் கூடாது. ஐந்து நிமிடம் ஜெபித்தாலும் நாம் கருத்தாய் விண்ணப்பம் செய்ய வேண்டும். எந்தக் காரியத்தைக் குறித்து நாம் ஜெபிக்கிறோமோ அதைக் குறித்து நமக்கு உள்ளத்தில் பாரம் இல்லை என்றால் இறைவனும் அதை ஒரு பொருட்டாக எண்ண மாட்டார். நம்முடைய ஜெபமும் வீண்; நேரமும் வீண். நான் கருத்தோடும் விண்ணப்பம் பண்ணுவேன்...என்று பவுல் கூறுகிறார் (I கொரி 14 : 15). எலியா கருத்தாய் ஜெபம் பண்ணினதால் மூன்று

வருஷமும் ஆறு மாதமும் மழை பெய்ய வில்லை (யாக். 5 : 17).

சோர்ந்து போகாமல் எப்பொழுதும் ஜெபம் பண்ண வேண்டும் - லூக் 18 : 1 தேவன் தம்மிடத்தில் கேட்கிற சிலருக்கு உடனே கொடுத்து விடுகிறார். சிலருக்கு நீண்ட நாட்கள் கழித்து கொடுக்கிறார். சிலர் தாங்கள் விரும்பி கேட்ட காரியத்தை தேவன் அவர்களுடைய நன்மையைக் கருதி கொடுக்காமலும் இருப்பார். சிறு குழந்தை தன் தகப்பனிடம் விளையாடுவதற்கு கத்தியைக் கேட்டால் எப்படி அவன் கொடுக்க மாட்டானோ அப்படியே இறைவனும் அவசியமான நன்மையை குறித்த காலங்களில் தான வழங்குகிறார். ஆனபடியினால் நாம் ஜெபிப்பதற்கு சோர்ந்து போகாது எப்பொழுதும் வேண்டுதல் செய்ய வேண்டும். கர்த்தர் தம்முடைய வேளையில் நமக்குத் தந்தருளுவார்.

தேவன் தம்மை நோக்கி இரவும் பகலும் கூப்பிடுகிறவர்களாகிய தம்மால் தெரிந்து கொள்ளப் பட்டவர்களின் விஷயத்தில் நீடிய பொறுமையுள்ளவராயிருந்து நியாயஞ் செய்வார்.

ஜெபம் செய்யுங்கள். ஊக்கத்தோடு ஜெபியுங்கள்.

# HAVE YOU RECEIVED THE BAPTISM OF THE HOLY SPIRIT?

Brethren, What shall we do (to receive the Holy Spirit)—Acts. 2 : 37. Though the sentence "To receive the Holy Spirit" mentioned in the above verse is not seen in the scriptures, those who read the passage Acts 2 : 1—39 can perceive that they have only asked the means to receive the Holy Spirit. Saul asked, Lord what will you have me to do? (Acts 9 : 6). The keeper of the prison asked, What must I do to be saved? (Acts 16 : 30).

(1) LORD JESUS appeared unto Saul, the great adversary of Jesus, who went on his way to Damascus to bind and persecute the children of God, against the will God and against His church. Here Saul's former ways had come to an end. He beleived and accepted Jesus and submitted his remnant life and asked, LORD what will you have me to do? For that LORD said unto him, Go into the city and it shall be told you what you must do. There Ananias, the disciple came unto him and said what he had to do (Acts 9 : 17; 22 : 12—16).

(2) Seeing the wonder in the prison, the keeper of it asked, Sirs, what I must do to be saved? and it was told unto him, Beleive LORD JESUS and you shall be saved and your house. That night itself he and all of his were baptised (Acts 16 : 30-33).

(3) In the day of Pentecost, the members of the earlier church were filled with the Holy Spirit. The experience of the Holy Spirit was seen and heard with ears by the people and they marveled at these things. Then Apostle Peter stood up with the eleven and preached unto them. The theme of the message was thus: These are not drunken, but the Holy Spirit was poured out according to the prophecy of Joel, you have crucified and slain Jesus who God has raised and we are the witnesses. Therefore being by the right hand of God exalted and having received of the Father the promise of the Holy Spirit, he has shed forth, the disciples of him, which you now see (shaking in the body) and hear (tongues which can be heard)—Acts 2 : 14—33. When they heard this Peter's message, they were pricked in their heart and said unto Peter and to the rest of the apostles, Men and Brethren, what shall we do to receive this experience? (Acts 2 : 37). Then Peter said unto them, Repent

and be baptised every one of you in the name of Jesus Christ and you shall receive the gift of the Holy Spirit. For the promise is unto you, and to your children, and to all that are afar off, even as many as the LORD Our God shall call (Acts 2 : 38, 39).

Nowadays many desire to receive the Spirit, but they are not willing to satisfy the conditions what the Scripture says and hence many receive evil spirit instead of Holy Spirit. Many are trying to receive the Holy Spirit without considering the way which was shown to the apostles.

The Roman Pentecost (Catholics) who haven't forshaken the mother (Mary) worship, idol worship and sin, the Protestant Pentecost who have not given up their sin, and manly rituals, the Spiritual Assemblies who haven't forshaken the fenatics of castes, hypocrisy, pride lust of money and lust of status, the preachers who soothsay, claiming the Holy Spirit speaks, and the woman who come up to the stage and preach, prophesy and conduct the church, all these think that they have received the Holy Spirit. The Holy Spirit, the Spirit of God is the Spirit of truth.

The purpose for which the Holy Spirit comes into a man is to sanctify him. The very same Holy Spirit who initiated men to write the Holy Scriptures is coming up on the men who seek Him sincerely. The purpose for which the Holy Spirit fills a man is to make him to obey to the word of God. One can deicern whether a person possess the Holy Spirit or evil spirit by seeing how for he is obedient to the word of God.

All who disobey the word of God are of evil spirits. Though they speak in tongues or prophesy or do wonders, they are evil spirits. No doubt in it.

Therefore according to the counsel of the apostles, one can receive the Holy Spirit, by repenting and being baptised for the remission of sins (salvation). Those who have received the Holy Spirit with the experience mentioned in the passage Acts 2 : 1-4 shall keep the Holy Spirit by continuing the fellowship with apostles, and taking part in the Lord's Table and worshiping God with them (Acts 2 : 37—42). Otherwise the evil spirit will enter inside and seduce.

Beloved, believe not every spirit, but try the spirits whether they are of God. Beware of the spirit which you have. It is mentioned, then you will receive the Holy Spirit.

Those who had received the Holy Spirit before taking baptism by the teaching of the apostle, at once took baptism and became the members of the church (Acts 10 : 44-46).

Those who didn't receive the Holy Spirit even after baptism may ask apostles to lay hands upon them and pray to receive the Holy Spirit (Acts 8 : 14—17).

Ye who beleive Lord Jesus Christ and haven't received the Holy Spirit, receive apostle's teaching, be baptised and receive the Holy Spirit (Acts 19 : 1—6).

The Baptism of the Holy Spirit is the seal for that you will be taken up in coming of the LORD JESUS CHRIST (II Cor. 1 : 21, 22; Eph. 1 : 13).

RECEIVE THE HOLY SPIRIT.

> "Ye have an unction from the Holy one, and ye know all things." —I John 2 : 20.

# புதிய எருசலேம் செய்தி

NEW JERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் - 14 * பிப்ரவரி 1985



"புதிய எருசலேம் சபை"

"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ,
நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ,
எப்பொழுது வருவா(ர்)ன என்று நீங்கள் அறியீர்கள்....
விழித்திருங்கள்...உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லோ
ருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்..."

மாற்கு 13 35-37

**EDITOR: CHIEF PASTOR N. LAZAR**

BOMBAY, INDIA

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லோரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒருமனப்பட்டு கிறிஸ்துவுக்கேற்பான பூரண வளர்ச்சியடையும் படியாகவும் தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய்க் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும்; சபையானது வஞ்சக போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும் படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது.

(எபே.4:11-16)

## இதழின் உள்ளே



1-1-1985 அன்று வள்ளியூரில் நடந்த ஞானஸ்நான கூட்டத்தில் 24 பேர்களும் 13-1-85 தாந்துக்குடியில் 3 பேர்களும் ஞானஸ்நானம் பெற்று கிறிஸ்துவுக்குள்ளானார்கள்.

# ஆசிரியர் உரை

இது கடைசிக் காலம், ஆதியில் ஏவாள் சாத்தானால் வஞ்சிக்கப்பட்டு விழுந்து போனாள். வஸ்தி செருக்கினால் கீழ்ப்படியாமையைக் காட்டி தள்ளப்பட்டாள். அவள் இடத்தில் எஸ்தர் ராஜாத்தியாக முடிசூட்டப்பட்டது போல், ஆதி சபை விழுந்து போயிற்று. அதற்குப் பதிலாக தேவன் இந்தக் கடைசிக் காலத்தில் சபையை எழுப்பியுள்ளார். எஸ்தரால் யூதரின் எதிரியான ஆமான் வீழ்ச்சியுற்று அவன் அதிகாரமும், வீடும் பறிக்கப்பட்டது போல், இக் கடைசிக் கால சபை தேவ ஜனங்களின் சத்துருவான சாத்தானை வீழ்த்தி தேவ ஜனங்களை விடுவிக்கும். எஸ்தரின் புஸ்தகம் ஒரு இரகசியமான புஸ்தகம். தேவன் அல்லது கர்த்தர் என்ற ஒரு வார்த்தைக் கூட அதில் இல்லாத போதும் தேவன், அப்புஸ்தகத்தை வேதாகமத்துக்குள் அமைத்துள்ளார். அதற்கு காரணம் அது திருச்சபையைக் குறித்த இரகசிய புஸ்தகம் ஆகும். அதில் அநேக இரகசியங்கள் உண்டு. தன் குலத்தையும், பூர்வோத்திரத்தையும் அறிவிக்காதிருக்க கற்பிக்கப்பட்டு; கற்பித்தபடி தன் குலத்தையும் பூர்வோத்திரத்தையும் தெரிவிக்காதிருந்து ஆயத்தப்பட்டுக் கொண்டிருக்கிற கன்னியாம் திருச்சபை சீக்கிரம் அங்கீகரிக்கப்பட்டு முடிசூட்டப்படும். தன் குலத்தையும் பூர்வோத்திரத்தையும் அறிவித்து மாம்சத்தை அஸ்திபாரமாகக் கொண்டுள்ள ஒருவரும் மணவாட்டியாகார். அவர்கள் கர்த்தருடைய வருகையில் எடுத்துக் கொள்ளப்பட மாட்டார்கள். நீர் திருச்சபையா? அல்லவென்றால் சீக்கிரம் திருச்சபையோடு சேர்ந்து கொண்டு "திருச்சபையாக மாறும். இதோ திருச்சபை. திருச்சபை விளம்புகிறது-நீ.தி.9:1—6.

கிறிஸ்துவுக்குள்,

Chief Pastor N. LAZAR

# திருச்சபையின் திறவுகோலின் அதிகாரம்

கர்த்தராகிய இயேசுகிறிஸ்து திருச்சபைக்கு கொடுத்த அதிகாரங்களில் ஒன்று திறவுகோலின் அதிகாரமாகும். அது பாவங்களை மன்னிக்கவும் (விடுதலையாக்குவது), மன்னியாதிருக்கவும் (சுமத்தி வைக்கவும்) கொடுத்த அதிகாரமாகும்.

கர்த்தராகிய இயேசு கிறிஸ்து பிலிப்பு செசரியாவின திசைகளில் வந்தபோது தம்முடைய சீஷரை நோக்கி மனுஷ குமாரனாகிய என்னை ஜனங்கள் யார் என்று சொல்லுகிறார்கள் என்று கேட்டார். அதற்கு அவர்கள்: சிலர் உம்மை யோவான்ஸ்நானன் என்றும், சிலர் எலியா என்றும், வேறு சிலர் எரேமியா அல்லது தீர்க்கதரிசிகளில் ஒருவர் என்றும் சொல்லுகிறார்கள் என்றார்கள். அப்பொழுது அவர் "நீங்கள் என்னை யார் என்று சொல்லுகிறீர்கள் என்று கேட்டார்" (மத். 16 : 13-15). அப்பொழுது அப்போஸ்தலர்களின் பிரதிநிதியாக அப். பேதுரு முதன் முதலாவது கிறிஸ்தவ அறிக்கையைச் செய்கிறார். அதாவது, "சீமோன் பேதுரு பிரதியுத்திரமாக: நீர் ஜீவனுள்ள தேவனுடைய குமாரனாகிய கிறிஸ்து என்றான்" (மத்.16 : 16).

இதைத் தொடர்ந்து கர்த்தராகிய இயேசு கிறிஸ்து திருச்சபையைப் பற்றி தெளிவாகப் பேசுகிறார். "இயேசு அவனை நோக்கி: யோனாவின் குமாரனாகிய சீமோனே, நீ பாக்கியவான். மாம்சமும், இரத்தமும் இதை உனக்கு வெளிப்படுத்தவில்லை, பரலோகத்திலிருக்கிற என் பிதா இதை உனக்கு வெளிப்படுத்தினார். மேலும் நான் உனக்குச் சொல்லுகிறேன், நீ பேதுருவாய் இருக்கிறாய், இந்தக் கல்லின் மேல் என் சபையைக் கட்டுவேன்; பாதாளத்தின் வாசல்கள் அதை மேற்கொள்வதில்லை. பரலோக இராஜ்யத்தின் திறவுகோலை நான் உனக்குத் தருவேன். பூலோகத்தில் நீ கட்டுகிறது எதுவோ, அது பரலோகத்திலும் கட்டப்பட்டிருக்கும். பூலோகத்திலே நீ கட்டவிழ்ப்பது எதுவோ அது பரலோகத்திலும் கட்டவிழ்க்கப்பட்டிருக்கும் என்றார்" (மத். 16 : 17, 18, 19). கட்டுவதும், கட்டவிழ்ப்பதும் இதே வசனங்கள் மறுபடியும் சபைக்கு கீழ்ப்படியாதவனை சபையை விட்டுப் புறம்பாக்கும் விதத்தை கர்த்தர் அறிவிக்கும் போதும் சொன்னதாக வாசிக்கிறோம் (மத். 18 : 15-18).

இயேசு கிறிஸ்து தாம் உயிர்த்தெழுந்த பின் அன்று மாலையில் அப்போஸ்தலர் கூடியிருந்த அடைக்கப்பட்ட வீட்டிற்குள் பிரவேசித்து அவர்களுக்கு தம்மைக் காண்பித்து கட்டளை கொடுத்து அப்போஸ்தலர்களாக அனுப்புகிறார்.

"இயேசு மறுபடியும் அவர்களை நோக்கி: உங்களுக்குச் சமாதானம் உண்டாவதாக, பிதா என்னை அனுப்பினது போல நானும் உங்களை அனுப்புகிறேன் என்று சொல்லி, அவர்கள் மேல் ஊதி: பரிசுத்த ஆவியைப் பெற்றுக் கொள்ளுங்கள்; எவர்களுடைய பாவங்களை மன்னிக்கிறீர்களோ அவைகள் அவர்களுக்கு மன்னிக்கப்படும், எவர்களுடைய பாவங்களை மன்னியாதிருக்கிறீர்களோ அவைகள் அவர்களுக்கு மன்னிக்கப் படாதிருக்கும் என்றார்" (யோ. 20 : 21-23). இது இயேசு கிறிஸ்து உயிர்த்தெழுந்த பின் பரிசுத்த அப்போஸ்தலர்களுக்கு கொடுத்த அதிகாரமும் கட்டளையுமாகும் (அப். 1 : 1). இதுதான் திறவுகோலின் அதிகாரமாகும்.

பாவங்களுக்காக மனஸ்தாபப்பட்டு மனந்திரும்புகிறவர்களுக்கு மன்னிப்பு அளித்து, வாசலைத் திறந்து பரலோக ராஜ்யத்திற்குள் பிரவேசிக்கச் செய்வதும்; குணப்படாதவர்களுக்கு, மனஸ்தாபப்பட்டு மனந்திரும்பாத மக்களுக்கு வாசலை அடைத்து வைக்கவும் (மன்னியாதிருத்தல்) அப்போஸ்தலர்களுக்கு அதிகாரமுண்டு. யோவா. 3 : 3, 5 ஐயும் பார்க்க. நீங்கள் மன்னித்தால் பரலோகத்திலும் மன்னிக்கப்பட்டிருக்கும். நீங்கள் மன்னியாதிருந்தால் பரலோகத்திலும் அவைகள் மன்னிக்கப்படாது என்று கர்த்தர் சொன்னார். அதாவது அப்போஸ்தலர்கள் மெய்யான சபை பூலோகத்தில் இயேசுவின் நாமத்தில் நிகழ்த்துவது

பரலோகத்திலும் நிகழ்கிறது என்று வேதம் சொல்லுகிறது. அப்படியே அப். பவுலும் உங்களுக்கு நான் எதை மன்னிக்கிறேனோ அதை கிறிஸ்துவின் சன்னிதானத்திலே மன்னிக்கிறேன், என்கிறார் (II கொரி. 2 : 10).

ஜனங்கள் (விசுவாசிகள்) தங்கள் பாவங்களை வெளிப்படையாய் அறிக்கை செய்வதும், சபையின் மத்தியிலோ, அதிகாரம் பெற்ற ஊழியர் முன்போ அறிக்கை செய்வதும் (பாவசங்கீர்த்தனம்) பாவமன்னிப்பு பெற்றுக் கொள்வதும் அவசியம் (அப். 19 : 18; மத். 3 : 5, 6; I யோவா. 1 : 7–10; யாக். 5 : 14—16). தன்னை வாதிக்கும் பாவத்தை விசுவாசி வெளிப்படையாய் மெய் மனஸ்தாபத்துடன் அறிக்கை செய்யாதவரை அவன் அப்பாவத்திலிருந்து விடுதலை பெற்றுக் கொள்ள முடியாது. ஒரு ஆத்துமா கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை இரட்சகராக ஏற்றுக்கொள்வதற்கு எந்த மனிதனும் இடையில் தேவையில்லை. ஆனால் இரட்சிக்கப்பட வேண்டுமானால் இயேசு கிறிஸ்துவை அறிக்கை செய்வதும், பாவ அறிக்கை வெளிப்படையாய் செய்து, ஞானஸ்நானம் முழுகி பெற்றுக் கொள்வதும் அவசியம். அப்பொழுதே அவனுக்கு பாவ மன்னிப்பு கிடைக்கும். இரட்சிக்கப்படுவான். அவன் செய்த பாவம் அவனுக்கு மன்னிக்கப்படும். அவன் பாவம் கழுவப்படும்.

முதலாவது ஒருவன் பாவ மன்னிப்பு பெற்றுக் கொள்வது, இரட்சிக்கப்படுவது ஞானஸ்நானத்தின் மூலமே. காண்: அப். 2 : 37, 39; 8 : 37, 38; மாற். 16 : 16; அப். 22 : 16. இவ்விதம் ஞானஸ்நானம் பெற்று இரட்சிப்பை பெற்றுக் கொண்ட விசுவாசியின் ஜீவியத்தில் தவறுகள் ஏற்படும் போது அவன் பாவ அறிக்கை செய்து (பாவ சங்கீர்த்தனம்) பாவமன்னிப்பைப் பெற்றுக் கொள்ள வேண்டும் (யோவா 20 : 23). தங்களிடத்தில் பாவ அறிக்கை செய்கிறவர்களின் பாவங்களை மன்னிக்கவும் (கட்டவிழ்த்தல்) அறிக்கை செய்யாத பாவங்களை சுமத்தி வைக்கவும் (கட்டுவித்தல்) அப்போஸ்தலர்களுக்கு அதிகாரமுண்டு (யோவா 20 : 23). தன் பாவங்களை மறைக்கிறவன் வாழ்வடைய மாட்டான், அவைகளை அறிக்கை செய்து விட்டு விடுகிறவனே இரக்கம் பெறுவான் (நீதி. 28 : 13).

இந்த உபதேசத்தைக் கேட்டவுடனே ரோமன் கத்தோலிக்க உபதேசமென்றும், மார்ட்டின் லூத்தர் சாஸ்திரியார் உடைத்தெறிந்த உபதேசத்தை மறுபடியும் போட பார்க்கிறார்கள் என்று புராட்டஸ்டண்டு கிறிஸ்தவர்கள் கூப்பாடு போடுவதுமல்லாமல் மார்ட்டின் லூத்தரைப்பற்றி பொய்ப் பிரச்சாரம் செய்து விஷயம் அறியாத கிறிஸ்தவர்களை வஞ்சிக்கிறார்கள். லூத்தர் பாவ மன்னிப்பு சீட்டு பணத்திற்கு விற்கப்படுவதைத் தான் எதிர்த்தாரே ஒழிய பாவ மன்னிப்பு உபதேசத்தை அல்லது பாவமன்னிப்பு அதிகாரத்தை, பாவ சங்கீர்த்தனத்தை எதிர்க்கவில்லை.

பாவ மன்னிப்பு அதிகாரம் திருச்சபையின் திறவுகோல் அதிகாரமாகும் என்று மிகவும் தெளிவாக தம்முடைய விலையேறப் பெற்ற புஸ்தகமாகிய கெத்கெஸீமில் எழுதியுள்ளார். படித்தவர்களுக்கும் லூத்தரின் சபையார்களுக்கும் நாங்கள் எழுதுவது என்னவென்று தெரியும். ஆனால் லூத்தரின் சபையும் விழுந்து போனபடியினால் இந்த அதிகாரத்தை நடைமுறைப்படுத்த முடியாமலும், மக்களை பாவசங்கீர்த்தனம் செய்ய போதிக்க முடியாமலும் தாழ்வுற்றுள்ளது. ஆனபடியால் ஒரு பொய்யை பல முறை மேடைகளில் பிரசங்கித்தால் அது மெய்யாகிவிடும் என்று டாக்டர் கோயபல் (ஹிட்லரின் வலது கையாள்) இரண்டாம் உலக மகாயுத்தத்தின் போது சொன்னதுபோல் டாக்டர் மார்ட்டின் லூத்தரின் மேல் பழி போட்டு பொய்யை பிரசங்கியாதிருங்கள். ஒரு போதும் சத்தியம் சாவதில்லை. சாவது சத்தியமில்லை. நாங்கள் சத்தியத்தைப் பேசுகிறோம். எங்கள் சுவிசேஷம் ஒருவனுக்கு மறை பொருளாயிருந்தால் கெட்டுப் போகிறவர்களுக்கே அப்படி இருக்கும். II கொரி. 4 : 3 வசனத்தின்படி நடக்கிறோம் என்கின்ற சிலர் யோவா. 20 : 23 வசனத்திற்கு விளக்கம், இது ஒருவருக்கொருவர் மன்னிக்கிறது என்பர். மன்னிப்பு கேட்கிறவர்களுக்கு மன்னிப்பது கிறிஸ்தவ பண்பாகும் அது மத். 18 : 21—35ல் எழுதப்பட்டுள்ளது. யோவா. 20 : 23 பாவமன்னிப்பு அதிகார

மாகும். "நீங்கள் எவர்களுடைய பாவங்களை மன்னிக்கிறீர்களோ அவைகள் அவர்களுக்கு மன்னிக்கப்படும். எவர்களுடைய பாவங்களை மன்னியாதிருக்கிறீர்களோ அவைகள் அவர்களுக்கு மன்னிக்கப்படாதிருக்கும் என்றார்."

ஒரு மனிதனுக்கு விரோதமாய் ஒருவன் ஒரு பெரும் தவறைச் செய்து விட்டு வந்து மன்னிப்பு கேட்கிறான் என்று வைத்துக் கொள்ளுங்கள்: பாதிக்கப்பட்டவன் மன்னிக்க மனமின்றி மன்னிக்காவிட்டால் மன்னிப்பு கேட்டவன் இறைவனிடம் மன்னிப்பு கேட்டு மன்னிப்பை பெற்றுக் கொள்ள முடியும். ஆனால் யோ. 20 : 23 நீங்கள் மன்னிக்காவிட்டால் அது மன்னிக்கப்படாது (நானும் மன்னிக்கவில்லை என்கிறார் இறைவன் இயேசு). இன்னும் சிலர் அந்நாளில் இயேசுவைக் கொலை செய்த வேதபாரகரைப் போல் தேவன் ஒருவர் தவிர பாவங்களை மன்னிக்க ஒருவருக்கும் அதிகாரமில்லை என்கின்றனர். ஆம், பாவங்களை மன்னிக்க பிதாவாகிய தேவனுக்கு அதிகாரமுண்டு; இயேசு கிறிஸ்துவுக்கும் அதிகாரமுண்டு; அப்போஸ்தலருக்கும் அதிகாரம் உண்டு. இயேசு கிறிஸ்துவும் அப்போஸ்தலர் (எபி. 3 : 1; யோ 20 : 23; II கொரி. 2 : 10) ; மெய்யான திருச்சபைக்கு அதிகாரமுண்டு (I கொரி. 5 : 3—13; II கொரி. 2 : 7 – 10; மத். 18 : 15—20).

பொதுவாக கிறிஸ்தவ உலகத்தில் அநேக தப்பறைகள் நடமாடுகின்றன. அவர்கள் திருச்சபையாராயில்லாதபடியால் அப்படி இருக்கிறது என்று எண்ணுகிறோம். சிறிய பிரசங்கி முதல் பெரிய பேர் பெற்ற பிரசங்கிகள் வரை இப்படி பிரசங்கிக்கிறார்கள். கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசி, நீ எங்கே இருந்தாலும் சரி, இயேசுவை நோக்கி பாவ அறிக்கை செய்து ஜெபம் பண்ணு உன் பாவம் மன்னிக்கப்படும்; நீ இரட்சிக்கப்படுவாய், நீ இரட்சிக்கப்பட்டவன்தான் என்றும்; சபை வேண்டாம் என்றும் இன்னும் இப்படிப்பட்ட பற்பல அபிப்பிராயங்களை போதிக்கின்றனர்.

ஆனால் புதிய ஏற்பாட்டில் நான்கு சுவிசேஷங்களில் எந்த இடத்திலும் எந்த மனிதனும் இயேசுவிடம் பாவ அறிக்கை செய்ததாகவோ, புதிய ஏற்பாட்டில் எந்த அப்போஸ்தலனோ, பிரசங்கியோ நீ இயேசுவிடம் உன் பாவங்களை அறிக்கை செய் என்றோ பிரசங்கிக்கவில்லை. ஒரு இடத்தில் சகேயு மாத்திரம்..."கர்த்தரை நோக்கி: ஆண்டவரே, என் ஆஸ்திகளில் பாதியை ஏழைகளுக்கு கொடுக்கிறேன். நான் ஒருவனிடத்தில் எதையாகிலும் அநியாயமாய் வாங்கியிருந்தால் நாலத்தனையாய் திரும்ப செலுத்துகிறேன்" என்று தான் செய்யப் போகிறதை அறிக்கை செய்தார் (லூக். 19 : 8). அதுவும் ஜனங்களின் மத்தியில் செய்த நற்சாட்சிதான், பாவ அறிக்கை அல்ல.

கர்த்தராகிய இயேசு கிறிஸ்து, தேவன். அவர் மக்களைப் பார்த்தும் மகனே! மகளே! உன் பாவங்கள் மன்னிக்கப்பட்டது என்றார். "அவருடைய பார்வைக்கு மறைவான சிருஷ்டி ஒன்றுமில்லை ; சகலமும் அவருடைய கண்களுக்கு முன்பாக நிர்வாணமாயும், வெளியரங்கமாயும் இருக்கின்றன" (எபி. 4 : 13). உன் பாவங்களை அறியாத தேவ ஊழியரிடம்தான் நீ அறிக்கை செய்ய வேண்டும். அப்போஸ்தலனிடம், அதிகாரம் பெற்ற மெய்யான ஊழியனிடம் அறிக்கை செய்ய வேண்டும். தேவ ஊழியனிடம் பொய் சொல்வது தேவனிடம் சொல்வதாகும். தேவ ஊழியரிடம் மறைப்பது தேவனிடம் மறைப்பதாகும். காண்; அனனியா, சப்பீராள் கதையை (அப். 5 : 1—10). ஆனபடியினால் எங்கேயிருந்தும் அல்லது படுக்கப் போகுமுன் இயேசுவிடம் பாவ அறிக்கை செய்கிறேன் என்று ஜெபம் பண்ணுவதினால் உன் பாவம் மன்னிக்கப்படாது.

நீ மனந்திரும்பி கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசித்து ஏற்றுக்கொண்டு எப்போ திருச்சபையினிடம் வந்து ஞானஸ்நானம் பெற்றுக் கொள்ளுகிறாயோ அப்பொழுதே நீ செய்த பாவம் மன்னிக்கப்படும். உன் பாவம் போக உள்ளும் புறமும் கழுவப்படுவாய். இரட்சிக்கப்படுவாய் (அப். 2 : 38; 22 : 16; மாற். 16 : 16). திருவசனத்தை விட்டு விட்டு, வசனத்தை மாற்றி பிரசங்

கிக்கிற, அபிப்பிராயங்களை வெறுக்கிற மனிதருக்குச் செவி கொடாதே. வசனத்தைப் பார். நியாயந் தீர்க்கப் போகிறது வசனமே. "என்னைத் தள்ளி என் வார்த்தைகளை ஏற்றுக் கொள்ளாதவனை நியாயந் தீர்க்கிறதொன்றிருக்கிறது; நான் சொன்ன வசனமே அவனைக் கடைசி நாளில் நியாயந்தீர்க்கும்" (யோவா. 12 : 48). சகல பாவங்களும் நீங்கி சுத்திகரிக்கப்பட இயேசு கிறிஸ்துவின் இரத்தம் போதுமானதாயிருக்கிறது (1 யோவா. 1 : 7).

ஆனபடியால் திறவுகோலின் அதிகாரமுடைய திருச்சபையே மெய்யான திருச்சபை. ரோமன் கத்தோலிக்க சபையில்கூட பாவசங்கீர்த்தனம் கி. பி 13-ம் நூற்றாண்டில் தான் சடங்காச்சாரமாக ஆரம்பிக்கப்பட்டதேயொழிய ஆதியிலிருந்தல்லவென்பதை அறிந்து கொள்ளவும். வேதாகமத்தில் காணப்படுகிற ஆதி சபையின் உபதேசத்தை மறுபடியும் நாங்கள் கர்த்தராகிய கிறிஸ்துவிடம் பெற்று, வேத ஆதாரத்துடன் உங்களுக்குப் போதிக்கிறோம்.

நீ ஐக்கியப்படுகிற சபை திருச்சபை தானா? பாவங்களை மன்னிக்க அதிகாரமுடைய அப்போஸ்தலன் உன் சபைக்கு உண்டா? நீ சகல பாவங்களிலிருந்தும் விடுதலையாகி சுத்திகரிக்கப்பட்டவனும், சுத்திகரிக்கப்பட்டவனாய் இருக்கிறாயா? அல்லவென்றால் நீங்கள் அநுசரித்து வருகின்ற சடங்காச்சார பிரமாணங்களினால் எவைகளினின்று நீங்கள் விடுதலையாக முடியாதிருக்கிறதோ அவைகளிலிருந்து இவராலே புதிய எருசலேம் மூலம் விடுதலையாக்குகிறதென்று அறிவிக்கிறோம் (அப். 13 : 38, 39).

திருச்சபைக்கு பாவங்களை மன்னிக்கும் அதிகாரம் உண்டு. அதுவே திருச்சபையின் திறவுகோலின் அதிகாரம். இயேசு கிறிஸ்துவே கட்டளையிட்டார்-அப். 1 : 1, யோவா 20 : 23 (புதிய எருசலேம் சபையின் பாவ மன்னிப்பு கைப்பிரதியைப் பார்க்கவும்).

---

"பரலோகத்தின் திறவுகோல்களை நான் உனக்குத் தருவேன்"—மத். 16 : 19

---

# இயேசு கிறிஸ்துவின் சரீரமாகிய சபை

மனந்திரும்பி, பாவமன்னிப்புக்கென்று ஞானஸ்நானம் பெற்று, பரிசுத்தாவியின் அபிஷேகமும் பெறுகிறவர்கள் திருச்சபையின் உறுப்பினர்களாக கருதப்படுகின்றனர். இவ்விதமாய் இரட்சிக்கப்படுகிறவர்களை கர்த்தர் சபையிலே சேர்க்கிறார் (அப். 2 : 37—47). இந்தக் கூட்டத்தார் கிறிஸ்துவின் சரீரமாகிய சபை என்று சொல்லப்படுகிறார்கள் (எபே. 4 : 11).

**சரீரமாகிய சபையின் தலை :**

அநேகருடைய அபிப்பிராயம், இயேசு கிறிஸ்து தலையாகவும், நாம் கை, கால் போன்ற உறுப்புகளாகவும் இருக்கிறோம் என எண்ணுகிறார்கள். உண்மையில் கிறிஸ்துவின் சரீரமாகிய சபைக்கு தலை இயேசு கிறிஸ்துவே. ஆனால் அவர் எப்படி தலையாக இருக்கிறார் என்றால், ஒரு மனைவிக்கு புருஷன் தலையாக இருக்கிறது போல், அவர் சபைக்கு தலையாக இருக்கிறார் என்று வேதம் சொல்கிறது (எபே.5 : 23) ஆகவே மனைவியாகிய அந்த ஸ்திரீக்கு தலை உண்டு. அந்த தலையோடே மற்ற அவயவங்களெல்லாம் இசைவாய் இணைக்கப்பட்டு முழு சரீரமாய் இருக்கிறது. சரீரம் என்றாலே தலைமுதல் பாதம் வரை உள்ள அவயவங்கள் எல்லாம் சேர்ந்தது என்று அர்த்தம். தலை இல்லாவிட்டால், தலையில்லா சரீரம் என்று அழைக்கப்படும். கிறிஸ்து தலை என்றால் அவரும் சரீரத்தின் அவயவங்களில் ஒன்றாகிறார். அப்படி இருக்க அவருடைய சரீரமாகிய சபை என்று சொல்ல முடியாதே. ஆகவே கிறிஸ்துவின் சரீரமாகிய சபைக்கு, சரீரத்தின் அவயவங்களின் ஒன்றான தலை (தலைவர்) உண்டு என அறியலாம்.

எகிப்திலிருந்து புறப்பட்ட இஸ்ரவேலின் சபைக்கு மோசே தலைவராயிருந்தார். மோசே சுயமாக ஒன்றும் செய்யாமல் சபையின் நாயகராகிய கர்த்தர் சொல்லுகிறதை மாத்திரம் செய்து வந்தார். மோசேயின் காலம் முடிவடைந்ததும், மோசே கர்த்தரை நோக்கி: "கர்த்தருடைய சபை மேய்ப்பன் இல்லாத மந்தையைப் போல் இராதபடிக்கு அந்த சபைக்கு முன்பாக போக்கு வரத்துமாயிருக்கும் படிக்கும், அவர்களை போகவும், வரவும் பண்ணும்படிக்கும் மாம்சமான யாவருடைய ஆவிகளுக்கும் தேவனாகிய கர்த்தர் ஒரு புருஷனை அவர்கள் மீது அதிகாரியாக ஏற்படுத்த வேண்டும் என்றான் (எண். 27 : 16,17)."

அதன்படி யோசுவா இஸ்ரவேல் சபைக்கு தலைவராக இருந்து அவர்களை நடத்தினார்.

காணப்படுகிற இந்த தலைவர்கள் சபையை ஆளுகை செய்து நடத்தி வந்தார்கள் என்ற போதிலும் உண்மையில் கர்த்தரே சபையின் தலைவராக இருந்து சபையை நடத்துகிறார். ஆனபடியால் தான் கர்த்தரால் ஏற்படுத்தப்பட்ட சாமுவேல் தீர்க்கதரிசியின் ஆளுகை வேண்டாம், எங்களுக்கு இராஜா வேண்டும் என ஜனங்கள் கேட்ட போது, சாமுவேலை நோக்கி கர்த்தர்: அவர்கள் உன்னையல்ல என்னைத் தள்ளிப்போட்டார்கள் என்று சொல்கிறார் (1சாமு. 18 : 7). கர்த்தரால் ஏற்படுத்தப்பட்ட தலைவன் சபையை ஆளுவது கர்த்தரே தலையாக இருந்து ஆளுகிறார் என்று அர்த்தம். இயேசு கிறிஸ்துவும் தம்முடைய சீஷர்களுக்கு சீஷர்களில் ஒருவனாகிய தலைவன் (Chief) உண்டு என்கிறார் (லூக். 22 : 26). ஆனால் இந்த தலைவன் மற்றவர்களுக்கு பணிவிடைக்காரனாக (Servant) இருக்க வேண்டுமென்கிறார். பணிவிடைக்காரன் என்றால் இயேசு கிறிஸ்து தம்முடைய சீஷர்கள் முன் எப்படி ஊழியக்காரனாய் இருந்தாரோ அப்படியே இருக்க வேண்டுமென்று இயேசு சொன்னார் (மாற். 10 : 45,44).

விருத்தசேதன முள்ள யூதர்களில் அநேக அப்போஸ்தலர்கள் இருந்து சபையை நடத்திவரும் போது, விருத்தசேதனமுள்ளவர்களுக்கு பேதுரு அப்போஸ்தலனாக (தலைவனாய்)யிருக்கும்படி கர்த்தர் பலப்படுத்தினார் என்று பரி.பவுல் சொல்லியிருக்கிறார் (கலா. 2 : 8). புறஜாதிகளுக்கு பவுல் அப்போஸ்தலனாக (தலைவனாக) தேவனால் ஏற்படுத்தப்பட்ட போதும், பிரதான அப்போஸ்தலருக்கு இவர் கீழ்ப்பட்டே இருந்தார். தனக்குண்டான புறஜாதியாரைப்பற்றிய வெளிப்படுத்தலை பேதுருவின் முன்னிலையில் (எருசலேமிலுள்ள சபையில்) விவரித்து காண்பிக்கும்படி தேவ அறிவிப்பினால் எருசலேமுக்கு போனார் (கலா. 2 : 2). விருத்தசேதனத்தைப் பற்றி குழப்பம் உண்டான போது அதை சரிபடுத்த பரி. பவுல் எருசலேமிலிருந்த அப்போஸ்தலர்களிடமே போனார் (அப். 15 : 2).

எருசலேமிலிருக்கும் அப்போஸ்தலராலும், மூப்பராலும் விதிக்கப்பட்ட சட்டங்களை கைக்கொள்ளும்படி பட்டணங்கள் தோறும் பவுலும் அவரைச் சேர்ந்தவர்களும் ஒப்புவித்தார்கள் (அப். 16 : 4). இந்த நாட்களில் அநேகத் தலைவர்கள் காணப்படுகிறார்களே, ஒருவருக்குண்டான வெளிப்படுத்தலை இன்னொருவர் ஒத்துக் கொள்வார்களா? இவர்களை கர்த்தரே ஏற்படுத்தி இருந்து, கர்த்தர் வெளிப்படுத்தியிருந்தால் தானே ஒத்துக் கொள்வார்கள்.

பரிசுத்த பேதுரு மூத்தவன் என்று சொல்லப்படுகிறார். இவரிடமே பரலோக ராஜ்ஜியத்தின் திறவுகோலைக் கர்த்தர் கொடுத்திருந்தார் (மத். 16 : 19). அநேக சீஷர்களுக்கு முன் உங்களுக்கு தருகிறேன் என்று சொல்லாமல், உனக்கு தருகிறேன் என்று பேதுருவைப் பார்த்து கர்த்தர் சொன்னார்.

ஆகவே ஆதியில் இருந்த கிறிஸ்துவின் சரீரமாகிய சபைக்கு பேதுருவானவர் தலையாக (தலைவனாக) இருந்தார் என அறியலாம். அப்படியே இந்நாட்களில் காணப்படுகிற மெய்யான திருச்சபைக்கு தலைவன் உண்டு. நானும் தலைவன் தான், நீயும் தலைவன் தான் என்று சொல்வதற்கு இடமில்லை. சரீரம் ஒன்றே, அந்த சரீரத்தின் அவயவங்களில் ஒன்றான தலையும் ஒன்றே.

**சபைக்கு பெயர் :**

இயேசு கிறிஸ்து புருஷனாகவும், அவர் சரீரமாகிய சபையானது மனைவியாகவும் ஒப்பிடப்படுகிறது (எபே. 5 : 23). மணவாளனாகிய அவர் பிறப்பிக்கப்பட்டபோது, தேவ அறிவிப்பின்படி, கட்டளைப்படி அவருக்கு பெயர் உண்டென்றால், மணவாட்டிக்கும் பெயர் உண்டல்லவா? அந்தப்பெயரை அவரவர்தங்கள் தங்கள் இஷ்டம் போல் வைத்துக் கொள்வதும், தொப்பியை மாற்றுவது போல் பெயரை மாற்றுவதும் சரியோ? சரீரமாகிய சபை உருவாக்கப்பட்ட போது தேவன் சொல்லுகிற பெயரை அல்லவா சூட்ட வேண்டும். ஆதாமின் விலா எலும்பிலிருந்து உருவாக்கப்பட்ட ஏவாளுக்கு ஆதாம் தானே ஏவாள் என்று பெயரிட்டார். அப்படிப் போல் இயேசுவிலிருந்து உருவான சபைக்கு இயேசு கிறிஸ்துதானே பெயரிட வேண்டும். இந்தசபைக்கு ஊர் பெயரையும், நாட்டின் பெயரையும், யாராவது பரிசுத்தவான்களின் பெயரையும், இடத்தின் பெயரையும் வைத்துக் கொள்வது முறையாகுமோ?

பரி. ஸ்தேவான் பரிசுத்தாவியினால் நிறைந்து வானங்கள் திறந்திருக்கிறதையும், இயேசுவானவர் தேவனுடைய வலது பாரிசத்தில் நிற்கிறதைக் கண்டார் (அப் 7:55,56). இயேசுவானவர் உயிர்த்தெழுந்த பின்பு பரலோகத்துக்கு எடுத்துக் கொள்ளப்பட்டார் (லூக். 24 : 51). ஆகவே இயேசு கிறிஸ்து பரலோகத்தில் தேவனிடத்திலிருக்கிறார் என அறிகிறோம், வரப் போகிறவரும் அவரே (வெளி. 22 : 7,12,16,20).

நாம் பூலோகத்தில் இருக்கிறோம். நாம் தேற்றரவாளனாகிய பரிசுத்தாவியைப் பெறும் போது இயேசுவானவரும், பிதாவும் நம்மிடத்தில் வாசம்பண்ணவருகிறார்கள். நாம் ஜீவனடைகிறோம் (யோ. 14 : 23, 17-19). ஜீவனுள்ள கற்களாகிறோம். இவ்விதமாய் பரிசுத்தாவியைப் பெற்ற அப்போஸ்தலர்களுடன் தேவன் தம்முடைய வார்த்தையின்படி (மத். 28 : 20) இருக்கிறார். ஆகையால் இவர்களுடைய ஐக்கியம், பிதாவோடும், அவருடைய குமாரனாகிய இயேசுவோடும் இருக்கிறது. ஆகவே கேட்கிறதான நீங்களும் எங்களோடே ஐக்கியப் படுங்கள் என்கிறார்கள் (Iயோ. 1 : 2, 3).

இந்த சத்தத்திற்கு கீழ்ப் படிந்து தேவனால் தெரிந்து கொள்ளப்பட்டதும், விலையேறப் பெற்றதுமாயிருக்கிற ஜீவனுள்ள கல்லாகிய அவரிடத்தில் சேர்ந்தவர்கள் கிறிஸ்து இயேசுவை மூலைக்கல்லாக கொண்டு அப்போஸ்தல, தீர்க்கதரிசிகள் என்பவர்களுடைய அஸ்திபாரத்தின் மேல் இசை வினைப்பாய் கட்டப்பட்டு (Iபேது.2 : 4, 5; எபே. 2 : 21, 22) ஆவிக் கேற்ற மாளிகையாய் எழுப்பப்படுகிறது. இந்த கட்டுமான வேலையை செய்ய அப்போஸ்தல தலைவனுக்கும், மெய்த்திருச்சபைக்கும் இறைவனால் அதிகாரம் உண்டாயிருக்கிறது (மத். 16 : 19, 18 : 18; II கொரி. 2 : 10; 13 : 10).

பூலோகத்தில் ஒரு ஆத்துமா கர்த்தரால் கர்த்தரோடு (சபையோடு) இணைக்கப்படும் போது, பரலோகத்திலும், பரலோகத்திலிருக்கிற இயேசுவோடும் இணைக்கப்படுகிறது. பூலோகத்தில் — சபையிலிருந்து அந்த ஆத்துமா தள்ளப்படும் போது பரலோகத்திலிருந்தும் தள்ளப்படுகிறது.

இயேசுவானவர் தாம் சொன்ன வார்த்தையின்படி திரும்ப பூமிக்கு வர வேண்டுமானால் இந்த கட்டுமான வேலை முடிவடைய வேண்டும் (II பேது. 3 : 9). இவ்விதமாய் பூமியிலே கட்டப்பட்டு வருகிற ஆவிக்கேற்ற மாளிகை நிறைவடையும் போது, பரலோகத்திலும் பூரணப்படுகிறது. இந்த மணவாட்டியாகிய புதிய எருசலேமாகிய திருச்சபையே (பரிசுத்த நகரமே) பரலோகத்தை விட்டு இறங்கி வருகிறது. இதோ ஆட்டுக் குட்டியானவரின் மணவாட்டியை உனக்கு காண்பிக்கிறேன் என்று சொல்லி, தூதுவன் இந்த பரிசுத்த நகரத்தையே காண்பித்தான் (வெளி. 21 : 2,9,10). பரலோகிலிருக்கிற மணவாளனின் பெயர் இயேசுவே பூலோகில் நமக்குள் இருக்கிறவரின் பெயரும் இயேசுவே. அப்படியே பரலோகிலிருக்கிற சபைக்கு பெயர் புதிய எருசலேம். பூமியிலிருக்கிற சபையின் பெயரும் அது தானே.

**திருச்சபையின் உத்தியோகஸ்தர்கள் :**

உலகத் தோற்றத்திற்கு முன்னதாகவே, யார் யார் இந்த சரீரத்தின் அவயவங்களாக இருக்க வேண்டுமென தேவன் முன்குறித்திருந்தாரோ, அவர்களெல்லாம் கூட்டி சேர்க்கப் படவும், அப்படி கூட்டி சேர்க்கப்பட்டவர்கள் தேவனுடைய குமாரனைப்பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒருமைப்பட்டவர்களாகி, கிறிஸ்துவினுடைய நிறைவான வளர்ச்சியின் அளவுக்குத் தக்க பூரண புருஷராக வேண்டுமென்பதே இறைவன் திருச்சபையைப் பற்றியுள்ள நோக்கமாயிருக்கிறது (எபே. 4 : 11).

இயேசு கிறிஸ்துவுக்குள் விசுவாசிகளாயிருக்கிறவர்கள் பரிசுத்தவான்களாயிருக்கிறார்கள் (எபேசி. 1 : 1). இவர்களை சீர்படுத்தவும், சுவிசேஷ வேலை செய்து சிதறி இருக்கிறவர்களை கூட்டி சேர்க்கவும், கிறிஸ்துவின் சரீரமாகிய சபையானது பக்தி விருத்தியடையவும் அவர் சிலரை அப்போஸ்தலராகவும், சிலரைத் தீர்க்க தரிசிகளாகவும், சிலரை சுவிசேஷகராகவும், சிலரை மேய்ப்பராகவும் போதகராகவும் ஏற்படுத்தினார் (எபேசி. 4 : 12, 13).

திருச் சபையில் இந்த உத்தியோகஸ்தர்கள் இல்லாவிட்டால் சபையைப் பற்றிய இறைவனது நோக்கம் நிறைவேறாது. இங்கே ஐந்து வித ஊழியங்களையும், நான்கு வித ஊழியர்களையும் பார்க்கிறோம். போதகர்களாக இருக்கிறவர்கள் மேய்ப்பர்களாகவும் இருக்கிறார்கள். (உ-ம்) அப்போஸ்தலராகிய பர்னபா, பவுல் (அப். 14 : 14). தீர்க்கதரிசியாகிய அகபு (அப். 21 : 10). சுவிசேஷகனாகிய பிலிப்பு (அப். 21 : 8). போதகர்களாகிய பர்னபா, சவுல், மனாயீன் (அப் 13 : 1). இப்படியே மெய்த்திருச் சபையில் இன்னார், இன்னார் இன்ன உத்தியோகஸ்தர்கள் என்று DESIGNATION (பதவி) உண்டு.

மெய்த்திருச்சபையின் ஊழியர்களை ஏற்றுக் கொள்வது இயேசு கிறிஸ்துவை ஏற்றுக் கொள்வதாகும். இவர்கள் தேவ தூதனைப் போலவும், கிறிஸ்து இயேசுவைப் போலவும் ஏற்றுக் கொள்ளப்படுவர் (கலா. 4 : 14). இவர்களுடைய வாயின் வார்த்தைகள் தேவ வசனமாய் ஏற்றுக் கொள்ளப்படும் (1தெச. 2 : 13). இவர்களை திருச்சபை பின்பற்றும் (1 தெச 1 : 6). இவர்களையே திருச்சபை மாதிரியாக நோக்கும் (பிலி. 4 : 9 ; 3: 7, 17).

இந் நாட்களில் அப்போஸ்தல பிரதிஷ்டை உண்டு. ஆனால் இவர் அப்போஸ்தலர் என்று சொல்ல முடியாதென்பாரும்; ஊழியம் உண்டு ஆனால் Designated (பதவியுடைய) ஊழியர் கிடையாதென்போரும், ஊழியர்களே கிடையாதென்போரும், மனிதர்களை பார்க்கவே கூடாது, கிறிஸ்துவையே பார்க்க வேண்டும் என்று சொல்வாரும், இயேசுவை விசுவாசிக்கிற எல்லாரும் எதையும் செய்யலாம் என்பாரும் உண்டு. இவர்களெல்லாம் கிறிஸ்துவின் சரீரமாகிய சபையின் உறுப்பினர்களுமல்ல, ஊழியக்காரர்களுமல்ல.

"ஒரே சரீரமும் உண்டு." அநேக சரீரமுள்ள விசித்திர பிறவியல்ல இயேசுகிறிஸ்து. வேதமே வெளிச்சம். போதக சிட்சையே ஜீவ வழி, கட்டளையே விளக்கு - நீதி. 6 : 23.

---

"எல்லாவற்றையும் எல்லாவற்றாலும் நிரப்புகிறவருடைய நிறைவாகிய சரீரமான சபைக்கு அவரை எல்லாவற்றிற்கும் மேலான தலையாகத் தந்தருளினார்"

— எபே. 1 : 23.

---

# மோட்ச வழி

(தொடர்ச்சி)

## குரு – சிஷ்ய உரையாடல்

சிஷ்யன் : கிறிஸ்துவை அடையும் வழி என்ன ?

குரு : நீர் உம்மை பாவி என்று, என்று காண்பீரோ அப்பொழுதுதான் இரட்சகரைத் தேடுவீர்.

சீஷன் : நான் எப்படி பாவி ?

குரு : ஆதாமின் சந்ததியானபடியால் பிறந்ததினாலும், நியாயப்பிரமாணத்தை மீறினதினாலும் நீர் பாவி.

சீஷன் : பிறப்பினால் எப்படி பாவி ?

குரு : தேவன் முதல் மனுஷனையும், மனுஷியையும் உண்டாக்கி அவர்களுக்கு சில கட்டளைகளைக் கொடுத்திருந்தார். இதை மீறும் நாளில் மரணம் சம்பவிக்கும் என்றார். ஆதி மனிதன் அதைமீறினான் உடனே ஆத்மீக மரணமும் (தேவனோடுள்ள ஐக்கியம் சிதைவுறுதல்), பின்பு சரீர மரணமும் நிகழ்ந்தது. அவன் மரித்தான். அவனுடைய சந்ததிகளே (அணுக்களே) மனிதர்கள். அதனால் ஆதாமின் மேல் விழுந்த சாபம், மரணம் எல்லா மனிதர் மேலும் வருவதுபோல் ஆதாம் பாவியானபோது எல்லோரும் பாவிகளானார்கள். இதற்கு ஜென்ம பாவம் என்று பெயர். மேலும் ஆதாமைப் போல எல்லாரும் ஏதாவது பாவத்தை செய்து கொண்டிருக்கிறார்கள். இது தேவனுடைய நியாயப் பிரமாணத்தை மீறுவதாகும். இதற்கு கர்மபாவம் என்று பெயர். இப்படியாக இவ்விரண்டு விதத்தினாலும் நீர் பாவி என்பதை உணர வேண்டும்.

சீஷன் : தேவனுடைய நியாயப்பிரமாணம் என்றால் எவை, எவை ?

குரு : நான் ஏற்கனவே சொல்லியிருக்கிறேனே. விசேஷமாக பத்து (10) கற்பனையைக் குறிப்பதாகும்.

சீஷன் : அந்த பத்து கற்பனையையும் தயவாய் விளக்கி தரவும்.

குரு : அது நல்ல காரியம் தான். நியாயப் பிரமாணத்தைப் பற்றிய அறிவு பாவத்தைப் பற்றிய அறிவை உண்டாக்கும் ஆதலால் பத்து கற்பனைகளையும் அதன் விளக்கத்தையும் சொல்லுகிறேன் கவனமாய் கேட்கவும்.

> "பாவத்தை அறிகிற அறிவு நியாயப் பிரமாணத்தினால் வருகிறது" — ரோம. 3 : 20.

(தொடரும்)

# வேத பாடம்

(தொடர்ச்சி)

**ஆதி.** 23 : 1,2 ஆபிரகாமின் மனைவியாகிய சாராள் எபிரோனிலே மரணமடைகிறாள். சாராளுக்காக ஆபிரகாம் துக்கம் கொண்டாடினார்.

23:3-18 ஆபிரகாம் முதலாவது கல்லறை பூமியைச் சொந்தமாக வாங்குகிறார். அது ஏத்தின் புத்திரரில் ஒருவனாகிய எப்பெரோனின் நிலம். அதில் மக்பேலா என்னப்பட்ட குகையும் இருந்தது. அதை 400 சேக்கல் நிறை வெள்ளிக்கு சொந்தமாக வாங்கப்பட்டது. இலவசமாக பிரேதத்தை அடக்கம் பண்ண ஆபிரகாம் சம்மதிக்கவில்லை.

23 : 19,20 அதற்குப் பின் ஆபிரகாம் சாராளை அங்கு அடக்கம் பண்ணினார். அந்த நிலமும் அதிலுள்ள குகையும் ஆபிரகாமுக்கு சொந்த கல்லறைப் பூமியாக உறுதி செய்யப் பட்டது.

24 : 1- 9 ஆபிரகாம் வயது சென்று முதிர்ந்தவரானார். அப்பொழுது தன் வீட்டு விசாரணைக் கர்த்தனும் வயதில் முத்தவனுமாகிய வேலைக்காரனை அழைத்து தன் குமாரனுக்கு கானானிலுள்ள விக்கிரக ஆராதனைக்காரர்கள் மத்தியில் பெண் எடுக்கக் கூடாது என்றும் தன் தேசத்தில் போய் பெண் கொள்ளும் படிக்கும் பெண் இங்குவர சம்மதிப்பாள்; சம்மதிக்கா விட்டால் என் குமாரனை அங்கு அழைத்துப் போகக் கூடாது என்றும் ஆணையிடுவித்து பிரமாணம் வாங்கிக் கொண்டார். இந்த வேலைக்காரன் எலியேசராயிருக்கலாம். (ஆதி. 15 : 2) அல்லது வேறொருவராகும். இதிலே ஆபிரகாம் அழைப்பைக் காத்துக் கொள்கிறார்.

24 : 10-32 இந்த ஊழியக்காரன் எஜமானுடைய குமாரன் ஈசாக்குக்கு பெண் தேடி போய் மெசொப்பொத்தாமிய நாட்டிலே ஓர் துரவண்டை ஒட்டகங்களுடன் போய் இறங்குகிறார். இவர் மிகுந்த தேவதா பக்தியுள்ளவர் எனத் தெரிகிறது. எஜமானின் தேவனை நோக்கி ஜெபம் பண்ணி தேவ நடத்துதலை அறிகிறார். அந்தப்படி ஆபிரகாமுடைய நெருங்கின உறவின் முறையிலுள்ள கன்னிப் பெண்ணாகிய ரெபக்காளைக் கண்டு அவள் வீட்டுக்குப் போகிறார்.

24 : 33-51 ஆபிரகாமுடைய வேலைக்காரர் தன் எஜமானின் மகனுக்கு பெண் தேட வந்ததையும் கர்த்தர் வாய்க்கச் செய்ததையும் அவர்களிடம் விவரமாய் அறிவித்து பெண் கேட்கிறார். அவர்கள் ரெபக்காளை ஈசாக்குக்கு கொடுக்க சம்மதிக்கின்றனர்.

24 : 52,53 ஆபிரகாமின் வேலைக்காரன் ரெபக்காள், அவள் சகோதரன் லாபான், அவள் தாய் ஆகியோருக்கு வெகுமானங்களைக் கொடுக்கிறார். இது முன் ஆசீர்வாதமாகும். பெண் வீட்டாரிடம் வெகுமானம் வாங்கவில்லை.

24 : 54-58 ரெபக்காளை வீட்டார் அழைத்து இந்த மனிதனோடு போகிறாயா? என்று அவள் வாய் மொழியைக் கேட்டபோது போகிறேன் என்றாள். இது பெரிய விசுவாச அறிக்கையாக இருக்கிறது. கண் காணா இடத்திற்கு மணவாளனைத் தேடி போக சம்மதித்த இந்த சம்பவம் நாம் காணாத பரலோகத்தை நோக்கி நம்முடைய ஞான மணவாளனைச் சந்திக்கச் செல்வதற்கு ரெபக்காளின் விசுவாசம் முன்னடையாளமாக இருக்கிறது.

24 : 59-61 வேலைக்காரன் ரெபக்காளை அழைத்துக் கொண்டு போனான். வீட்டார் வாழ்த்தி அனுப்பினார்கள்.

24 : 62-67 சாயங்கால வேளையில் ஈசாக்கு தியானம் பண்ண வெளியிலே போயிருக்கும் போது எதிரே ஒட்டகங்கள் வரக்கண்டார். ரெபெக்காளும் தன் கண்களை ஏறெடுத்து ஈசாக்கை கண்டாள். இந்த சந்திப்பு வெளியிலே நடந்தது. இப்படியே கர்த்தருடைய

வருகையிலும் நடக்கும் (I தெச. 4 : 16). ஈசாக்கு ரெபெக்காளை கூடாரத்துக்கு அழைத்துக் கொண்டு போய் அவளை தனக்கு மனைவியாக்கிக் கொண்டு அவளை நேசித்தான். இப்படியே நமது இரட்சகரும் நமது மணவாட்டியை (திருச்சபையை) சந்தித்து அழைத்து செல்வார் தம்முடைய பிதாவின் வீடாகிய பரலோகத்திற்கு (I தெச. 4 : 17; யோவா. 14 : 3). அல்லேலூயா !

(தொடரும்)

> "அவர் மேல் நீங்களும் ஆவியினாலே தேவனுடைய வாசஸ்தலமாகக் கூட்டி கட்டப்பட்டு வருகிறீர்கள்"
> எபே. 2 : 22

## சாட்சி

என் இயற்பெயர் தாயுமானவன். எனது பெற்றோர்கள் நாகர் கோவிலைச் சேர்ந்தவர்கள். நாங்குனேரியில் உள்ள இந்து கோவிலுக்கு தங்கச்சப்பரம் செய்யும் வேலைக்காக நாங்குனேரி வந்தார்கள், பின் அங்கேயே குடியிருந்து விட்டார்கள். இப்போது தம்புபுரம் (நாங்குனேரி) என்ற சிற்றூரில் வசித்து வருகிறோம்.

சிறுவயதிலே எனது தகப்பனார் தேவாரம், திருவாசகம், சுப்ரபாதம் ஆகியவற்றை காலையும் மாலையும் படிக்க வைப்பார்கள். பண்டிகை காலங்களில் களிமண்ணால் விக்ரகங்களை செய்து பூஜை செய்து வந்தேன். இவ்வாறு தேவபக்தியில் எனது தகப்பனார் என்னை வளர்த்தார்.

கல்லூரி படிப்பிற்காக வள்ளியூர் அருகேயுள்ள கள்ளிகுளம் கல்லூரியில் சேர்ந்தேன். அங்கும் காலை 5 மணிக்கே எழுந்து வள்ளியூர் வந்து நண்பர்களுடன் சாமி கும்பிட்டு வந்தேன். ஆனால் கல்லூரி வாலிப நாட்களில் பாவ இச்சைகளுக்கும், சிந்தனைகளுக்கும், பார்வைகளுக்கும் இடம் கொடுத்து சரீரத்தை பாவத்திற்கு அடிமைப் படுத்தினேன் ஆனாலும் பக்தியோடு தான் இருந்தேன். நாளாக பாவம் மேற்கொண்டு ஆலயம் சென்றும் சமாதானம் பெறாமல் கலங்கினேன். கல்லூரியருகேயுள்ள (R. C. Church) மாதா கோவிலுக்கு சென்று யாருமில்லாத நேரம் முழங்கால் படியிட்டு வேண்டுவேன். மாதா சிலையிலிருந்து சமாதானம் எதுவும் கிடைக்க வில்லை. நண்பர் ஒருவர் கிறிஸ்துவைப் பற்றி சொன்னார். ஒருசகோதரர் பைபிள் கொடுத்தார் C. S. I ஆலயங்களில் சென்று வழிபாடு செய்தேன். அவைகளும் எனக்கு மெய்ச் சமாதானம் தர வில்லை பாவத்தில் இருந்து விடுதலை பெற வழிகாட்டவும் இல்லை.

இப்படியிருக்கையில் 'புதிய எருசலேம் சபை' சகோதரர் ஒருவர், கிறிஸ்துவைப் பற்றியும், சபையைப் பற்றியும், சத்தியங்களையும் விளக்கி கூறி சபைக்கு வரும்படியும் அழைத்தார். நான் எங்கிருந்தாலும் தேவனை ஆராதிக்கலாம் என்று சொல்லி அவர் ஆலோசனையை உதாசினப்படுத்தி விட்டேன். சபை மூலம் தேவன் வெளிப் படுத்திய ஆலோசனைகளை சகோதரர் சொல்லியும் கேளாமல் நடந்தேன், இதனால் அசுத்த ஆவிகளால் தாக்கப்பட்டேன். சுகமில்லாமல் ஆகி பயித்தியக் காரனாகி விட்டேன். வைலயிடுகிறவனாகவும் என்னையும் எனது தாயாரையும் கடித்தவனாகவும் காணப்பட்டேன். வீட்டாரும் எல்லாரும் இவன் கிறிஸ்தவனாகி விட்டதால் பயித்தியமாகி விட்டான் என்றார்கள்.

இந்நிலையில் தேவப்பிள்ளைகள் என் நிலையை அறிந்து புதிய எருசலேம் சபையில் எனக்காக மறைவாக ஜெபித்து கொண்டி

ருந்தார்கள். தேவன் எனக்கு சுகமும் சுய உணர்வும் கொடுத்தார்.

எனக்கு கல்லூரியில் B.Sc., மூன்றும் ஆண்டு தேர்வும் நெருங்கி வந்தது. முதல் தேர்வில் நான் தமிழில் ஏதோ எழுதி விட்டு வந்தேன். ஆங்கிலத்தில் எழுதுவதற்கு பதில் தமிழ் எழுதுகிறன் இவனுக்கு பைத்தியமாகி விட்டது என்று இறுதி தேர்வு எழுதும் போது எல்லாரும் தடுத்தார்கள். கர்த்தருடைய கிருபையால் இறுதி தேர்வு எழுதினேன். எனது குடும்பத்தார் எல்லாரும் இவன் கிறிஸ்துவில் சேர்ந்ததால் தான் பைத்தியம் ஏற்பட்டது என்று என்னை கிறிஸ்துவை ஆராதிக்கக் கூடாது என்று தடுத்தார்கள்.

என்னுடைய மீறுதலினாலே பிசாசின் பிடியில் அகப்பட்டேன் என மனம் வருந்தினேன். மீண்டும் தேவ ஆலோசனைப் பெற வேண்டும் தெய்வத்தை தொழுது கொள்ள வேண்டும் என பிரயாசப்பட்டேன். நண்பர் ஒருவர் வீட்டில் சென்று தெரியாமல் பைபிள் வாசித்தேன்.

"கர்த்தர் என்னை வெகுவாய்த் தண்டித்தும் என்னை சாவுக்கு ஒப்புக் கொடுக்க வில்லை" —சங். 118 : 18.

"நான் உபத்திரவப்பட்டது எனக்கு நல்லது; அதனால் உமது பிரமாணங்களைக் கற்றுக் கொள்ளுகிறேன்" —சங் 119 : 71.

என்ற வசனங்கள் மூலம் கர்த்தர் என்னை தேற்றினார்.

கல்லூரி தேர்வு முடிவு வந்தது. நான் தோல்வி பெறுவது நிச்சயம் அதனால் எல்லாரும் என்னை பரியாசம் பண்ணுவார்கள் அதை கேட்டு மனம் வருந்தி பைத்தியமாகி விடக் கூடாது. அந்த கஷ்டத்தை தாங்குவதற்கான மனப்பக்குவம் தாரும் என்று ஜெபித்தேன். ஆனால் தேவ கிருபையால் நான் தேர்வில் வெற்றி பெற்றேன். எல்லாரும் ஆச்சரியம் அடைந்தார்கள். கர்த்தருக்கு ஸ்தோத்திரம். பின்னர் அநேக கிறிஸ்தவ ஆலயங்களுக்கு சென்றும் என்னுடைய ஆத்தும வாஞ்சை நிறை வேற வில்லை. மெய்ச் சமாதானமும், பாவமன்னிப்பும், பாவத்திலிருந்து விடுதலையும் கிட்ட வில்லை.

ஒருநாள் வள்ளியூர் சென்றேன் புதிய எருசலேம் சபையைப் பற்றி முதலில் சொன்ன சகோதரனை சந்தித்தேன். வழியில் பாஸ்டர் S. சுந்தர்ராஜ் அவர்களையும் சந்திக்க தேவன் கிருபை செய்தார். அவர்கள் ஆலோசனை கொடுத்தார்கள், சபைக்கு வரும்படி அழைத்தார்கள். 1977-ன் புத்தாண்டு ஆராதனைக்கு வள்ளியூருக்கு நாங்குனேரி புதிய எருசலேம் சபை ஊழியர் அவர்கள் அழைத்து சென்றார்கள். கர்த்தர் அளவில்லா சந்தோசம் கொடுத்தார். தொடர்ந்து பரிசுத்த ஆராதனைகளுக்கு சென்றேன். என் பாவங்களை தேவசமுகத்தில் பரிசுத்தவான்கள் முன்னிலையில் அறிக்கை செய்தேன். என் பாவப் பாரம் நீங்கியது. தேவன் சமாதானத்தையும், பாவ மன்னிப்பையும் கொடுத்தார். பின் ஞானஸ்நானம் பெற்று பரிசுத்தசபையோடு சேர்க்கப்பட்டேன்.

பின் இந்நாள் வரை 7 வருட காலமாக தேவன் என்னை வெகு ஆச்சரியமாக நடத்தி வருகிறார். நான்குடி தபால் ஆபீஸில் சிறிய வேலை ஒன்றில் கர்த்தர் அமர்த்தினார். ஓய்வு நேரங்களில் நாங்குனேரி சபையில் தேவனை துதிக்கும் பாக்கியம் கர்த்தர் தந்துள்ளார்.

அடிமை கர்த்தருக்குள் பிழைக்கவும், என் குடும்பம் இரட்சிப்பு பெறவும் யாவரும் ஜெபிக்கும்படி வேண்டி என் சாட்சியை முடிக்கிறேன்.

இப்படிக்கு,<br>
Bro. பவுல் (தாயுமானவன்)<br>
நாங்குனேரி.

---

"ஜீவனுடைய ஆவியின் பிரமாணம் என்னைப் பாவம், மரணம் என்பவைகளின் பிரமாணத்தினின்று விடுதலையாக்கிற்றே" —ரோமர் 8 : 2.

---

# திருச்சபை அவசியமா?

சபை வேண்டாம் என்கிற சத்தம் எங்கும் கேட்கிறது. முழு இரவு ஜெபக் கூட்டம் என்றால் கூடுவர், சுவிசேஷ கூட்டம் என்றால் ரொம்ப குஷியாக பங்கு பெறுவர். ஒரு சபை என்றால் அவ்வளவு பேரும் பிரிந்து விடுவர். ஏனென்றால் இங்கே சத்தியத்தை கைக்கொள்ள வேண்டியிருக்கிறதே.

இன்னும் சிலர் சபைகள ஒன்றும் சரியில்லை நான்தான் சரி என்ற அர்த்தத்தில் பேசி எனக்கு ஒரு சபையையும், ஒருவரையும் பிடிக்கவில்லை என்பர். விஷயம் என்னவென்றால் இவரை ஒருவருக்கும் பிடிக்காது அவ்வளவு தலைக்கனமும், தான்தோன்றித்தனமும் உடையவராகும் இவர்

இன்னும் சிலர் சபை இரட்சிக்காது, சபைகளின் பேர்களைச் சொல்லி இவைகள் இரட்சிக்காது. இரட்சிக்கிறவர் இயேசு கிறிஸ்துதான் என்பர். ஐயா, நீங்கள் கூடி ஆராதிக்கிறீர்களா? என்றால் ஆமாம் என்பர். அப்போ சபை வேண்டாம் என்றால் நீங்களும் கூடிவரக் கூடாதே, கூடி வருகிறது சபைதானே. அப்போ உங்கள் கூட்டமும் இரட்சிக்காதல்லவா என்றால் பதில்: ஹி! ஹி! ஹி! தான், அசடு வழியும்.

இன்னும் சில மெத்தப் படித்தவர்கள்— மிஞ்சின பரிசுத்தவான்கள் இந்து மதத்தின் முக்கிய கோட்பாடுகளில் ஒன்றைப் போல் "இப்படித்தான் இருக்கவேண்டும், இதுதான் ஒருவழி என்று சொல்வதோ, இதுதான் உயர்ந்தது என்று சொல்வதும் தவறு. அப்படி சொல்லுகிறவன் இந்துவல்ல" என்பதே அக்கோட்பாடு. எப்படியும் போகலாம். எல்லோரும் சபைதான், எப்படி ஜீவித்தாலும் வெறும் பக்தி மட்டும் இருந்தால் போதும் முக்தியடையலாம் என்பது போல், சகல பரிசுத்தவான்களின் ஐக்கியம் என்று சொல்லிக் கொண்டு கழுதையும் குதிரையும் ஒன்றுதான் என்று சகல பாவிகளின் கூட்டுறவைத் தேடுகின்றனர். இன்னும் சிலர் தங்களைத்தாங்களே பரிசுத்தப்படுத்திக் கொண்டு தங்களை ஊழியர்கள் என்று சொல்லிக் கொள்ளுகின்றனர். எந்த சபையின் ஊழியரய்யா நீங்கள்? என்றால் சுயாதீன ஊழியம் என்கின்றனர். புதிய ஏற்பாட்டில் அப்படி ஒரு ஊழியமும், ஊழியனும் கிடையாது. சபைக்குத்தான் — திருச்சபையில்தான் தேவன் அப்போஸ்தலர், தீர்க்கர், மேய்ப்பர், போதகர், சுவிசேஷகராகிய ஊழியக்காரரைக் கொடுக்கிறார் (எபேசி. 4 : 11-13). அப்போஸ்தலனாகிய பவுலும் கூட 'நான் அந்த சபைக்கு ஊழியக்காரன் என்கிறார்' (கொலோ. 1 : 26)

சபைக்குதான் ஊழியர்கள். காண்: அப். 20 : 17, 28; கொலோ. 4 : 10-17 ; I தெச. 5 : 12 ; I கொரி. 16 : 19 ; I தீ. 5 : 17 ; எபி. 13 : 7, 17.

ஆனபடியால் சுய ஆவியினால் தூண்டப்பட்டு தெய்வீக நோக்கமின்றி அலைகிறவர்களுக்கு சபை தேவையில்லைதான். ஏனென்றால் இவர்களை யாரும் கண்டிக்கக்கூடாது. சபை என்றால் கட்டுப்பாடு உண்டல்லவா? மேலும் தன் இஷ்டப்படி நடக்க முடியாதல்லவா! அதனால் சபை வேண்டாம் என்பது இவர்கள் துணிவு இன்னும் சிலர் சத்தியத்தை அறிந்த போதிலும் பதவி ஆசை, பண ஆசை, பாவ ஆசை, சகவாசக் கேட்டினால் ஒருசபையை விட்டு ஒருசபைக்குப் போகக்கூடாது என்று புரட்டித்திரிவர். இவர் பிறந்தது ஒரு இடம், வளர்ந்தது ஒரு இடம், ஞானஸ்நானம் பெற்றது ஒரு சபை இப்போது இவர் இருக்கிறது வேறொரு சபை, யாயிருக்கும். ஊருக்குப் போனால் ஒரு சபை பட்டணத்துக்கு வந்தால் வேறொரு சபை. பேசுகிறதைப் பார்த்தால் பெரிய பரிசுத்தவான்கள் போல் சபை விட்டு சபை போகக் கூடாது என்பர்

மனுஷனே, நீ உன்னைத்தானே வஞ்சித்துக் கொண்டு பிறனையும் வஞ்சிக்காதே, தேவனுடைய நியாயத்தீர்ப்பு உனக்கு வருகிறது. கள்ள வார்த்தைகளைக் கற்பித்து பிறப்பிக்காதே. சத்தியம் எங்கே உண்டோ அங்கே போ. சுத்த இருதயத்

துடன் கர்த்தரைத் தொழுது கொள்ளுகிறவர்களுடனே சேர்ந்து கொள் - II தீ. 2 : 22. இன்னும் சிலர் சபை வேண்டாம். இரட்சிக்கப்படனும் அவ்வளவுதான், ஊழியம் செய்ய வேண்டும் அலைந்து என்பர். நமது இரட்சகரின் அப்போஸ்தலர் கூட 3½வருஷம் இயேசுவோடிருந்து கற்றுக் கொண்டு, அதிகாரம் பெற்று திருச்சபையாக வல்லவா ஊழியம் செய்தார்கள். காண்க: மாற்கு 3 : 13-19; அப். 1 : 12-26; 2 : 1-4, 14, 41-47; 4 : 14, 32-37 ; 5 : 11, 13, 14; 6 : 1-7 ; 8 : 14-17; 9 : 31; 11 : 26; 12 : 5; 13 : 1-5 முதலியன.

ஆனபடியால் வேதாகமத்தில் காணப்படுகிற திருச்சபை வேண்டும். பூரணமான சபை வேண்டும். அங்கேதான் பரிசுத்தவான்கள் சீர் பொருந்த முடியும். அங்கேதான் அப்போஸ்தலர், தீர்க்கர், மேய்ப்பர், போதகர், சுவிசேஷகராகிய ஊழியர் உண்டு. அந்த சபைக்குத்தான் இயேசு கிறிஸ்து தலையாயிருக்கிறார். எல்லாருக்கும் இயேசு கிறிஸ்து தலையல்ல.

பூரணமான சபையின்றேல் பூரண இரட்சிப்புமில்லை. திருச்சபை ஒரு சரீரமாய் இயங்கும் திருச்சபை அவசியம். சபை வேண்டும். மெய்யான சபை வேண்டும். எல்லாவற்றிற்கும் நிவாரணம் மெய்யான திருச்சபையே. சபை தேவை. எல்லோரும் சபையல்ல. நாம் ஆராதிப்பது வேதாகமத்தில் காணப்படுகிற திருச்சபைதானா? திருச்சபை தேவை.

---

"இந்தக் கல்லின்மேல் என் சபையைக் கட்டுவேன்; பாதாளத்தின் வாசல் அதை மேற்கொள்வதில்லை" —மத். 16 : 18.

---

மாதர் பகுதி

## ஸ்திரீகள்

பெண்களை உயர்ந்த எண்ணி அவர்கள் வேலை செய்வதற்கான வாய்ப்புகளை உருவாக்க அநேகர் எண்ணுகின்றனர். இவர்கள் செய்ய வேண்டிய நற்காரியம் ஒன்றுண்டென்றால் கடவுளும் இயற்கையும் அவர்களுக்கு வரையறுத்துக் கொடுத்துள்ள குடும்ப வாழ்க்கையின் வேலையின் அருமையை நோக்கி அவர்கள் கருத்துக்களை உயர்த்தவேண்டும் என்பதே.

இப்பரந்த உலகில் பெண்கள் இலாபமிக்க வேலைகளைச் செய்து முன்னேறத்தக்கதாக புதுவழிகளைத் திறந்துவிடுதல் நல்லதே என்றாலும் குடும்பத்தை உண்டாக்குவதும், குடும்பத்தை காப்பதும்தான் பெண்ணுக்கு முதலும் முடிவுமான மகிமையுள்ள மிக உயர்ந்த நோக்கமுள்ள மிக நல்ல வேலையாகும் மாசற்ற முழுநிறைவான ஒரு குடும்பத்துடன் ஒப்பிடத்தக்க கலைப்படைப்பு இவ்வுலகத்தில் வேறெதுவுமில்லை.

ஒரு குடும்பத்தை பயிற்றுவித்து, வழி நடத்துதல் ஒரு பெண் தனது வாழ்க்கையில் செய்யத்தக்க மிக உயர்ந்த பணி என்னும் கருத்தை ஒப்புக்கொள்ள வேண்டும். இதற்கு தக்கவாறு அவர்கள் கல்வி அமைய வேண்டும். இதற்கு அவர்கள் உடல் அமைப்பாலும், உள அமைப்பாலும், தங்கள் சொந்த உணர்ச்சி அமைப்பாலும் தக்க பொருத்தமானவர்களாகும். கடவுளுடைய திருவார்த்தை அவர்கள் அவசியம் கடமையாற்ற சுட்டிக்காட்டுவது குடும்ப வாழ்க்கையாகும்.

அப்படி இல்லாமல் இக்காலத்தில் வியாபார தந்திரமாக, வியாபார அங்காடிகளில் மக்களை கவர்ச்சிக்க பெண்களை விற்பனையாளர்களாக நியமிக்க ஆரம்பித்து விட்டனர். எங்கும் பெண், காவல் துறையிலும் பெண். ஆனால் அவர்களுக்கும் பாதுகாவலுக்கு ஆண் தேவைப்படுகிறது. இது தேவையா? பெண்கள் வேலை செய்யும் ஆசையால், பொருளாசையால் விற்பனைப் பொருட்களைப் போல் விற்கப்படும் அவலநிலையும் உருவாகி விட்டது. கர்த்தர் இஸ்ரவேல் வீட்டைக் கட்டுவித்த ராகேல், லேயாள் போல ஸ்திரீகள் தங்கள் வீட்டைக் கட்டுகிறவர்களாக இருக்க ஆசீர்வதிப்பாராக.

(தொடரும்)

---

கிறிஸ்துவின் சரீரமான சபையில் ஏற்படுத்திய அதிகார அலுவல்களில் பெண்கள் அப்போஸ்தலராக, தீர்க்கதரிசியாக, மேய்ப்பராக, போதகராக, சுவிசேஷகராக அனுமதி உண்டா? (எபேசி. 4 : 11-13).

---

# புதிய எருசலேம் சபை நடபடிகளில் சில

கர்த்தருக்குள் பிரியமானவர்களே, நம்முடைய தேவனின் அற்புத செயல்களை எண்ணி அவரை ஸ்தோத்திரிக்கிறேன். மறுநாள் ஞாயிற்றுக் கிழமை. அவர்கள் வழக்கமாய் ஆராதித்துக் கொண்டிருக்கும் இடத்திற்கு அங்குள்ள கிறிஸ்தவ மக்கள் திரளாய் வந்து சேர்ந்தார்கள். நாங்களும் குறித்த வேளையில் கலந்து கொண்டோம். 'விசுவாசத்தினாலே நீதிமான் பிழைப்பான்'' ரோமர் 1:7 என்ற வசனத்தைக் கொண்டு பேசும்படி தேவன் கட்டளையிட்டார். விசுவாசத்தினாலே தேவனிடமிருந்து எப்படிப்பட்ட ஆசீர்வாதங்களையெல்லாம் பெறமுடியும் கடந்த காலத்தில் பரிசுத்தவான்கள் எப்படி பெற்றார்கள் என்பதை வேதவாக்கியங்களைக் கொண்டும், எங்களுடைய ஊழியக் காலத்தில் தேவன் நடப்பித்த அற்புத செயல்களை விளக்கியும் பேசின பொழுது விசுவாசித்தவர்களுடைய உள்ளங்கள் கொழுந்துவிட்டு எரிய ஆரம்பித்தது. சோர்ந்திருந்த உள்ளங்களைத் தேவன் திடப்படுத்தினார். கர்த்தருக்கே மகிமையுண்டாவதாக.

இவர்களில் பலர் பரிசுத்த ஆவியின் அபிஷேகத்தையும் பெற்றார்கள். அபிஷேகம் பெற்றவர்களில் ஒரு சகோதரரைக் கர்த்தர் தம்முடைய ஊழியம் செய்ய அழைத்தார். இவர் தஞ்சாவூர் பக்கமுள்ள புதுக்கோட்டையைச் சேர்ந்தவர். இவர் உடனடியாகத் தேவனுடைய வார்த்தைக்கு கீழ்ப்படிந்து மறுநாளில் ஞானஸ்நானமும் பெற்றுக் கொண்டார். இவர் பெயர் அங்கப்பன். இப்பொழுது இவர் வட இந்தியாவில் கர்த்தருடைய சேவையைச் செய்து வருகிறார்.

சகோதரர் அங்கப்பனை சபையின் மூப்பனாக அதிகாரப்படுத்தி அங்குள்ள மக்களைக் கர்த்தருக்குள் வழிநடத்தும்படி ஆலோசனை கூறி கர்த்தருக்கும், அவருடைய கிருபையுள்ள வசனத்துக்கும் அவர்களை ஒப்படைத்துவிட்டுக் கடந்து வந்தோம்.

பின்னர் அடுத்த ஆண்டு டிசம்பர் திங்களில் மீண்டும் டேராடூன் சென்று அங்குள்ள மக்களைப் பெலப்படுத்த வேண்டும் என்று கர்த்தர் எங்களை அனுப்பினார். டேராடூனில் ரூம் எடுத்துப் பொருட்களைப் போட்டுவிட்டு ஊழியர் அங்கப்பனோடு சுமார் 6 கி.மீ. தொலைவிலுள்ள ராணுவ முகாமைச் சந்திக்கப் போனோம். தேவனுடைய பிள்ளைகள் யாவரும் கர்த்தருக்குள் உற்சாகமாய்க் காணப்பட்டார்கள். இவர்களுடைய விசுவாசத்தின் வளர்ச்சியின் மூலம் அநேக குடும்பங்கள் கிறிஸ்துவின்டமாய் சேர்க்கப்பட்டிருந்ததை அறிந்து கர்த்தரை ஸ்தோத்திரித்தோம். உத்தரபிரதேசத்தைச் சேர்ந்த ஒரு குடும்பம் விக்கிரகத்தை ஆராதித்து வந்தவர்கள். பில்லி சூனியக் கட்டினாலும், அசுத்த ஆவியினாலும் தாக்கப்பட்டு, குழந்தைகளை சாகக் கொடுத்து, பிள்ளையின் தாயாருக்குப் பைத்தியம் போன்ற நிலைமையும் உருவாகி வேதனைப்பட்டுக் கொண்டிருந்த குடும்பத்துக்கு நமது விசுவாசிகள் ஆலோசனைக் கூறி 'கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவை நீங்கள் உங்கள் தெய்வமாக ஏற்றுக் கொண்டால் அவர் உங்களுடைய குடும்பத்தில் காணப்படும் சாபங்களைப் போக்கி, உங்கள் கண்ணீரை அவர் துடைத்து விடுவார்' என்று கூறியிருக்கிறார்கள். வேதனையோடு வாழ்ந்த அந்தக் குடும்பத்தினர் தாங்கள் வணங்கி வந்த விக்கிரங்களை வீட்டைவிட்டு அப்புறப்படுத்திவிட்டு கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவை தங்களுடைய சொந்த இரட்சகராக ஏற்றுக் கொண்டார்கள். என்ன அற்புதம்! அற்புத நாதர் இயேசுகிறிஸ்து அந்த மக்களின் கண்ணீர்கள் யாவையும் துடைத்து விட்டார்.

(தொடரும்)

Pastor S. Sundarraj
Vallioor.

---

''அந்த ஆவியினாலே ஒருவனுக்கு அற்புதங்களை செய்யும் சக்தியும் பகிர்ந்து கொடுக்கிறார்''

1 கொரி 12 : 8 11.

# THE KEY POWER OF THE CHURCH

The Key power is one among the authorities, which Lord Jesus Christ gave to the Church. That is the authority of remitting (making free) and retaining (making to carry) the sins. When Lord Jesus came into the coasts of Ceasarea Philippi; He asked his disciples, saying, whom do men say that I the Son of man am? And they said, Some say that you are John the Baptist: some Elias; and others Jeremias, or one of the prophets. He said unto them, But whom say ye that I am? Representing the apostles, Simon Peter answered and said, you are the Christ, the Son of the living God. Thus Apostle Peter confesses Christ for the first time. Then Lord Jesus Christ speaks about the church clearly: Jesus answered and said unto him, Blessed are you, Simon Bar Jona: for flesh and blood has not revealed it unto you, but my Father which is in heaven. And I say unto you, That you are Peter, and upon this rock I will build my Church; and the gates of hell shall not prevail against it. And I will give unto you the keys of the the Kingdom of heaven: and whatsoever you shall bind on earth shall be bound in heaven: and whatsoever you shall loose on earth shall be loosed in heaven (Mt. 16 : 17-19). We are able to read the words concerning binding and loosing again when the Lord declares about excommunicating a person who doesn't obey to the Church (Mt. 18 : 15-18).

The same day in which Lord Jesus rose up, at evening He entered into the house when the doors were shut, where the apostles assembled, and showed himself as He lives and gave commandments and sent them. Then said Jesus to them again,peace be unto you: as my Father has sent me, even so send I you, and breathed on them, and said unto them. Receive you the Holy Spirit : whose soever sins you remit, they are remitted unto them; whosesoever sins you retain they are retained (Jn. 20 : 21-23). This is a commandment and authority which Jesus Christ gave to his apostles after his resurrection (Acts 1 : 2, 3). This is the key power.

The apostles have the power to forgive the sins of him that repented for his sins and make him enter into the kingdom of heaven and to keep the door shut (retaining) for him that has not converted having repented. Please refer John 3 : 3, 5 also. Lord said, If you forgive, it will be forgiven in heaven and if you retain, it will be retained in heaven. That is, whatsoever the apostles do in the earth in the name of Jesus, the same is done in heaven. Thus the scripture says. Accordingly St Paul said, "To whom I forgave, for your sakes, forgave I in the person of Christ" (II Cor 2 : 10). confessing the sins either in midst of congregation or before the servant of God, is a must for a man to obtain the forgiveness of sins (Acts 19 : 18; Mt. 3 : 5, 6; I Jn. 1 : 7-10; James 5 : 14-16).

A person cannot get victory over a sin which is tormenting him unless he confess it openly. No mediator is needed for a man (soul) to accept Jesus as Saviour for him. But he has to confess Jesus as well as his sins openly and be baptised, to obtain salvation. Then only he can get remission of sins and salvation. His sins will be forgiven and washed away.

A person obtains remission of sins rather salvation only through baptism (Acts 2 : 37, 38; 8 : 37; 38 Mk. 16 : 16; Acts 22 : 16). If a person who is already saved, commits error in his spiritual walk, he must confess his sins and receive the remission of sins (Jn. 20 : 23). The apostles have got the authority to remit (making free) the sins of him that confess to them and to retain the sins which are not confessed (Jn. 20 : 23). He that covers his sins shall not prosper: but whoso confesseth and

forsaketh them shall have mercy (Prov. 28 : 13).

The Protestant Christians shout, saying this doctrine is of Roman Catholic, which was bruished by St. Martin Luther, at once they hear this doctrine. They seduce innocent Christians, making false propaganda against Martin Luther. He protested against the selling of the tokens for the remission of sins. He never talked against this doctrine and the authority. He mentioned in his precious book "Kethkesheme" that the authority of forgiving the sin is the key power of the church. The Learned and the Lutherns will know what we write. Luthern church is not able to preach and practice this authority, because she had fallen already. Preach not lie, putting blame on Dr. Martin Luther, following the teaching of Dr. Goval (a man of Hitler) who taught during the second world war as "If a lie is preached in dias many times, it will become truth. Truth will never die. That dies will never be a truth. We speak the truth. But if our gospel be hid, it is hid to them that are lost (II Cor. 4 : 3).

Some who claim that walk according to the scriptures say the verse Jn. 20 : 23 tells about 'forgiving one to another.' Forgiving for them that ask forgiveness is the christian quality. It is mentioned in Mt. 18 : 21-35. But Jn. 20 : 23 shows the authority to forgive sins. Jesus said, "whose soever sins you remit, they are remitted unto them; and whosesoever sins you retain, they are retained."

If a person refuse to forgive for him that did a grevious thing against him, when he comes down and pleads, that man can ask God and obtain the forgiveness. But in Jn 23 : 23; it is mentioned, If you don't forgive the sin, that will not be forgiven (Jesus says, He also will not forgive). As the scribes, who killed Jesus said, many say nowadays, No body has authority to forgive sins except God. Yea, God, the Father has the authority to forgive sins; Jesus also has the authority and the apostles too have the authority, for Jesus himself is an apostle (Heb. 3 : 1; Jn. 20 : 23; II Cor. 2 : 10). The true church has the authority (I Cor. 5 : 3-13; II Cor. 2 : 7-10; Mt. 18 : 15-20).

Generally many are in the christian world, who propagate false teaching. we think they are like that, because they are not of the church. The new preacher as well as the popular preacher, preach such things. They say, Beleive Lord Jesus, where-ever you may be confess your sins to Him and pray, your sins will be forgiven and you will be saved.

They cry, you are already saved, the church is not essential.

Nowhere mentioned in the four gospels of the new testament that any man has confessed his sin to Jesus. Neither any apostle or preacher in the new testament taught like this. In one place, Zaccheaus said unto the Lord, 'Behold, Lord, the half of my goods I give to the poor; and if I have taken any thing from any man by false accusation, I restore him four fold." He declared what he is going to do. That too he did before many as a good witness. But he didn't confessed his sins.

Perceiving all the things, Lord Jesus said 'Son (Daughter), your sins are forgiven Neither is there any creature that is not manifest in his sight; but all things are naked and opened unto the eyes of him (Heb. 4 : 13). You must confess your sins to the servant of God, who is not aware of your sin. You must confess to the apostle or the true servant of God who got the authority. Lieing to him is lieing to God. Hiding to the servant of God is hiding to the God himself. Refer the history of Ananias and Sapphira (Acts. 5 : 1-10). There fore, your sins will not be forgiven, if you confess your sins from anywhere or just before going to the bed. (Contd).

---

The church has the authoriry to forgive Sins. This is the key power of the church. Jesus himself commanded (Acts 1 : 1; Jn. 20 : 23).

# புதிய எருசலேம் செய்தி

## PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் - 15 ★ MARCH 1985




"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ, நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள்.... விழித்திருங்கள்...உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லோருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்..."

மாற்கு 13 , 35-37

EDITOR: CHIEF PASTOR N. LAZAR

BOMBAY, INDIA

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லோரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒருமனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும் படியாகவும் தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய்க் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும்; சபையானது வஞ்சக போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும் படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது.

(எபே.4:11-16)

## இதழின் உள்ளே

# ஆசிரியர் உரை

இது கடைசிக்காலமாயிருக்கிறது. கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவினுடைய இரண்டாம் வருகை நெருங்குகிறது. "அஸ்திபாரங்களும் நிர்மூலமாகிறதே நீதிமான் என்ன செய்வான்?" என்ற திருவசனத்தின்படி எங்கும் குழப்பம், எதிலும் குழப்பம், எல்லாவற்றிலும் குழப்பம். ரோமன்சபை தவறி விட்டது என்று சொல்லி புராட்டஸ்டண்டு(Protestant) சபைகள் எழும்பின. புராட்டஸ்டண்ட் சபைகளோ அஸ்திபாரம் இல்லாமல் நிலை குலைந்து நிற்கின்றன. ஆங்காங்கு பரிசுத்த ஆவியானவர் சுவிசேஷத்திற்கு சாட்சியாக சிற்சில கிரியைகளைச் செய்தாலும் தேவனுடைய நன்மையும் பிரியமும் பரிபூரணமுமான சித்தத்தின்படி தேவன் கிரியை செய்யவில்லை. சாத்தான் தன்னுடைய கிறிஸ்தவ கையாட்கள் மூலம் தன்னுடைய சித்தத்தை தீவிரமாய் நிறைவேற்றி வருகின்றான். அற்புதங்களை நடப்பிக்கும் அசுத்த ஆவிகள் அநேக இடங்களில் கிரியை நடப்பித்து வருகின்றன. இதற்கெல்லாம் காரணம் மக்கள் தேவனுடைய வசனத்தைத் தள்ளி, திருவசனத்துக்கு செவி கொடாமல் செவித் தினவுள்ளவர்களாகி தங்கள் இச்சைக்கேற்ற போதகர்களை தங்களுக்குத் திரளாய் சேர்த்துக் கொண்டதினாலேயாம். ஆனபடியினால் தேவனுடைய மக்கள் திருவசனத்துக்கு திரும்ப வேண்டும். ஆதி சபையின் பிதாக்களின் விசுவாசத்திற்கு திரும்ப வேண்டும். திருவசனத்திற்கு திரும்ப வேண்டும். இதுவே இக்காலத்தின் முக்கிய தேவை. எங்கும் பிரிவினை எதிலும் விரிசல். சிலர் பிரிவினை நல்லதல்ல, பிரிவுகள் (பல சபை பிரிவுகள்) தேவைதான் என்கின்றனர். ஐயோ பரிதாபம் பிரிவினைதான் பிரிவுகளாய் தோற்றமளிக்கின்றன என்பதைக் கூட விளங்கிக் கொள்ள முடியாதபடி ஆவிக்குரிய குருட்டாட்டம் எவ்வளவாய் அவர்களுடைய மனதை நிரப்பியிருக்கிறது என்பதையே இத்தகைய வார்த்தைகள், கருத்துக்கள் நிரூபிக்கின்றன. ஒரே ஆளுகைக்குள் அல்ல இந்த பிரிவுகள் என்பதை நினைவு கூரக்கடவோம். உபதேச பிரிவினைகள் தான் சபை பிரிவினைகளை உண்டாக்குகின்றன. இவைகளெல்லாம் மனிதனுடைய பாவமே. உபதேசிப்பில், போதிப்பில், நடத்தையில் நாம் ஒன்றுருவோம். அப்பொழுது இறை சித்தம் நிறைவேறும். உலகமும் இயேசு கிறிஸ்துவை விசுவாசிக்கும் நாமும் கர்த்தருடைய வருகைக்கு ஆயத்தப்படுவோம்.

கிறிஸ்துவுக்குள்,

Chief Pastor N. LAZAR

# பாவ அறிக்கை செய்யும் விதம்

"தன் பாவங்களை மறைக்கிறவன் வாழ்வடையமாட்டான்; அவைகளை அறிக்கைசெய்து விட்டு விடுகிறவனே இரக்கம் பெறுவான்" (நீதி. 28 : 13).

பாவ அறிக்கையைப் பற்றி கிறிஸ்தவ உலகத்தில் பல விதமான அபிப்பிராயங்கள், விளக்கங்கள் சொல்லப்படுகிறது. நாமோ வேத வசனம் என்ன சொல்லுகிறது என்று பார்ப்போம். பொதுவாக மனித பெலவீனங்களில் முக்கியமான பெலவீனம் மனிதனுக்கு எது முக்கியமோ அதை அசட்டையாக விட்டு விடுவதேயாகும். முதலாவது அறிக்கை என்றால் என்ன? இதைக் குறித்து வேதம் என்ன சொல்லுகிறது என்று பார்ப்போம்.

அறிக்கை என்றால் வெளிப்படுத்தி அறிவிப்பது, சொல்லுவது, அறிக்கை எழுதி பிரசித்தப்படுத்துவது சாட்சியாக செய்வது என்று அர்த்தம். இதைவிட்டு மௌனமாய் ஜெபம் பண்ணுவதை அறிக்கை என்று எண்ணுவது தவறு. பழைய ஏற்பாடாயிருக்கட்டும், புதிய ஏற்பாடாயிருக்கட்டும் ஜெபம் பண்ணுவதை பாவ அறிக்கை என்று வேதம் ஒப்புக்கொள்வதில்லை. கர்த்தருடைய ஜெபத்தில் எங்கள் கடனாளிகளுக்கு நாங்கள் மன்னிக்கிறது போல எங்கள் கடன்களை எங்களுக்கு மன்னியும் (மத். 6 : 12) என்ற ஜெபம் பாவமன்னிப்புக்காக செய்யும் பொது ஜெபமாகும். தானியேல், நெகேமியா, வேதபாரகனும் ஆசாரியனுமான எஸ்றா ஆகியோர்களும் செய்த ஜெபங்களும், பாவ அறிக்கைகளும் இப்படிப்பட்டவைகளே. இவர்கள் ஜீவியத்தில் தனிப்பட்டமுறையில் எந்த பாவமும் செய்ததாக நாம் வாசிக்கிறதில்லை. ஆனால் ஜனங்களின் பாவங்களை தங்கள் பாவங்களாக ஏற்று ஜனங்களோடு தங்களை ஐக்கியப் படுத்திக் கொண்டு ஜனங்களுக்காய் ஜெபித்ததாகவே நாம் வேதத்தில் காண்கிறோம் (தானி. 9:3-19; நெகே. அதி. 1; எஸ்றா அதி. 9 : 1 – 10 : 1). தனி மனிதனோ தான் கர்த்தரின் கட்டளைகளில் யாதொன்றை மீறி செய்யத்தகாததை செய்து மீறுதலுக்குட்பட்டு தான் செய்தது பாவம் என்று தெரிய வந்தால் தான்செய்ததை பாவம் என்று அறிக்கை செய்ய வேண்டும். அதற்கான பலி செலுத்த வேண்டும். அப்பொழுது ஆசாரியன் அவனுக்காக பலியிட்டு பாவ நிவிர்த்தி செய்ய வேண்டும் அப்பொழுது அவன் செய்த பாவம் மன்னிக்கப்படும் (லேவி. 5 : 1-6 ; எண். 5 : 5-7).

இன்னொரு வகை பாவ அறிக்கை பழைய ஏற்பாட்டில் உண்டு. அது II நாளா. 7:14ல் காணப்படுகிறது. "என் நாமம் தரிக்கப்பட்ட என் ஜனங்கள் தங்களைத் தாழ்த்தி ஜெபம்பண்ணி, என் முகத்தைத் தேடி தங்கள் பொல்லாத வழிகளை விட்டுத் திரும்பினால் அப்பொழுது பரலோகத்திலிருக்கிற நான் கேட்டு அவர்கள் பாவத்தை மன்னித்து அவர்கள் தேசத்துக்கு க்ஷேமத்தைக் கொடுப்பேன்" என்பதே. இம்முறைப்படியே சிறையிருப்பிலிருந்து திரும்பிய ஜனங்கள் பாவத்தை விட்டுப் பிரிந்து வந்து பாவ அறிக்கை செய்தார்கள் (நெகே. 9 : 1 - 3) இப்படிச் செய்யாமல் ஆண்டவரே, தப்பிப்போன ஆடுகளைப் போல் தப்பிப்போனோம் என்று சொல்வதுமாக வாரவாரம் தப்பிப்போனதாக அறிக்கை செய்வதும் எந்தப்பாவத்தையும் விடாமல் இருக்கும் கிறிஸ்தவக் கூட்டங்கள் உண்டு. II நாளா. 7 : 14ல் தங்கள் பொல்லாத வழிகளை விட்டு திரும்பினால் என்ற வார்த்தையை விட்டு விடுகின்றனர். மேலும் இப்படி ஜெபம் செய்கிறவர்கள் பாவத்தை விடுகிறதோ இரட்சிக்கப்படுகிறதோ இல்லை.

ஆனபடியினால் பரிசுத்த ஆவியானவர் புதிய ஏற்பாட்டில் மேலான வழியைக் காட்டியுள்ளார். புதிய ஏற்பாட்டில் அறிக்கை சம்பந்தப்பட்ட வசனங்கள் நானூற்று ஐம்பதுக்கு (450 க்கு) மேல் வருகின்றன. இதில் ஒன்றுகூட தேவனை நோக்கி இரகசிய ஜெபம் என்ற அர்த்தத்தில் இல்லை. "நீர் ஜீவனுள்ள தேவனுடைய குமாரனாகிய கிறிஸ்து" (மத். 16 : 16) என்று அப். பேதுரு சொன்னது முதலாவது கிறிஸ்தவ அறிக்கையாகும். "இயேசு கிறிஸ்துவை தேவனுடைய குமாரன் என்று விசுவாசிக்கிறேன்" (அப். 8 : 37) என்று காந்தாகே என்பவளுடைய மந்திரி சொன்னது அறிக்கையாகும். இயேசு

யேனவர் பொந்திய பிலாத்துவின் முன்னின்று "பிரதியுத்தரமாக நீர் சொல்லுகிற படி நான் ராஜாதான் சத்தியத்தைக் குறித்து சாட்சி கொடுக்க நான் பிறந்தேன். இதற்காகவே இந்த உலகத்தில் வந்தேன்; சத்தியவான் எவனும் என் சத்தம் கேட்கிறான்" என்றதை (யோவா. 18 : 36, 37) நல்ல அறிக்கை என்று வேதம் சொல்லுகிறது (1 தீமோ 6 : 14). மனுஷர் முன்பாக இயேசுவைக் குறித்து வெட்கப்படாமல் பேசுவதை அறிக்கை பண்ணுதல் என்கிறது வேதம் (மத். 10 : 32).

யோவான் ஸ்நானகனிடம் வந்து தங்கள் பாவங்களைச் சொல்லி ஆலோசனைக் கேட்டதை பாவ அறிக்கை என்று தெளிவாய் வேதத்தில் எழுதியுள்ளது. அப்பொழுது எருசலேம் நகரத்தாரும் யூதேயா தேசத்தார் அனைவரும், யோர்தானுக்கு அடுத்த சுற்றுப்புறத்தார் யாவரும் அவனிடத்திற்குப் போய் தங்கள் பாவங்களை அறிக்கையிட்டு யோர்தான் நதியில் யோவானால் ஞானஸ்நானம் பெற்றார்கள் (மத். 3 : 5, 6). அப்படியானால் நாங்கள் என்ன செய்ய வேண்டும் என்று ஞானஸ்நானம் பெறவந்த ஜனங்கள் எல்லாரும் ஆலோசனையும் கேட்டுக் கொண்டார்கள் (லூக். 3:7- 14). இப்படி முறையாய் பாவ அறிக்கை வெளிப்படையாய் செய்து ஞானஸ்நானம் பெற்றவர்களுடைய பாவங்கள் மன்னிக்கப்பட்டு அவர்கள் தேவனுடைய இராஜ்யத்துக்குள் பிரவேசிக்கிறார்கள் என்று இறைவன் இயேசுதாமே அறிவிக்கிறார் (மத். 21 : 21-32). இந்த ஞானஸ்நானமே அப்போஸ்தலர்களும் மற்றும் அநேக மக்களும் இயேசு கிறிஸ்துவும் பெற்ற ஞானஸ் நானம் பாவ மன்னிப்புக்கென்று கொடுக்கப்பட்டது. இது தேவ ஆலோசனை. இந்த ஞானஸ்நானம் பெற்றவர்களுடைய பாவங்கள் மன்னிக்கப்பட்டன.

தொடர்ந்து நம்மோடு போராடும் பாவம் மன்னிக்கப்பட, சுத்திகரிக்கப்பட நாம் ஜெபம் பண்ணுவது மாத்திரமல்ல, நாம் நம்முடைய பாவங்களை அறிக்கையிட வேண்டும். அப்படி அறிக்கை செய்தால் எல்லா அநியாயத்தையும் நீக்கி நம்மைச் சுத்திகரிப்பதற்கு அவர் உண்மையும் நீதியுமுள்ளவராயிருக்கிறார் (I யோ 1 : 9). சபையின் மத்தியில் அல்லது பரிசுத்தவான்கள் முன் அறிக்கை செய்வதே கர்த்தருக்கு முன் அறிக்கை செய்வதாகும் (யோசு. 7 : 19 ; II சாமு. 12 : 13).

விசுவாசிகள் தவறிழைத்தால் சபையின் மத்தியிலோ (அப். 19 : 18) அல்லது பரிசுத்தவான்கள் முன்னிலையிலோ பாவ அறிக்கை செய்து (அப். 5 : 1-10; யாக். 5 : 16, 14, 15) பாவத்தை விட்டு விட வேண்டும். தன் பாவத்திற்காக மனஸ்தாபப் படாதவனும், விட்டு விட மனமில்லாதவர்களும் பாவ அறிக்கை செய்ய வேண்டியதில்லை. இப்படி பாவ அறிக்கை செய்கிறவர்களுடைய பாவங்களுக்கு மன்னிப்பருள, திருச்சபையின் தலையாகிய இயேசு கிறிஸ்து அப்போஸ்தலர்களுக்கு அதிகாரம் கொடுத்திருக்கிறார் (யோவா. 20 : 23). இதை தகுதியுள்ளவர்களுக்கு இயேசுவின் நாமத்தில் ஒப்புக் கொடுக்க (பகிர்ந்தளிக்க, கையளிக்க) அப்போஸ்தலர்களுக்கு அதிகாரம் உண்டு (அப். 10 : 42). இப்படி தங்களைப் பரிசுத்தப் படுத்திக் கொண்டு தவறாமல் கர்த்தருடைய இராப் போஜனத்தில் பங்கு பெறுவதின் மூலம் பாவமன்னிப்பைப் பெற்று பரிசுத்தமாக்கப்பட்டு கர்த்தருடைய வருகைக்கு ஆயத்தப்படுவார்கள். அவர் ஒளியிலிருக்கிறது போல் நாமும் ஒளியிலே நடந்தால் ஒருவரோடொருவர் ஐக்கியப்பட்டிருப்போம். அவருடைய குமாரனாகிய இயேசுகிறிஸ்துவின் இரத்தம் சகல பாவங்களையும் நீக்கி நம்மை சுத்திகரிக்கும். பின்பு பாத்திரத்தையும் எடுத்து ஸ்தோத்திரம் பண்ணி அவர்களுக்கு கொடுத்து நீங்கள் எல்லாரும் இதிலே பானம்பண்ணுங்கள் இது பாவ மன்னிப்புண்டாகும்படி அநேகருக்காக சிந்தப்படுகிற புது உடன்படிக்கைக்குரிய என்னுடைய இரத்தமாயிருக்கிறது. "நான் வருகிறவரை என்னை நினைவு கூரும்படி இதைச் செய்யுங்கள் என்றார்" (Iயோ. 1 : 7; மத். 26 : 27, 28; I கொரி. 11 : 23-26).

ஆகையால் அறிக்கை என்பது வாயினால் மனுஷர் முன்பாக அறிக்கையிடுதலே

அறிக்கையாகும் [ரோம. 10 : 9, 10; மத். 10 : 32]. ஜெபம்பண்ணுவது அறிக்கையல்ல. பாவத்துக்காக மனஸ்தாபப்பட்டு ஜெபம் பண்ணுவது மாத்திரமல்ல, பாவத்தை அறிக்கை செய்து விட்டு விடுங்கள். கர்த்தர் உங்களை ஆசீர்வதிப்பார். இல்லை என்றால் சகல பாவங்களும் நிவிர்த்தியாகி பரிசுத்தமடையும் அநுபவம் உங்களுக்கு கிடைக்காது (I யோவா. 3 : 2, 3).

உங்கள் பாவம் உங்களைத் தொடர்ந்து பிடிக்கும் (எண். 32 : 23).

"...மகனே, நீ இப்பொழுது இஸ்ரவேலின் தேவனாகிய கர்த்தரை மகிமைப்படுத்து, அவருக்கு முன்பாக அறிக்கை பண்ணி, நீ செய்ததை எனக்குச் சொல்லு; அதை எனக்கு ஒளிக்காதே..." யோசு. 7 : 19

# விழுந்து கிடக்கிற நீ சீக்கிரமாய் எழுந்திரு

கால் ஒடிந்ததினால் கீழே விழுந்து கிடக்கிறவனுக்கும், கல் தடுக்கி கீழேவிழுந்தவனுக்கும் வித்தியாசமுண்டு. கல் தடுக்கி விழுந்தவன் உடனே எழுந்து நடக்க முடியும். கால் ஒடிந்தவனோ, ஒடிந்த கால் சரியான பின்பே எழுந்து நடக்க முடியும். அப்படிப் போலவே யுத்தத்தில் தோற்கடிக்கப்பட்டு, எதிரியால் அடிமைப்படுத்தப் பட்டவனுக்கும், எதிரியோடே போராடிக் கொண்டிருக்கிறவனுக்கும் வித்தியாசமுண்டு. போராடுகிறவன் எதிரியை இன்னும் தன் மீது ஆளுகை செய்ய விடாமல் தடுத்துக் கொண்டிருக்கிறான். அடிமைப் படுத்தப்பட்டவனோ அடிமையாக தாழ்மையில் இருக்கிறான்.

பாவம் செய்கிற எவனும் அதாவது பாவம் செய்து கொண்டே இருக்கிறவன், பாவத்தால், சாத்தானால் ஜெயிக்கப்பட்டு, பாவத்துக்கு அடிமைப் பட்டுக் கிடக்கிறான். அமலேக்கியருக்கும், யோசுவாவின் தலைமையில் இஸ்ரவேலருக்கும் நடந்த யுத்தத்தில், மலையின் மீது மோசேயின் கரம் சோர்ந்த போது அமலேக்கியர்கள் மேற்கொண்ட போதிலும், மோசேயின் கரம் நீட்டப்பட்ட நிலையில் நிரந்தரமாயிருக்கையில் இஸ்ரவேலர் மேற்கொண்டு முடிவில் அமலேக்கியரை ஜெயித்தார்கள். அது போல் பாவத்தை எதிர்த்து விடாப்பிடியாய் போராடுகிறவன் ஒரு முறை தோற்கடிக்கப்பட்டாலும், தொடர்ந்து போராடி மேற்கொள்கிறான்.

இச்சியாதிருப்பாயாக என்ற கற்பனையின்படி தன்னைக் கண்ணுங் கருத்துமாய் காத்து வருகிறவன் சாத்தானால், மாம்சத்தால் தூண்டப்பட்டு அசந்தர்ப்பவசமாக பார்வையை தவற விட்டதால் பரிசுத்தாவியால் உணர்த்தப்பட்டு, அறிக்கை செய்து தன்னை சுத்திகரித்துக் கொள்கிறான். இவன் விழுந்து கிடக்கிறவனல்ல. பின்மாரிப் போனவனுமல்ல.

சாக்கடையை, சீ! அசிங்கம் என்று சொல்லுகிறவன் அது தன் மீது பட ஒரு போதும் விரும்ப மாட்டான். ஏதோ ஒரு மிருகம் வாலினால் சாக்கடையை வஸ்திரத்தில் படச் செய்திருக்குமானால், உடனே ஓடிப்போய் கழுவிக் கொள்கிறான். அப்படிப்பட்டவன் இன்னொரு முறை முன் போல் சாக்கடையில் வஸ்திரம் கறை பட வேண்டும் என்று ஒருபோதும் விரும்ப மாட்டான். இவன் சாக்கடையில் விழுந்து கிடக்கிறவனல்ல. ஆனால் பன்றிக்கோ சாக்கடையில் பரவசமுண்டு. அது அதிலேயே உழன்று கொண்டிருக்கும். தினம் தினம் அதிலேயே படுத்து இன்பம் காணும். உணர்வில்லா எருமைமாடு நல்ல தண்ணீரால் கழுவி விடப்பட்டாலும், சாக்கடையை நாடிச் செல்லும்.

இயேசு கிறிஸ்துவின் இரத்தத்தால் கழுவப்பட்டு சுத்திகரிக்கப்பட்டு, பரிசுத்தாவியைப் பெற்று கிறிஸ்தவனாய் ஜீவித்த ஒருவன் இச்சையால் இழுக்கப்பட்டு, இச்சித்ததை தேடி, அடைந்து, அனுப

வித்து தொடர்ந்து அதிலே நிலைத்திருப்பானானால் அவன் விழுந்து கிடக்கிறவன். பாவத்தில் விழுந்து கிடக்கிறவன். நகைகளை கழற்றி விட்டு ஞானஸ்நானம் பெற்று கிறிஸ்துவோடு அவருக்கு அடிமையாய் வாழ (கிறிஸ்துவுக்கேற்றபடி) அவரோடே உடன்படிக்கை செய்தவன், உலக சிநேகத்தால் இழுக்கப்பட்டு, நகைகளை மறுபடியும் போட்டுக் கொண்டு ஜீவிப்பானானால் இவன் இந்த காரியத்தில் உடன்படிக்கையை பிரதிஷ்டையை உடைத்து விழுந்து கிடக்கிறவன்.

இவ(ள்)ன் கிறிஸ்தவ பாதையில் நடந்து முன்னேற முடியாமல் கால் ஒடிந்து கிடக்கிறவ(ள்)ன் இவ(ள்)ன் பாவத்திற்கு அடிமை. இவ(ள்)ன் சாக்கடையை தேசிக்கிற பன்றிக்குச் சமம். உணர்வில்லாத எருமை மாட்டைப் போன்றவ(ள்)ன் இப்படிப்பட்டவ(ள்)ன் நிலைவரப்படுத்த கர்த்தர் விரும்புகிறார். விடுதலையாக்க தேவன் சித்தமுடையவராய் இருக்கிறார். சுத்தம் செய்து உபயோகப் படுத்த கர்த்தர் பிரியமாய் இருக்கிறார்.

விழுந்து கிடந்த தாவீது ராஜாவை நாத்தான் மூலம் தூக்கி விட்ட கர்த்தர், உன்னையும் தூக்கி எடுப்பார் (II சாமு. 12 : 13).

கர்த்தரின் முன்பு இருந்தவர்களைக் கொண்டு பிரதான ஆசாரியனாகிய யோசுவாவின் அழுக்கு வஸ்திரத்தை மாற்றி சாத்தானின் நிலைமையினின்று விடுவித்த கர்த்தர் உன்னையும் விடுவிப்பார் (சகரி. 3 : 1-5).

மரணத்துக்கேதுவல்லாத பாவம் செய்து கொண்டிருக்கிற உனக்காய் தேவ பிள்ளைகள் ஜெபம் பண்ணுகிறார்கள். ஆகையால் நீ ஜீவனைப் பெற்றுக் கொள் (I யோவா. 5 : 16).

நீ காலம் தாழ்த்தாதே. நீ எழுந்திருக்கக்கூடிய தும்பில் வரும்போது அசட்டை பண்ணாதே. உன்னை தூக்கி விடும்படி தம்முடைய ஊழியக்காரர்களை உன்னிடமாய் தம்முடைய வார்த்தையோடே அனுப்புகிறார். அவர்களுடைய ஆலோசனையை அல்லத்தட்டாதே.

குயவன் வனையும் போது அவன் கையில் கெட்டுப் போன களிமண் பானையைப் போலிருக்கிற நீ உன் தீமையை விட்டு திரும்பினால், குயவன் கெட்டுப் போன களிமண்ணைக் கொண்டு வேறே பாத்திரமாய் வனைவது போல் கர்த்தர் கையால் மறுபடியும் நிலை நிறுத்தப்படுவாய் (எரே. 18 : 4-8).

பின்மாறிப் போன அல்லது விழுந்து போன ஒருவன் மறுபடியும் தன்னை புதுப்பித்துக் கொள்ள நிர்விசாரமாய் இருப்பானானால் அவன் நிலைமை என்ன ஆகும் என்று தரிசனத்தின் மூலம் கர்த்தர் வெளிப்படுத்தின காரியமாவது.

கனம் பொருந்திய தேவ மனிதர் ஒருவர் ஒரு மாடிப் படியில் உட்கார்ந்து ஒரு வஸ்திரத்தை சோப்பு போட்டு துவைத்துக் கொண்டிருக்கிறார். அந்த வேளையில் பின்மாறிப் போன கிறிஸ்தவன் ஒருவன் அவரண்டை வருகிறான். உடனே அந்த மனிதர் அவன் மேல் மனதுருகி அவனை அழிவினின்று திருப்ப வேண்டுமென விரும்பி கையில் சோப்பு நுரையைக் கூட பொருட்படுத்தாமல் அவனுக்கு ஆலோசனை கொடுக்க முற்படுகிறார். இருவரும் ஒரு படியில் உட்கார்ந்து பேசலாம் என எண்ணி சற்று இறங்குகையில், இரண்டு உலக மனிதர்கள் தற்செயலாய் ஏறி வந்து அங்கே உட்கார்ந்து விடுகிறார்கள். சாத்தான் தடை செய்கிறான் என அறிந்து கீழே இறங்கிப் போய் பேச முற்படுகையில், பின்மாறிப் போனவன் சற்று தூரத்தில் தன்னுடைய நண்பர்களைக் கண்டு அவர்களிடம் போய் சற்று பேசிவிட்டு வருகிறேன் என்று சொல்லவே, சரி போய் வா என தேவ மனிதரும் அனுப்புகிறார். நண்பர்களை சந்தித்து பேசிவிட்டு, அவன் திரும்ப வருகிறான். இப்போது வயதில் சற்று குறைந்தவனாய் தோற்றமளிக்கிறான். இப்போது பேசலாம் என்று பரிசுத்தவான் முற்படுகையில், சற்று தூரத்தில் வாலிபத்தை அடையப் போகிற பையன்கள் விளையாடுவதைக் கண்டு 'நான் கொஞ்சம் விளையாடி வருகிறேன் என்று சொல்லி' விட்டுப் போகிறான். இவரும் பொறுமையுடன் காத்திருக்க

கிறார். அவனோ திரும்பி வரும்போது இன்னும் வயதில் குறைந்த பையன் போல் தோற்றமளிக்கிறான். இப்போதாவது பேசலாம் எனத் தீவிரப்படுகையில், பக்கத்தில் சில சிறுவர்கள் (சிறுபிள்ளை விளையாட்டு) விளையாடிக் கொண்டிருப்பதைக் கண்டு அங்கே கடந்து செல்கிறான்.

தேவ மனிதர் காலம் கடந்து போன நால் தன்னுடைய இருப்பிடம் வந்து விடுகிறார். விளையாடி விட்டு வருகிறவன் மிகவும் சின்னப் பையனாகி விடுகிறான். இந்நிலையில் அவனுக்குப் போதனை கொடுத்தாலும் பிரயோஜனப்படாது. இப்படியாக அந்த விழுந்து போன கிறிஸ்தவன் தனக்கு தேவன் கொடுத்த சந்தர்ப்பங்களை உதாசீனப்படுத்தியதால் புதுப்பிக்கப்படாமலேயே, போய் விட்டான்.

பிரியமான சகோதரனே, சகோதரியே நீயும் உலக தேசத்தை, அற்ப சந்தோசத்தை நாடி சின்னத்தனமாய் போய் விடாதே.

விழுந்து போனவர்கள் மனந்திரும்பி சீர்பட தவணைக் கொடுக்கிறார். திருந்தாமல் போனால் தண்டிக்கிறார் (வெளி. 2 : 21,22).

"கர்த்தரால் நேசிக்கப்படுகிறவ(ளே)னே, உன் தேவனாகிய கர்த்தரிடத்தில் திரும்பு. நீ உன் அக்கிரமத்தினால் விழுந்தாய். வார்த்தைகளைக் கொண்டு திரும்பு. அவரை நோக்கி: தேவரீர் எல்லா அக்கிரமத்தையும் நீக்கி, என்னை தயவாய் அங்கீகரித்தருளும், அப்பொழுது நான் என் உதடுகளின் காளையைச் செலுத்துவேன்; திக்கற்றவன் உம்மிடத்தில் இரக்கம் பெறுகிறான் என்று சொல் அப்பொழுது "நான் உன்னுடைய சீர்கேட்டை குணமாக்கி, உன்னை மனப்பூர்வமாய் சிநேகிப்பேன்" என்று மன்னிக்க தயை பெருத்த கர்த்தர் உரைக்கிறார். (ஓசியா 14 : 1-4).

விழுந்து கிடக்கிற நீ சீக்கிரமாய் எழுந்திரு.

---

இதோ வாசற்படியில் நின்று தட்டுகிறேன். ஒருவன் என் சத்தத்தைக் கேட்டு கதவைத் திறந்தால் அவனிடத்தில் நான் பிரவேசித்து அவனோடே போஜனம் பண்ணுவேன். அவனும் என்னோடே போஜனம் பண்ணுவான (வெளி. 3 : 20).

---

# மோட்ச வழி

## குரு–சிஷ்ய உரையாடல்

(தொடர்ச்சி)

சிஷ்யன் : சொல்லுங்கள் கேட்கிறேன்.

குரு : 1. முதலாம் கற்பனை : உன்னை அடிமைத்தன வீடாகிய எகிப்து தேசத்திலிருந்து புறப்படப்பண்ணின உன் தேவனாகிய கர்த்தர் நாமே. என்னையன்றி உனக்கு வேறே தேவர்கள் உண்டாயிருக்க வேண்டாம் (யாத். 20 : 2,3).

இதன் அர்த்தம் நாம் எல்லாவற்றைப் பார்க்கிலும் தேவனுக்குப் பயந்து, அவரை சிநேகித்து அவர் பேரில் பயபக்தியாயிருக்க வேண்டும். அவர் மேல் நம்பிக்கையாயிருக்க வேண்டும்.

இந்த முதலாம் கற்பனை எல்லாவித விக்கிரக ஆராதனைகளையும் விலக்குகிறது. அது எந்த சிருஷ்டியையும் தேவனாக பாவித்து ஆராதிப்பதானாலும் சரி, தேவனைக் காட்டிலும் எந்த சிருஷ்டியையும் கண்டு பயப்படுவதானாலும் சரி, அதை அதிகமாய் சிநேகிப்பதானாலும் சரி, அதின் பேரில் அதிக நம்பிக்கை வைப்பதானாலும் சரி, வெளிப்படையான

விக்கிரக ஆராதனையானாலும் சரி, உள்ளான உண்மை நியாயம் விக்கிரக ஆராதனையானாலும் சரி. இவைகள் எல்லாவற்றையும் விலக்குகிறது. ஏசா. 42 : 8 ; மத். 4 : 10 ; சங் 115 : 3,4 ; மத். 10 : 28 ; நீதி. 3 : 5 ; எரே. 17 : 5 ; எபே. 5 : 5 ; பிலி. 3 : 19 ; சங். 14 : 1 ; யோவா. 5 : 22, 23 ; யாத். அதி. 32 ; லூக். 16 : 19 ; மத். 19 : 16 ; ஆதி. 17 : 1 ; சங். 33 : 8 ; ஆதி. 39 : 9 ; சங். 73 : 25, 26 ; 42 : 11 ; 118 : 8; தானி. அதி. 3 ; ஆதி. அதி. 22 ; தானி. அதி. 6 முதலியன.

2. இரண்டாம் கற்பனை : உன் தேவனாகிய கர்த்தருடைய நாமத்தை வீணிலே வழங்காதிருப்பாயாக.

இதன் அர்த்தம் நாம் தேவனுக்கு பயந்து அவருடைய நாமத்தை நேசித்து, அவருடைய நாமத்தை தூஷியாமலும் பொய்யாணையிடாமலும், மந்திர தந்திரங்கள் செய்யாமலும், பொய்யுரைக்காமலும், கபடு பண்ணாமலும், சகல இக்கட்டிலேயும் தேவ நாமத்தை வணங்கி வேண்டிக் கொண்டு புகழ்ந்து ஸ்தோத்தரிக்க வேண்டும் என்பதாகும்.

இந்த கற்பனை தேவ நாமத்தை தூஷிப்பதையும், வீணிலே வழங்குவதையும், ஆணையிடுவதையும், மந்திர தந்திரஞ் செய்வதையும், பொய் தப்பறை சொல்வதையும், கபடு பண்ணுவதையும் விலக்குகிறது. தூஷித்தல் லேவி. 24 : 15, 16 ; யாக். 3 : 9, 10 ; செலோமித்தின் மகன் (லேவி. 24 : 10–16) ; கோலியாத் (I சாமு. 17 : 43) ; யூதர் (மத். 27 : 25) ; சீமேயி (II சாமு. 16 : 13) ஆணை பொய்யாணை, தூஷணமான ஆணை, நிச்சயமில்லாத காரியங்களில் ஆணை (மத். 5 : 33-37). (உ-ம்) பேதுரு (மத். 26 : 72) ; ஏரோது (மத். 14 : 6-9) ; அப் : பவுலுக்கு விரோதமான சபதம் (அப். 23 : 21) அவசியமான ஆணை (உபா. 6 : 13 ; எபி. 6 : 16) : (உ-ம்) இயேசு (மத். 26 : 63, 64) ; ஆபிரகாமின் வேலைக்காரர் (ஆதி. 24 : 9). தேவ நாமத்தையோ, வசனத்தையோ இறை கட்டளையின்றி இயற்கைக்கு மேலான காரியங்களைச் செய்ய உபயோகித்து மந்திர தந்திரங்கள், பில்லி சூனியம், குறி சொல்லுதல், சன்னதங் கேட்டல் இவை போன்ற பிசாசின் கிரியைகள் செய்தல் (உபா. 18 : 10–12 ; லேவி. 19 : 31). எந்தோரின் அஞ்சனக்காரி (I சாமு. 28 : 7); ஸ்கேவா என்னும் யூதரின் புத்திரர்கள் (அப். 19 : 13-17) முதலியன. தேவ நாமத்தில் தப்பறை சொல்லுதல், கபடு பண்ணுதல் என்றால் கள்ளப் போதகத்தையும், தேவ பக்தியில்லாத வாழ்க்கையையும், தேவ நாமத்தினாலும், வசனத்தினாலும் அலங்கரிப்பதாகும். எரே. 23 : 31 ; மத். 18 : 9 ; மத். 7 : 21-23. ஆண்டவரே, ஆண்டவரே என்று சொல்லுகிறவனல்ல. பரமண்டலங்களில் இருக்கிற பிதாவின் சித்தத்தைச் செய்கிறவனே பரலோக இராஜ்யத்திற்குள் பிரவேசிப்பான். சகல இக்கட்டிலும் தேவ நாமத்தை ஸ்தோத்தரித்து வணங்கி வேண்டுதல் செய்ய வேண்டும். இதுவே தேவன் நம்மிடத்தில் எதிர் பார்க்கிறார் என்பதாகும்.

(தொடரும்)

> "...நியாயப்பிரமாணம் பரிசுத்தமுள்ளது, கற்பனையும் பரிசுத்தமாயும், நீதியாயும் நன்மையாயும் இருக்கிறது"
> ரோம. 7 : 12

# வேத பாடம்

(தொடர்ச்சி)

ஆதி. 25 : 1-10 ஆபிரகாம் கேத்தூராள் என்னும் பேர் கொண்ட ஒரு ஸ்திரீயையும் விவாகம் பண்ணியிருந்தார். அவளுக்கும் பிள்ளைகள் இருந்தனர். ஆபிரகாம் உயிரோடிருக்கும் போதே தன் புத்திரன் ஈசாக்குக்கும், மறுமனையாட்டிகளின் பிள்ளைகளுக்கும் பாக

பிரிவினை செய்து மறுமனையாட்டிகளின் பிள்ளைகளுக்கு வெகுமானங்களைக் கொடுத்து தன் மகனை விட்டு தூரமாய் குடியிருக்க அனுப்பிவிட்டார். ஈசாக்குக்கோ தனக்குண்டான யாவற்றையும் கொடுத்தார். தகப்பன்மார் புத்தியோடே செய்ய வேண்டிய காரியமிது.

அப்படியே தேவனுடைய பிள்ளைகளில் அநேகர் நன்கொடைகள் மாத்திரம் பெற்று (வரங்கள், சிற்சில அநுபவங்கள்) திருப்தியடைந்து சுதந்திரத்திற்கு தூரம் போய் விடுவார்கள். நாமோ சுதந்திரத்தை பெற்றுக் கொள்ள ஜாக்கிரதையாய் இருப்போமாக.

கடைசியில் ஆபிரகாம் தனது பூரணமான 175-ம் வயதில் மரித்து மக்பேலா குகையில் அடக்கம் பண்ணப்பட்டார். அவருடைய குமாரராகிய ஈசாக்கும், இஸ்மவேலும் அவரை நல்லடக்கம் செய்தார்கள்.

25 : 11 ஆபிரகாம் மரித்தபின் கர்த்தர் ஈசாக்கை ஆசீர்வதித்தார்.

25 : 12-18 ஆபிரகாமுடைய குமாரனாகிய இஸ்மவேலின் வம்சவரலாறு 12 பிரபுக்கள் இஸ்மவேலின் சந்ததியில் எழும்புகின்றனர் ஆவிலா துவக்கி அவர்கள் குடியிருந்தார்கள்.

25 : 19-23 ஈசாக்குக்கு பிள்ளையில்லை. மலடியாயிருந்த தன் மனைவிக்காய் ஈசாக்கு கர்த்தரை நோக்கி வேண்டிக் கொண்டார். கர்த்தர் ஜெபத்தைக் கேட்டு ரெபெக்காள் கர்ப்பம் தரிக்க அனுக்கிரகம் செய்தருளினர்.

அவள் கர்ப்பத்தில் பிள்ளைகள் ஒன்றோடொன்று மோதிக்கொண்டன. இதைக் குறித்து ரெபெக்காள் கர்த்தரிடம் விசாரித்தபோது இரண்டு ஜாதிகள் உன் கர்ப்பத்தில் உண்டாயிருக்கிறது. ஒன்றை விட்டு மற்றது பிரியும், மூத்தவன் இளையவனை சேவிப்பான் என்றார். உலகத்தில் நடப்பதெல்லாம் தேவதீர்மானத்தின்படி நடக்கிறது அல்லது தேவனுடைய முன்னறிவின்படி நடக்கிறது. தேவன் நம்மைத் தெரிந்து கொண்டதற்காய் நாம் தேவனை ஸ்தோத்தரிக்க வேண்டும்.

25 : 24-26 முதலில் சிவந்த நிறமும் ரோம அங்கி தரித்தார் போல் சரீரமெல்லாம் ரோமமுடைய ஏசாவும், அவன் குதிகாலைப் பிடித்துக் கொண்டு யாக்கோபும் பிறந்தனர் அப்பொழுது ஈசாக்குக்கு வயது 60.

25 : 27,28 ஏசா வேட்டைக்காரனுன். யாக்கோபு குணசாலியும், கூடாரவாசியுமானுன். ஏசா வேட்டையாடிக் கொண்டு வந்து புசிக்க கொடுத்த ஆகாரம் ருசிகரமாயிருந்ததினுல் ஈசாக்கு ஏசாவின் மேல் பிரியமாயிருந்தார். ரெபெக்காள் யாக்கோபின் மேல் பிரியமாயிருந்தாள். உண்டிப்பிரியம் தெய்வீக பார்வையை மறைக்கும்

25 : 29-34 ஏசா ஒரு நாள் வேட்டையாடி வீட்டுக்குத் திரும்பும் போது யாக்கோபு கூழ்க் காய்ச்சிக் கொண்டிருந்தான். ஏசா நான் இளைத்திருக்கிறேன் எனக்கு கொஞ்சம் தா என்க யாக்கோபு உன் சேஷ்டபுத்திரபாகத்தை எனக்கு விற்று விடு அதற்கு பதிலாய் கூழ் தருகிறேன் என்றுன். சேஷ்ட புத்திர பாகமானது இஸ்ரவேலிலே மிகவும் சிரேஷ்டமாகும். சுதந்தர பாகத்தில் இவர்களுக்கு இரண்டு பங்கு கிடைக்கும் (மற்ற பிள்ளைகளை விட) தகப்பனுக்குப் பின் குடும்பத்தலைவன் இவனே. குடும்ப ஆசாரியனும் இவனே. இவ்வளவு மேன்மையான பிறப்புரிமையை நான் சாகப் போகிறேனே, இந்த சேஷ்டபுத்திர பாகம் என்னத்துக்கு நீ எடுத்துக் கொள், எனக்கு கூழ் கொடு புசிக்க என்று சொன்னது மாத்திரமல்ல ஆணையிட்டும் கொடுத்து ஏசா தன் சேஷ்டபுத்திர பாகத்தை தன் தம்பியாகிய யாக்கோபுக்கு விற்றுப் போட்டான். யாக்கோபு கொடுத்த கூழைக் குடித்து விட்டு

எழுந்து போய் விட்டான். இப்படி ஏசா தன் சேஷ்டபுத்திர பாகத்தை அசட்டை செய்தான்.

இப்படியே இவ்வுலக வாழ்வுக்காக நித்திய சுதந்தரத்தையும், ஸ்தானத்தையும் சிலர் இழந்து போகின்றனர். ரூபன்- I நாளா. 5 : 1,2

(தொடரும்)

> "ஆகையால், அந்தத் திருஷ்டாந்தத்தின்படி, ஒருவனாகிலும் கீழ்ப்படியாமையினாலே விழுந்து போகாதபடிக்கு...ஜாக்கிரதையாயிருக்கக் கடவோம்"
>
> —எபி. 4 : 11

பாலர் பகுதி

## நல்ல ஸ்டீபன்

ST. யோவான் உயர்நிலைப் பள்ளியின் காலை ஜெபவேளை முடிந்ததும் பிரின்ஸ்பால் அவர்களின் விசேஷ அறிவிப்பு ஒன்று அறிவிக்கப்பட்டது. அதாவது அந்த பள்ளியில் எல்லோருக்கும் அறிமுகமானவனும், அநேகமான மாணவர்களால் மதிக்கப்பட்ட மாணவன் ஸ்டீபனுக்கு எதிர்பாராத விதமாக ஏற்பட்ட விபத்தைப்பற்றியது. அவனுக்காக எல்லோரும் ஜெபிக்கும்படியாக பிரின்ஸ்பால் கேட்டுக் கொண்டார். காலை அசெம்பளி முடிந்து, அவரவர் தங்களது வகுப்பறைக்குத் திரும்பிக் கொண்டிருந்தனர்.

சிலர் இப்படியாகச் சொல்லிக் கொண்டார்கள். ஸ்டீபன் எவருக்காவது இரக்கப்பட்டு உதவி செய்திருப்பான், அடிபட்டிருப்பான் என பேசிக் கொண்டனர். ஆனால் அதிகமான மாணவர்களும், ஆசிரியர்கள் எல்லோரும் அவனுக்காக மெய்யாகவே வருந்தினர். எல்லோரையும் விட அதிகமாக பிரின்ஸ்பால் மிகவும் வருந்தினதுமன்றி உடனே ஸ்டீபனை பார்க்க மருத்துவமனைக்கு புறப்பட்டார்.

ஸ்டீபனின் பெற்றோர்கள் மிகவும் பெரிய செல்வந்தர். ஆனால் ஒருவருக்கும் எந்தவித உதவியும் செய்யாதவரும் செய்ய விரும்பாதவரும் ஆவர் தொடக்கத்தில் தனது பள்ளி வாழ்க்கையில் தகப்பனரைப் போன்றே இருந்தான் ஸ்டீபன். ஒருநாள் அவனது ஞாயிறு பள்ளியில் அவனது ஞாயிறு பள்ளி ஆசிரியர் சொன்ன நல்ல சமாரியன் கதை அவனை மிகவும் வருத்தப்படுத்தியது. ஆசிரியரின் கடைசிவார்த்தை இப்படியாக இருந்தது. நம்முடைய இரட்சகராகிய இயேசு கிறிஸ்து இப்படிப்பட்ட கதை சொன்னதுமன்றி கர்த்தர் அப்படி செய்து வந்தார், பிறருக்கு நன்மை செய்வதே (உதவி செய்வதே) அவரது வாழ்க்கையாக இருந்தது எனக்கூறி முடித்தார்.

அன்று முதல் ஸ்டீபன் எப்பொழுதும் பிறருக்கு உதவியையே செய்து வந்தான். ஒரு நாள் எவருக்காவது உதவி செய்யவில்லை என்றால் அவனுக்கு அன்று தூக்கமே வருவது இல்லை.

ஸ்டீபன் படிப்பிலும், விளையாட்டுகளிலும் முதல்மாணவனாக திகழ்ந்தான். அதே வேளையில் பிறருக்கு உதவி செய்வதிலும் முதல்வனாக விளங்கி வந்தான். உதாரணமாக ஒரு தடவை பள்ளிக்கு வந்து கொண்டிருக்கும் பொழுது ரோட்டின் ஓரத்தில் பிச்சை கேட்டுக் கொண்டிருந்த ஏழை சிறுவர்களுக்கு தனது பள்ளியில் கட்ட வேண்டிய Fees பணத்தில் உணவுக்காக ரொட்டி, பிஸ்கட் போன்றவற்றை வாங்கி கொடுத்து விட்டு பள்ளியில் பணம் கட்டவில்லை. வீடு திரும்பியதும் தனது தகப்பனிடம் செம்மையாக அடிவாங்க வேண்டியதாகி விட்டது. சில வேளை தனது மதிய

சாப்பாட்டைக் கூட தன்னோடு படிக்கும் சகமாணவர்களுக்கு, ஆகாரம் கொண்டு வராதவர்களுக்கு கொடுத்து விடுவான். இப்படியாக ஸ்டீபனை பற்றி எல்லோரும் அறிந்து இருந்தனர்.

அன்றும் அப்படிதான் பள்ளிக்கு தனது தோழர்களுடன் வந்து கொண்டிருக்கும் பொழுது ரோட்டை கடக்க முடியாமல் ஒரு குருடர் நின்று கொண்டிருந்தார். அப்பொழுது ஸ்டீபன் தனது நண்பர்களிடம் பொருங்கள் நான் கடத்திவிட்டு வருகிறேன் என்றான். அப்பொழுது நண்பர்கள் நேரம் ஆகிவிட்டது இன்னும் ஐந்து நிமிடங்கள் தான் இருக்கின்றது Assembly க்காக நாங்கள் போகிறோம். நீ வேண்டுமானால் மெதுவாக வா. எங்களுக்கு பிரின்ஸ்பாலிடம் அடிபட முடியாது எனக் கூறிவிட்டு, அவனை விட்டுவிட்டு சென்று விட்டார்கள். ஸ்டீபன், அடிக்கடி வாகனங்கள் வந்து கொண்டிருந்ததால் அவன் மிகவும் சிரமப்பட்டு அவரை அப்புரம் கடத்தி விட்டு திரும்பி நடக்கும் பொழுது எதிர் பாராத விதமாக விரைவாக வந்த மோட்டார் வாகனம் அவன்மீது மோதி விட்டது. அவன் கீழே விழுந்து பலத்த சேதம் ஏற்பட்டது. தலையில் பலத்த காயம் ஏற்பட்டது.

ஆஸ்பத்திரியில் ஸ்டீபனை அவசர வார்டில் சேர்த்திருந்தனர். டாக்டர்கள் எல்லோரும் அவனை கவனிப்பதில் ஈடுபட்டிருந்தனர். பள்ளி பிரின்ஸ்பால் ஸ்டீபனை காண வெளியே காத்துக் கொண்டு நின்றார். ஸ்டீபனின் அப்பாவுக்கு செய்திகள் கேள்வி பட்டு ஆஸ்பத்திரி வந்து சேர்ந்தார்.

டாக்டர்கள் இரண்டு மூன்றுமணி நேரம் போராடியும் பலன் அளிக்காமல் ஸ்டீபன் இவ்வுலகைவிட்டு பிரிந்து விட்டான். இந்த நல்ல ஸ்டீபனை எண்ணி பள்ளி பிரின்ஸ்பாலும், ஆசிரியர்களும், மாணவர்களும் மிகவும் அழுதனர். ஸ்டீபனின் இறுதி ஊர்வலத்தில் எல்லோரும் கலந்து கொண்டனர். அடக்கம் பண்ணின பின்பு பிரின்ஸிபால் பேசும் பொழுது பிள்ளைகளே! பிறருக்கு உதவி செய்வதையே நோக்கமாகக் கொண்டு, வாழ்ந்து மரித்த ஸ்டீபனை நினைத்துக் கொள்ளுங்கள். தனது இறுதி வரை அதாவது மரண பரியந்தம் பிறருக்கு உதவி செய்வதையே நோக்கமாக கொண்டது போல நாமும் இந்த நல்ல ஸ்டீபனை போல ஜீவிப்போமாக. ஆம், பிள்ளைகளே! நாமும் கூட ஸ்டீபனைப் போல பிறருக்கு உதவி செய்து, நமது கர்த்தரின் மாதிரியைப் பின்பற்றுவோமாக.

---

"அன்றியும் நன்மை செய்யவும், தானதர்மம் பண்ணவும் மறவாதிருங்கள்; இப்படிப்பட்ட பலிகளின் மேல் தேவன் பிரியமாயிருக்கிறார்" எபி. 13 : 16

---

மாதர் பகுதி
[தொடர்ச்சி]

# ஸ்திரீகள்

"மேலும் நாம் அனைவரும் தேவனுடைய குமாரனைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒருமனப்பட்டவர்களாகி, கிறிஸ்துவின் நிறைவான வளர்ச்சிக்குத்தக்க பூரணபுருஷராகும் வரைக்கும், பரிசுத்தவான்கள் சீர்பொருந்தும் பொருட்டு, சுவிசேஷ ஊழியத்தின் வேலைக்காகவும், கிறிஸ்துவின் சரீரமான சபையானது பக்தி விருத்தி அடைவதற்காகவும், அவர் சிலரை அப்போஸ்தலராகவும் சிலரைத் தீர்க்கதரிசிகளாகவும், சிலரைச் சுவிசேஷகராகவும், சிலரை மேய்ப்பராகவும் போதகராகவும் ஏற்படுத்தினார்" [எபேசி 4 : 11 - 13].

தேவனானவர் சபையிலே முதலாவது அப்போஸ்தலரையும், இரண்டாவது தீர்க்கதரிசிகளையும், மூன்றாவது போதகர்களையும், பின்பு அற்புதங்களையும், பின்பு குணமாக்கும் வரங்களையும், ஊழியங்களையும், ஆளுகைகளையும், பலவித பாஷைகளையும் ஏற்படுத்தினார் [I கொரி. 12 : 28].

கண்காணிப்பை விரும்புகிறவன் நல்ல வேலையை விரும்புகிறான். கண்காணியானவன் குற்றஞ்சாட்டப்படாதவனும் ஒரே மனைவியையுடைய புருஷனுமாயிருக்க வேண்டும் [I தீமோ. 3 : 1 - 4 ; தீத்து 1 : 5 - 9]. உதவிக்காரர்களும், உதவிக்காரருடைய மனைவிகளும் நல்லவர்களாயிருக்க வேண்டும். [I தீமோ. 3 : 8 – 13]

கிறிஸ்துவின் ஆவிக்குரிய இராஜ்யமாகிய திருச்சபையின் அதிகார அலுவல்களில், அப்போஸ்தலர்களில் ஒருவரும் பெண்கள் இருந்ததாக காணோம். தீர்க்கதரிசிகள் போதகர்களாகவும் இருந்திருக்கின்றனர். அந்தியோகியா பட்டணத்து சபையிலே பர்னபாவும், நீகர் என்னப்பட்ட சிமியோனும், சிரேனே ஊரானாகிய லூகியும், காற்பங்கு தேசாதிபதியாகிய ஏரோதுடனே கூட வளர்க்கப்பட்ட மனாயீனும், சவுலும் தீர்க்கதரிசிகளாயும், போதகர்களாகவும் இருந்தார்கள் [அப். 13 : 1].

பணிவிடை ஊழியராக ஏழுபேரை நியமித்ததிலும் (எருசலேம் சபையில்) பரிசுத்த ஆவியும் விசுவாசமும் நிறைந்த புருஷர்களையே நியமித்ததாகப் பார்க்கிறோம். அதில் ஸ்தேவானும் ஒருவர் (அப். 6 : 1 - 7).

அப்படியே ஆதிசபை சபைகளைத் திடப்படுத்த அப்போஸ்தலர்களோடே யூதா, சீலா போன்ற தீர்க்கதரிசிகளையே அனுப்பியது. ஸ்திரீகளில் யாரையும் அனுப்பினதாக நாம் பார்க்கிறதில்லை [அப். 15 : 22 - 35]. தீமோத்தேயு, தீத்து போன்ற கண்காணிகளும் புருஷர்களாகவே இருந்ததாகக் காண்கிறோம். சரி, சபைகளிலாவது மேய்க்கும் பணியில் மூப்பர்களோடே ஸ்திரீகளும் இருந்தனரா என்று பார்த்தால் அப்படியும் இல்லை. மூப்பர்களே இருந்தனர். மூப்பத்திகள் கிடையாது அப். 20 : 17-35] அப். பேதுருவும் உங்களிலுள்ள மூப்பருக்கு உடன் மூப்பனும் என்றே எழுதுகிறார் [I பேது. 5 : 1 - 5] காரணமென்ன?

[தொடரும்]

---

"தேவன் செய்வது எதுவோ அது என்றைக்கும் நிலைக்கும்... அதினோடே ஒன்றும் கூட்டவுங் கூடாது அதிலிருந்து ஒன்றும் குறைக்கவுங்கூடாது"

பிர. 3 : 14

---

## புதிய எருசலேம் சபை நடபடிகளில் சில

[தொடர்ச்சி]

ஆம். இயேசு கிறிஸ்து நேற்றும், இன்றும், என்றும் மாறாதவர். அன்று ஆகாரின் கண்ணீரையும், நாயீனூர் விதவையின் கண்ணீரையும், மார்த்தாள், மரியாள் ஆகியோரின் கண்ணீரையும் மாற்றினவர், இன்றைக்கும் அவரை உண்மையாய் தேடுகிற யாவருடைய கண்ணீரையும் மாற்றுவதற்கு அவர் போதுமானவராகவே இருக்கிறார்.

மேற்படி குடும்பத்தாருக்கு இரட்சிப்பின் சுவிசேஷத்தை அறிவிக்க தேவன் உதவி செய்தார். மற்றுமொரு சகோதரி கோவில்பட்டி அருகேயிருந்து சென்ற மாதம் குழந்தைகளுடன் இங்கே அவருடைய கணவனிடம் வந்திருந்தார்கள். சில நாட்களுக்குள்ளாக அந்த சகோதரியை அசுத்த ஆவி தாக்கி மிகவும் கஷ்டப்படுத்தியிருக்கிறது. "நாங்கள் உங்களுக்கு கடிதம் எழுதி உங்களை வரவழைத்தால் நல்லதென்று அந்த சகோதரியின் கணவனிடம் கூறினோம். அவரும் சரி. அதற்கான ஏற்பாடுகளைச் செய்கிறேன் என்று கூறினார். அதற்குள்ளாக கர்த்தர் உங்களையே இங்கு அனுப்பிவிட்டாரே" என்று நமது சகோதரர்கள் ஆச்சரியப்பட்டார்கள். அந்த அசுத்த ஆவி பிடித்த சகோதரியின் வீடு எந்த பக்கம் இருக்கிறதென விசாரித்தோம். 'நீங்கள் இனி அடுத்து சந்திக்கப் போகிற நமது விசுவாசியின் வீட்டுக்கு எதிர் வீடுதான்' என்றார்கள். "சரி அப்படியானால் நாம் அவர்களுக்காக ஜெபிக்கலாம். அவர்கள் விசுவாசித்தால் தேவன் அவர்களுக்கும் இரக்கம் செய்வார்" என்று கூறி விசுவாசிகளுடன் நாங்கள்

சந்திக்க வேண்டிய ஒரு விசுவாச குடும்பத்துக்குப் போனோம். நாங்கள் அந்த வீட்டினுள் பிரவேசித்ததும், எதிர் வீட்டிலிருந்து ஒரு சகோதரி தலைவிரிகோலமாக ஐயா! என்று அலறிக் கொண்டு எங்களை நோக்கி ஓடி வந்து எங்கள் முன்பாக வந்து விழுந்து விட்டது. இந்த சகோதரியின் அலறல் சத்தம் கேட்டு பக்கத்து வீட்டுக்காரர்களெல்லாம் ஓடி வந்து விட்டார்கள். எதிர் வீட்டிற்குள் ஓடுகிறாளே என்ன ஆகுமோ என்று கலக்கத்தோடு கணவனும் பின்னாலே ஓடிவந்தார். இந்த சகோதரி எங்கள் முன்னால் வந்து விழுந்ததும் "இதுதான் அந்த அசுத்த ஆவி தாக்கின சகோதரி" என்று சகோதரர்கள் கூறினார்கள். சில விநாடிகளுக்குள் அந்த சகோதரி மயக்கம் தெளிந்து எழுந்து உட்கார்ந்தது. தலைமுடிகளைச் சரி செய்து கொண்டு எங்களைப் பார்த்து ஐயா ஸ்தோத்திரம் என்று சொன்னது. எங்களுக்கு ஆச்சரியமாக தோன்றினது. காரணம் சுமார் இரு மாதங்களுக்கு முன்பு இதே சகோதரியைக் கோயில்பட்டிக்கு அருகாமையிலுள்ள வெங்கிடாசலபுரம் என்ற கிராமத்தில் பார்த்திருக்கிறோம். அங்கு நாங்கள் ஊழியத்திற்குச் சென்றிருந்த பொழுது இந்த சகோதரியை முதலாவது சந்தித்தோம். சி. எஸ். ஐ சபையைச் சேர்ந்த அச்சகோதரி, தன்னுடைய கணவர் இராணுவத்தில் இருப்பதாகவும், அவர்களுடன் விரைவில் போய்விடுவோம் என்றும், எங்களுக்காக கர்த்தரிடம் வேண்டிக் கொள்ளுங்கள் என்றும் கேட்டுக் கொண்டார்கள். அதே சகோதரியைத்தான் இங்கே நாங்கள் பார்த்துக் கொண்டிருக்கிறோம். கணவனும் அருகே நிற்கிறார். "ஐயா! நான் குழந்தைகளுடன் போன மாதம்தான் இங்கே வந்தேன். இந்த இரு தினங்களுக்குள்ளாக எனக்கு ஒருவித மயக்கம் உண்டாகி வாயில் வந்தவாறு உளர ஆரம்பித்து விட்டேன். ராணுவ மருத்துவமனைக்கும் அழைத்துச் சென்றார்கள் அவர்கள் என்னை ஊருக்கு அனுப்பச் சொல்லி விட்டார்கள். நான் என் கணவரிடம் ஊரில் தங்களைச் சந்தித்ததையும் அவர்களை இங்கே அழைத்து வந்தால் சுகம் கிடைக்கும் என்று கூறினேன். அவர்கள் இவ்வளவு தூரத்திற்கு எப்படி வருவார்கள் என்றார்கள், என் கணவரிடம் போன வாரம் தான் பேசிக் கொண்டேன். அப்படியே என்னை ஊருக்கு அனுப்பினாலும் உங்களை அழைத்து வந்து ஜெபம் பண்ணினால் தேவன் சுகம் தருவார் என்றும் நான் எண்ணியிருந்தேன். சிறுமை பட்டவளாகிய என்னுடைய ஜெபத்தைக் கேட்ட என் ஆண்டவர் உங்களையே இங்கு அழைத்து வந்து விட்டாரே என்பதை எண்ணும் பொழுது என் ஆண்டவருக்கு நான் எப்படி நன்றி கூறுவேன்? உங்களுடைய சாயலை இந்த வீட்டு முன்னே கண்டதும் நான் என்னை அறியாமலே ஐயா! என்று கதறி விட்டேன். அந்தக் கணமே என்னைப் பிடித்து இருந்த அசுத்த ஆவியும் என்னைவிட்டுப் போய் விட்டது" என்பதாக அந்த சகோதரி பேசிக் கொண்டிருந்தது.

தன்னுடைய கணவரிடம் 'நான் உங்களிடம் சொன்ன ஊழியக்காரர்கள் இவர்கள் தான்' என்று எங்களை அறிமுகப்படுத்தி வைத்தது. அங்குள்ள மக்களுக்கெல்லாம் மிகுந்த ஆச்சரியமாய் இருந்தது கர்த்தருடைய அற்புதமான செயல்களை எண்ணி கர்த்தரை மகிமைப்படுத்துகிறேன். பைத்தியமாயிருந்த இந்த சகோதரிக்கு இந்த அற்புத சுகம் எப்படிக் கிடைத்தது? ஊழியர்கள் இன்னமும் ஜெபிக்க கூட செய்யவில்லையே என்று வந்திருந்த எல்லாரும் ஆச்சரியப்பட்டு காரியங்களைக் கவனித்தார்கள்.

அந்நாட்களில் "பிணியாளிகளைப் படுக்கையின் மேலும், கட்டில்களின் மேலும் கிடத்தி, பேதுரு நடந்து போகையில் அவனுடைய நிழலாகிலும் அவர்களில் சிலர் மேல் படும்படிக்கு, அவர்களை வெளியே வீதிகளில் கொண்டு வந்து வைத்தார்கள்" (அப் 5 : 15) என்ற வேத வாக்கியத்தின்படியே கர்த்தர் இந்நாட்களிலும் கிரியை செய்து வருவதை எண்ணி கர்த்தரை ஸ்துதிக்கிறேன். இதற்கு ஆதாரமாக அண்மையில் நடந்த ஒரு சம்பவத்தையும் குறிப்பிட விரும்புகிறேன். நெல்லை மாவட்டத்தில் கள்ளிகுளம் என்ற ஊரில் கல்லூரி ஒன்று உள்ளது. வைத்தாறு அருகேயிருந்து இந்தக் கல்லூரியில் முதலா

மாண்டு படிக்கும் மாணவர் ஒருவர் அசுத்த ஆவியினால் தாக்கப்பட்டு மிகவும் கஷ்டப்பட்டு கல்லூரியில் வகுப்பு நேரங்களில் மிகுந்த கலாட்டா செய்து, படிக்க முடியாது வீட்டுக்கு அனுப்பப்பட வேண்டிய தும் நிலையில் இருந்தவர். நமது சபை விசுவாசி ஒருவர் ஒரு பரிசுத்த ஆராதனையின் போது அருகேயிருக்கும் மகிழ்ச்சிபுரம் சபைக்கு இவரை அழைத்துக் கொண்டு வந்தார். நாங்கள் அன்றையதினம் வள்ளியூரிலிருந்து மகிழ்ச்சிபுரம் சபைக்கு ஆராதனை நடத்தும்படி காலை 10 மணியளவில் அங்கு போனோம். இந்த சகோதரன் யார்? எப்படிப் பட்டவர் என்பதை நாங்கள் அறியோம். நாங்கள் ஆலயத்திற்குள் பிரவேசித்து, அந்த சகோதரனைத் தாண்டி எங்கள் இருக்கைக்குச் சென்றோம். அந்நேரத்தில் அந்த சகோதரனிடம் இருந்த அசுத்த ஆவி அவனைவிட்டு விலகிச் சென்றதை அந்த சகோதரன் உணர்ந்து, பின்னர் ஆராதனை முடிந்த பிறகு தன்னுடைய அனுபவங்களைக் கூறினார். தேவன் தம்முடைய சித்தத்தை இன்றைக்கும் நிறைவேற்றிக் கொண்டே இருக்கிறார். என்பதை அறிந்து என் தேவனை மகிமைப்படுத்துகிறேன். மேற்படி சகோதரன் இப்பொழுது பரிசுத்த ஆவியின் அபிஷேகம் பெற்று பிதா, குமாரன், பரிசுத்தாவியின் நாமத்தினாலே ஞானஸ்நானமும் பெற்று கல்லூரியில் ஒரு சாட்சியாய் ஜீவித்துவருகிறார்.

(தொடரும்)

Pastor S. Sundarraj
Vallioor.

---

"...அந்த ஆவியினாலே ஒருவனுக்கு அற்புதங்களை செய்யும் சக்தியும் பகிர்ந்து கொடுக்கிறார்."

1 கொரி. 12 : 8–11

---

## THE KEY POWER OF THE CHURCH

(continuation of the previous issue)

As soon as you repent, believing Lord Jesus and come to the church and take baptism, your sins will be forgiven. You will be washed in and out. You will be saved (Acts 2 : 38, 22 : 16; Mk. 16 : 16). Hear not unto the men who had given up the words and teach their own immagination. Give ear to the word of God, which is going to judge. He that rejects me and receives not my words, has one that judges him; the word that I have spoken the same shall judge him in the last day (Jn. 12 : 48). The blood of Jesus is able to cleanse all the sins (I Jn. 1 : 7).

Hence the Church which has the key power is the true church. Even in the Roman Catholic Church, the confession was brought into practice only in 13-th century, not from beginning. This doctrine was in the earlier church. We received this doctrine again from Jesus Christ and preach unto you on the basis of the word of God. Is it the true church with which you keep company? Do you have an apostle who has the authority to forgive sins? Have you been made free from all sins?

Be it known unto you therefore men and brethren that through New Jerusalem is preached unto you the forgiveness if sins in His name (Acts 13 : 38).

The church has the authority to forgive sins. This is the key power of the church. Jesus himself commanded (Acts 1 : 1 ; Jn. 20 : 23).

# THE METHOD OF CONFESSING SINS

He that covers his sins shall not prosper, but whoso confesses and forsakes them shall have mercy-Prov. 28 : 13.

The christian world has somany views about the confession of sin. But let us view through the angle, which the Bible directs. The major human weakness is neglecting the important thing for men. First of all let us see, what the word confession mean. Confession means declaring the things openly. Writting a matter and publishing is also a type of confession. Praying quietly can never be counted as confession. Either in old testament or in new testament the scripture doesn't agree that prayer is a confession.

The prayer "Forgive us our debts as we forgive our debtor" in the Lord's prayer, is the common prayer, which is being done for the forgiveness of sins. This is something like. Daniel, Nehemiah and Ezra, the priest and the scribe, did who involved themselves as one among the people prayed and confessed the sins of the people as if they themselves have sinned, though nowhere mentioned that they have sinned (Dan. 9 : 3-19; Neh. 1 ch.; Ezra 9 : 1 ; 10 : 1).

If any man, having transgressed any of the commandments of God, come to an understanding, that he has committed a sin, he must confess that what he has done is sin, and atonement must be done for him. The priest will sacrifice for himand atonement shall be made for him (Lev. 5 : 1-6; Num. 5 : 5-7).

One more method of confessing the sins is in the old testament which is mentioned in II Chro. 7 : 14. That is, If my people who are called by my name, shall humble themselves, and pray and seek my face and turn from their wicked ways, then will I hear from heaven and will forgive their sins and will heal their land.

According to this way of confession, people who returned from their captivity, left their sins and confessed (Neh. 9 : 1-3).

There are christian groups which never forsake their sins, confess every week that they had been like the sheep which went astrp. They overlook the word **"If they turn from their wicked ways"** mentioned in II Chro. 7 : 14. Moreover those who pray in this manner shall never forsake their sins and be saved.

Therefore God has shown a highway in the new testament. There are more than four hundred and fifty passages in the new testament linking the word confession. But none of them mean praying secretly to God is confession.

St. Peter said, "You are the christ, the son of the living God." This is the first christian confession (Mt. 16 : 16). The minister of candace declared that, "I believe that Jesus Christ is the son of God" (Acts 8 : 37). This is a confession.

Jesus said unto Pilate, "You say that I am a king. To this end was I born, and for this cause came I unto the world, that I should bear witness unto the truth. Every one that is of the truth hears my voice" (Jn. 18 : 37). The Bible says what Jesus did is a good confession (I Tim. 6 :14).

The Scripture says, Speaking about Jesus before men without shame is confession (Mt. 10 : 32).

People told their sins unto John the Baptist and asked of his counsel. The scripture clearly mean this is the confession of sins. Then went out to him Jerusalem and all Judea and all the region round about the Jordan and were baptized by him in Jordan, confessing their sins (Mt. 3 : 5, 6). Therefore the people who came forward to be baptized of him, asked for his counsel saying what shall we do? (Lk. 3 : 7-14).

The sins of those who confess thus and be baptized are forgiven and they enter into the Kingdom of God (Mt. 21 : 21-32). This is the baptism which Jesus, apostles and others received, which was given for the remission of sins. This is God's counsel. The sins of them that received

this type of baptism were forgiven. To be forgiven of the sin which is continiously striving with us and cleansed, We should confess our sins, for praying alone is not sufficient. If we confess like this, he is faithful and just to forgive us our sins and to cleanse us from all unrighteousness (Jn. 1 : 9).

Confessing in midst of the church or before the 'saint is confessing before God (Josh. 7 : 19; II Sam. 12 : 13).

If a believer commits an error, he should confess either in the midst of the church (Acts 19 : 18) or in the presence of the saint (Acts 5 : 1-10; James 5 : 16, 14, 15) and forsake the sin. Those who have not repented and do not have the mind to forsake the sin, need not confess. Jesus Christ, the head of the church has given authority to the apostles to forgive the sins of those who confess like this(Jn 20 : 23).The apostles have the power to give this authority to suitable persons (Acts 10 : 42). Those who sanctify in this manner and take part in Lord's table without fail will be sanctified and prepare themselves for the Lord's coming. If we walk in the light as he is in the light, we have fellowship one with another and the blood of Jesus Christ his son, cleanse us from all sin.

He took the cup and gave thanks and gave it to them saying, Drink ye all of it, for this is my blood of the new testament, which is shed for many for the remission of sins. Do this in remembra nce of me till I come (I Jn. 1 : 7; Mt 26 : 27, 28; I Cor 11 : 23-26).

Therefore confessing before men with the mouth is the confession (Rom. 10 : 9, 10; Mt. 10 : 32). Praying is not confession. Confess your sins and forsake it Don't be satisfied with repenting and praying. God shall bless you. Otherwise you will not get the experience of being freed from the sins (I Jn. 3 : 2, 3). Your sin will find you out (Num. 32 : 23).

"...Joshua said unto A'chan, My son, I pray thee, glory to the LORD God of Israel, and make confession unto him; and tell me now what thou hast done; hide it not from me"

Josh. 7 : 19

# STATEMENT OF OWNERSHIP

## FORM IV (SEE RULE 8)

| | | |
|---|---|---|
| 1. Place of Publication | : | 7, TRILOKSINGH CHAWL, JERIMERI, BOMBAY-400072. |
| 2. Periodicity of its Publication | : | MONTHLY |
| 3. Printer's Name :<br>4. Publisher's Name :<br>5. Editor's Name : | } | CHIEF PASTOR N. LAZAR |
| (Whether Citizen of India?) | : | YES |
| Address | : | 7, TRILOKSINGH CHAWL, JERIMERI SAKINAKA (P. O). BOMBAY-400072. |
| 6. Names and addresses of individuals who own the newspaper and partners or shareholders holding more than one percent of the total Capital. | | 'NEW JERUSALEM CHURCH' 7, TRILOK SINGH CHAWL, JERIMERI, SAKINAKA (P. O), BOMBAY-400072. |

I, Chief Pastor N. LAZAR hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

Date : 28-2-85

Chief Pastor N. LAZAR
Editor/Publisher/Printer
PUDHIYA YERUSALEM CHEIDHI.

# புதிய எருசலேம் செய்தி

# PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் - 16 ★ APRIL 1985




"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ, நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள்.... விழித்திருங்கள்...உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லோருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்..."

மாற்கு 13 : 35-37

**EDITOR: CHIEF PASTOR N. LAZAR**

BOMBAY, INDIA

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லோரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒருமனப்பட்டு கிறிஸ்துவுக்கேற்பான பூரண வளர்ச்சியடையும் படியாகவும் தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய்க் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும்; சபையானது வஞ்சக போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும் படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது.

(எபே.4:11-16)

## இதழின் உள்ளே



27-3-1985 அன்று வள்ளியூரில் Chief Pastor N. ஜாய் அவர்கள் தலைமையில் சகோதரன் K. சந்திரனுக்கும் சகோதரி பரிமளாதேவிக்கும் பரிசுத்த விவாகம் நடந்தது. அநேக தேவனுடைய ஊழியர்களும், தேவ ஜனங்களும் கலந்து மணமக்களை ஆசீர்வதித்தார்கள்.

# ஆசிரியர் உரை

கிறிஸ்தவ மார்க்கம் பேச்சிலே அல்ல, பெலத்திலே இருக்கிறது. ஒரு கிறிஸ்தவன் என்ன பிரசங்கிக்கிறான், எழுதுகிறான் என்பதை வைத்தல்ல; அவன் என்ன செய்கிறான், எப்படி ஜீவிக்கிறான் என்பதை வைத்தே அவனுடைய கிறிஸ்தவ பக்தி அளக்கப்படுகிறது, தீர்மானிக்கப்படுகிறது. ஆசிரியர்கள் சம்பளத்திற்காக வேலை செய்கிற மனிதர்களாயிருக்கலாம் அல்லது நாட்டின் எதிர்கால திறமையான தலைவர்களை, நல்லவர்களை, அறிவாளிகளை, ஒழுக்கமுள்ளவர்களை, பண்பாடுள்ளவர்களை உருவாக்கும் சிருஷ்டி கர்த்தாக்களாக, ஆலோசகர்களாக சிறக்கலாம். பேச்சொன்று செயல்பாடொன்றாக போலியாக ஆசிரியர்கள் காணப்பட்டால் அவரைப் பார்க்கிற மாணவர்களுக்கு 'சொல்லொன்று, செயலொன்று' என்று கபட நாடக உலகமே கருத்தில் பதியும். ஆகவே மாணவர்களும் தங்களை அத்தகைய ஒரு கபட உலகத்திற்காகவே தயார் செய்து கொள்ளுவார்கள். ஆகவே எழுத்தறிவித்தவன் இறைவன் ஆவான் என்று எழுத்தறிவிப்பவனை உயர்த்திப் பேசுகிறது உலகம். அப்படியே தேவன் தமது ஊழியர்களை மேய்ப்பர்களைப் பற்றி மக்கள் பின்பற்றத்தக்க விசுவாசம், நடக்கையுள்ளவர்களாயும் மாதிரிகளாகவும் இருக்க வேண்டும் என்று எதிர்பார்க்கிறார். போலிகள் மிகுந்துள்ள இக்காலத்தில் மக்களும் ஒரு போலியான பக்தியுள்ளவர்களாகக் காணப்படுகிறார்கள். சக்தியில்லாதவர்களாக, வல்லமையில்லாதவர்களாக, தெளிவில்லாதவர்களாக, அறிவில்லாதவர்களாகக் காணப்படுவதற்கு காரணம் கிறிஸ்தவ பிரசங்கிகளல்லவா. 'பிரசங்கியே உன் பிரசங்கத்தைக் காட்டிலும் உன் நடக்கை எங்கள் செவிகளில் தொனிப்பாய்க் கேட்கிறது' என்று வாக்கு ஒன்றுண்டு. மனிதனைப் பார்க்காதிருங்கள் என்று பிரசங்கிக்கிற பிரசங்கிகளைக் குறித்து எச்சரிக்கையாயிருங்கள். "ஜனங்கள் கர்த்தரிடத்திலும் அவருடைய ஊழியக்காரனாகிய மோசேயினிடத்திலும் விசுவாசம் வைத்தார்கள்". தேவ ஊழியனே! நீ வெறும் மனிதனா? இறைவனோடுசேர்ந்துகிறிஸ்துவை உருவாக்குகிறவனும், ஆலோசகனும் வழிகாட்டியுமாயிருக்கிறாயா? உலக ஆசிரியனைக் காட்டிலும், தெய்வீக ஆசிரியன் மிகவும் உயர்ந்தவனும் பொறுப்புள்ளவனும், உத்திரவாதியுமாகும். இவைகளை நடப்பிக்க தகுதியுள்ளவன் யார்? கர்த்தர் தமது இருதயத்திற்கு ஏற்ற மேய்ப்பர்களைத் தேடுகிறார். வாருங்கள் புதிய கிறிஸ்தவ சகாப்தத்தை உருவாக்குவோம். கர்த்தர் நம் துணை.

கிறிஸ்துவுக்குள்,

Chief Pastor N. LAZAR

# நீ என் சொல்லுக்கு கீழ்ப்படிந்த படியினால்

பொதுவாக தேவ ஆசீர்வாதங்களெல்லாம் கீழ்ப்படிதலின் மூலமாய் நிபந்தனைகளை நிறைவேற்றுவதன் மூலமாகவே சுதந்தரித்துக் கொள்ளமுடியும். கிறிஸ்தவ வாழ்க்கை ஒரு ஒப்பந்த வாழ்க்கை. ஒப்பந்தத்தின்படி இருசாராரும் நடந்து கொள்வதின் மூலமே ஒருவருக்கொருவர் கொடுத்த வாக்கை நிறைவேற்ற முடியும். மேலே குறிப்பிட்ட வாக்கியத்தில் தேவன் என்ன சொல்லுகிறார் நீ காட்சி கண்டதால், அற்புத அடையாளம் செய்ததால், பெரிய ஊழியம் செய்ததால் அதையோ, இதையோ செய்ததினால் என்று தேவன் சொல்லாமல் "நீ என் சொல்லுக்கு கீழ்ப்படிந்து இந்த காரியத்தைச் செய்தபடியினால் நான் உன்னை ஆசீர்வதிக்கவே ஆசீர்வதித்து, உன் சந்ததியை வானத்தின் நட்சத்திரங்கள் போலவும், கடற்கரை மணலைப் போலவும் பெருகவே பெருகப்பண்ணுவேன் என்றும், உன் சந்ததியார் தங்கள் சத்துருக்களின் வாசல்களைச் சுதந்தரித்துக் கொள்வார்கள் என்றும், நீ என் சொல்லுக்குக் கீழ்ப்படிந்தபடியினால் உன் சந்ததிக்குள் பூமியிலுள்ள சகல ஜாதிகளும் ஆசீர்வதிக்கப்படும் என்றும் என் பேரில் ஆணையிட்டேன் என்று கர்த்தர் சொல்லுகிறார் என்றார்" (ஆதி. 22: 16—18).

ஒப்பந்தத்தில் தேவன் சார்பாக "...நான் உனக்கு விதிக்கிற உன் தேவனாகிய கர்த்தரின் கட்டளைகளைக்கைக்கொள்ளவும், அவைகளின்படி நடக்கவும் அவைகளுக்குச் செவி கொடுத்து வந்தால் நான் இப்பொழுது சொல்லப்படும் ஆசீர்வாதங்களெல்லாம் உன்மேல் வந்து உனக்குப் பலிக்கும் என்கிறார்" (உபா. 28 : 1, 2, 14). இஸ்ரவேலின் சார்பாக : கர்த்தர் சொன்னபடியெல்லாம் கீழ்ப்படிந்து நடப்போம், செய்வோம் என்றார்கள் (யாத். 24 : 7; 19 : 8 ; 24 : 3)

1. ஆபிரகாமுக்கு தேவன் ஒரு கட்டளை கொடுத்தார் நீ உன் ஏக சுதனும், நேசகுமாரனுமாகிய ஈசாக்கை நான் காண்பிக்கிற இடத்தில் தகனபலியிடு என்று. அதற்கு எந்த ஒரு விளக்கமும் கேட்காமல் ஆபிரகாம் தேவனுக்குக் கீழ்ப்படிந்தார் (ஆதி. 22 : 1—10). நீ என் சொல்லுக்கு கீழ்ப்படிந்தபடியினால் (ஆதி. 23 : 18) என்கிறார் தேவன. நமக்கும் தேவன் ஒரு கட்டளை கொடுக்கிறார் "விசுவாசமுள்ளவனாகி ஞானஸ்நானம் பெற்றவன் இரட்சிக்கப்படுவான்" (மாற் 16 : 16). இங்கே நாம் கீழ்ப்படிய வேண்டும். அது எப்படி? ஏன் இப்படியும் முடியாதா? என்பது அநேகருடைய கேள்வி. சிலருக்கு அது தேவையில்லை என்று மொத்தத்தில் ஆசீர்வாதம் வேண்டும். ஆனால் சிலதை விடவேண்டியிருப்பதாலும், தியாகம் பண்ணவேண்டியிருப்பதாலும் ஞானஸ்நானம் பெற அநேகருக்கு மனமில்லை. ஆனால் இங்கு தேவன் சொல்லுகிறார் நீ என் சொல்லுக்குக் கீழ்ப்படிந்தபடியினால் (ஆதி. 22 : 18) காட்சி கண்டதால், நான் பேசினதால் என்றல்ல. நீ என் சொல்லுக்கு கீழ்ப்படிந்தபடியினால் என்கிறார் தேவன்.

கீழ்ப்படிதலின் சிகரமாகிய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவும் இப்படி எல்லா நீதியையும் நிறைவேற்ற வேண்டுமே என்று சொல்லி கீழ்ப்படிந்து ஞானஸ்நானம் பெற்றதால் "இவர் என்னுடைய நேசகுமாரன் இவரில் பிரியமாயிருக்கிறேன்" என்ற பிதாவின் ஆசீர்வாத சத்தம் உண்டாயிற்று (மத். 3 : 17). விசுவாசமுள்ளவனாகி ஞானஸ்நானம் பெற்றவன் இரட்சிக்கப்படுவான். இரட்சிப்பு கீழ்ப்படிதலிலே ஆரம்பமாகிறது, கீழ்ப்படிதலிலே வளருகிறது, கீழ்ப்படிதலினாலே பூரணப்படுகிறது. கிறிஸ்தவ ஜீவியத்தில் மரண பரியந்தம் கீழ்ப்படிதல் வேண்டும் (பிலி. 2 : 5—8 : எபி 5 : 8 ; பிலி. 2 : 12).

2. நீங்கள் கிறிஸ்துவுடனே மரித்து உயிர்தெழுந்ததுண்டானால் கிறிஸ்தவ ஜீவியத்தில் அடுத்தபடி மரித்து உயிர்தெழுதலாகும். இவ்வுலகத்திற்கு, மாம்சத்திற்கு பாவத்துக்கு மரித்துயிர்த்தவர்கள் மேலானதைத் தேடுவார்கள். அவருக்குள் (கிறிஸ்துவுக்குள்) ஜீவிக்கும்படி உயிர்த்தெழுந்திருக்கிறார்கள் (கொலோ. 3 : 1—3).

அன்பு, நீதி, பரிசுத்தம், இரக்கம், தயவு, தாழ்மை, சேவை, தியாகம் நியாயத்தை தேடுங்கள். தேவனுடைய சித்தம் எது, தேவனுக்குப் பிரியமானது எது அதையே உங்கள் வாழ்வில் தேடுங்கள். மரித்ததுண்டானால் எழுந்துமிருப்பீர்கள். எழுந்து தேவனுக்கென்று தேவனுக்காக வாழும்படி எழுந்திருக்கிறோம் (கலா. 2 : 20). பொதுவாக கிறிஸ்தவர்கள் எதற்காக வாழுகிறோம் என்பதை அடிக்கடி மறந்து விடுகிறார்கள். தேவனுக்காக வாழுகிறோம், தேவனுக்கென்று வாழுகிறோம் என்பதை மறந்துவிடுகிறார்கள். பூமிக்குரியவைகளையல்ல மேலானவைகளை நாடவேண்டும் தேடவேண்டும் (கொலோ. 3 : 1,2).

3. பழைய மனுஷனையும் அவன் செய்கைகளையும் களைந்து போடவேண்டும். புதிய மனுஷனாகிய கிறிஸ்துவைத் தரித்துக் கொண்டு அவருடைய சாயலில் வளர வேண்டும்.

தேவ சாயலென்றால் எது? மெய்யான நீதியும், பரிசுத்தமும், பூரண அறிவடைதலுமாகும் (எபேசி. 4 : 23, 24; கொலோ 3:10). தேவனுடைய குமாரனுடைய சாயலுக்கு ஒப்பாயிருக்கும்படி தேவன் நம்மைக் குறித்து திட்டமிட்டிருக்கிறார் அதை நாம் நோக்கமாய்க் கொண்டு வளர வேண்டும். மேலானவைகளைத் தேடுங்கள் (ரோம. 8 : 29; கொலோ 3 : 1, 2). கர்த்தருடைய சித்தம் இன்னது என்று உணர்ந்து கொள்ளுங்கள் ஆவியினால் நிறைந்து கர்த்தரை துதியுங்கள் (எபேசி. 5 : 10, 18, 19) எல்லாவற்றிற்காகவும் கர்த்தரைத் துதியுங்கள். எதைச் செய்தாலும் இயேசுவின் நாமத்தில் செய்து பிதாவாகிய தேவனை ஸ்தோத்தரித்து ஒருவருக்கொருவர் கீழ்ப்படிந்திருங்கள்.

மனைவிகள் புருஷருக்கும், சபை கிறிஸ்துவுக்கும், பிள்ளைகள் பெற்றோருக்கும், வேலைக்காரர் எஜமானுக்கும், எஜமான்கள் பரலோக எஜமானுக்கும், வாலிபர் சபையின் மூப்பருக்கும் கீழ்ப்படியுங்கள் (எபேசி. 5 : 21—6 : 9; I பேது. 5:5) உயர்த்தப்படுவீர்கள். மேல்படிக்கு வழி கீழ்ப்படி தான்.

கர்த்தருடைய வார்த்தைக்கு கீழ்ப்படியுங்கள்.

---

"...பலியைப் பார்க்கிலும் கீழ்ப்படிதலும், ஆட்டுக் கடாக்களின் நிணத்தைப் பார்க்கிலும் செவி கொடுத்தலும் உத்தமம்"
-I சாமு. 15 : 22

---

கவிசேஷம்

# ஓர் ஆள்(ம்) தத்துவம்

ஒரு குழந்தையை ஒரு மனிதன் அன்போடு தூக்கி வைத்திருந்தான். அந்த குழந்தை தன்னுடைய விளையாட்டு வண்டியால் அவனுடைய முகத்தில் அடித்ததால், வண்டியிலுள்ள ஆணி குத்தி அவனுக்கு காயமுண்டாயிற்று, மிகவும் வலித்தது. சில நாட்களில் காயம் சுகமாகி இல்லாமல் போய் விட்டது. பகைவன் ஒருவன், பலர் முன்னிலையில் அதே மனிதனை அடித்து, தன் நகத்தினால் அவனுக்கு காயமுண்டாகச் செய்தான். அடிபட்டு அவமானம் அடைந்தவனுக்கு சரீரத்தில் மிகவும் வலித்தது. அதை விட அவனுள் அதிக வலி உண்டாயிற்று. சில நாட்களில் சரீரத்தின் காயங்கள் குணமாகி வலி இல்லாமல் போய் விட்டது. ஆனால் உள் ஏற்பட்ட வலியோ மாறவே இல்லை. பல ஆண்டுகளாகியும் அது வலித்துக் கொண்டே இருந்தது. ஒரு மனிதன் இரண்டு நிலையில் இருக்கிறான். உள்ளான மனிதன் என்றும், புறம்பான மனிதன் என்றும் இரு விதமாய் இருக்கிறான்.

என்னுடைய கால்களை ஒருவன் வெட்டி விட்டான். ஆனாலும் நான் இருக்கிறேன். ஒருவன் என் கைகளையும் வெட்டிவிட்டான். ஆனாலும் நான் இருக்கிறேன். என்னுடைய

சரீர உறுப்புகள் இல்லாமல் சரீரம் வேற்று ரூபம் கொண்ட போதிலும் நான் என்கிற உள்ளான மனிதனில் எந்த வேற்றுமையும் இல்லை. முன்பு எப்படி இருந்தேனோ அப்படியே நான் இருக்கிறேன். இப்படியே என் சரீரம் முழுவதும் இல்லாமல் போனாலும் நான் இருப்பேன். பறவை கூட்டில் தங்கி இருக்கிறது. கூடு கலைக்கப்பட்டாலும் பறவை கூட்டுக்கு வெளியே இருக்கிறது. அப்படியே உள்ளான மனிதனின் கூடாகிய புறம்பான மனிதன் அழிந்து போனாலும் உள்ளான மனிதன் என்றும் இருப்பான். மானிட ஆன்மா அழிந்து போவதில்லை.

மனிதனுக்கு பசி உண்டாகிறது. ஆகவே பசியை போக்கவல்ல உணவுப் பொருள் உண்டு என்பது நிச்சயம். பசி எடுக்கும் போது சாப்பிடாமல் இனிமையான இசையைக் கேட்பதாலோ, அல்லது வேறு அலுவல்களில் ஈடுபடுவதாலோ பசியை சிறிது நேரம் மறக்கலாம். ஆனால் போக்க முடியாது. அப்படியே தாகம் எடுப்பதால் தாகத்தை தீர்க்கவல்ல தண்ணீர் உண்டு என்று அறியலாம், தாகத்தை மாற்றவல்ல தண்ணீரையல்லாமல் வேறொரு வஸ்து இல்லை. புறம்பான மனிதனுக்கு பசியும் தாகமும் எடுப்பது போல் உள்ளான மனிதனிலும் பசியும் தாகமும் உண்டாகிறது.

ஒரு மனிதன் நன்றாக புசித்து, தாகத்தைத் தீர்த்து திருப்தி அடைந்த பின்னும் பொழுது போக வில்லையே அதற்கு என்ன செய்யலாம் என்று பல்வேறு செயல்களில் ஈடுபடுகிறான். சினிமா பார்க்கிறான், கதை புத்தகங்களைப் படிக்கிறான், சிகரெட் பிடிக்கிறான், ஊர் சுற்ற போகிறான், கீழ்த்தரமான தகாத செயல்களில் ஈடுபடுகிறான், மதுபானம் பண்ணுகிறான், வேசித்தனம் செய்கிறான், உடற்பயிற்சிக்கு மட்டுமின்றி பொழுது போக்கிற்காய் விளையாடுகிறான், சூதாடுகிறான் அல்லது வீண் கற்பனைகளைச் செய்கிறான், பெருமையானவைகளையும் அசிங்கமானவைகளையும் சிந்திக்கிறான். இப்படி பல பாவ இன்பங்களுக்குள் ஈடுபட்டு உள்ளான மனிதனின் அந்த பசியையும், தாகத்தை தீர்க்க முற்படுகிறான். ஆனாலும் திருப்தி அடைய முடியவில்லை. காரணம் என்னவெனில் இவைகள் எல்லாம் சரியான (appropriate) ஆகாரமன்று. ஆகவேதான் சிற்றின்பத்தை அனுபவிக்கிறவன் அனுபவிக்கும் போதுள்ள இன்பத்தை முடிந்ததும் இழந்தவனைப் போல் காணப்படுகிறானேயன்றி திருப்தியடைவதில்லை. திருப்தியடையாமல் உடனே வேறொன்றை நாடுகின்றான். வயிறு நிறைய சாப்பிட்டு திருப்தி அடைகிறவன் உண்பதற்கு மேலும் தேவைப்படாமல் தேனையும் வேண்டாமென்பான்.

இப்படி உள்ளான மனுஷனில் பசி, தாகம் ஏற்படுவதால் இதையும் தீர்க்கவல்ல வஸ்து உண்டு என்பது நிச்சயமல்லவா? அது என்ன? "நீங்கள் அப்பமல்லாததற்காகப் பணத்தையும், திருப்தி செய்யாத பொருளுக்காக உங்கள் பிரயாசத்தையும் செலவழிப்பானேன்? நீங்கள் எனக்குக் கவனமாய்ச் செவி கொடுத்து நலமானதைச் சாப்பிடுங்கள். அப்பொழுது உங்கள் ஆத்துமா (உள்ளான மனிதன்) கொழுப்பான பதார்த்தத்தினால் மகிழ்ச்சியாகும். வாருங்கள், பணமுமின்றி விலையுமின்றி வாங்கிச் சாப்பிடுங்கள்" (ஏசா 55 : 2, 1) என்று இறைவன் அழைக்கிறார்.

இயேசு சொன்னார்: ஜீவ அப்பம் நானே. என்னிடத்தில் வருகிறவன் ஒருக்காலும் பசி அடையமாட்டான். என்னிடத்தில் விசுவாசமாயிருக்கிறவன் ஒருக்காலும் தாகமடைய மாட்டான் என்று (யோவா 6 : 35). ஓ! பசியாய் இருக்கிறவர்களே ஜீவ அப்பமாகிய இயேசுவை (அவரின் வார்த்தைக்கு) சாப்பிடுங்கள் (கீழ்ப்படியுங்கள்.) உள்ளான மனிதனின் பசியை ஆற்றுங்கள்.

ஓ! தாகமாயிருக்கிறவர்களே, ஜீவத் தண்ணீர் அண்டை வாருங்கள், இயேசுவை விசுவாசியுங்கள், உங்கள் தாகத்தை தீர்க்க வல்ல ஜீவத்தண்ணீரை (பரிசுத்தாவியைப்) பெற்றுக் கொள்ளுங்கள். உள்ளான மனிதனின் தாகத்தை தீர்த்துக் கொள்ளுங்கள். நீங்களே வாழ்க்கையில் வெற்றியடைந்தவர்கள்.

இயேசுவண்டை வாருங்கள்! வந்து பாருங்கள்!!

"...ஒருவனுக்கு எவ்வளவு திரளான ஆஸ்தி இருந்தாலும் அது அவனுக்கு ஜீவன் அல்ல"

லூக். 12 : 15

# இயேசு கிறிஸ்துவின் பாடு மரணங்கள்

இயேசு கிறிஸ்துவைப் பற்றி 500 வருஷமாக சொல்லப்பட்ட 24 தீர்க்கதரிசனங்கள் 24 மணி நேரத்தில் நிறைவேறியது.

| | தீர்க்கதரிசனம் | | நிறைவேறுதல் |
|---|---|---|---|
| 1 | சகரியா 11 : 12 | முப்பது வெள்ளிக்காசுக்கு விற்கப்படல் | மத். 26 : 14, 15 |
| 2 | சங் 41 : 9 ; 55 : 12 – 14 | சிநேகிதனால் காட்டிக் கொடுக்கப்படல் | மத். 26 : 49, 50 |
| 3 | சகரியா 11 : 13 | பணத்தைக் குயவனிடம் எறிந்து விடல் | மத். 27 : 5, 7, 9, 10 |
| 4 | சகரி 13 : 7 | சீடர்களால் கைவிடப்படல் | மத். 26 : 56 |
| 5 | சங் 35 : 11 | கள்ளச் சாட்சிகளால் குற்றஞ்சாட்டப்படல் | மத். 26 : 59, 60 |
| 6 | ஏசா. 50 : 6 | அடித்து துப்பப் படல் | மத். 26 : 67 |
| 7 | ஏசா. 53 : 7 | வாய் பேசாதிருத்தல் | மத். 27 : 12, 14 |
| 8 | ஏசா. 53 : 5 | காயப்பட்டு நொறுக்கப்படல் | மத். 27 : 26, 29 |
| 9 | சங். 22 : 16 | கைகளும் கால்களும் குத்தப்படல் | லூக். 23 : 33 |
| 10 | ஏசா. 53 : 12 | கள்ளரோடு அறையப்படல் | மாற். 15 : 27 |
| 11 | ஏசா. 53 : 12 | துன்பப்படுத்துகிறவர்களுக்காக ஜெபித்தல் | லூக். 23 : 34 |
| 12 | சங். 109 : 25 | தலையைத் துலுக்கல் | மத் 27 : 39 |
| 13 | சங். 22 : 8 | ஜனங்களால் பரியாசம் பண்ணப்படல் | மத். 27 : 41, 43. |
| 14 | சங். 22 : 17 | ஜனங்களால் ஆச்சரியப்படல் | லூக். 23 : 35 |
| 15 | சங். 22 : 18 | வஸ்திரம் பங்கிட்டு சீட்டுப் போடப்படல் | யோவா 19 : 23, 24 |
| 16 | சங் 22 : 1 | கைவிடப்பட்டு புலம்பல் | மத். 27 : 46 |
| 17 | சங். 69 : 21 | காடி கொடுக்கப்படல் | யோவா 19 : 28, 29 |
| 18 | சங். 31 : 5 | தேவனுக்குத் தன்னை ஒப்புவித்தல் | லூக். 23 : 46 |
| 19 | சங். 31 : 11 | சிநேகிதர் தூரத்தில் நிற்குதல் | லூக். 23 : 49 |
| 20 | சங். 34 : 20 | எலும்பு முறிவு படாதிருத்தல் | யோவா 19 : 34 |
| 21 | சங் 22 : 14 | இருதயம் உடைதல் | யோவா 19 : 34 |
| 22 | சக. 12 : 10 | விலா குத்தப்படல் | யோவா 19 : 34-37 |
| 23 | ஆமோஸ் 8 : 9 | பூமியை இருள் சூழல் | மத். 27 : 45 |
| 24 | ஏசா. 53 : 9 | ஐசுவரியவான் கல்லறையில் அடக்கம் | மத். 27 : 57 - 60 |

# கர்த்தர் சிநேகித்த யாக்கோபு

கர்த்தர் யாக்கோபை சிநேகித்து, ஏசாவை வெறுத்தேன் என்கிறார் (மல்கி 1: 2, 3; ரோம 9: 13). தேவன் அநீதி உள்ளவரல்லவே. அவரிடத்தில் பட்சபாதம் கிடையாதே. அப்படியிருக்க ஒருவனை சிநேகித்து ஒருவனை வெறுக்க வேண்டிய அவசியம் என்ன? தேவன் ஆதி முதல் அந்தம் வரை அறிந்தவராயிருக்கிறார். ஒரு மனிதன் தாயின் கர்ப்பத்தில் உருவாகிறதற்கு முன்பே அவனது பிறப்பு முதல் இறப்பு வரை அவன் எப்படிப்பட்டவன், என்ன என்ன செய்யப் போகிறான் என்பதை தம்முடைய முன் அறிவின் படி அறிகிறார். ஏசாவின் சந்ததியாரைக் குறித்தோ அவர்கள் துன்மார்க்கத்தின் எல்லை என்று அறிந்து, அது கர்த்தர் என்றென்றைக்கும் சினம் வைக்கிற ஜனம் என்று சொல்லப்படுவார்கள் என்கிறார் (மல்கி 1 : 4) ஏசாவை முன் அறிந்த தேவன் அவனை வெறுத்தார். ஆனால் யாக்கோபை சிநேகித்தார். யாக்கோபை தேவன் முன் அறிந்து சிநேகித்து அவனுக்கு வாக்குத்தத்தம் பண்ணினார் (ரோமர் 9 : 11).

கிறிஸ்தவர்கள் அநேகர் யாக்கோபைக் குறித்து எத்தன், தந்திரக்காரன் இப்படியாக பலவாறு அவரைப் பற்றி குறை சொல்லி அவரை மட்டமானவராக மதிக்கிறார்கள். கர்த்தர் அவரை சிநேகித்தாரென்றால் அதற்கு காரணம் உண்டு. யாக்கோபு தேவனுக்கு பயந்தவரும், ஞானவானும், பரிசுத்தவானும், நீதிமானுமாக இருந்தவர் என்பதை அவர் வாழ்க்கை சரித்திரம் காண்பிக்கிறது.

ஆசீர்வாதத்துக்கு பாத்திரன் யாக்கோபு :-

யாக்கோபு குணசாலியும் கூடாரவாசியுமாயிருந்து, ஓர்நாள் கூழ் சமைத்துக் கொண்டிருந்தான். சீர் கெட்ட ஏசா அங்கே வயிற்றுப் பசியோட வருகிறான். யாக்கோபு சந்தர்ப்பத்தை பயன்படுத்திக் கொண்டு சேஷ்ட புத்திரபாகத்தை விற்று போட சொல்கிறான். மூடனுக்கு மகிமை எவ்வளவேனும் தகுமோ, அவன் அதன் மதிப்பை எப்படி அறிவான். பயற்றங் கூழுக்காய் ராஜ அந்தஸ்துள்ள சேஷ்ட புத்திர பாகத்தை விற்றுப் போட்டான். இங்கே யாக்கோபு வஞ்சித்தோ, ஏமாற்றியோ, திருட்டுத்தனமாகவோ சேஷ்ட புத்திர பாகத்தை வாங்கவில்லை. ஏசா சுய நினைவில் தான்செய்கிறது இன்னதென்பதை அறிந்தே செய்தான். யாக்கோபு ஆசீர்வாதத்தை சுதந்தரிக்க அசதியாயிருக்கவில்லை.

பிள்ளைகள் இன்னும் பிறவாதிருக்கும் போதே தேவனுடைய தெரிந்து கொள்ளுதலின்படி, அவருடைய தீர்மானம் : மூத்தவன் (ஏசா) இளையவனுக்கு (யாக்கோபு) ஊழியம் செய்ய வேண்டும் என்றிருந்தது, இதைக் கர்த்தர் ரெபக்காளுக்கு முன் அறிவித்திருந்தார் (ரோம 9:11,12). ஆனாலும் ஈசாக்கு தன்னுடைய சுய விருப்பத்தின்படி ஏசாவை, யாக்கோபுக்கு எஜமானாக ஏற்படுத்தும்படி அவனை ஆசீர்வதிக்க விரும்பினார். தேவன் செய்ய நினைத்ததை யார் தடை செய்ய முடியும் (யோபு 42:2). தேவன் ரெபெக்காள் மூலம் கிரியை செய்து தம்முடைய ஆலோசனையை நிறைவேற்றினார். ஏசாவைப் போல் நடித்து கண் தெரியாதிருந்த தகப்பனிடம் ஆசீர்வாதம் பெற கடந்து செல்ல யாக்கோபு பயந்தார், கண்டுபிடிக்கப்பட்டால் சாபம் வருமே என்று அஞ்சினார் (ஆதி. 27:12). அதற்கு அவன் தாய்: அப்படி சாபம் வந்தால் தன் மேல் வரட்டும் என்று சொல்லவே (ஆதி. 17:13) தாயின் ஆலோசனைக்கு உடன் பட்டார். ஆசீர்வாதத்தைப் பெற்றார் (ஆதி.27: 27-29). தேவ தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. தேவன் தம்முடைய தீர்மானத்தின்படி அழைத்த அவரால் தெரிந்து கொள்ளப் பட்டவன்மேல் குற்றம் சாட்டுகிறவன் யார், தேவனே அவனை நீதிமானாக்குகிறார் (ரோம 8:33).

லாபானுடைய வீட்டிலே யாக்கோபு உண்மையாய் உழைத்து வந்தார். யாக்கோபினிமித்தம் லாபான் விருத்தி அடைந்தான். லாபானே முன்வந்து யாக்கோபினால் தான் பெற்ற ஆசீர்வாதத்தை உணர்ந்து உனக்கு சம்பளம் என்ன வேண்

டும் என்று கேட்டு, புள்ளியும், வரியும் கறுப்புமுள்ள செம்மறியாடுகளையும் வரியும் புள்ளியுமுள்ள வெள்ளாடுகளையும் சம்பளமாக கொடுத்தான். அன்றைய தினமே யாக்கோபு அவைகளை வேறுபிரித்து தன் மந்தைக்கும் லாபானுடைய மந்தைக்கும் தன் சம்பத்துக்கும் லாபானுடைய சம்பத்துக்கும் மூன்று நாள் பிரயாணதூரம் ஏற்படுத்தினார் (ஆதி.30:27-36).

இவ்விதமாய் பெற்ற ஆசீர்வாதத்தைக் காப்பதில் யாக்கோபு கவனமுள்ள புத்திசாலியாய் இருந்தார். மேலும் கர்த்தர் சொப்பனத்தின்மூலம் யாக்கோபு விருத்தி அடையும் வழியைக் காண்பித்தார், யாக்கோபு தேவ ஆலோசனைப்படி நடந்து மேன் மேலும் விருத்தி அடைந்தார் (ஆதி.31:10, 11; 30:37-43). லாபானும், அவன் குமாரரும் பொறாமை கொண்டு இவருடைய சம்பத்தை அபகரித்துக் கொள்வார்கள் என யாக்கோபு அறிந்து (ஆதி.31:42) தேவ ஆலோசனைப்படி தன்னுடைய திரளான சம்பத்தோடே, மாமனிடம் சொல்லாமல் இரவோடிரவாக புறப்பட்டு தன் சுயதேசம் நோக்கி வந்து விட்டார். ஆசீர்வாதத்தை விரும்பி அதை சுதந்தரித்த யாக்கோபு ஏமாற்றுகிறவனிடத்தில் ஏமாறாமல் புத்திசாலித்தனமாய் நடந்து கொண்டாரே ஒழிய கபடமாகவோ, தந்திரமாகவோ, திருட்டுத்தனமாகவோ, சுகவரியவானகவில்லை. சர்ப்பத்தைப்போல் வினை உள்ளவராயிருந்து ஆசீர்வாதம் பெற்றார்.

உண்மையுள்ள உழைப்பாளி யாக்கோபு :-

தன் சகோதரன் கைக்கு தப்பி, மாமன் வீடுவந்து ஒரு விருந்தாளியாக தங்கினார் யாக்கோபு (ஆதி. 29 : 14). உறவினர் வீட்டுக்கு விருந்தாளியாக வந்த உடன் உபசரிப்பு தடபுடலாக இருக்கும். நாள் செல்லச் செல்ல சலிப்புண்டாகி எப்பொழுது ஆள் கிளம்புவான் என்று எதிர்ப்பார்ப்பார்கள். யாக்கோபு, லாபான் வீட்டில் விருந்தாளியாக தங்கினாலும் லாபான் அவன் இன்னும் தன்னோடு இருக்க விரும்பினான், காரணம் யாக்கோபு ஒன்றுமே எதிர்பார்க்காமல் சும்மா சோம்பேறியாய் இராதபடி, லாபானுக்கு பிரயோஜனமுண்டாக அந்த வீட்டில் உழைக்க ஆரம்பித்து விட்டான். லாபானுக்கோ அவரை சும்மா வேலை வாங்குகிறோமே என்று உணரும் அளவுக்கு யாக்கோபு விருந்தினர் வீட்டில் வேலை செய்தார் (ஆதி. 29 : 15).

யாக்கோபு தன் சொந்த இடத்துக்கு போக விரும்பிய போது, அவருடைய உழைப்பை அறிந்த லாபான் அவரை அனுப்ப மனமற்று தன்னிடமாய் வைத்துக் கொண்டான் (ஆதி. 30 : 27, 28). இரவு, பகலாக வெயிலிலும், குளிரிலும் விழித்திருந்து, தன்னால் இயன்ற மட்டும் தன்னுடைய வேலையைச் செய்தார் (ஆதி. 31 : 40, 6). லாபான் அநியாயமாய் நடத்தியும், இவருடைய சம்பளத்தை பத்து முறை மாற்றிய போதிலும் வேலையில் உண்மையாய் இருந்தார் (ஆதி. 31 : 39, 41). மனிதன் பார்வைக்கு ஊழியம் செய்யாமல் கர்த்தர் பார்வைக்கு ஊழியம் செய்தபடியால், இவர் எஜமான் ஏமாற்ற முயன்றும் முடியாமல் போய் கர்த்தர் லாபானிடமிருந்து சேர வேண்டியதை சேரப் பண்ணினார் (ஆதி. 31 : 9).

வேலை செய்கிறவர்கள், சம்பளம் குறைவு, நடத்தும் விதம் (Treatment) நல்லா இல்லை என்று சொல்லிக்கொண்டு செய்கிற வேலையில் உண்மையற்றவர்களாய் இருக்காமல், பார்வைக்கு ஊழியம் செய்யாமல், தேவனுக்கு பயப்படுகிறவர்களாக, தேவனுடைய உபதேசம் அலங்கரிக்கப்படத்தக்கதாக நல்லுண்மையாய் வேலை செய்தால் எவ்விதத்திலாவது கர்த்தராலே உழைப்புக்கேற்ற பலனை நிச்சயமாய் பெறுவர் (கொலோ 3 : 22, 23; தீத். 2 : 9). இஸ்ரவேல் புத்திரர்களை வேலையினால் எகிப்தியர் ஒடுக்கினார்கள். கொடுமையாய் வேலை வாங்கினார்கள். இஸ்ரவேலரின் உழைப்பை எகிப்தியர் தின்றார்கள் (யாத். 1 : 11-14). உழைப்புக்கேற்ற கூலியை இஸ்ரவேலருக்கு எகிப்தியர் கொடுக்காவிட்டாலும் எகிப்தின் சம்பத்தை கர்த்தர் அவர்கள் உழைப்புக் கேற்றபடி கொள்ளையாய் கொடுத்தார் (யாத். 12 : 35, 36). ஆகையால் உழைப்புக்கேற்ற கூலி நிச்சயமாய் உண்டென்று அறிந்து தேவனுடைய பிள்ளைகள் யாக்கோபைப் போல் உண்மையாய்

உழைப்பாளர்களாக.

**யாக்கோபு ஒரு பரிசுத்தவான் :-**

யாக்கோபு ராகேலை மனைவியாகக் விரும்பி லாபானைக் கேட்டான். லாபானும் சம்மதித்தான். பின்பு ஏழு வருஷம் அவளை அடையும்படி வேலை செய்தான். அந்த வீட்டில் தங்கி இருந்து அவள் தனக்கு எப்படியும் மனைவியாகப் போகிறாள் என்று அறிந்திருந்தும், ராகேலும் இதை அறிந்திருந்த போதிலும், யாக்கோபு அவளை தீட்டுப்படுத்தவில்லை. தனக்கு மனைவியான பின்பே அவளைச் சேர்ந்தார் (ஆதி. 29 : 21, 30). திருமணம் நிச்சயிக்கப்பட்ட போதிலும், திருமணம் முடியும் வரையிலும் அவர்கள் தம்பதிகள் அல்ல. திருமணத்திற்கு முன் இவர்கள் கூடிவந்தால் அது விபச்சாரத்திற்குச் சமம். திருமணத்திற்கு முன்பு மணமகன் மணமகளை மனைவியாக கற்பனைப் பண்ணி தன் இருதயத்தில் தகாததை சிந்தித்தாலும் அது பாவமே என்று பரிசுத்தாவியானவர் தெரிவிக்கிறார். திருமண நாள் வரையிலும் இருவரும் உயிரோடிருப்பார்கள் என்பது என்ன நிச்சயம். மற்றவர் இன்னொருவரை மணக்க நேர்ந்தால் காரியம் எப்படியாகும். ஆகவே யாக்கோபைப் போல சுத்தவானாக காத்துக் கொள்வதே மேன்மை.

**தேவ பக்தியுள்ள யாக்கோபு :-**

விக்கிரக ஆராதனைக்காரன் வீட்டிலே 20 வருஷம் இருந்த போதிலும், தன் தகப்பனுடைய தேவனையன்றி வேறு எந்த தெய்வங்களையும் யாக்கோபு ஏற்றுக் கொள்ளவே இல்லை. இந்த விஷயத்தில் மிகவும் கவனமுடையவராயிருந்தார் எனத் தெரிகிறது. லாபானும், யாக்கோபும் சேர்ந்து சாட்சியாக கற்குவியலையும், தூணையும் ஏற்படுத்தினார்கள். லாபான்: ஆபிரகாமின் தேவனும், நாகோரின் தேவனும், அவர்கள் பிதாக்களின் தேவனுமாயிருக்கிறவர் இதற்கு சாட்சி என்றான். யாக்கோபு அதற்கு ஆமென் என்று சொல்லவில்லை. நாகோரும், அவன் பிதாக்களும் தனக்கு முற்பிதாக்களாக இருந்த போதிலும், அவர்கள் விக்கிரக ஆராதனைக்காரர்களாக இருந்தார்கள். ஆகவே யாக்கோபு தன் தகப்பனாகிய ஈசாக்கின் பயபக்திக்குரியவர் மேல் ஆணையிட்டான் (ஆதி. 31 : 53). மேலும் அந்த கற்குவியலுக்கு லாபான் ஆராமிய பாஷையில் சாட்சி குவியல் என்று அர்த்தங்கொள்ளும் ஜெகர்சதூதா என்று பெயரிட்டான். ஆனால் யாக்கோபு எபிரேய பாஷையில் அதே அர்த்தமுள்ள கலெயத் என்று பெயரிட்டான் (ஆதி. 31 : 47). இவ்விதமாய் யாக்கோபு மனுஷை பிரியமாயிராமல் தன்னை வேறு பிரித்தே காண்பித்தார்.

இவ்வித உயரிய குணநியமங்களை உடையவர் என தம்முடைய முன்னறிவின்படி கர்த்தர் கண்டு அவரைத் தெரிந்து கொண்டு அவரை சிநேகித்தார். அவரிடம் அநீதி இல்லை. அவர் பரிசுத்தர்.

---

"நான் உங்களைச் சிநேகித்தேன் என்று கர்த்தர் சொல்லுகிறார்" மல். 1 : 2

---

# மோட்ச வழி

## குரு—சிஷ்ய உரையாடல்

(தொடர்ச்சி)

**இரண்டாம் கற்பனை :** எவ்விதமான விக்கிரகத்தையோ, சொருபத்தையோ உண்டாக்கவோ அவைகளை நமஸ்கரிக்கவோ, சேவிக்கவோ வேண்டாம் (யாத். 20 : 4 - 6).

இந்த கற்பனையானது ஆவியாயிருக்கிற மெய்த் தேவனை நேசித்து அன்பு கூர்ந்து அவர் சித்தம் செய்து அவருக்கு உள்ளான தொழுகை செய்ய வேண்டும் என்றும், இது இறைவன் அல்லது இறைவனை ஞாபகப்படுத்தும் அல்லது அடையாளம் என்று எதையும் அன்பு செய்யவோ சேவிக்கவோ கூடாது என்றும் கட்டளையிடுகிறது.

இந்தக் கற்பனை சிருஷ்டி எதையும் தெய்வமாக தொழுவதைத் தடுக்கிறது. இஸ்ரவேல் ஜனங்களுடன் இறைவன் வானத்திலிருந்து பேசினார். பேசின சத்தத்தைக் கேட்டார்களேயொழிய ஒரு ரூபத்தையும் அவர்கள் காணவில்லை. "ஆகையால் நீங்கள் உங்களைக் கெடுத்துக் கொண்டு, ஆண் உருவும், பெண் உருவும் பூமியிலிருக்கிற யாதொரு மிருகத்தின் உருவும், ஆகாயத்தில் பறக்கிற யாதொரு செட்டைகளுடைய பட்சியினுடைய உருவும், பூமியின் கீழ்த் தண்ணீரிலுள்ள யாதொரு மச்சத்தின் உருவுமாயிருக்கிற இவைகளில் யாதொரு உருவுக்கு ஒப்பான விக்கிரகத்தை உங்களுக்கு உண்டாக்காதபடிக்கும், உங்கள் கண்களை வானத்திற்கு ஏறெடுத்து உங்கள் தேவனாகிய கர்த்தர் வானத்தின் கீழெங்கும் இருக்கிற எல்லா ஜனங்களுக்கும் ஏற்படுத்தின வானத்தின் சர்வசேனைகளாகிய சந்திர, சூரிய, நட்சத்திரங்களை நோக்கி அவைகளைத் தொழுது சேவிக்க இணங்காத படிக்கும் உங்கள் ஆத்துமாக்களைக் குறித்து மிகவும் எச்சரிக்கையாயிரு" (உபா : 4 : 16 - 19). நீங்கள் உங்களுக்கு விக்கிரகங்களையும், சுருபங்களையும் உண்டாக்காமலும், உங்களுக்குச் சிலையை நிறுத்தாமலும் சித்திரந் தீர்த்த கல்லை நமஸ்கரிக்கும் பொருட்டு உங்கள் தேசத்தில் வைக்காமலும் இருப்பீர்களாக, நான் உங்கள் தேவனாகிய கர்த்தர் (லேவி. 26 : 1). "தேவன் மனிதனை உண்டாக்கியிருக்க மனுஷன் தனக்குத் தேவர்களை உண்டு பண்ணலாமோ? அவைகள் தேவர்கள் அல்லவே" (எரே. 16 : 20). இறைவனை முழு இருதயத்தோடு நேசிக்கவும், தொழுகை செய்யவும் அவரைப்பின்பற்றவும், இடையூறாய் நம் இருதயத்தில் இருக்கிற எவ்வுயிரும், எந்தச் சிருஷ்டியும், பாவமும், கொள்கையும், பொருளாசையும், கீழ்ப்படியாமையும் அசட்டையும் விக்கிரகமே (மத். 10 : 36 - 39, கொலோ 3 : 5 - 7 : 1 சாமு. 15 : 23). அதனால் இந்தக் கற்பனை எவ்வித சிலை, உருவ வணக்கங்களையும், விக்கிரக ஆராதனை என்று கண்டித்து அகற்றுகிறது.

நான்காம் கற்பனை :- "ஓய்வு நாளை பரிசுத்தமாய் ஆசரிப்பாயாக." இந்தக் கற்பனை இறைவனை நேசித்து அவரில் அன்பு கூர்ந்து தேவன் குறித்த நாளில் வேலையை நிறுத்தி வைத்துவிட்டு அவர் குறிப்பிட்ட இடத்தில் சென்று அவருக்கு ஆராதனை செய்து ஆத்மீக காரியங்களில் ஈடுபட்டு மகிழ்ந்திருப்பதாம்.

இந்தக் கற்பனை தேவன் பரிசுத்தமாக்கின நாளில் மனுமக்கள் கூடி அவரை ஆராதித்து, மகிமைப்படுத்தி, அவரைக் கனப்படுத்தி அவர் போதனையைக் கேட்க வேண்டும் என்று பணிக்கிறது.

தேவனுக்கும் தேவ ஜனங்களுக்கும் உடன்பாடு உண்டு. இந்த ஜனங்களுக்கும், தேவனுக்கும் சம்பந்தமுண்டு என்பதற்கு ஓய்வு நாள் அல்லது பரிசுத்த நாள் அடையாளமாயிருக்கிறது (எசே. 20 : 20). அந்த நாளை நாம் தேவாராதனைக்காக ஒதுக்க வேண்டும். அந்த நாளில் தேவ ஜனங்கள் கூடி வந்து கூட்டுத் தொழுகை செய்வதும், பண்டிகை ஆசரிப்பதும், விசேஷித்த நாட்களை நியமித்து இறைவனை மகிமைப்படுத்துவதும், அவர் வேதத்தை வாசிப்பதும் அவர் உபதேசம் கேட்பதும், அவருடைய நியமங்களை ஆசரிப்பதையும் இந்தக் கற்பனை கட்டளையிடுகிறது. தேவனுடைய எந்தக் கற்பனையையும், சிறிதோ, பெரிதோ கைக்கொள்வதினால் அதற்கேற்ற ஆவியின் நிறைவுண்டு, ஆசீர்வாதமும் உண்டு. ஆதிச் சபை அப்போஸ்தலருடன் கூடி ஆராதிக்கவும், திருவிருந்தாசரிக்கவும் கவனமாய் இருந்தது (அப். 2 : 42). நாமும் சபை கூடி வரும் போதெல்லாம் தேவ சந்நிதியில் காணப்படுவோமாக (எபி 10 : 25).

(தொடரும்)

மார்ச் மாத இதழில் இரண்டாம் கற்பனையென்பதை
மூன்றும் கற்பனை என்று திருத்திக் கொள்ளவும்.

# வேத பாடம்

(தொடர்ச்சி)

ஆதி. 26 : 1, 2 ஆபிரகாம் காலத்தில் வந்த பஞ்சத்தைப் போல் ஈசாக்கின் காலத்திலும் ஒரு கொடிய பஞ்சமுண்டாயிற்று. ஈசாக்கு பெலிஸ்தரின் தேசமாகிய கேராருக்குப் போனார். கர்த்தர் ஈசாக்குக்கு தரிசனமாகி எகிப்துக்குப் போக வேண்டாம் என்று கட்டளையிட்டார்.

3—6 ஆபிரகாமுக்கு அருளிய வாக்குத்தத்தை தேவன் ஈசாக்குக்கு புதுப்பிக்கிறார்.

7—11 ஆபிரகாம் செய்தது போல் ஈசாக்கும் தன் மனைவி ரெபெக்காளை தன் சகோதரி என்று பொய் சொன்னதைக்கண்ட பெலிஸ்தரின் ராஜா ஈசாக்கை கடிந்து கொண்டு ஈசாக்கினிமித்தம் தன் ஜனங்களுக்கு கட்டளையிட்டு ஈசாக்கையோ அவன் மனைவியையோ தொட்டவன் நிச்சயமாய்க் கொலை செய்யப்படக் கடவன் என்று பறையறைவித்தான்.

12—17 கர்த்தர் ஈசாக்கை ஆசீர்வதித்தார். ஈசாக்கு விதை விதைத்தான். கர்த்தர் நூறு மடங்கு பலன் கிடைக்கச் செய்தார். ஈசாக்கு வர வர விருத்தியடைந்து ஐசுவரியவனாகி மகா பெரிய மனிதனானார். ஆட்டு மந்தையும், மாட்டு மந்தையும், அநேகபணிவிடைக்காரரும் இருந்தபடியினால் பெலிஸ்தியர் ஈசாக்கின் மேல் பொறாமைக் கொண்டு நீ எங்களைப் பார்க்கிலும் பெரியவனானாய், எங்களை விட்டுப் போய் விடு என்றார்கள். ஆம், தேவ ஜனங்களைப் பற்றி புற ஜாதிகளுக்கு பொறாமையுண்டு.

18—22 ஆபிரகாம் நாட்களில் வெட்டியிருந்த துரவுகளை பெலிஸ்தர் தூர்த்துப் போட்டார்கள். ஈசாக்கு வேறே துரவுகளைத் தோண்டினார். அதைக் குறித்து அவர்கள் வாக்குவாதம் பண்ணவில்லை. அப்பொழுது கர்த்தர் நமக்கு பெருகும் படி இடம் உண்டாக்கினார் என்று ஈசாக்கு சொல்லி அதற்கு ரெகொபோத் என்று பேரிட்டார். பின் பெயர்செபாவுக்குப் போனார். ஈசாக்கு சாந்த குணமுள்ளவரென்றும், தீமையைச் சகிக்கிறவர் என்றும், மிகுந்த தேவபக்தியுள்ளவரென்றும் அறிகிறோம்.

24—25 மறுபடியும் ஈசாக்குக்கு கர்த்தர் தரிசனமாகி ஆசீர்வதிக்கிறார். ஈசாக்கு கர்த்தருக்கு பலிபீடம் கட்டி கர்த்தருடைய நாமத்தை தொழுது கொள்கிறார்.

26—33 பெலிஸ்தரின் இராஜாவும், சேனாபதியும் ஈசாக்கிடம் வந்து சமாதானம் செய்து கர்த்தர் உம்மோடே இருக்கிறார் என்று கண்டோம் என்று சொல்லி ஒருவருக்கொருவர் தீங்கு செய்யக் கூடாது என்று ஒப்பந்தம் செய்து கொள்கிறார்கள். ஒருவனுடைய வழி கர்த்தருக்குப் பிரியமானால் அவன் சத்துருக்களும் அவனோடே சமாதானமாவார்கள். ஈசாக்கு பெயர் செபாவிலே தங்கியிருந்தார்.

(தொடரும்)

"...ஈசாக்கின் பயபக்திக்குரியவர் மேல் ஆணையிட்டான்"
ஆதி. 31 : 53

# திருடாதே

வகுப்பில் படிக்கும் மாணவர்களில் மோகன் மிகவும் மோசமான பையன் என பேர் எடுத்து வந்தான். குறும்பு செய்வதிலும், சண்டை போடுவதிலும் முதல் இடத்தையும், படிப்பில் கடைசி இடத்தையும் பிடித்திருந்தான். எல்லாவற்றிலும் அதிகமாக இவனிடம் இருந்த கெட்ட பழக்கம் பிறர் பொருளை எதுவானாலும் சரி அபகரிக்க வேண்டும் என்ற தீய நோக்கம் உடையவன்.

வகுப்பில் ஐம்பது மாணவ, மாணவிகள் படித்து வந்தனர். பள்ளி திறந்ததில் இருந்து ஒரு வாரத்திற்குள் இரண்டு மாணவர்கள், ஒரு மாணவி பள்ளி ஆசிரியையிடம் புகார் செய்தனர். தங்களுடைய பேனாவை, பென்சிலை, ரப்பரை, ஸ்கேலை காணவில்லை, திருட்டுப் போய் விட்டது என்று. இப்படியாக அனேகர்கள் புகார் செய்ததின் மூலம் ஆசிரியைக்கும் மிகவும் பெரிய பாரமாகிவிட்டது. அவர்கள் வகுப்பில் உள்ள எல்லா மாணவ, மாணவிகளிடம் விசாரித்தும் பொருள் கிடைக்கவில்லை. மாணவ மாணவிகளும் கூறினார்கள் திருடன் வெளியில் இருந்து வருவதில்லை, திருடன் இங்குதான் இருக்கின்றான் எப்படியாவது பிடிக்க வேண்டும் என்று ஆசிரியர் சொன்னார். எல்லோரும் சரிதான் டீச்சர் என்று சொன்னார்கள். மோகனும் அவர்களுடன் சேர்ந்து சொன்னான் டீச்சர் கட்டாயம் பிடிக்க வேண்டும் என்று.

மோகன் தான் திருடும் பொருட்களை வீட்டிற்கு கொண்டு சென்று தனது பெட்டியில் மறைத்து வைத்திருந்தான். ஒரு நாள் மோகன் வைத்திருந்த புது பேனாவைப் பார்த்து இது உனக்கு எப்படி வந்தது என்று அவனது அப்பா கேட்க எனது நண்பன் கொடுத்தான் என்றான். சிறிது நாட்கள் கழித்து ஒரு பென்சில், ரப்பர், ஸ்கேல், இப்படியாக காணும் போது தகப்பனார் வினவ எல்லாம் எனது நண்பர்கள் கொடுத்தார்கள் என பொய் சொல்லி வந்தான். பெற்றோர்கள் உண்மை என நம்பி விட்டு விட்டனர். இப்படியாக அவன் தினமும் திருடி வந்தான்.

ஒரு நாள் இடைவேளைக்கு முன் டீச்சர் திருடனைப் பிடிக்க வேண்டும் என்ற நோக்கத்துடன் ஒரு புது பேனா ஒன்றை (வெளி நாட்டு பேனா) மேஜை மீது வைத்து விட்டு சிறிது தூரம் போய் விட்டார்கள். சிறிது தூரம் போய் நின்று மறைந்திருந்து கண்காணித்து கொண்டிருந்தார்கள். மோகன் மேஜை அருகில் விளையாடுவது போல் விளையாடிக் கொண்டிருந்தான். மெதுவாக பேனாவை எடுத்து தனது பையில் திணித்துக் கொண்டான். தம்மை ஒருவரும் கவனிக்கவில்லை என அவன் நினைத்து அங்கிருந்து நடந்து சென்றான். அப்பொழுது கணப் பொழுதில் டீச்சர் அவனைப் பிடித்துக் கொண்டு நன்றாக அடித்தார்கள். இது வரையில் வகுப்பில் காணாமல் போன பொருட்களையெல்லாம் நீதான் எடுத்துக் கொண்டு சென்றிருக்கின்றாய் என அடித்து கேட்க, அவன் தான் திருடின பொருட்கள் எல்லாவற்றையும் திருப்பித்தருவதாகவும் ஒத்துக் கொண்டான் அந்நேரமே டீச்சர் மோகன் வீட்டிற்கு பள்ளி பியூனை உடன் அனுப்பி விஷயத்தை மோகனின் பெற்றோருக்குச் சொல்லி பொருட்களை மீட்டு வந்தார்கள். அப்பொழுதுதான் வீட்டிலுள்ளவர்களுக்கும் தெரிந்தது தங்களுடைய மகன் ஒரு திருடன் என்று தகப்பனார் மிகவும் வருத்தப்பட்டார்.

மோகனை அழைத்துச் சென்று பள்ளியின் முன்னால் உள்ள மேடையில் இவனை நிற்க வைத்து இவனது அருகில் இவன் ஒரு திருடன். இவன் திருடிய பொருட்கள் என பேப்பரில் எழுதி வைத்து அருகில் அவன் திருடிய எல்லா பொருட்களையும் வைத்திருந்தனர். மோகனைப் பார்த்து எல்லோரும் சிரித்தனர். சிலர் திருடன் என்றனர். மோகனுக்கு மிகவும் அவமானமும் துக்கமுமாகிவிட்டது.

ஆம், தேவனுடைய பிள்ளைகளே நாம் மோகனைப் போல் இருக்கக் கூடாது. ஏனென்றால் தேவனுடைய கற்பனைகளில் ஒன்று திருடாதே (களவு செய்யாதே) என்று சொல்லுகின்ற படியால் நாம் தேவனது கற்பனையின்படி நடப்போமாக. திருட்டு ஒரு பாவமாகும். பாவம் எந்த ஜனத்துக்கும் இகழ்ச்சியைக் கொண்டு வரும் பாவத்தில் ஒருவனுக்கு மாத்திரமல்ல இகழ்ச்சி அவன் குடும்பத்திற்கே இகழ்ச்சியாகும்.

நாம் மோகனைப் போல் இல்லாது, தேவனுடைய பிள்ளைகளாய் இருந்து தேவனுடைய கற்பனைகளை நிறைவேற்றுவோம்.

---

"திருடுகிறவன் இனித் திருடாமல் குறைச்சலுள்ளவனுக்குக் கொடுக்க தக்கதாக தனக்கு உண்டாயிருக்கும்படி நலமான வேலை செய்து பிரயாசப்படக்கடவன்"
—எபே. 4 : 28.

---

மாதர் பகுதி

# ஸ்திரீகள்

(தொடர்ச்சி)

மூப்பர்களாக மாத்திரமல்ல, ஒரு ஸ்திரீ சுவிசேஷகராக திருச்சபையில் ஊழியம் செய்யலாமா? சுவிசேஷகனுடைய வேலை பிலிப்பு, தீமோத்தேயு, தீத்து ஆகிய சுவிசேஷகருடைய ஊழியத்தின் மூலம் சுவிசேஷகருடைய வேலைகளைப் பற்றி நாம் அறிகிறோம். அவர்களுடைய கடமை சுவிசேஷத்தை (அறிவித்து) பிரசங்கித்து கிறிஸ்தவர்களாக்குவது சுவிசேஷகரின் முக்கிய வேலையாகும். அதோடு ஒரு குறிப்பிட்ட இடத்திலுள்ள சீஷர்களைக்கூட்டி அவர்களை திருச்சபையாக அமைப்பதும், அவர்களின் கடமையாகும். அவ்வாறு அமைப்பதென்றால் திருச்சபையின் அங்கத்தினர்களுக்கு அவர்களுடைய கடமைகளையும்; திருச்சபையின் அமைப்பு முறை பண்பினையும்; திருச்சபைக்கு அலுவலர்களை, மேய்ப்பர்களை நியமித்து அவர்கள் பணியை உணர்த்துவதும், போதிப்பதும், சீகேடுகளைக் களைவதும், ஊழியர்களை எச்சரிப்பதும், பொதுவாக தங்கள் எல்லைகளுக்குள்ள திருச்சபையில் குறைவாய் இருக்கிறவைகளை ஒழுங்குபடுத்தி செம்மையாகவும், ஒழுங்காகவும் ஆவியின் அனலுடன் ஊழியம் செய்யதக்கவைகளாக்க வேண்டியதும் சுவிசேஷகரின் வேலைகளாகும்.

இதுமாத்திரமல்ல மேய்ப்பராக ஒரு பெண் ஊழியம் செய்ய முடியுமா? என்று பார்த்தால், மூப்பர்களுக்கும் மேய்ப்பர் என்ற பெயருண்டு (அப். 20 : 17, 28). கண்காணியானவன் ஒரே மனைவியையுடைய புருஷனாக இருக்க வேண்டும் என்று வேதம் சொல்லுகிறது (1 தீமோ. 3 : 12; தீத்து 1 : 5, 6).

ஒரு ஸ்திரீ ஒரே மனைவியையுடைய புருஷனாக இருக்க முடியுமா? முடியாதே இப்பொழுது நாம் முடிவுக்கு வருவோம் பெண்கள் திருச்சபையில் அதிகாரமுள்ள தேர்ந்தெடுக்கப்பட்டு அதிகாரப்பூர்வமான போதகர்களாக, கண்காணிகளாக, சுவிசேஷகராக இருக்க முடியுமா? அவர்களை உலகத்தில் அனுப்பி நற்செய்தியை பிரசங்கித்து மனந்திரும்புகிறவர்களுக்கு உபதேசம் கொடுத்து பாவ அறிக்கை கேட்டு, திருமுழுக்கு கொடுத்து, திருச்சபைகளை அமைத்து, கற்பித்து, ஊழியர்களுடன் சமவரிசையிலிருந்து கூட்டங்களை தலைமை வகிக்க முடியுமா? அது ஆண்களுடன் சேர்ந்து பெண்கள் வாலிபால் (Volley Ball) அடிப்பது போலிருக்கிறதென்று கர்த்தர் காண்பித்துள்ளார். தேவனுடைய திருவசனம் புறக்கணிக்கப்பட்டாலன்றிப் பெண் ஒரு திருச்சபையின் போதகராக, மேய்ப்பராக, சுவிசேஷகராக, ஆட்சியாளராக, தலைமை வகிப்பவராக, பிரசங்கிப்பவராக, தீர்க்கதரிசியாக இருக்க முடியாது. அவர்கள் கிறிஸ்துவின் திருச்சபையில் இருக்க வேண்டிய இடமும் பணியும் பின் வருமாறு:

(தொடரும்)

"சபைகளில் உங்கள் ஸ்திரீகள் பேசாமலிருக்கக்கடவர்கள்; பேசும்படிக்கு அவர்களுக்கு உத்தரவில்லை; அவர்கள் அமர்ந்திருக்க வேண்டும்; வேதமும் அப்படியே சொல்லுகிறது"-I கொரி. 14 : 34

# தெய்வீக ஊழியனை இனம் கண்டு கொள்ளுங்கள்

கடைசிகால மக்கள் ஆரோக்கியமான உபதேசத்தைப் பொறுக்க மனதில்லாமல், செவித்தினவுள்ளவர்களாகி தங்கள் சுய இச்சைகளுக்கேற்ற போதகர்களைத் தங்களுக்கு திரளாக சேர்த்துக் கொண்டு சத்தியத்திற்கு விலகிப்போவார்கள் (II தீமோ 4 : 3, 4). கொஞ்சமாய் அல்ல திரளாய் கள்ள போதகர்கள் உண்டு என அறியலாம். இயேசுவால் அனுப்பப்பட்ட அப்போஸ்தலர்கள் இருந்த காலத்திலேயே அநேகர் காணப்பட்டபடியால் நிருபங்கள் தோறும் எச்சரிக்கிறார்கள். அந்தக் காலத்திலேயே அப்படியென்றால் இந்தக் காலத்தில் எத்தனை அதிகமாய் பெருகி இருப்பார்கள் என அறியலாம்.

ஆகாப் இராஜாவுக்கு முன்பாக 400 (நானூறு) பொய்யின் ஆவியுடைய கள்ளத் தீர்க்கதரிசிகள் இருந்த போதிலும் மிகாயா என்ற கர்த்தருடைய தீர்க்கதரிசி ஒருவர் இருந்தது (I இராஜ 22 : 8) போல், திரளாய் கள்ளப்போதகர்கள் இருந்த போதிலும், மெய்யான பரிசுத்தவான்கள் உண்டு என்று அறிய வேண்டும். இவர்களை இனம் கண்டு, இவர்களின் வார்த்தைக்கு செவி கொடுக்க வேண்டும். இனம் கண்டு கொள்ளுங்கள்.

**காண வாஞ்சிக்கிறவர்கள்:**

மெய்யான ஊழியக்காரர்களும், தேவனுடைய பிள்ளைகளும் (விசுவாசிகள்) தகப்பன் பிள்ளைகளைப்போல் இருக்கிறார்கள் (I கொரி. 4 : 14, 15). ஆகையால் ஒருவரையொருவர் முகமுகமாய் கண்டு கொள்ள வேண்டும் என வாஞ்சிக்கிறார்கள் [I தெச. 3 : 6 ; 2 : 17]. கண்டு ஏதாகிலும் பணம் பெற்று போக வேண்டும் என்ற நோக்கமா? இல்லை. பெற்றோர்களே பிள்ளைகளுக்கு பொக்கிஷத்தை சேர்த்துவைக்க வேண்டும். ஆகையால் மெய்யான பரிசுத்தவான்கள் விசுவாசிகளுடையவைகளை அல்ல, விசுவாசிகளையே தேடுகிறார்கள் (II கொரி. 12: 14). ஆதலால் காண வாஞ்சிக்கிற பெற்றோர்கள் தங்களுடைய செலவில் பிள்ளைகளைக் காணச் செல்லுகிறார்கள். பிள்ளைகளிடம் காணச்சென்ற செலவுக்கான பணத்தை எதிர்பார்க்கிறதில்லை (II கொரி. 12 : 15).

பிள்ளைகளின் சுகத்தைப் பற்றி பெற்றோர்களுக்கே கவலை. ஆகையால் பிள்ளைகள் எப்படி இருக்கிறார்கள் எனக் கண்டு ஆறுதலடைய வாஞ்சிக்கிறார்கள். அப்படியே ஆவிக்குரிய பெற்றோர்களும் சோதனைக்காரன் மக்களை சோதனைக்குட்படுத்தினதுண்டோவென்று ஆவிக்குரிய நிலைமை அறிந்து கொள்ளும் நோக்குடன் காண விரும்புகிறார்கள் (I தெச. 3 : 5). கண்டு திடப்படுத்தி முகஸ்துதி செய்யாமல், இச்சகமான வார்த்தைகளை அலப்பாமல் புத்தி சொல்லி ஸ்திரப்படுத்தி செல்கிறார்கள் (I தெச. 3 : 2).

**விழித்திருக்கும் ஆத்மீக உத்தியோகிகள்:**

உங்களை நடத்துகிறவர்கள் உங்கள் ஆத்துமாக்களுக்காக உத்தரவாதம் பண்ணுகிறவர்களாய் விழித்திருக்க வேண்டும் (எபி. 13 : 17). தேவனால் மேய்ப்பனாய் ஏற்படுத்தப்பட்ட மெய்பரிசுத்தவான் விழித்திருக்கிறான். ஆகையால் அவன் தூரத்தில் இருந்தாலும் ஆவியிலே ஒன்றாயிருந்து மக்களின் ஆன்மீக நிலைமை விசுவாசத்தை, வளர்ச்சியை அறிந்து கொள்கிறான், அதற்கேற்றபடி புத்தி சொல்கிறான் (கொலோ. 2 : 5). தூங்குகிற மேய்ப்பனோ எதையும் அறியான்.

ஆத்துமாக்களை விட்டு எவ்வளவு தூரத்திலிருந்தாலும், விழித்திருக்கிறபடியால் நல்ல மேய்ப்பன் ஆவியில் இணைந்து ஜனங்களின் பாவக்கிரியைகளை கண்டுபிடித்து, ஒழுங்கு படுத்துகிறான் (I கொரி. 5 : 1 - 7 ; II கொரி. 13 : 2, 3). உன்னுடைய அந்தரங்க பாவத்தைக் கண்டுபிடித்து உன்னை சீர்படுத்தும் மேய்ப்பன் உனக்குண்டா?

விழித்திருக்கும் காவலன் தூரத்தில் எதிரி வருவதைக் கண்டு எச்சரிப்புக் கொடுத்து எதிரி மேற்கொள்ளாதிருக்க ஏற்பாடு செய்கிறான். அப்படியே ஆத்துமாவுக்கு காவலனாய் இருக்கிற மெய்பரிசுத்தவான் பரிசுத்தாவியின் கிருபையால் (யோவா 16 : 13) வரப்போகும் காரியத்தை முன் அறிந்து ஆத்துமாக்களின் பாதுகாவலுக்காய் ஏற்பாடு செய்கிறான் (I தெச. 3 : 4)

முன் மாதிரி :

இன்றைய கிறிஸ்தவ உலகில் குட்டிப் பிரசங்கி முதல் உலகப் புகழ் பெற்ற பிரசங்கியின் பிரசங்கம் என்னவென்றால் மனிதனைப்பாராதே, கிறிஸ்துவைப் பார். மனுஷனைப்பின்பற்றாதே, இயேசுவைப் பின்பற்று என்பதாகும். இவர்கள் வாழ்க்கை சரியில்லை என்றும் கடைசிவரை நிலை நிற்போம் என்ற நம்பிக்கை இவர்களுக்கே இல்லை என்றும் அவர்கள்வாயின் வார்த்தைகளே சாட்சி கொடுக்கிறது. தேவனால் அனுப்பப்பட்டவனே தெய்வத்தை அறிவான். ஆகையால் தேவனைக் கண்டடைய அனுப்பப்பட்டவனே வழிகாட்டி (யோவா. 7 : 29).

தேவனால் அனுப்பப்படாதவர்கள் பிள்ளைகளைப் பெற்று தெருவிலே விட்டுச் செல்கிற வேசிகளைப் போல ஆத்துமாக்களை தங்கள்பக்கம் இணைக்காமல் எங்காவது போட்டுவிடுவார்கள், அனுப்பிவிடுவார்கள். காரணம் இவர்களுடைய ஐக்கியம் பிதாவோடும், குமாரனாகிய இயேசுவோடும் இருந்தால்தானே தங்களோடே ஐக்கியப் படும்படி செய்வார்கள் (I யோவா 1 : 3). மெய்யாய் தேவனால் அனுப்பப்பட்ட மனிதனோ நான் கிறிஸ்துவைப் பின்பற்று கிறதுபோல நீங்கள் என்னை பின்பற்று கிறவர்களாகுங்கள் என்கிறார் (I கொரி. 11 : 1).

நீங்கள் என்னிடத்தில் கற்றும், அடைந்தும், கேட்டும், கண்டும் இருக்கிறவைகளெவைகளோ, அவைகளையே செய்யுங்கள் என்கிறார் மெய்யான ஊழியன் (பிலி. 4 : 9).

ஒருவராய் திரளானோரை கண்காணிக்க முடியாதென்பதால் கண்காணிகளை ஆங்காங்கே ஏற்படுத்தினார் பரிசுத்த பவுல். அவர்கள் எல்லோரும் ஒரே ஆவியை உடையவர்களாய் ஒரே அடிச்சுவட்டில் நடக்கிறபடியால் (II கொரி. 12 : 17, 18) அவர்களையே மாதிரியாக நோக்க வேண்டும் (பிலி 3 : 17).

இப்படி ஒழுங்கு செய்து மந்தைக்கு முன்மாதிரியாக இராதவன் தேவனால் அனுப்பப்பட்ட மெய் ஊழியனல்ல.

பிரியரே, உனக்கு இவ்விதமாய் வேதத்தில் காணப்படும் ஊழியன் உண்டா? நீ அவனைப் பார்த்து பின்பற்றத்தக்க தன்மை (கனிகள்) அவனிடம் உண்டா?

ஆசிரியர் எந்த அளவு அறிந்திருக்கிறாரோ அந்த அளவே மாணவனை வளர்க்க முடியும். ஊழியன் எந்த அளவு தெய்வத்தை அறிந்திருக்கிறானோ, அந்த அளவே அவன் மற்றவர்களை நடத்த முடியும்.

மெய் ஊழியனை இனம் கண்டு கொள்.

---

"...நாங்கள் கிறிஸ்துவுக்காக ஸ்தானாபதிகளாயிருந்து தேவனோடே ஒப்புரவாகுங்கள் என்று கிறிஸ்துவினிமித்தம் உங்களை வேண்டிக் கொள்கிறோம்" -II கொரி. 5 : 20

---

(தொடர்ச்சி)

## புதிய எருசலேம் சபை நடபடிகளில் சில

கிறிஸ்துவுக்குள் பிரியமானவர்களே, அற்புதநாதர் இயேசுகிறிஸ்து இன்றைக்கும் அற்புதங்களை நடத்திவருகிறார். அவருக்கே மகிமை உண்டாவதாக; நாங்கள் டேராடூன் அருகேயுள்ள கிளைமிங்டௌன் என்ற இடத்திலுள்ள இராணுவ முகாமுக்குள் சென்று, கடந்த இதழில் எழுதியபடி அங்குள்ள தேவனுடைய பிள்ளைகளை சந்தித்து ஆலோசனை கொடுத்து அசுத்த ஆவிகளைத் துரத்தி இவ்விதமாய் கர்த்தருடைய

நாமத்தை மகிமைப்படுத்திவிட்டு, நாங்கள் தங்கியிருந்த இடத்திற்கு (டேராடூனுக்கு) போக புறப்பட்டோம். இரவு சுமார் 10மணி இருக்கும்; அங்குள்ள விசுவாசிகள் அங்கு தங்கி காலையில் செல்லுமாறு எங்களைக் கேட்டுக்கொண்டார்கள்; நாங்களோ மறுநாளில் அங்கிருந்து ரிஷிகேஷம், அரித்துவார் போன்ற இடங்களுக்கு கர்த்தருடைய வேலையாகச் செல்ல வேண்டியிருந்ததால் இரவிலேயே விடைபெற்றுக்கொண்டு கடைசி பஸ் பிடித்து சென்றுவிடுவோம் என்று கூறி அவசரமாய் பஸ் நிலையம் வந்தோம். டேராடூன் செல்லும் கடைசி பஸ் சென்றுவிட்டது. கிளைமிங் டௌனில் இருந்து டேராடூன் சுமார் 8 கி.மீ. உண்டு. நாங்கள் ஜெபித்துக்கொண்டே நடந்தோம். வழியில் ஏதாவது லாரிகள் வந்தால் ஏறிப்போகலாம் என்று நடந்தோம். பனிகாலமாயிருந்தபடியால் நடப்பதற்கு மிகவும் கஷ்டமாயிருந்தது. இமயமலையின் அடிவாரம் நாங்கள் சென்றிருந்த இடம்; மழை பெய்வது போல் பனி பெய்து கொண்டே இருந்தது. நாங்கள் உடுத்தி இருந்த வஸ்திரமெல்லாம் நனைந்து விட்டது; சூடாக தேநீர் குடித்தாலாவது சென்றுவிடலாம் என்றால் எல்லா கடைகளும் மூடப்பட்டு விட்டது. மெதுவாய், மெதுவாய் நடந்து சென்றோம்; என்னோடு வந்த உடன் ஊழியர்கள் இருவரும் பேசிக்கொண்டே விரைவாக நடந்தார்கள். என்னால் நடக்க முடியவில்லை; என்னுடைய கண்களிலும், நாசியிலும் நீர் வடிய ஆரம்பித்தது: கைகளும், கால்களும் குளிரினால் நடுங்கினது. நான் என் ஆண்டவரிடம் 'ஆண்டவரே! இப்படி தாங்கக்கூடாத குளிருக்குள் எங்களைக் கொண்டுவந்து விட்டீரே! நாங்கள் எப்போது டேராடூன் செல்வோம்? நாளையதினம் ஊழியத்திற்கு நாங்கள் எப்படிப் போகமுடியும்?' என்றெல்லாம் சொல்லி பேசிக்கொண்டே நடந்தேன்; சில விநாடிகளிற்குள் எனக்குள்ளிருந்து பரிசுத்த ஆவியானவர் உரத்த குரலில்; "நானும் உன்னோடுகூட இந்த பனிக்குள் நனைகிறேனே!" என்று பேசினார். என் உடலெல்லாம் நடுங்கினது. என் உள்ளமெல்லாம் கொழுந்துவிட்டு எரிந்தது (லூக்.24:32) என் உடலிலுள்ள குளிர் எங்கேயோ ஓடி மறைந்துவிட்டது எனக்கு ஒரு புது பெலன் கிடைத்தது. நான் தீவிரமாய் நடந்தேன். என் உடன் ஊழியர்களும் தீவிரமாய் நடந்துவந்து இரவு சுமார் 12மணி அளவில் டேராடூன் வந்து சேர்ந்தோம். ஏசா. 43:1,2 வசனங்களில் எழுதியிருக்கிற அனுபவம் வழியிலே என்னிலும் நடந்தது என்று உடன் ஊழியர்களிடம் கூறி தேவனை மகிமைப்படுத்தினோம். மறுநாள் காலையில் எவ்வித சிறு பெலவீனங்கூட குளிரினிமித்தம் ஏற்படவில்லை.

இப்படியே இன்னொருதடவை டிசம்பர் மாதத்தில் கொடைக்கானலுக்கு கர்த்தருடைய வேலையாகச் சென்றிருந்தோம் 'பெருமாள்மலை' என்ற இடத்திலுள்ள 'புதிய எருசலேம் சபை'யில் அன்றிரவு கூட்டம் நடத்த ஏற்பாடு செய்திருந்தார்கள், குளிர் மிகுதியாய் இருந்தபடியால் எங்கள் சரீரம் நடுங்க ஆரம்பித்து விட்டது. வாயைத் திறந்தால் பற்கள் ஒன்றொடொன்று அடிக்க ஆரம்பிக்கிறது என்ன செய்வதென்றே தெரியாது. எப்படியும் கர்த்தரிடம் சிறிது காத்திருந்து ஜெபிப்போம், கர்த்தர் பெலன் தருவார் என்ற விசுவாசத்தோடு கர்த்தருடைய சமூகத்தில் காத்திருந்தோம்.

'நான் உங்களுக்கு ஜலத்தினால் ஞானஸ்நானம் கொடுக்கிறேன் என்னிலும் வல்லவர் ஒருவர் வருகிறார் அவர் பரிசுத்த ஆவியினாலும், அக்கினியினாலும் ஞானஸ்நானங் கொடுப்பார்' (லூக். 3: 16) என்று யோவான்ஸ்நானகன் சொன்ன வார்த்தையை அன்று நினைவு கூற தேவன் உதவி செய்தார்; சிறிது நேரம் தேவ சமூகத்தில் காத்திருந்ததும் உள்ளேயிருந்து உஷ்ணமான காற்று எங்கள் காதுகளின் வழியாக வெளியேறி முகத்தை யெல்லாம் சூடாக்கி சில விநாடிக்குள் உடலெல்லாம் உஷ்ணமாகும் படி, எங்கள் இருவருக்குமே தேவன் உதவி செய்தார்; என்ன ஆச்சரியம்! கர்த்தரால் கூடாதகாரியம் ஒன்றுமே இல்லை; பின்னர் கர்த்தருடைய பெலத்தினால் ஆராதனை நடத்தினோம், வந்திருந்த யாவரையும் பரிசுத்த ஆவியின் அக்கினி ஆட்கொண்டது அவருக்கே மகிமையுண்டாவதாக!

(தொடரும்)

Pastor S. Sundarraj
Vallioor.

# புதிய எருசலேம் விசுவாசியும் புத்தக நிலைய ஊழியரும்

உண்மைசம்பவம் (கற்பனையல்ல)

ஒருநாள், Bible Concordence வாங்க நற்செய்தி புத்தக நிலையத்திற்குச் சென்றிருந்தேன். அதை வாங்கும்போது அங்கு விற்பனையாளராய் இருக்கும் சகோதரிடம், அன்பினால் "சகோதரரே! நீங்கள் எங்கள் சபைக்கு வாருங்கள்" என்று கூப்பிட்டேன். அந்த சகோதரர் ஒரு நற்செய்தி நிறுவனத்தில் பணி புரிகிறார். நான் புதிய எருசலேம் பின்னை என அறிந்த அவர் "Brother, நீங்கள் உங்கள் சபைக்கு அழைக்கிறதினால் உங்களிடம் சொல்லுகிறேன் உங்கள் சபையின் உபதேசம் எனக்கு ஒத்துவராது என்றார்.

நான் எந்த உபதேசம் என்றேன்.

அவர் "பாவ மன்னிப்பு உபதேசம்தான் என்று சொல்லி நீங்கள் மனுஷரை மகிமைப்படுத்துகிறீர்களே" என்றார்.

(பாவங்களை அறிக்கை செய்கிறதற்கும் மனுஷரை மகிமைப்படுத்துவதற்கும் என்ன சம்பந்தமோ)

நான் "நாங்கள் வேதம் என்ன சொல்லுகிறதோ அதையே செய்கிறோம். பாவ அறிக்கை செய்தால் நம்முடைய பாவம் மன்னிக்கப்படும் என்று ஒத்துக்கொள்ளுகிறீர்கள் (I யோ. 1 : 9) அல்லவா? 'அறிக்கை' என்றால் வெளிப்படுத்தி அறிவிப்பது பொருள்...யோவா. 20 : 21, 22, 23ல் என்ன எழுதி இருக்கிறது. தேவன் தம்முடைய அப்போஸ்தலர்களுக்கு பாவங்களை மன்னிக்கும் அதிகாரத்தை கர்த்தர் கொடுத்திருக்கிறாரே!" என்றேன்.

அவர் "இல்லை, நீங்கள் வசனத்தை திரிக்கிறீர்கள்! வசனத்தின் உண்மையான பொருள் அதுவல்ல. தேவனுக்கு விரோதமான பாவத்தை தேவனிடத்திலும், மனிதருக்கு விரோதமானபாவத்தை மனிதரிடத்திலும் அறிக்கை பண்ண வேண்டும் என்றார்.

(எந்தப் பாவமுமே தேவனுக்கு விரோதமான பாவமாகவே அல்லவா இருக்கிறது. மனிதனுக்கு விரோதமான பாவம் என்று ஒன்று இல்லையே. தேவனுடைய நியாயப் பிரமாணங்களை மீறுகிறதே பாவம் (I யோ. 3 : 4). உதாரணமாக ஆபிரகாமுக்கும் சாராளுக்கும் விரோதமாக அபிமெலேக்கு செய்யப்போன பாவத்தை தேவன் எனக்கு விரோதமான பாவம் என்கிறார் (ஆதி. 20 : 6). போத்திபாருக்கு விரோதமாக செய்யும் பாவத்தை யோசேப்பு தேவனுக்கு விரோதமான பாவம் (ஆதி. 39 : 9) என்றார். மனுஷனுக்கு விரோதமானதை தேவனிடத்திலும் அறிக்கை பண்ண வேண்டும் என்ற பிரமாணத்தை வேதம் சொல்லவில்லையே!)

நான் 'சரி, சகோதரரே அப்படியானால் யோ. 20 : 21, 22, 23 வசனத்துக்கு நீங்களே அர்த்தஞ் சொல்லுங்கள். நான் தான் வசனத்தை திரிக்கிறதாகச் சொல்லுகிறீர்களே! "எவர்களுடைய பாவங்களை மன்னிக்கிறீர்களோ அவைகள் அவர்களுக்கு மன்னிக்கப்படும்." மற்றவர்களுடைய பாவங்களை மன்னிக்க அப்போஸ்தலர்களுக்கு அதிகாரம் அளிக்கப்பட்டிருக்கிறது" என்றேன்.

அவர் "அதெல்லாம் Brother, ஆதி அப்போஸ்தலருக்கு கொடுக்கப்பட்ட அதிகாரம், உங்கள் Cheif Pastor அப்போஸ்தலர் என்று எப்படிச் சொல்லுகிறீர்கள்? என்றார்.பிறகு Chief Pastor மீது கோபப்பட்டு எரிச்சலடைந்து தான் நினைத்தபடியெல்லாம் திட்டி களவீனப்படுத்தி, அவரை நரகத்தின் மகன் என்று சொல்லி திட்டினார்.

நான் :- "அப்போஸ்தல அடையாளங்களாலும், (அப். 8 : 17) தேவன் விசுவாசிகளுக்கு வெளிப்படுத்துகிறபடியாலும், அப்போஸ்தல அடையாளங்கள் வல்லமையாய் எங்களுக்குள் நிகழ்வதாலும் அவர்களுடைய உபதேசத்தில் நிலைத்திருக்கும் போது நாங்கள் பரிசுத்தமாகிறதினாலும் இவர் அப்போஸ்தலர் என்று அறிவோம் என்றேன்.

அவர் அதை விட்டு, பாவ அறிக்கை உபதேசத்தைப் பற்றி, "உங்களுக்கு இந்த உபதேசத்தை பிசாசுதான் சொல்லி இருப்பான்" என்றார்.

நான் :- என்ன சகோதரரே! துணிகரமாக தேவனையே பிசாசு என்று சொல்லுகிறீர்கள்? வேத வசனத்தைப் பாருங்கள். அப். 19 : 18 ல் தங்கள் செய்கைகளை வெளிப்படுத்தி அறிக்கையிட்டார்கள் என்று எழுதி இருக்கிறதே (II கொரி. 2 : 10) (சபையிலே) வெளிப்படுத்தி அறிக்கை செய்வது பற்றி எழுதியிருக்கிறதே வேதத்தில் பாருங்கள்.

அவர் :- அதெல்லாம் சகோதரரே. ஆதி சபையின் ஆரம்ப நிலை. பாவங்களை மன்னிக்க இறைவனுக்கு மட்டும்தான் அதிகாரம் உண்டு. இயேசுவே பாவங்களை மன்னிப்பார். தேவனைத் தவிர யாருக்கும் இந்த அதிகாரம் கிடையாது.

நான் மத். 3 : 5, 6 வாசியுங்கள் அவர்கள் எல்லோரும் யோவானிடத்தில் அல்லவா தங்கள் பாவங்களை அறிக்கையிட்டார்கள்? மேலும் யூதர்கள் "உன் பாவம் மன்னிக்கப்பட்டது" என்று இயேசு சொன்ன போதெல்லாம் பாவங்களை மன்னிக்க இவன் யார் என்று முறுமுறுத்தார்கள் அப்பொழுது இயேசு பாவங்களை மன்னிக்க மனுஷ குமாரனுக்கு அதிகாரம் உண்டென்பதை நீங்கள் அறிய வேண்டும்" என்கிறார் என்று சொல்லிக் கொண்டிருந்தேன் அப்போது அவர் குறுக்கிட்டு

மத். 3 : 5, 6ல் யோவான் பாவங்களை மன்னித்தது பழைய ஏற்பாட்டுக் காலத்தில் அது இப்போது இல்லை. இப்போது ஆசரிப்புக் கூடாரத் திரை கிழிந்து விட்டது. இப்போது நாம் இயேசுவை முகமாய்த் தரிசித்து அவரிடமே அறிக்கை செய்யலாம். ஆமாம், நீங்கள் சொல்லுகிறபடி பாவங்களை மன்னிக்க மனுஷகுமாரனாகிய இயேசு கிறிஸ்துவுக்கு அதிகாரம் உண்டு. ஆனால் மனுஷனுக்கு அதிகாரம் இல்லை என்றார்.

நான் :- மத். 9 : 8 வாசித்தீர்களானால் மனுஷருக்கு இப்படிப்பட்ட அதிகாரத்தைக் கொடுத்த தேவனைத் துதித்தார்கள் என எழுதியிருக்கிறதே என்றேன். ஆனால்,

அவர் :- வசனத்தை பார்க்க மறுத்துவிட்டார்.

நான் :- இப்பொழுது திரை கிழிந்ததால் இயேசுவை முகமுகமாய் தரிசித்து அவரிடம் அறிக்கை பண்ணலாம் என்கிறீர்கள் சரி, அப்படியானால் இப்பொழுது இயேசுவை நீங்கள் முகமுகமாய் தரிசிக்கிறீர்களா?

அவர் :- "இல்லை"

நான் :- "ஏன் தெரியுமா? திரை கிழிக்கப்பட்டாலும், உங்கள் பாவமே உங்களுக்கும் தேவனுக்கும் இடையே பிரிவினையை உண்டாக்கி அவருடைய முகத்தை நீங்கள் காணமுடியாதபடி தடைபண்ணுகிறது. ஏசா. 59 : 2 வசனத்தை பாருங்கள். நீங்கள் சுத்தமுள்ளவர்களானால் அவரைத் தரிசிக்கலாமே (மத். 5 : 8). உங்கள் பாவம் உங்களுக்கும், தேவனுக்கும் இடையே திரையாய் இருக்கிறதே. ஆசரிப்புக் கூடாரத்தின் திரை கிழிந்தாலும் உங்களுக்கு நீங்களே திரையைப் போட்டுக் கொண்டு இருக்கிறீர்களே. இத்திரையை நீங்கள் சரியான உபதேசத்திற்குட்பட்டு நீக்க வேண்டும் அப்போது தேவனை தரிசிக்கலாம் (மத். 5 : 8).

(திரை கிழிக்கப்படுவதற்கு முன் திரைக்கு வெளியே இருக்கும் ஆசாரியனிடம் அறிக்கை பண்ணின பின்புதான் மகா பரிசுத்த ஸ்தலத்துக்குச் செல்ல வேண்டும். இப்போதோ மகா பரிசுத்த ஸ்தலத்திலேயே பாவங்களை அறிக்கை செய்ய அனுக்கிரகம் பெற்றிருக்கிறோம்.)

அவர் :- கொஞ்சம் நேரம் மவுனமாகி ஒன்றும் பேசாமல் திகைத்து நின்றார்.

# புதிய எருசலேம் செய்தி

# PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் - 17 ★ MAY 1985




"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ, நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள்.... விழித்திருங்கள்...உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லோருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்..."

மாற்கு 13 : 35-37

EDITOR: CHIEF PASTOR N. LAZAR

BOMBAY, INDIA

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லோரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒருமனப்பட்டு கிறிஸ்துவுக்கேற்பான பூரண வளர்ச்சியடையும் படியாகவும் தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய்க் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும், சபையானது வஞ்சக போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும் படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது.

(எபே.4:11-16)

## இதழின் உள்ளே



கோவில்பட்டி ஆலய கட்டுமானத்திற்காய் பண உதவி செய்கிறவர்கள் Pastor S. SUNDARRAJ, "New Jerusalem Church" 22, South Car Street, Vallioor, Trinelveli Dist, Tamil Nadu 627117 என்ற விலாசத்திற்கு அனுப்பும்படி இயேசுவின் நாமத்தில் கேட்டுக் கொள்கிறோம்.

# ஆசிரியர் உரை

பரிசுத்த வேதாகமம் ஒரு முத்திரிக்கப்பட்ட தெய்வீக புஸ்தகம், அதை விளங்கிக் கொள்வதில் இன்றைய கிறிஸ்தவர்கள் பெருந்தவறு செய்கிறார்கள். தெய்வீக வெளிப்படுத்தலும் ஆராய்ச்சியுமின்றி வேதாகமத்தை விளங்கிக் கொள்ளுதல் அரிது. ஒவ்வொருவரும் சபை வீழ்ச்சிக்குப் பின் எழும்பிய ஏதாவதொரு பாரம்பரியத்தைச் சார்ந்து தாங்கள் இருக்கும் நிலைக்குத் தக்கபடி வசனங்களைத் தேடுகிறார்கள், அர்த்தம் கொள்ளுகிறார்கள். சிலர் ஆவி சொல்லிற்று; கர்த்தர் வெளிப்படுத்தினார் என்று பேய்க்கனுக்களையும், சத்தங்களையும், ஏவுதல்களையும் பின்பற்றி வேதத்திற்கு விளக்கம் கொடுக்கிறார்கள். ஒரே சபையில் உள்ளவர்கள் கூட அபிப்பிராய பேதம் உள்ளவர்களாக இருக்கின்றனர். எங்கும் பிரிவினையின் ஆவி, தாறுமாறுகளின் ஆவி. காரணம் என்ன? வேதத்தை விளக்க கட்டுப்பாடில்லாமல், ஒழுங்கில்லாமல் தெளிவு இல்லாமல் ஒவ்வொருவருமே வேதத்தை விளக்க முற்பட்டதால் வந்த விளைவே இவ்வளவு குழப்பத்துக்கும் காரணம். வேதத்தை விளக்க அப்போஸ்தலன் தேவை. அப்போஸ்தலர்களுடைய வார்த்தையே வேதம்! மெய் சபைக்கே தேவன் அப்போஸ்தலனைக் கொடுக்கிறார் (அப் 6: 1 - 4 ; எபே 4 : 11 – 13 ; I கொ 12:28). சபையே வேதத்தின் சரியான அர்த்தத்தை விளங்கிக் கொள்ள முடியும், விளக்க முடியும். ஏனென்றால் சபைக்கே வேதம் எழுதப்பட்டது. வேதம் அல்ல (புதிய ஏற்பாடு) சபையே முந்தி எழும்பியது. ஆனபடியால் தனி ஆட்களல்ல. சபையாய் சபையிலிருந்து அப்போஸ்தலன் வெளியிடும் உபதேசமே மெய்யான சத்தியம். அதற்கு வேத சான்றுகள் இருக்கும். ஆனபடியால் தனி ஆள் (அனுப்பப்படாதவர்) அல்லது கூட்டம் (சபையல்லாதது) வெளியிடும் உபதேசம், விளக்கம் நடைமுறைகள், தவறானவையாகும். உபதேசம் கொடுப்பவர், வியாக்கியானிப்பவர், போதிப்பவர், நடத்துகிறவர் அப்போஸ்தலனா என்று கவனிக்கவும், அல்லவென்றால் தள்ளிப் போடுங்கள். மனிதர்களுடைய (அனுப்பப்படாதவர்கள்) உபதேசம், வியாக்கியானம், வழிமுறைகள் மாறும். தேவஜனம் ஏமாந்து போகக் கூடாது. அப்போஸ்தலர் மூலமாய் வெளியிடப்படாத உபதேசங்களை, விளக்கங்களை, நடைமுறைகளை ஏற்றுக் கொள்ளாதிருங்கள்.

கிறிஸ்துவுக்குள்,

N. Lazar

Chief Pastor N. LAZAR

# நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் உயிர்த்தெழுதல்

கிறிஸ்தவ விசுவாசங்களில் ஒன்று மரித்தோரின் உயிர்த்தெழுதல் (அப். 24 : 15 ; 23 : 6 ; I தெச. 4 : 3 - 16 ; யோ. 5 : 28, 29; எபி. 9 : 27). மனுஷனால் மரணம் உண்டானபடியால் மனுஷனால் மரித்தோரின் உயிர்த்தெழுதலும் உண்டாக வேண்டும் (I கொரி. 15 : 21). பிற மதங்கள் உயிர்த்தெழுதலைப் பற்றி தெளிவான நம்பிக்கையில்லாதவைகள். சரீரத்தை அழித்து ஆத்தும விமோசனம் அடைய விரும்புகின்றன. அல்லது (மறு பிறப்பு) மறுஜென்ம விசுவாசத்தால் முந்தின ஜென்மத்தின் சரீரம் அழிக்கப்பட்டு வேறு ஜென்மம் அல்லது வேறுபிறவி அல்லது வேறு பிராணியாக அந்த ஆத்துமா பிறந்து ஜீவிக்கின்றது என நம்புகின்றனர்.

அதாவது மனிதனுடைய சரீரத்தை கிறிஸ்தவத்தைத் தவிர பிற மதங்கள் முக்கியப் படுத்துவதில்லை. இது எப்படியாயிருக்கிறது என்றால் இரண்டுபேர் சேர்ந்து ஒரு வேலையைச் செய்கிறார்கள். அதன் பலன் பெறும் வேளையில் ஒருவனுக்கு பலனளித்து மற்றவரை மறந்து விடுகிற மதியீனமாயிருக்கிறது.

மனிதன்தான் மோட்சம் போக முடியும். நாயோ, பூனையோ, எலியோ மோட்சம் போக முடியாது. போவதில்லை. மனிதன் என்பவன் சரீரத்தில் இருப்பவனே. பாவமோ, புண்ணியமோ, மோட்சதேட்டமோ மனிதன் சரீரத்தில் இருக்கும் போதே செய்யமுடியும். மோட்ச பிரயாசத்திற்கு முக்கியம் சரீரம். சரீரமின்றேல் மனிதனும் பிறக்கவில்லை. இப்படி பிரயாசப்படுகிற நன்மையைத் தேடுகிற, ஜெபதவம் செய்கிற மனிதனுக்கு தேவன் பலனளிக்கும் போது சன்மானம் அளிக்கும் போது அல்லது தண்டனை அளிக்கும்போது ஆத்துமாவுக்கு மட்டும் பலனையோ, தண்டனையோ அளிப்பதில்லை. மனிதனை அதே சரீரத்தில் உயிரோடெழுப்பி பலனளிக்கிறார், இளைப்பாறுதல் அளிக்கிறார். இது நியாயம். இதுவே தேவ நியமம் (வெளி. 20 : 4, 5, 6, 11 – 15 ; யோ. 5 : 28, 29; தானி. 12 : 2, 13; II கொரி. 5 : 10 ; ரோம. 2 : 16 ; எபி. 9 : 27).

மரித்தோர் உயிர்த்தெழுவர் என்பதற்கு கிறிஸ்து முன்னடையாளம். அவர் வேத வாக்கியங்களின்படி நம்முடைய பாவங்களுக்காக மரித்து அடக்கம் பண்ணப்பட்டு, வேத வாக்கியங்களின்படி மூன்றாம் நாளில் உயிர்த்தெழுந்தார் (I கொரி. 15 : 3, 4). இரண்டாம் ஆதாமாகிய இயேசுகிறிஸ்துவின் உயிர்த்தெழுதலே முறையான நித்திய உயிர்த்தெழுதல் ஆகும். அதற்குமுன் பலர் உயிரோடெழுப்பப்பட்டாலும் சிறிது நாட்கள் உயிர் வாழ்ந்து பின் மரித்துப் போனார்கள். அவர்கள் சரீரம் அழிக்கப்பட்டது. (உ-ம்) எலிசாவின் எலும்புகள் பட்ட மனிதன் (II இரா. 13 : 21); சூனேமியாள் மகன் (II இரா. 4 : 32 – 35); யவீருவின் மகள் (மாற். 5 : 21 – 24, 35 – 42); நாயீன் ஊர் விதவையின் மகன் (லூக். 7 : 11 -17); லாசரு (யோவா. அதி. 11): கர்த்தருடைய மரண நாளில் உயிர்ப்பிக்கப் பட்டவர்கள் (மத். 27 : 50 - 53).

இயேசு கிறிஸ்துவின் உயிர்த்தெழுதல் மகிமைக்குரிய (வானத்துக்குரிய) உயிர்த்தெழுதல். அழியாத ஜீவனுக்குரிய வல்லமையின்படி உயிர்ப்பிக்கப்பட்ட உயிர்த்தெழுதல். அதே சரீரத்தில் அதே சரீரம் மறுரூபமடைந்து உயிர்த்தெழுதல். இயேசு கிறிஸ்து தாமே உயிரோடெழுந்தார். இயேசு அவர்கள் நடுவில் தோன்றி தம்முடைய கைகளையும், விலாவையும் அவர்களுக்கு காண்பித்தார் (யோவா. 20 : 19, 20). தம்முடைய காயங்களை (தம்மை) தொட்டு பார்க்கச் சொன்னார் (யோ. 20 : 26, 27). ஒரு ஆவிக்கு மாம்சமும் எலும்பும் கிடையாது. இயேசுவோ அதே சரீரத்தில் மறுரூபமடைந்திருந்தார். அவர்களுக்கு முன் புசித்துக் குடித்தார் (லூக். 24 : 36 - 43 ; யோ. 21 : 12 - 14 ; அப். 1 : 1–3; 10 : 40 – 42).

கர்த்தருடைய உயிர்த்தெழுதலின் விபரம். இயேசு கிறிஸ்து மரணமடைந்த மூன்றாம் நாள் ஸ்திரீகள் அவருடைய சரீரத்திற்கு சுகந்த வர்க்கமிடும்படி கல்லறையினிடம் சென்றார்கள். கல்லறையின் வாசலில் மூடப்பட்டிருந்த பெரிய கல் புரட்டப்பட்டிருந்தது. அதன் மேல் கர்த்தருடைய தூதன் ஒருவன் அமர்ந்திருந்தான் (மத்.28:2). ஸ்திரீகள் பயந்தார்கள். சிறிது நேரம்

கழித்து கல்லறையினிடம் சென்று உள்ளே பார்த்தனர். இயேசுவின் சரீரம் இருந்த இடத்தில் கால்மாட்டில் ஒரு தேவதூதனும், தலைமாட்டில் ஒரு தூதனும் அமர்ந்திருந்தனர். இயேசு கிறிஸ்துவோ உயிர்த்தெழுந்து சென்று விட்டார்.

இந்த செய்தியை சீஷர்களுக்கு அறிவிக்க தேவதூதர்கள் சொன்னார்கள் (மாற். 16 : 4 – 7). எல்லாரும் போய்விட்டாலும் இறைவனிடம் மிகவும் அன்பு கூர்ந்த மகதலேனா மரியாள் அவருடைய சரீரத்தைக் காணாமையால் அழுது கொண்டு நின்றாள். இயேசு முதலாவது மகதலேனா மரியாளுக்கு தரிசனமானார் (யோ. 20 : 11 - 18 ; மாற் 16:9). இரண்டாவது கல்லறையை விட்டு செய்தி அறிவிக்க ஓடிய ஸ்திரீகளுக்கு தரிசனமானார் (மத். 28 : 8 - 10). மூன்றாவது தம்முடைய பிரதான சீஷனாகிய பேதுருவுக்கு கர்த்தர் தரிசனமானார் (லூக். 24 : 34 ; I கொரி 15 : 5). இதையே அதிகாரப்பூர்வமான முதலாம் தரிசனமாக சீஷர்கள் நம்புகின்றனர் (I கொரி. 15 : 5 ; லூக். 24 : 34).

நாலாவது அப்போஸ்தலருக்கு அன்றையதினமே மாலையில் அறைவீட்டை அடைத்துக் கொண்டிருக்கும்போது தரிசனமானார் (யோ. 20 : 19, 20). ஐந்தாவது எம்மாவூருக்குப்போன சீஷர்கள் இருவருக்கு (லூக்கா, கிலேயப்பா) கர்த்தர் தம்மை வெளிப்படுத்தினர் (லூக். 24 : 13 - 35). ஆறுவது எம்மாவு சீஷர்கள் வந்து கர்த்தர் உயிர்த்தெழுந்த செய்தியையும் தங்களுக்கு வெளிப்பட்ட விதத்தையும் அப்போஸ்தலருக்கு அறிவித்துக் கொண்டிருக்கும்போது கர்த்தர் மறுபடியும் தரிசனமானது. அப்பொழுது சீஷர்கள் அநேகரும் அவர்களுடன் இருந்தனர் (லூக். 24 :36 - 49 ). ஏழாவது மறுவாரம் தோமாவும் இருக்கும்போது தரிசனமானது (யோ. 20 : 26 - 29). எட்டாவது திபேரியாக் கடற்கரையில் தரிசனமானது (யோ. 21 : 1 - 23). ஒன்பதாவது ஐந்நூறு பேருக்கு அதிகமான சகோதரருக்கு (I கொரி 15 : 6); பத்தாவது யாக்கோபுவுக்கு (I கொரி. 15 : 7) பதினொன்றாவது பரமேறுமுன் அப்போஸ்தலருக்கு (லூக். 24 : 50 - 53 ; அப். 1 : 3 - 8 ; மாற். 16 : 19), பன்னிரண்டாவது தமஸ்குவுக்குப் போகும் வழியில் அப். பவுலுக்கு (அப். 9 : 1 - 17). இன்னும் அநேக தரிசனங்கள் உண்டாயிருந்தது (அப். 1 : 3).

இயேசுவின் உயிர்த்தெழுதலுக்கு அப்போஸ்தலர்கள் சாட்சிகள் (அப். 1 : 3, 2 : 2 : 15, 26 : 4 : 2, 20, 33 ; 5 : 29 - 32, 1 : 8 ; 22 : 17). அவருடைய உயிர்த்தெழுதலின் ஜீவனைப் பெற்று சாட்சியாய் ஜீவிக்கிற நாம் ஒவ்வொருவருமே இயேசு தேவன், அவர் மரித்தோரிலிருந்து உயிர்த்தெழுந்தார் என்பதற்கு சாட்சிகளாம்.

அவர் உயிர்த்தெழுந்ததினாலே நாமும் உயிர்த்தெழுவோம் என்றும் தலையாகிய அவர் முதற்பலனானவராகிய அவர் உயிர்த்து பரத்துக்கு போனபடியால் அவருடையவர்களாகிய நாம், அவருக்குள் இருக்கிறவர்களாகிய நாம் மரித்துவிட்டால் உயிர்த்து பரலோகம் செல்வோமென்றும், அவர் வருகையில் நாம் உயிரோடிருந்தால் மறுரூபமடைந்து பரலோகத்தில் நம்முடைய தலையாகிய அவர் இருக்கும் இடத்திற்குப் போய்ச் சேர்வோம். கர்த்தருடைய உயிர்த்தெழுதல் நமக்கு ஜீவனுள்ள நம்பிக்கையைக் கொடுக்கிறது (I பேது 1 : 4; I தெச 4 : 13-17). —ஆமென்.

---

''அவர் நம்முடைய பாவங்களுக்காக ஒப்புக் கொடுக்கப்பட்டும், நாம் நீதிமான்களாக்கப்படுவதற்காக எழுப்பப்பட்டும் இருக்கிறார்''-ரோமர் 4:25.

---

சு. விசேஷம்

## சமாதானம்

துன்மார்க்கருக்குச் சமாதானமில்லை என்று இறைவன் சொல்கிறார். உலகத்தில் மனிதர்கள் கொஞ்சம் கொஞ்சமாக சமாதானத்தை இழந்து கொண்டிருக்கிறார்கள். நம் முன்னோர்களுக்கு இல்லாத கவலையும் வருத்தமும் நமக்கு உண்டாகிக் கொண்டிருக்கிறது. அகில உலகத்தையும் சமாதானமின்மை ஆட்டிப்படைத்துக் கொண்டிருக்

கிறது. மாம்சமாகிய ஒன்றுக்கும் சமாதானமில்லை. இந்த சூழ்நிலையில் சமாதானமாய் வாழ்வதற்கான ஒரு வழியை நாங்கள் உங்களுக்கு அறிமுகப்படுத்துகிறோம்.

வாழ்க்கையின் இன்ப துன்பங்கள் அவரவர் விதியைப் பொறுத்ததல்ல. அது அவரவர்கள் தெரிந்து கொள்ளுவதைப் பொறுத்ததே. Life is not a chance but a choice. நன்மையைத் தெரிந்து கொண்டு வாழ்பவர்களுக்கு சுகமுண்டாகும். தீமையைத் தெரிந்து கொள்பவர்களுக்கு வேதனை உண்டாகும். நன்மையைக் காட்டிலும் தீமையை விரும்புவதே மனிதனின் சுபாவமாய் இருக்கிறது. ஆதலால் அவன் நித்தம் நித்தம் வேதனை அனுபவிக்கிறான்.

ஒரு பிரச்சனைக்குத் தீர்வு காணும்படியாய் மனிதன் எடுக்கிற முடிவு இன்னொரு பிரச்சனைக்குத் துவக்கமாகி விடுகிறது. அவன் தான் எடுத்த முடிவுகள் சரிதான் என்று நம்புகிறான். ஆனால் வேறொரு பிரச்சனையை அவன் சுமக்க வேண்டியதாகிறது. மனிதனுக்குச் செம்மையாய்த் தோன்றுகிற வழிகள் அனேகமுண்டு. அதன் முடிவோ மரணம்—வேதனை.

தீமையை ஒரு மனிதன் என்று வெறுக்க ஆரம்பிக்கிறானோ அன்றே அவன் சமாதானத்தின் வாயிலைக் காண்கிறான். ஆனால் மனிதனின் சுபாவமே தீமையை விரும்புகிறதாயிருக்கிறது. நன்மை செய்ய வேண்டும் என்கிற விருப்பம் உன்னிடத்தில் இருக்கலாம். ஆனால் நன்மை செய்கிறதோ உன்னிடத்தில் இல்லை. இனிமேல் இதைச் செய்யக் கூடாது என்று நீ வெறுத்து விட்டு விட்ட காரியங்களை மறுபடியும் அனேக வேளைகளில் செய்கிறாயல்லவா? இப்படி நீ விரும்புகிற நன்மையைச் செய்யாமல் வெறுக்கிற தீமையைச் செய்தால் நீ அல்ல உனக்குள் வாசமாயிருக்கிற பாவசுபாவமே அப்படி செய்கிறது. ஆதலால் நன்மை செய்ய விரும்புகிற உன்னிடத்தில் தீமையை உண்டு பண்ணுகிற ஒருபிரமாணம் இருக்கிறது. அது உன்னைப் பாவத்துக்குச் சிறையாக்குகிறது. பாவம் செய்கிற ஒருவருக்கும் சமாதானமில்லை.

பாவமானது இரு தன்மைகளாலானது. ஒன்று ஜென்ம பாவம். மற்றொன்று கர்ம பாவம். ஜென்ம பாவமானது ஆதி முதற்கொண்டு இரத்த சம்பந்த வாயிலாக மனிதனுக்குள் இருக்கிறது. கர்ம பாவமோ அவனது கிரியைகளினால் அல்லது அவைகளை நடப்பிப்பதினால் உண்டாகிறது. ஒரு தீமையான பழக்கத்தை வெறுக்க ஆரம்பித்தாலும், விட்டுவிட்டாலும் அதை மறுபடியும் விரும்புகிற ஒரு தன்மை உனக்குள் இருக்கிறதல்லவா? அது ஜென்ம பாவத்தின் பலனாயிருக்கிறது. பயிற்சியினாலும், மன அடக்கங்களினாலும் கர்ம பாவத்தை ஓரளவு மேற்கொள்ள முடியும். ஆனால் ஜென்ம பாவமோ இரத்த சம்பந்தம் உடையதாயிருப்பதால் மனித இரத்தமுள்ள யாவருக்குள்ளும் அது நிலை நிற்கிறது. அது மனிதன் வெறுத்து விட்ட கர்ம பாவங்களை மறுபடியும் தூண்டும். செய்ய வைக்கும். பாவத்திலேயே மனிதன் நிலைநிற்பதின் இரகசியம் இதுவே.

ஒருவன் சமாதானமாய் வாழ வேண்டுமானால் அவன் தன் துன்மார்க்கத்தை விட்டு மனந்திரும்ப வேண்டும். பாவத்தை எதிர்க்க வேண்டும். அதை விட்டு விட வேண்டும். தன்னிலே நிலை கொண்டிருக்கிற ஜென்ம பாவத்தையும், கர்ம பாவங்களையும் விட்டு அவன் ஓய வேண்டும். மனம் மாறுகிறதினால் கர்ம பாவத்துக்கு நீங்கலாயிருக்க முடியும். ஆனால் இரத்த சம்பந்தத்தினாலான ஜென்ம பாவத்தை விட்டு ஒருவன் நீங்க வேண்டுமானால் அவனது இரத்தமே மாறுதல் அடைய வேண்டும். மனிதனால் அது கூடாதென்பதால் அவனை உருவாக்கின இறைவனே வேறொரு வழியை உண்டாக்கியிருக்கிறார். உனக்குள் இருக்கிற பாவப் பிரமாணத்தை அகற்றும்படி இறைவன் வேறொரு பிரமாணத்தை உனக்கு கட்டளையிட்டிருக்கிறார். அதுவே கிறிஸ்துவின் பிரமாணம்.

பிள்ளைகள் இரத்தத்தையும் மாமிசத்தையும் உடையவர்களாயிருப்பதால் இயேசு கிறிஸ்துவும் மாம்ச சாயலில் வெளிப்பட்டார். பாவமில்லாதவராகவே வெளிப்பட்டார். அவரிடத்தில் பாவப் பிரமாணம் இல்லை அவர் பூரண பரிசுத்தராய் ஜீவித்தார். உன் பாவங்களை நீக்கும்படியாய் பாவப்பிரமாணத்தை உன்னிலிருந்து அகற்றும் படியாய் அவர் தன்னுடைய இரத்தத்தையே உனக்காய் சிந்தினார். அவரது இரத்தம் சகல பாவங்களையும் நீக்கி உன்னைச் சுத்திகரிக்கிறது.

பாவப்பிரமாணமானது உன்னை பாவம் செய்ய வைப்பது போல் கிறிஸ்து இயேசுவினாலே ஜீவனுடைய ஆவியின் பிரமாணம் உன்னை பாவத்திலிருந்து விடுதலையாக்குகிறது. ஆம்! என்னே ஆச்சரியம்!! மனிதன் விடுதலையாகக் கூடாதிருக்கிற பாவப்பிரமாணத்திலிருந்து அவரது இரத்தம் விடுதலையாக்குகிறது. இன்றே அவரை ஏற்றுக் கொள்ளும்படியாய் இதை உங்களுக்கு அறிவிக்கிறோம். "எனக்காக கர்த்தராகிய இயேசு கிறிஸ்து மனிதனாக இவ்வுலகத்திற்கு வந்தார். என் பாவங்களுக்காக இரத்தம் சிந்தினார். அவர் சிந்தின இரத்தத்தினால் பாவமன்னிப்பாகிய மீட்பு எனக்குள் உண்டாகிறது. அந்த இரத்தத்தால் பாவங்களை ஜெயிக்கும் ஒரு புதிய கிறிஸ்துவின் பிரமாணம்—ஜீவனுடைய ஆவியின் பிரமாணம் உண்டு" என்று நீ முழுமனதோடு நம்பி அவரை உன் இருதயத்தில் ஏற்றுக் கொண்டால் உனக்கு விடுதலை உண்டாகும்.

பாவம் செய்கிற எவனும் பாவத்துக்கு அடிமையாயிருக்கிறான். அடிமையாயிருக்கிற எவனுக்கும் விடுதலை அவசியம்! விடுதலை அடையும் வரை அவனுக்குச் சமாதானமில்லை. அந்த விடுதலையை இலவசமாக பெற்றுக் கொள்ள இறைவனாகிய இயேசுவின் உதவியை நாடுங்கள். நீ பாவத்திலிருந்து விடுதலை அடையும் படி, சந்தோஷமாய் வாழும்படி உனக்காக எல்லாவற்றையும் அவர் கல்வாரிச் சிலுவையிலே செய்து முடித்து விட்டார். இன்றே அவரை ஏற்றுக் கொள். அவர் உன்னை விடுதலையாக்குவார். மெய் சமாதானம் அருளுவார். ஆம் அப்படியே ஆகும்.

கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசி உனக்கு சமாதானமுண்டாகும்.

"...உனக்கு சமாதானம் உண்டாவதாக..."
III யோ:14

# பாவமன்னிப்பு அதிகாரம்

"இயேசு மறுபடியும் அவர்களை நோக்கி: உங்களுக்கு சமாதானமுண்டாவதாக; பிதா என்னை அனுப்பினது போல நானும் உங்களை அனுப்புகிறேன் என்று சொல்லி அவர்கள் மேல் ஊதி பரிசுத்த ஆவியைப் பெற்றுக் கொள்ளுங்கள்; எவர்களுடைய பாவங்களை மன்னிக்கிறீர்களோ அவைகள் அவர்களுக்கு மன்னிக்கப்படும், எவர்களுடைய பாவங்களை மன்னியாதிருக்கிறீர்களோ அவைகள் அவர்களுக்கு மன்னிக்கப்படாதிருக்கும் என்றார்" (யோ. 20:21, 22, 23).

உயிர்த்தெழுந்த இயேசு கிறிஸ்துவினால் அனுப்பப்பட்ட அப்போஸ்தலருக்கு இயேசு கிறிஸ்து அளித்த முதலாவது அதிகாரமும் கட்டளையும் பாவமன்னிப்பு அதிகாரமேயாகும். தாங்கள் வேதத்தின்படி நடக்கிறோம் என்று சாதிக்கிறவர்களும் இந்த வசனத்தை மறுதலிக்கிறார்கள். பிதா என்னை எல்லா அதிகாரமும் கொடுத்து அனுப்பினது போல நானும் உங்களை அனுப்புகிறேன் என்று திருச்சபையின் தலையாகிய இயேசு கிறிஸ்து சொல்லுகிறார்.

இயேசு கிறிஸ்து உயிரோடு மாம்சத்திலிருந்த நாட்களில் இந்த அதிகாரமும் கட்டளையும் வழங்கப்படவில்லை. உயிர்த்தெழுந்த பின் தாம் பரத்துக்கெழுந்தருளப் போவதால் இப்பொழுது தமக்குப் பதிலாக உலகத்துக்குள் சீஷர்களை அப்போஸ்தலராக அனுப்புகிறார். இயேசு ஜெபம் பண்ணும்படி ஒரு மலையின் மேல் ஏறி இரா முழுவதும் தேவனை நோக்கி ஜெபம் பண்ணிக் கொண்டிருந்துவிட்டு பொழுது விடிந்ததும் அவர் தம்முடைய சீஷர்களை வரவழைத்து அவர்களில் பன்னிரண்டு பேரைத் தெரிந்து கொண்டு அவர்களுக்கு அப்போஸ்தலர் என்று பேரிட்டார். அவர்களுக்கு சில அதிகாரங்களையும், கட்டளைகளையும் கொடுத்தபோதிலும் அவர்களை அப்போஸ்தலர்களாக இப்பொழுதுதான் அனுப்புகிறார் (லூக். 6 : 12, 13 ; யோ 20 :19, 20, 21). இந்த கட்டளையும் அதிகாரமும் யூதாசுக்கு கிடையாது. இயேசு கிறிஸ்துவினால் அப்போஸ்தலனாக அனுப்பப்படுகிறவர்களுக்கே உண்டு. அவர்களுக்கே விளங்கும். அனுப்பப்படாதவர்களுக்கு இந்த அதிகாரம் கிடையாது.

சிலர் மனிதர்களுக்கு பாவங்களை மன்னிக்க அதிகாரமில்லை என்பர். தேவன் ஒருவரேயன்றி பாவங்களை மன்னிக்கத் தக்கவர் யார்? என்று அன்று இருந்த வேத பாரகர் சிந்தித்தனர். ஜனங்களோ மனுஷருக்கு இப்படிப்பட்ட அதிகாரத்தைக் கொடுத்த தேவனை மகிமைப் படுத்தினார்கள் (மத். 9 : 1 – 8). மனிதனுக்கு அதிகாரம் கிடையாது பாவங்களை மன்னிக்க. மனிதன் என்றால் இரட்சிக்கப்படாத பாவியாகிய மனிதன் என்று அர்த்தம். புதிய ஏற்பாட்டில் தேவனுடைய பிள்ளைகளை, தேவ ஊழியர்களை மனிதன் என்று வேதம் குறிப்பிடவில்லை. தேவனுடைய பிள்ளைகள், தேவனுடைய புத்திரர், பரிசுத்தவான்கள், சகோதரர், விசுவாசிகள் ராஜரிக ஆசாரியர்கள் தேவனுடைய சபை என்று அழைக்கிறது.

பாவங்களை மன்னிக்க தேவனுக்கு அதிகாரமுண்டு. இயேசு கிறிஸ்துவுக்கு அதிகாரமுண்டு, அப்போஸ்தலருக்கு அதிகாரமுண்டு. இயேசு கிறிஸ்துவும் அப்போஸ்தலர் வரிசையில் வருகின்றார். "இப்படியிருக்க பரம அழைப்புக்கு பங்குள்ளவர்களாகிய பரிசுத்த சகோதரரே நாம் அறிக்கை பண்ணுகிற அப்போஸ்தலரும் பிரதான ஆசாரியருமாயிருக்கிற கிறிஸ்து இயேசுவைக் கவனித்துப் பாருங்கள்" (எபி. 3 : 1). இந்த பாவங்களை மன்னிக்கும் அதிகாரம் சபைக்கு தேவன் அருளிய அதிகாரம். தங்களிடம் அறிக்கை செய்கிற விசுவாசிகளுடைய பாவங்களை மன்னிக்க பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு அதிகாரம் உண்டு (யோ. 20 : 21 – 23).

சபைகளில் கூடி ஜெபிக்கும் போது பாவ அறிக்கை செய்து பொது ஜெபம் செய்கிறபோது மகனே, மகளே உன் பாவங்கள் மன்னிக்கப்பட்டது என்று சிலர் தீர்க்கதரிசனம் சொல்லுகிறதுண்டு. இது எந்த வசனத்தின்படி செய்கிறார்கள்? தேவ ஆவியானவர் அவர்களிலிருந்து பேசுகிறார் அல்லவா.

C. S. I. யின் ஜெப புஸ்தகத்தில் குருவானவர் வியாதியஸ்தரை சந்திக்கும் பாகத்தில் வியாதியஸ்தன் மனதில், மன சாட்சியில் உறுத்தும் பாவம் உண்டென்றால் அதை குருவானவரிடம் அறிக்கை செய்யக் கடவன். குருவானவர் நான் உன் பாவங்களை மன்னித்தேன் என்று சொல்லக்கடவர் என்றுள்ளதை கவனிக்க.

யோ : 20: 23ன் சரியான அர்த்தங்கள்:

1. அப்போஸ்தலரிடத்தில் எவர்கள் தங்களுடைய பாவங்களை அறிக்கையிடுகிறார்களோ அவைகள் அவர்களுக்கு மன்னிக்கப்படுகிறது. அறிக்கையிடப்படாத பாவங்கள் அவர்களுக்கு மன்னிக்கப்படவில்லை.

2. அப்போஸ்தலர்கள் எவர்களுடைய பாவங்களை மன்னிக்கிறார்களோ அவைகளைக் கர்த்தர் மன்னிக்கிறார். எவர்களுடைய பாவங்களை அப்போஸ்தலர் மன்னிக்கவில்லையோ அவைகளைக் கர்த்தர் மன்னிக்கவில்லை.

3. எவர்களுடைய பாவங்களை கர்த்தர் மன்னிக்கிறாரோ அவைகளை அப்போஸ்தலன் வாயின்மூலம் மன்னித்தேன் என்று வாக்கருள்கிறார். எவர்களுடைய பாவங்களைக் கர்த்தர் மன்னிக்கவில்லையோ அப்போஸ்தலனும் மன்னிக்கவில்லை.

4. கர்த்தர் அவர்களுடைய பாவங்களை மன்னிக்கிறார் அல்லது மன்னிக்கவில்லை என்று அறிவிப்பது ஜெபத்தின் மூலம் ஆவியில் அறிந்து அறிவிப்பது.

5. அப்போஸ்தலர்கள் தங்களிடத்தில் எவர்கள் தங்கள் பாவங்களை அறிக்கை செய்கிறார்களோ அவர்களுக்காக கர்த்தரிடத்தில் ஜெபம் பண்ணி பாவமன்னிப்பு வாங்கிக் கொடுப்பதென்றும், மற்றவர்கள் தங்களிடம் அறிக்கை செய்யாததினால் அவர்களுக்காக ஜெபிப்பதில்லையாதலால் அவர்கள் பாவங்கள் மன்னிக்கப் படுவதில்லை என்று அர்த்தம்.

இதற்கு மாறுப் பாராவது யோ. 20:23 க்கு விளக்கம் கொடுத்தார்களென்றால் அது அவர்களுக்குப் பாவமாகும். பாவங்களை மன்னிக்கும் அதிகாரம் திருச்சபையின் திறவுகோலின் அதிகாரம். கட்டவும், கட்டவிழ்க்கவும், ஒரு மனிதனை அவன் பாவத்தில் கட்டி வைப்பதும் (சுமத்து

தல்) அவனை அப்பாவத்திலிருந்து கட்டவிழ்ப்பதுமான அதிகாரமாகும். ஆம், அப்போஸ்தலருக்கு, மெய்யான சபைக்கு கட்டவும் கட்டவிழ்க்கவும், அதிகாரமுண்டு. இதை இயேசு கிறிஸ்துவினிடத்திலிருந்து பெற்றுக்கொண்டோம். இதை உங்களுக்கு அறிவிக்கிறோம். பாவ மன்னிப்பு அதிகாரமுடையவனே அப்போஸ்தலன். வாழ்க இறை இயேசுவின அதிகாரம்!

---

"...பரலோகத்திலிருந்து ஒருவனுக்குக் கொடுக்கப்பட்டாலொழிய, அவன் ஒன்றையும் பெற்றுக்கொள்ளமாட்டான்"-யோ. 3:27

---

# நீ என்னை நேசிக்கிறாயா?

ஒரு பக்தன் இறைவனை நோக்கி : ஆண்டவரே, இந்தப் பட்டணம் இருளடைந்திருக்கிறது. ஜனங்களெல்லாம் பல விதமான பாவங்களில் சிக்கி, உம்மை அறியாதபடிக்கு குருடராய் அழிவை நோக்கி திவிசித்து கடந்து செல்கிறார்கள். இவர்களுக்கு ஒளியைக் கட்டளையிடும். இந்த பட்டணத்திலே வெளிச்சம்பிரகாசிக்கட்டும் என விண்ணப்பம் பண்ணினான். ஆண்டவர் "நீ என்னை நேசிக்கிறாயா?" என்று கேள்வி கேட்டார். அதாவது இந்த பட்டணத்திலே ஒளி பிரகாசிக்க வேண்டுமானால் நீ என்னை நேசிக்க வேண்டும் என்று ஆண்டவர் வெளிப்படுத்தினார்.

பரி. பவுல் கர்த்தரை சந்தித்த நாளிலே "ஆண்டவரே நான் என்ன செய்ய நீர் சித்தமாக இருக்கிறீர்" என்று தன்னை முழுவதுமாக கர்த்தருக்கு ஒப்புக் கொடுத்தார். கர்த்தர் அவரை நோக்கி, ஜனங்கள் இருளை விட்டு ஒளியினிடத்திற்கும் சாத்தானுடைய அதிகாரத்தை விட்டுத் தேவனிடத்திற்கும் திரும்பும் படிக்கு நீ அவர்களுடைய கண்களைத் திறக்கும் பொருட்டு இப்பொழுது உன்னை அவர்களிடத்திற்கு அனுப்புகிறேன் என்றார் (அப். 26 : 18).

இருளில் இருக்கிற ஜனங்கள் வெளிச்சமடைய வேண்டுமானால் ஒளியைப் பெற்றவர்களால் மாத்திரமே முடியும். பரிசுத்த பேதுருவைக் கொண்டு உலகிற்கு ஒளியைக் கட்டளையிட விரும்பின தேவன் "நீ என்னை நேசிக்கிறாயா? என்று அவரிடம் மூன்று முறைக் கேட்டார். அவரும் நான் உம்மை நேசிக்கிறேன், ஆண்டவரே, நான் உம்மை நேசிக்கிறேன் என்பதை நீர் அறிவீர் என்றார். ஆண்டவர் அவருடைய கரத்தில் தம்முடைய ஆடுகளையும், ஆட்டுக் குட்டிகளையும் மேய்க்கும் பொறுப்பைக் கொடுத்தார் (யோ. 21 : 15-17).

தன்னைப் பார்த்து, நீ என்னை நேசிக்கிறாயா?" என்று ஆண்டவர் கேட்டபடியால் பரி. பேதுரு இறைவனாகிய இயேசுவை எவ்வகையில் நேசித்தார் என்பதைக் குறித்து ஆராய்வோம். அவைகளில் சில :

"உமது நிமித்தம் எல்லாரும் இடறலடைந்தாலும், நான் ஒருக்காலும் இடறலடையேன்" (மத். 26 : 33) என்று உள்ளத்தின் அடித்தள உறுதியை வெளிப்படுத்தினார். எந்த நிலை வந்தாலும் இயேசுவை விட்டு விலகமாட்டேன் என்ற உண்மையான உறுதி கொண்டிருந்தார். எல்லாரும் இடறலடைந்து போனாலும் நான் ஒருக்காலும் இடறமாட்டேன் என்றார். பரிசுத்த பவுலும், உபத்திரவம், வியாகுலம், துன்பம், பசி, நிர்வாணம், நாச மோசம், பட்டயம், மரணம், உயர்வு, தாழ்வு, இப்படிப்பட்ட எதுவும் கிறிஸ்துவின் மீது நான் கொண்டிருக்கிற அன்பை விட்டு பிரிக்க முடியாதென்று நிச்சயித்திருப்பதாய்ச் சொல்கிறார். இவர் மூலம் வெளிச்சம் பிரகாசித்தது. உலகிற்கு ஒளியாயிருக்கிற நமது மூலம் வெளிச்சம் இருளிலே பிரகாசிக்க வேண்டுமானால் ஒருக்காலும், இடறிப் போவதில்லை என்ற நம்பிக்கையுள்ள தீர்மானமுடையவர்களாயிருக்க வேண்டும்.

ஆண்டவராகிய இயேசுவை பிடித்துக் கொள்ளும்படி பட்டயங்களோடும், தடிகளோடும் போர்ச் சேவகர்கள் வந்தபோது பேதுருவானவர் தன்னுடையக் குருவுக்கு வருகிறதான ஆபத்தைக் கண்டு பட்டயத்தை உருவி போர்ச் சேவகனுடைய

வலது காதற வெட்டினார். இப்படி தன்னுடைய குருவின் மீது கொண்ட நேசத்தினால் வைராக்கியம் கொண்டு அதனால் உண்டான தைரியத்தை வெளிப்படுத்தினார். வேதத்தை நேசிக்கிறவர்கள் அதைக் கைக் கொள்ளுகிறார்கள். கைக் கொள்ளாத துன்மார்க்கரோடு போராடுகிறார்கள் (நீதி 28 : 4). பூரண அன்பு பயத்தைப் புறம்பே தள்ளும் (I யோ 4 : 18). கிறிஸ்துவினுடைய அன்பு பரிசுத்த பவுலை நெருக்கினபடியால், ஜனங்கள் சாத்தானுக்கு மகிமை செலுத்துவதை, இறைவனை அறியாதபடிக்கு தீங்கு செய்வதை பொறுக்கமாட்டாமல் முன்னேறினார். எதிர்ப்புகளை பொருட்படுத்தவில்லை. கிறிஸ்து எனக்கு ஜீவன்; சாவு எனக்கு ஆதாயம் என்று ஆவியிலே வைராக்கியம் கொண்டு கிறிஸ்துவை அறிவித்தார். ஜனங்கள் இருளை விட்டு ஒளியினிடத்திற்கு வந்தார்கள்.

பேதுரு மற்ற சீஷர்களோடே மீன் பிடித்துக்கொண்டு படகிலே இருந்த போது, கர்த்தர் கரையிலே காணப்பட்டார். கரையில் நிற்பது கர்த்தர் என்பதை அறிந்தவுடன் தான் வஸ்திரமில்லாதிருந்தபடியால் தன் மேல் சட்டையைக் கட்டிக் கொண்டு கடலிலே குதித்து அவரைச் சந்திக்க ஓடி வந்து விட்டார் (யோவா 21 : 7). தன்னுடைய நிர்வாணத்தை மூட இடுப்பிலேக் கட்டக் கூடிய துணியைத் தேடிக்கொண்டு கர்த்தரை சந்திக்க கால தாமதம் பண்ணிக் கொண்டிருக்கவில்லை. தண்ணீருக்குள் குதிக்க வருத்தப்படவில்லை இருநூறு முழ தூரத்தைப் பொருட்படுத்தவில்லை. கர்த்தரண்டை வர வேண்டும். இதுவே அவர் நோக்கம் இவ்விதமாய் கர்த்தரை தான் நேசிப்பதை வெளிப்படுத்தினார்.

இன்றைக்கு பரிசுத்த ஆராதனை வாரத்தில் ஒரு நாள் தேவ ஜனங்களோடு கூடி ஆராதிக்க, அவரின் அன்பை பகிர்ந்து கொள்ள ஒரு தருணம், இறைவன் இதை விரும்புகிறார் என்று அறிந்தும், பலரும் பார்த்து மதிக்கக்கூடிய பகட்டான வஸ்திரமில்லை, இவ்வளவு தூரம் பிரயாணம் பண்ண வேண்டும். இத்தனை ரூபாய் செலவு பண்ண வேண்டும். இன்றைக்கு மப்பும் மந்தாரமுமாயிருக்கிறது, மழை வந்தாலும் வந்து விடும். அல்லது வெயில் அதிகமாயிருக்கிறது. இப்படிப் போன்ற காரணங்களைக் கூறி வீட்டிலேயே இருந்து விட்டு, "நான் நேசிக்கும் தேவன் இயேசு" என்று பாடுவது பொய்யல்லவா. இப்படிப்பட்டவர்கள் மூலம் எப்படி வெளிச்சம் பிரகாசிக்கும்.

பிரியமானவர்களே தகப்பனைக் கண்டதும் பாய்ந்து வருகிற குழந்தைகளைப் போல இயேசுவிடம் நேசங் கொள்வோம் வெளிச்சம் கொடுப்போம்.

சீஷர்களுக்கு போஜனம் கொடுக்கும்படி இயேசு அவர்களை நீங்கள் இப்பொழுது பிடித்த மீன்களில் சிலவற்றைக் கொண்டு வாருங்கள் என்றார் (யோவா 21 : 10). அங்கே பலர் கர்த்தரை சூழ்ந்திருக்க ஆண்டவர் சொன்னவுடனே, ஆண்டவரை நேசிக்கும் பேதுரு உடனே முந்தினார். பேதுரு படகில் ஏறி நூற்றைம்பத்து மூன்று பெரிய மீன்களுள்ள வலையைக் கரையில் இழுத்தார் (யோவா 21 : 11).

இவ்விதமாய் ஆண்டவருடைய சேவையை செய்வதில் முன் நின்று தன்னுடைய பணிவும், தாழ்மையுமான நேசத்தை வெளிப்படுத்தினார். கர்த்தருடைய காரியங்களை செய்வதில் முந்திக் கொள்வோமானால் நாமும் சோர்ந்து போகாமல் செயல்படுவோமானால் இருளிலிருக்கிற அநேகருக்கு வெளிச்சங் கொடுப்போம். நாம் இயேசு கிறிஸ்துவை நேசிக்கிறோம் என்பதும் வெளிப்படும்.

"நீங்கள் உலகத்துக்கு வெளிச்சமாயிருக்கிறீர்கள்" (மத். 5 : 14).

---

"...நீ ஆதியில் கொண்டிருந்த அன்பை விட்டாய் என்று உன் பேரில் எனக்கு குறையுண்டு"— வெளி. 2 : 4

---

(தொடர்ச்சி)

# மோட்ச வழி

## குரு–சிஷ்ய உரையாடல்

ஐந்தாம் கற்பனை : 'உன் நாட்கள் நீடித்திருப்பதற்கு உன் தகப்பனையும் உன் தாயையும் கனம் பண்ணுவாயாக' —யாத். 20:12

இதன் அர்த்தம் நாம் தேவனுக்குப் பயந்து அவர் மேல் அன்பு பூண்டு நம் மாம்ச பிரகாரமான பெற்றோர்களையும், ஆவிக்குரிய பெற்றோர்களையும், அதிகாரிகளையும் கனம் பண்ண வேண்டும். அவர்களுக்குக் கீழ்ப்படிந்து ஊழியம் செய்து பாசத்தையும், மரியாதையையும் காட்ட வேண்டும். ஈசாக்கு (ஆதி. 28:7); எலிசா (II இராஜ.2:1 2); பவுல் (I கொரி. 4:15); யோசேப்பு (ஆதி. 41:43). பெற்றோர்களையும், எஜமான்கள்—அதிகாரிகளை தேவன் அருளிய ஈவாக எண்ணி மதிப்பதினாலும், தேவ பிரதிநிதிகளாக அவர்களை எண்ணி தம்மால் செய்யக் கூடியதை அவர்களுக்குச் செய்து, அவர்கள் அதிகாரத்துக்குட்பட்ட எல்லாவற்றிற்கும் கீழ்ப்படிந்து நடப்பதினால் இந்த கற்பனையை நிறைவேற்றினவர்களாவோம். உன் பெற்றோர்களுக்கு கீழ்ப்படி (எபேசி 6:2,3). அது தேவனுக்கு பிரியம் (கொலோ 3:20) தகப்பன் சொல் கேள் தாயை முதிர் வயதில் அசட்டை செய்யாதே (நீதி. 23:22). பெற்றோருக்கு பதில் நன்மை செய் (I தீமோ 5:4). உங்களை நடத்துகிறவர்களுக்கு—வழிகாட்டுகிறவர்களுக்கு கீழ்ப்படிந்து அடங்கு (எபி. 13:17). புத்தி சொல்லி ஊழியம் செய்கிறவர்களை கனமாய் அன்பாய் எண்ணு (I தெச 5:11,12). மேலான அதிகாரமுள்ளவர்களுக்கு கீழ்ப்படி (ரோம. 13;1). நரைத்தவனுக்கு முன் எழுந்து முதிர் வயதுள்ளவன் முகத்தைக் கனம் பண்ணு (லேவி. 19:32). தேவனுக்கு கீழ்ப்படி.

**ஆறும் கற்பனை:** 'கொலை செய்யாதிருப்பாயாக'—யாத். 20:13. நாம் தேவனுக்குப் பயந்து அவர் மேல் அன்பு கூர்ந்து அவர் சிருஷ்டித்த மனிதனுடைய சரீரத்தை சேதப்படுத்தாமலும், யாதொரு தீங்கும் செய்யாமலும் மனிதருடைய சரீர இக்கட்டுகளில் உதவ வேண்டும். இதன் அர்த்தம்; நாம் பிறனுடைய சரீரத்திற்கு சேதமோ, ஆபத்தோ வருவிக்கக் கூடாது. அவனுடைய ஜீவனை அழிக்கவோ, குறைக்கவோ, கசப்பாக்கவோ ஏதுவான எதையும் செய்யவும், சொல்லவும், நம்முடைய இருதயத்திலும் பகை கொள்ளவுங் கூடாது.

எவன் மனுஷனைக் கொலை செய்வானோ அவன் கொலை செய்யப்படுவான் (ஆதி.9:6) பட்டயத்தை எடுக்கிற யாவரும் பட்டயத்தால் மடிவர் (மத். 26:52). நீங்கள் சிக்கு சரிக்கட்ட வேண்டாம். அதை நான் செய்வேன் என்கிறார் கர்த்தர் (ரோமர். 12:19). தன் சகோதரனை நியாயமில்லாமல் கோபிப்பவன், கீழ்த்தரமாய் தூஷிப்பவன் குற்றவாளி (மத். 5:21,22) தன் சகோதரனைப் பகைக்கிறவனில் நித்திய ஜீவனில்லை (I யோ 3:15). இருதயத்திலிருந்து கொலை புறப்படுகிறது (மாற்கு 7: 18-23). கவலையீனத்தினால் உயிர்சேதம் உண்டுபண்ணாதே (உபா. 22:8). நாம் பிறனுடைய சகல சரீர இக்கட்டுகளிலேயும் ஒத்தாசையிருந்து உபகாரம் பண்ணி அவன் பேரில் இரக்கம் வைத்து சாந்தமும், ஒப்புரவாகும் சிந்தையுமுடையவர்களாயிருக்க வேண்டும். பசியுள்ளவனுக்கு ஆகாரம் கொடு. வஸ்திரமில்லாதவனுக்கு வஸ்திரம் தரிப்பி. (ஏசா 58:7). உன் சத்துருவுக்கும் அப்படியே செய் (ரோம 12:20). சாந்தம், இரக்கம், சமாதானம் உடையவனாயிரு (மத். 5:5,7,9). எதிரியோடு வழியிலே நல்மனம் பொருந்து. (மத் 5:25). காண் : ஆபிரகாம் (ஆதி. 14:12-24); தாவீது (I சாமு. 26:9); இரக்கமுள்ள சமாரியன் (லூக். 10:33). நியாயதீர்ப்பும் இதன்படியே வரும். (மத். 25:31-46).

(தொடரும்)

> "கட்டளையைக் காத்துக் கொள்கிறவன் தன் ஆத்துமாவைக் காக்கிறான்"—நீதி. 19:16

(தொடர்ச்சி)

## வேத பாடம்

**ஆதியாகமம் 26:34,35**

ஏசா கானானிய ஸ்திரீகளில் பெண்ணெடுக்கிறான். அவர்கள் ஈசாக்குக்கும்,ரெபெக்காளுக்கும் மனநோவாயிருந்தார்கள். கானானியருடைய குமாரத்திகள் தன் தகப்பனாகிய

ஈசாக்கின் பார்வைக்கு ஆகாதவர்கள் என்று அறிந்து இஸ்மவேலின் குமாரத்தியையும் விவாகம் பண்ணுகிறான் தகப்பனை மனநோவடையச் செய்யும்படி (ஆதி 28:8). ஏசா தன் இஷ்டப்படி தனக்கு மனைவிகளைத் தெரிந்து கொள்கிறான். ஏசாவின் அசட்டைப் புத்திக்கு இதுவும் ஒரு சான்று

27:1-5 ஈசாக்கு முதிர்வயதானபோது கண்களின் பார்வையற்றுப் போகிறது. அப்போது தன் குமாரன் ஏசாவை ஈசாக்கு அழைத்து நான் மரணமடையும் முன்னே உன்னை ஆசீர்வதிக்கும்படி நீ வேட்டையாடி எனக்கு சமைத்துக் கொண்டுவா என்றார். இதை ரெபெக்காள் கேட்டுக் கொண்டிருந்தாள். ஏசா வேட்டையாடி தன் வாய்க்கு ருசியான பதார்த்தங்களைச் சமைத்துக் கொடுப்பதால் ஈசாக்கு ஏசாமேல் பட்சமாயிருந்தார். வாக்குத்தத்தை எண்ணி ரெபெக்காள் யாக்கோபு மேல் பட்சமாயிருந்தாள் (ஆதி. 25:28). ஏசா தீவிரமாய் வேட்டையாடப் போனதை ரெபெக்காள் பார்த்தாள்.

27:6-13 ரெபெக்காள் இளையமகன் யாக்கோபை அழைத்து, தகப்பன் ஏசாவுக்கு ஆசீர்வாதம் வழங்கப் போகும் விஷயத்தை அறிவித்து தான் சொல்லுகிறபடி செய்து ஆசீர்வாதத்தைப் பெற்றுக் கொள்ளுமாறு போதிக்கிறாள். யாக்கோபு பயந்து நான் கண்டுபிடிக்கப்பட்டால் ஆசீர்வாதத்துக்குப் பதில் சாபத்தை அடைய வேண்டியதிருக்குமே? என்கிறார்.

27,14-30 தாயின் தூண்டுதலின்படி தகப்பனிடம் தன்னை ஏசா என்று சொல்லி நடித்து ஆசீர்வாதம் பெற்றுக் கொள்கிறார். தேவனுடைய சித்தமும் யாக்கோபு ஆசீர்வாதம் பெற வேண்டும் என்பதே. ஏசா ஈசாக்கின் அந்திய காலத்தில் தான் வேட்டையாடி வந்தவைகளை ஈசாக்கின் வாய்க்கு ருசியான பதார்த்தங்களாக சமைத்துக் கொடுத்ததினால் ஈசாக்கு ஏசாவின் மேல் பிரியமாயிருந்து யாக்கோபுக்கு மேல் எஜமானாக நியமிக்க எண்ணினார். தேவ சித்தமோ வேறாக இருந்தது.

27:80-40 யாக்கோபு ஆசீர்வாதம் பெற்று சென்றபின் ஏசா தகப்பனுக்கு பிரியமான ஆகாரத்தைக் கொண்டு வந்து "என தகப்பனே, எழுந்து புசித்து குடித்து என்னை ஆசீர்வதியும்" என்றான். ஈசாக்கு நீ யார் என்றதற்கு நான் உம்முடைய மூத்தகுமாரனாகிய ஏசா என்று சொன்னதும் ஈசாக்கு திகைத்து முன் வந்து ஆசீர்வாதம் பெறறு சென்றது யாக்கோபு என்றறிந்து ஆச்சரியப்பட்டு "உன் தம்பி வந்து ஆசீர்வாதத்தைப் பெற்றுக் கொண்டான். அவன் ஆசீர்வதிக்கப்பட்டவனுமாயிருப்பான் என்றுரைத்தார். ஏசா அழுது மன்றாடியும் ஈசாக்கின் இருதயத்தில் எந்த மாற்றமும் ஏற்படவில்லை.

27:41-46 யாக்கோபு ஆசீர்வதிக்கப்பட்டதைக் கண்டு சீர் கெட்ட ஏசா யாக்கோபை கொலை செய்ய திட்டமிட்டான். தான் சேஷ்ட புத்திர பாகத்தை மனமறிய யாக்கோபுக்கு விற்றுவிட்டதை உணரவில்லை. இப்படியே ஆவிக்குரிய வாழ்க்கையில் தாங்கள் அசட்டையாய் நடந்து கொண்டதை மறந்து விட்டு பொறுப்புகளை மற்றவர்களுக்கு விட்டுவிட்டு பின் தேவனால் ஆசீர்வதிக்கப்பட்டவர்கள் மேல் பொறாமை கொள்வர். ஏசாவின் துர் ஆலோசனை தாய்க்கு தெரிய வந்தது. யாக்கோபை மாமன் வீட்டுக்கு அனுப்பிவிட முடிவு செய்தாள்.

(தொடரும்)

"ஒருவனும் வேசிக்கள்ளனாகவும், ஒரு வேளைப் போஜனத்துக்காகத் தன் சேஷ்டபுத்திரபாகத்தை விற்றுப்போட்ட ஏசாவைப் போலச் சீர்கெட்டவனாகவும் இராதபடிக்கும் எச்சரிக்கையாயிருங்கள்"—எபி. 12:16

# கண்ணீர் சிந்தி அழுது ஜெபிப்போம்

"அவர் மாம்சத்திலிருந்த நாட்களில் தம்மை மரணத்திலிருந்து இரட்சிக்க வல்லவரை நோக்கி பலத்த சத்தத்தோடும் கண்ணீரோடும் விண்ணப்பம் செய்து வேண்டுதல் செய்து கேட்கப்பட்டார்" (எபி. 5 : 7).

ஜெப ஒழுங்குகளில் ஒன்று கண்ணீர் விட்டு அழுது ஜெபிப்பதாகும். இவ்வித ஜெபத்தைக் கேட்டு தேவன் உடனடியாக பதில் கொடுக்கிறதாக சத்திய வேதம் சொல்லுகிறது. நாம் ஜெபத்தில் ஏதாவது தியாகம் பண்ணுவதை, பலியிடுவதை தேவன் விரும்புகிறார். காலையில் எழுந்து ஜெபிப்பது, குறித்த வேளையில் ஜெபிப்பது, ஒன்றுக்கு மேற்பட்டவர்கள் ஒருமனப்பட்டு ஜெபிப்பது, நேரமெடுத்து ஜெபிப்பது (நீண்ட நேரம்) இராவிழித்திருந்து ஜெபிப்பது, உபவாசித்து ஜெபிப்பது, பொருத்தனை செய்து ஜெபிப்பது ஜெபத்தின் வெவ்வேறு வழிகள்.

இவைகளைவிட மிக முக்கியமான ஒரு முறை தேவனுக்கு முன்பாக ஒரு மனித ஆத்துமாவோ அல்லது ஒரு கூட்டம் சபையாரோ அழுது ஜெபிப்பதாகும். கண்ணீர் விட்டு ஜெபிப்பதினால் உண்டாகும் மேன்மை: ஆகாரின் அழுகையைக் கர்த்தர் கேட்டார் (ஆதி. 21 : 16). எசேக்கியாவின் கண்ணீரைக் கர்த்தர் கண்டு அவனுடைய வயதில் பதினைந்து வருஷத்தைக் கூட்டிக் கொடுத்தார்; நகரத்தையும் காத்தார் (II இரா. 20 : 5, 6). யோசியாவின் கண்ணீரைக் கண்டு அவன் நாட்களில் தீங்குவராது என்றார் (II இரா. 22 : 19, 20). கண்ணீரின் அளவுக்குத் தக்க பலன் இருக்கும் (சங். 56 : 8). நம்முடைய தேவைகளுக்காக கண்ணீர் விட்டு ஜெபிக்க வேண்டும் (I சாமு. 1 : 8). நம்முடையவர்களுக்காக கண்ணீர் சிந்தி ஜெபிக்க வேண்டும்.

தெய்வீக காரியமாய் அழுது ஜெபிக்க வேண்டும் (நெகே. 1 அதி. ; எஸ்றா 10 : 1; யோவே. 7 : 6-10). அழ வேண்டும் (லூக். 7 : 13–15). கண்ணீரைப் பார்த்து இயேசு கண்ணீர் விட்டார் (யோ. 11 : 32, 33, 35). அழுகிறவர்களுடனே அழுங்கள் (ரோம. 13 : 15). இயேசுவின் கல்லறையண்டை மகதலேனா மரியாள் அழுதாள், நீ ஏன் அழுகிறாய் என்று இயேசு கேட்டார் (யோ. 20 : 11-16). அழாதே என்று சொல்லி ஆறுதலளித்தார். நம்முடைய கண்ணீர் யாவையும் தேவன் துடைப்பார் (வெளி. 7 : 17; 21 : 3,4). நாம் கண்ணீர் விட்டு ஜெபிப்போம்.

தேவனே அழுது ஜெபிக்க அருள்தாருமையா, ஆமென்!

---

"...நீ எருசலேமில்...பெருமூச்சு விட்டழுகிற மனுஷரின் நெற்றிகளில் அடையாளம் போடு என்றார்" எசேக். 9 : 4

---

பாலர் பகுதி

# காலைதோறும் என்னை எழுப்புகிறார்

ஜேம்ஸ்வும், சுந்தரும் நெருங்கிய நண்பர்கள். இரண்டு பேரும் முதல் வகுப்பிலிருந்தே ஒன்றாய் ஒரே பள்ளிக்கூடத்தில் படித்து வருகிறார்கள். ஜேம்ஸ் கிறிஸ்தவ பையன், பக்தியுள்ளவன். சின்ன பையனாய் இருந்தாலும் தன்னுடைய ஆண்டவரை எப்போதும் புகழ்ந்து தனது தோழர்களுடன் சொல்லுவான். தனது பிடித்தமான நண்பர்களிடமும் சுற்றத்தாரிடமும் இயேசு கிறிஸ்துவைப் பற்றி சொல்லுவான். தன்னோடு தனது நண்பனையும் ஞாயிறு பள்ளிக் கூடத்திற்கு அழைத்து செல்வான்.

சுந்தரும் தனது கிறிஸ்தவ நண்பனுடன் ஞாயிறு பள்ளிக்குப் போய் கொஞ்சமாய் ஆண்டவரைப் பற்றி அறிந்திருந்தான்.

ஆண்டவரின் பின்னேயாய் நல்வழியில் நடந்தால் நாம் ஆண்டவரிடம் பேசலாம் என்று அவனது மனதில் சிறுவயதிலே ஒரு நம்பிக்கையுண்டாயிருந்தது.

இப்படி தேவனைப் பற்றிய அறிவில் இரண்டு சிறுவர்களும் வளர்ந்து வந்தனர். இப்போது இருவரும் எட்டாம் வகுப்பு படித்துக் கொண்டிருக்கிறார்கள். இப்படியிருக்கையில் சுந்தருக்கு சில மாதங்களாய் சுகமில்லாமல் ஆகி விட்டது. சுந்தர் உடல் நலமான பின் பள்ளிக்கூடத்திற்குப் போக ஆரம்பித்தான். அந்த நேரம் பார்த்து கடைசி பரீட்சையும் நெருங்கி வந்தது.

சுந்தரால் பாடங்களை சரியாக படிக்க முடியவில்லை. கொஞ்ச நாட்கள் பள்ளி கூடம் போகாத காரணத்தாலும், உடல் பெலவீனத்தாலும் படிக்க முடியவில்லை. பாடங்கள் விளங்கவில்லை. சுந்தருக்கு ரொம்ப வருத்தம். அந்த வருடம் தோல்வியடைந்து விடுவானோ என்று ரொம்ப பயந்தான். அவனது பெற்றோர்களும் தங்கள் பையன் 9 ஆம் வகுப்பில் தேர்ச்சியடைய மாட்டான் என்று ரொம்ப வருத்தப்பட்டார்கள். சுந்தர் தனது நண்பன் ஜேம்ஸ்கூட சேர்ந்து ஜெபித்தான். ஜேம்ஸ் சொன்ன வார்த்தைகளும், ஞாயிறு பள்ளியில் அவன் கற்றவைகளும் நினைவுக்கு வந்தது.

மல்யுத்தம் பண்ணுகிறவன் சட்டப்படி பண்ணாவிட்டால் வெற்றி பெற மாட்டான். அதே மாதிரி நாமும் படித்தால்தான் வெற்றி பெற முடியும். ஆனால் படிக்க முடியவில்லை. மன அமைதியில்லை என்று நினைத்தான். அதிகாலையில் எழுந்து படித்தால் நல்லா மனதில் பதியும் என்று காலையில் எழுந்து படிக்க முடிவு செய்தான்.

தினமும் சுந்தர் காலையில் எழுந்திருக்க நினைப்பான். ஆனால் காலையில்தான் அசந்து தூங்குவான். அவனது அம்மா எவ்வளவு பிரயாசப்பட்டு எழுப்பினாலும் எழுந்திருக்க மாட்டான். பரீட்சையில் தோல்வி அடைவோம் என்ற பயம் மனதில் வந்தது. அப்போது ஞாயிறு பள்ளியில் கேட்ட வசனம் சுந்தருக்கு நினைவில் வந்தது.

இளைப்படைந்தவனுக்கு சமயத்துக்கேற்ற வார்த்தை சொல்ல நான் அறியும்படி கர்த்தராகிய ஆண்டவர் எனக்கு கல்விமானின் நாவைத் தந்தருளினார்: காலை தோறும் என்னை எழுப்புகிறார்; கற்றுக் கொள்ளுகிறவர்களைப் போல நான் கேட்கும்படி என் செவியை கவனிக்கச் செய்கிறார் (ஏசாயா 50 : 4) என்ற வசனத்தை நினைத்து ஆண்டவரிடம் சொன்னால் காலையில் எழுப்புவார். அதற்கான பெலன் தருவார் என்று நம்பினான். கொஞ்ச நாளாய் படுக்கப் போகும் போது ஆண்டவரிடம் ஜெபிப்பான். ஒருநாள் விடாப் பிடியாய் நீண்ட நேரம் ஜெபம் செய்து விட்டு படுத்தான். கர்த்தாவே 4 மணிக்கு என்னை எழுப்பும் அப்போதான் எனக்கு படிக்க முடியும். 4 மணிக்கு எழுந்து படிக்க பெலன் தாரும் என்று சொல்லி ஜெபித்தான்.

தன்னை நோக்கி கூப்பிடுகிற யாவருக்கும் பதிலளிக்கும் தேவன் சிறுவன் சுந்தரின் ஜெபத்திற்கு இரங்கினார். மறுநாள் அதிகாலை வேளையில் சரியாக 4 மணியிருக்கும் உறங்கிக் கொண்டிருக்கும் பக்கமாய் ஒரு வயதான தாத்தா வந்து அன்பாய் சுந்தர், சுந்தர் என்று தட்டி எழுப்பினார். அவ்வளவு தான் சுந்தருக்கு திடீரென்று விழிப்பு வந்தது. உடனே உற்சாகமான மனமும் வந்து பாடங்களை எடுத்து படிக்க ஆரம்பித்தான். சுந்தருக்கு அது கனவு மாதிரியே இருந்தது.

தொடர்ந்து ஒரு வாரமாக அப்படி ஒரு தாத்தா தன்னை எழுப்பியதை உணர்ந்தான். ஏழாவது நாள் தன்னை எழுப்பிய தாத்தா யார்? எங்கிருந்து வருகிறார் என்ற எண்ணமும் உணர்வும் வந்தது. யார் என்று பார்த்தால் அவரைக் காணவில்லை.

சுந்தர் ஓடிப்போய் ஜேம்ஸயிடம் சொன்னான். ஜேம்ஸ் ஆலயத்தில் போய் தங்கள் போதகரிடம் சொன்னான். எல்லாருக்கும் ஆச்சரியம், தேவனைத் துதித்தார்கள், தேவன்தான் சுந்தரை காலையில் எழுப்பினார் என்று அறிந்து மகிழ்ச்சியடைந்தார்கள்.

சுந்தருக்கு இப்போது காலையில் எழுந்திருப்பது வழக்கமாகி விட்டது. காலையில் எழுந்து ஜெபிப்பான். பாடங்களைப் படிப்பான். ஆம், தேவனே பிரத்தியட்சமாய் தன்னை நோக்கி கூப்பிட்ட சிறுவனாகிய சுந்தரை எழுப்பி அவனது ஜெபத்திற்கு பதில் செய்தார்.

அந்த வருடம் 8ம் வகுப்பில் சுந்தர் மாநிலத்திலேயே முதல் மாணவனாக தேர்ச்சி பெற்றான். சுந்தர் கிறிஸ்தவனாகி விட்டான். தங்களது பையன் சிறு வயதிலே பெற்ற ஞானத்தையும் அவனிடத்தில் உண்டான மாறுதல்களையும் கண்ட அவனது பெற்றோர்களும் இரட்சகர் இயேசுவை ஏற்றுக் கொண்டார்கள். தேவனுடைய நாமம் மகிமைப்பட்டது. அல்லேலூயா! இவைகளுக்கெல்லாம் காரணம் ஜேம்ஸின் சாட்சியும் சுந்தரின் விசுவாசமுமேயாகும்.

சிறுபிள்ளைகளே! நீங்களும் இந்த ஜேம்ஸைப் போலவும் சுந்தரைப் போலவும் மாறவேண்டும். ஜேம்ஸ் மாதிரி உங்கள் தோழர்களுக்கும் நம்முடைய ஆண்டவரைப் பற்றி சாட்சி சொல்ல வேண்டும். ஞாயிறு பள்ளிக்கு அழைத்துவர வேண்டும்.

சுந்தரைப் போல் நீங்கள் கற்றுக் கொள்ளும் தேவனுடைய வார்த்தைகளை சுதந்தரித்துக் கொள்ள வேண்டும். உங்கள் பாடங்களையெல்லாம் காலையில் எழுந்து படியுங்கள் சுந்தரைப் பாருங்கள். இப்போ அவன் அடிக்கடி கர்த்தராகிய ஆண்டவர் காலை தோறும் என்னை எழுப்புகிறார் என்று சொல்கிறான்.

நீங்களும் அதிகாலையில் எழுந்து தேவனைத் தேடுங்கள். தேவன் உங்களை ஆசீர்வதிப்பார்

உங்கள் பள்ளிக்கூடத்து பாடங்களைப் படிக்க முடியவில்லையா? சுந்தரை மாதிரி ஜெபித்து காலையில் எழும்பும் கிருபை பெற்று காலை வேளையில் படியுங்கள். தேவன் கிருபை செய்வார். நல்ல படிப்பு வரும். கடவுள் உங்களை பெரிய கருவிகளாக எடுத்து உபயோகிப்பார்.

"கர்த்தாவே காலையில் என் சத்தத்தைக் கேட்டருளுவீர்" (சங். 5:3).

---

"வாக்குத்தத்தம் பண்ணப்பட்டதைப் பெறும்படிக்குப் பொறுமை உங்களுக்கு வேண்டியதாயிருக்கிறது". —எபி. 10 : 36

---

மாதர் பகுதி

## ஸ்திரீகள்

(தொடர்ச்சி)

திருச்சபையில் ஸ்திரீகள் ஜெபிக்கலாம், பாடலாம், தீர்க்கதரிசனமுரைக்கலாம், சாட்சி கொடுக்கலாம். உபதேசிக்க— ஆளுகை செய்ய அதிகாரமில்லை. வேதம் அப்படிச் சொல்லுகிறது. (I கொரி. 14 : 34, I தீமோத். 2 : 11, 12). ஆனால் பற்பல விதத்தில் உதவிக்காரியாக ஊழியம் செய்யலாம். அந்தப்படி அநேக ஸ்திரீகள் புதிய ஏற்பாட்டின் சபையில் கிறிஸ்து இயேசுவுக்குள் உதவிக்காரிகளாக ஊழியம் செய்தார்கள். பிரிஸ்கில்லாள், அப்பியாள், பெபேயாள், பெர்சியாள், திரிபோனாள், திரிபேசாள், சிந்திகேயாள், எயோதியாள் போன்றவர்கள் ஆனால் கட்டுப்பாட்டுக்குள், தங்களுக்கு கொடுக்கப்பட்ட ஊழியங்களைச் செய்தனர். அதில் அநேகர் தங்கள் கணவன்மாருடன் உடன் உதவிக்காரிகளாயிருந்தனர். அந்தப்படியே ஸ்திரீகளும் என்றிருப்பது உதவிக்காரர்களின் மனைவிகளும் என்று அர்த்தம் (1தீமோத் 3 : 11). ஞாயிறுபள்ளி நடத்துதல், பெண்களின் மத்தியில்—குழந்தைகளின் மத்தியில் ஊழியம் செய்தல், நோயாளிகளுக்கு உதவி செய்தல், சமையல் வேலைகளைக் கவனித்தல் போன்ற ஊழியங்களைச் திருச்சபையில், திருச்சபை சார்ந்த ஸ்தாபனங்களில் ஊழியம் செய்யலாம்.

பெண்களின் பிரதான ஸ்தானம் குடும்பத்தைக் கட்டுதலாகும். தேவபக்தியுள்ள பிள்ளைகளைப் பிறப்பித்து கர்த்தருக்கேற்ற வளர்ப்பில் அவர்களை வளர்த்து, திருச்சபைக்கும் உலகத்துக்கும் தலைசிறந்த பணியாளர்களாக்கிவிடும் பெரும் பொறுப்பு பெண்களுடையதாகும். அவர்கள் விரும்பினால் ஈசாக்கின்தாய் சாராளாகவும், மோசேயின் தாய் யோகெபேத்தாகவும், சாமுவேலின் தாய் அன்னாளாகவும், இயேசுவின் தாய் மரியாளாகவும் விளங்கலாம். உண்மையுள்ள மனைவியாயிருந்து வீட்

டைக் கட்டுவதே இவர்களுக்கு மிகவும் பொருத்தமும், தலைசிறந்ததுமான பணியாகும். இப்படிச் செய்தால் தாங்கள் சிருஷ்டிக்கப்பட்ட நோக்கத்தை நிறைவேற்றினவர்களாவார்கள் (ருத் 4 : 11) ஆமேன்!

(தொடரும்)

"எந்தப் புருஷனும் தன் வீட்டுக்குத் தானே அதிகாரியாயிருக்க வேண்டும்"

— எஸ்தர் 1 : 22

சாட்சி

# நீங்கள் என்னைத் தெரிந்து கொள்ளவில்லை, நான் உங்களைத் தெரிந்து கொண்டேன்... ஏற்படுத்தினேன்

அன்பானவர்களே, என் பெயர்டேவிட் சாம்சன் என்னுடைய சொந்த ஊர் வள்ளியூர். என்னை நான் செய்த நீதியின் கிரியைகளின் நிமித்தம் அவர் (இயேசு கிறிஸ்து) இரட்சியாமல், தமது இரக்கத்தின் படியே, மறுஜென்மமுழுக்கினாலும், பரிசுத்த ஆவியினுடைய புதிதாக்குதலினாலும் இரட்சித்தார். நான் கிறிஸ்தவ குடும்பத்தில் பிறந்திருந்தும், ஒழுங்காக ஆலயத்திற்கு சென்றிருந்தும், இயேசு கிறிஸ்து இந்த உலகத்திற்கு ஏன் வந்தாரென்று அறிந்திருந்தும், அவர் வந்த நோக்கத்தை நான் நிறைவேற்றாதவனாகவே அதுவரை இருந்தேன்.

நான் என்னுடைய சிறு வயதிலே நினைத்துக் கொள்வது உண்டு, கிறிஸ்தவர்களாக பிறந்த நாமனைவரும், தேவனுடைய இராஜ்யமாகிய பரலோகத்திற்கு செல்வோம் என்றும் கிறிஸ்தவர்களாய் இல்லாத இந்துக்களும், மற்றவர்களும் நரகத்திற்கு செல்வார்கள் என்றும் எண்ணியது உண்டு. இதற்குப் பின்பு என்னுடைய 15ஆம் வயதில் நான் சென்று வந்த சபையில் (Luthern Church) நடந்த திடப்படுத்தல் வகுப்புகள் மூலமாக, நாம் தேவனுடைய கற்பனைகள் (Commandments) எல்லாவற்றையும் அறிந்து கீழ்படிந்து—அதைக் கைக்கொண்டால் நான் பரலோக ராஜ்யத்திற்கு செல்வோம் என்றும், அதில் ஒன்றையாவது மீறி நடந்தால் நாம் அதில் பிரவேசிக்க தகுதியற்றவர்கள் என்றும் அறிந்து கொண்டு. அப்படியானால் நான் பரலோக ராஜ்யத்திற்கு மிகவும் தூரமானவன் என்றும் தீர்மானித்துக் கொண்டேன். ஏனெனில் மனிதர்களால் தேவனுடைய எல்லா கற்பனைகளையும் கைக் கொண்டு நடக்க முடியாது என்றும், ஏதாவது ஒரு கற்பனையையாவது அவன் மீறி பாவம் செய்துவிடுவான், இது மனித இயல்பு என்றும் எண்ணிக் கொண்டேன்.

இப்படி எண்ணிக்கொண்டு இருந்த நாட்களில்தானே எங்களுடைய ஊரைச் (வள்ளியூர்) சார்ந்த, தற்போது சென்னையில், புதிய எருசலேம் சபை ஊழியராக இருக்கின்ற சகோ. சாம் இஸ்ரவேல் அவர்கள், தங்கள் கல்லூரி படிப்பை முடித்து வள்ளியூரில் இருக்கும் போது, சிறியவனாகிய என்னையும் சந்தித்து எனக்கும் கிறிஸ்துவின் சுவிசேஷத்தை அறிவித்தார்கள்.

எவ்விதமாக என்றால் மிகவும் சாந்தத்துடனும், அன்புடனும் "சாம்சன் இயேசு கிறிஸ்துவைப்பற்றி உனக்கு என்ன தெரியும்" என்று முதலாவதாக என்னிடம் கேட்டபொழுது நான் என் உள்ளத்திற்குள்ளே "பிறந்ததில் இருந்தே கிறிஸ்தவனாக இருக்கின்றேன், எனக்கு என்ன இயேசுகிறிஸ்துவைப்பற்றி ஒன்றும் தெரியாதா!" என்று நினைத்துக் கொண்டே எல்லாம் தெரியும் என்று அமைதியாக கூறினேன். அவர்கள் மீண்டும் "இயேசு கிறிஸ்து இந்த உலகத்திற்கு ஏன் வந்தார் என்று உனக்குத் தெரியுமா" என்று கேட்டார்கள். உடனே நான் பாராமல் படித்து வைத்திருந்ததான வசனமாகிய "பாவிகளை இரட்சிக்க இயேசு கிறிஸ்து இந்த உலகத்திற்கு வந்தார்" என்று கூறினேன். அவர்கள் மீண்டும் இரட்சிப்பு என்றால் என்ன என்று கேட்ட பொழுது, நாம் பாவங்கள் செய்வதில் இருந்து விடுதலைப் பெற்று பாவம் செய்யாமல் இருப்பது இரட்சிப்பு என்று கூறினேன்.

அவர்கள் அதற்கு அப்படியானால், நீ பாவம் செய்வதில் இருந்து விடுதலை பெற்று பாவம் செய்யாமல் இருக்கின்றாயா? இரட்சிக்கப்பட்டு இருக்கின்றாயா? என்று கேட்ட பொழுது இல்லை என்றேன் அதற்கு அவர் ஏன்? நாம் பாவத்தில் இருந்து விடுதலையாகும்படிதானே அவர் இந்த உலகத்திற்கு வந்தார். நாம் விடுதலையடைய வேண்டாமா? என்று அவர்கள் கேட்ட அத்தருணத்தில்தானே நானும் அவ்வசனத்தின் அர்த்தத்தை அறிந்து உணர்த்தப்பட்டேன். இதற்கு முன்பாக நான் அந்த வசனத்தை எத்தனையோ தடவை படித்திருந்தும் அதை உணர்ந்து கொள்ளாதவனாகவே, அவர் வந்த நோக்கத்தை நிறைவேற்றாதவனாகவே இருந்தேன். அன்றில் இருந்துதானே நானும் சகோதரர் சொல்லுகின்ற மெய்யான திருச்சபையாகிய புதிய எருசலேம் சபையை அறிந்து கொண்டேன், கண்டு கொண்டேன்.

எங்களுடைய ஐக்கியம் பிதாவோடும் அவருடைய குமாரனாகிய இயேசுகிறிஸ்துவோடும் இருக்கிறது. நீங்களும் எங்களோடே ஐக்கியமுள்ளவர்களாகும்படி இதை உங்களுக்கு அறிவிக்கிறோம், அழைக்கிறோம் என்றதான சத்தத்திற்கு நானும் கீழ்படிந்து புதிய எருசலேம் சபையோடு ஐக்கியம் வைத்துக் கொண்டேன். "பிதா என்னை அனுப்பினது போல நானும் உங்களை அனுப்புகிறேன் நீங்கள் எவர்களுடைய பாவங்களை மன்னிக்கிறீர்களோ அது அவர்களுக்கு மன்னிக்கப்படும் எவர்களுடைய பாவங்களை மன்னியாதிருக்கிறீர்களோ அவைகள் அவர்களுக்கு மன்னிக்கப்படாதிருக்கும் என்று இயேசு தாமே தம்முடைய பரிசுத்தவான்களுக்கு கொடுத்த அதிகாரத்தின்படியே நானும் பரிசுத்தவான்களிடத்தில் சென்று அவர்கள் முன் பாவ அறிக்கை செய்து பாவ மன்னிப்பு அடைந்து இசைவிணைப்பாய் இணைக்கப்பட்ட புதிய எருசலேம் மாளிகையில் ஒரு அங்கமாக மாறினேன். அவர் வந்த நோக்கத்தை நிறைவேற்றினேன்.

இவைகள் எல்லாம் எப்படி ஆனது என்றால் நான் செய்த நற்கிரியைகளினால் ஆனது அல்ல. அவர் தமது சித்தத்தின்படியேயும், இரக்கத்தின்படியேயும் தேவன் என்னை தெரிந்து கொண்டபடியினால்தான் ஆனது. நான் அவரைத் தெரிந்து கொள்ளவில்லை அவரே என்னைத் தெரிந்து கொண்டார் இப்பொழுதும் அவரே எங்கள் குடும்பத்தையும் தெரிந்து கொண்டு தம்முடைய புதிய எருசலேம் சபையோடு இணைத்துள்ளார். தேவனுக்கு நன்றி.

இவ்விதமாக தம்முடைய பிள்ளையாய் என்னையும் தெரிந்து கொண்ட என் தேவன் எனக்கு எல்லாவிதமான ஆசீர்வாதங்களையும் இப்போது கொடுத்து வருகின்றார். நான் பள்ளியில் படிக்கின்ற காலங்களில், படிப்பில் திறமையற்றவனாகவும், மற்றவர்களால் புறம்பே தள்ளப்படத்தக்கவனாகவும் நான் இருந்தேன். ஆனால் அப்படியாயிருந்த என்னையும் என் தேவன் படிப்பில் சிறந்தவனாகவும், மற்றவர்களால் போற்றப்படத்தக்க விதமாகவும் வெற்றியைத் தந்தார், என்னுடன் படித்து பட்டங்களை வாங்கிய அநேகர் இன்னும் வேலை இல்லாமல் கவலைப்பட்டுக் கொண்டு இருக்கின்ற நாட்களில் என் தேவன் எனக்கு ஒரு நல்ல வேலையைக் கொடுத்திருக்கின்றார். நான் இப்பொழுது பம்பாய் மத்திய தந்தி அலுவலகத்தில் (Central Telegraph Office Bombay) வேலை பார்த்து வருகின்றேன்.

என் தேவனை மகிமைப்படுத்த "நீங்கள் மிகுந்த கனிகளைக் கொடுப்பதினால் என் பிதா மகிமைப்படுவார். நீங்கள் கனி கொடுக்கும்படிக்கும், உங்கள் கனி நிலைத்திருக்கும்படிக்கும் நான் உங்களை ஏற்படுத்தினேன்." என்று சொல்லப்படுகின்ற வசனங்களின் படியே நானும் மிகுந்த கனிகளைக் கொடுத்து என் பிதாவை மகிமைப்படுத்த எனக்காக வேண்டிக் கொள்ளும்படி அன்புடன் கேட்டுக் கொள்ளுகிறேன்.

சகோ. A. டேவிட் சாம்சன்
புதிய எருசலேம் சபை
பம்பாய்.

## யார் கிருஸ்தவர்?

'கிறிஸ்து' அவன், 'கிறிஸ்து' அவன் என்ற ஒரு பெருநிலைக்கு உரித்தான மக்களெல்லாம் கிறிஸ்தவர்கள். இவர்களில் உயர்ந்தோராம், தாழ்ந்தோராம், இழிந்தோராம். இதற்கிடையே, பயந்தோராய் பதவிக்காக நாடுகின்றனர் பிற மதத்தை. திருச்சபையின் கட்டளைகள் அறிந்திருந்தும் பாவிகளாய், கருச்சிதைவு, களவு, மோசம் செய்பவர்தான் கிறிஸ்தவரோ? ஆலயத்துக் கிறிஸ்தவராய் அலட்சியமாய் பூசை காணும் சிலர்கள்தான் உண்மையுள்ள கிறிஸ்தவரோ? ஜாதி என்ற பேய் பிடித்து சகலத்திலும் குழப்பம் செய்யும் நீதி கொல்லும் நினைவினர்தான் கிறிஸ்தவரோ? அர்ப்பணித்தோர் என்ற அரும் நிலையினில் ஒரு சிலர் சறுக்கி விழும் நிலைகண்டு பிற மதத்தார் கிறிஸ்தவரை வெறுத்தொதுக்கும் நிலைமையில் நம் கிறிஸ்தவத்தை மறுப்பவர்தான் உண்மையுள்ள கிறிஸ்தவரோ? துறவுநிலை இல்லங்களில்கூட ஜாதிவெறி, நிறைவெறி ஊழியங்கள் சீர்குலைந்து, வேற்றுமைகள் பல நிறைந்து விழுங்குகின்ற நிலைமையினைவொன்றாக் கிறிஸ்தவரும் கிறிஸ்தவரோ? சிந்தனையில் ஒரு பொருளும், செய்கையில் மறு பொருளும், தெய்வ நிந்தனையே பொழுது போக்காய் இருப்பவரும் கிறிஸ்தவரோ?

# AUTHORITY OF REMITTING SIN

Jesus said to them again, peace be unto you: as my Father has sent me, even so I send you. And when he had said this, he breathed on them, and said unto them, Receive ye the Holy Spirit : whosesoever sins ye remit, they are remitted unto them; and whosesoever sins ye retain, they are retained—JOHN 20: 21-23.

The first authority and commandment which Lord Jesus gave to the apostles who were sent by the risen Christ is the authority of remitting sin. Even those who say, they walk in the steps of the scriptures deny this truth. Jesus, the head of the church says, As my Father sent me with all powers, I send you. This commandment and authority was not given, when Jesus was in flesh. When His time of going to heaven was come at hand, He sent His disciples as apostles to do the ministry in His stead. Jesus went up to the mountain and prayed throughout the night and came down in the morning and called His disciples and chose twelve among them and named them as apostles. Though He had given certain authorities and commandments at that time, He sent them as apostles only after His resurrection, giving the authority of remitting sin (Lk. 6:12, 13; Jn. 20:19-21). This authority and commandment was not given to Judas. This pertains only to them who are sent by God as apostles. Those who are not sent by God do not have this authority.

A few are of the opinion that men do not have such authority. Even the lawyers in those days thought who can remit sin, other

than God. But people magnified God who gave such power unto men (Mt. 9:1-8). Really a man doesn't have any power to forgive sin. In this place man means an unsaved person, who is a sinner.

The children of God and the ministers of God are not at all being called as men, in the new testament. They are mentioned as children of God, sons of God, saints, brethren, believers, kings and priests and church of God.

God has power to forgive sins. Jesus Christ has this power. The apostles have this power, for Jesus himself comes in the line of apostles. "wherefore holy brethren, partakers of the heavenly calling, 'consider *the Apostle and High Priest of our profession,* Christ Jesus (Heb 3:1).

This power of remitting sin is given by God to the church. The apostles have this authority in Holy Spirit to forgive sins of them that make confession unto them (Jn. 20:21-23).

When people assemble for prayer in the church they used to confess their sins and pray for them. On such occasions some will prophesy, saying Son/Daughter, your sins are forgiven to you. On what basis they do so? Is it not the work of the Holy Spirit?

The order of praying for the sick is thus mentioned in the prayer book of C.S.I. The priest shall visit the sickly person and if he is pricked of guilt in his conscience, he should confess his sins to the priest and the priest shall say, I have forgiven your sins.

## *The Proper Interpretation of John 20:23*

1 If a person confesses his sins to the apostles, they will be forgiven to him. If he doesn't confess they will not be forgiven.

2 Whosesoever sins, the apostles forgive God also forgives. Whosesoever sins the apostles retains, God also retains.

3. Whosesoever sins God forgives, to them God confirms it through the mouths of the apostle prophesying, I have forgiven you, whosesoever sins God retains, the apostle also retains.

4. The apostle perceives in spirit, through prayer whether the sins of a person is forgiven or not and declares it.

5. The apostles pray for forgiveness of sins of a person, who has confessed to them and help to obtain mercy from God. The sins of others are not forgiven, because the apostles do not pray for them.

If any one interprets John 20:23 contradicting the above, it will be sin unto him.

The power of forgiving sins is the key authority of the Church. This is the authority by which one may be delivered from his sins or bound in his sins. The true church and true apostle have authority to bind and loose.

We have received this authority from Jesus Christ. We declare this to you. Those who have this authority are the true apostles.

"...A man can receive nothing, except it be given him from heaven" Jn.3:27

# புதிய எருசலேம் செய்தி

# PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் - 18 ★ JUNE 1985



"புதிய எருசலேம் சபை"

"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ, நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள்... விழித்திருங்கள்... உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லோருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்..."

மாற்கு 13 : 35-37

**EDITOR: CHIEF PASTOR N. LAZAR**

BOMBAY, INDIA

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லோரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒருமனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும் படியாகவும் தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய்க் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும்; சபையானது வஞ்சக போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும் படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது. (எபே.4:11-16)

## இதழின் உள்ளே



---

பம்பாயில் 1—5—85 அன்று 8 பேர்களும், 5—5—85 அன்று கொடைக்கானலில் 33 பேர்களும் ஞானஸ்நானம் பெற்றார்கள்.

---

### பரிசுத்த விவாகம்

சகோதரர் இம்மானுவேல் ஜெபராஜிக்கும் சகோதரி நான்ஸிராணிக்கும் 2—5—85 அன்று திண்டுக்கல்லில் பரிசுத்த விவாகம் நடந்தது.

பாஸ்டர் P. ஜோசப் அவர்களுக்கும், ஆரல்வாய்மொழி பாஸ்டர் D. தேவதாசன் அவர்களின் புதல்வி சகோதரி ஜெபசெல்விக்கும் 22—5—85 அன்று ஆரல்வாய்மொழி கிருபைநகர் புதிய எருசலேம் சபை ஆலயத்தில் பரிசுத்த விவாகம் நடந்தது.

கர்த்தர் இந்த தம்பதிகளை ஆசீர்வதிக்க யாவரும் ஜெபிக்குமாறு கேட்டுக் கொள்கிறோம்.

---

"புதிய எருசலேம் செய்திக்கு" சொந்த அச்சகம் (Printing Press) அமைய எல்லோரும் கர்த்தரை ஸ்தோத்தரித்து ஜெபம் செய்யும்படி கேட்டுக் கொள்கிறோம்.

# ஆசிரியர் உரை

கிறிஸ்துவுக்குள் அன்பான தேவனுடைய பிள்ளைகளே, நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவினுடைய வருகை சமீபித்திருக்கிற காலமாய் இப்பொழுது காணப்படுகிறது. கள்ளத் தீர்க்கதரிசிகளும், கள்ளப் போதகர்களும் எழும்பி இதோ யுகப்பிரளயம் வருகிறது, கர்த்தர் வரப்போகிறார், மூன்றாம் உலகப்போர் வருகிறது இந்த ஆண்டு, இந்த மாதம், இன்ன தேதியில் என்று அறிவிக்கிறார்கள். இவர்கள் எல்லாரும் தந்திரமுள்ளவர்களின் நாவை தெரிந்து கொண்டுள்ளார்கள். அந்தச் சம்பவம் அவர்கள் கூறின நாட்களில் நடக்காவிடில் அவர் சொன்னார், இவர் சொன்னார் அதையே நாங்கள் பேசினோம், எழுதினோம் என்பார்கள். இவர்கள் சொல்லுகிறபடி சம்பவங்கள் நடக்கப் போவதில்லை. இவர்களுக்கென்று, இவர்களிடம் திட்டமான செய்தி கிடையாது. இப்படிப்பட்ட கள்ளத் தீர்க்கதரிசிகளைப் பற்றி நாங்கள் எச்சரித்து வருகிறோம். நம்முடைய அறிவிப்பின்படியே காரியங்கள் நடந்து வருகின்றன. "ஒரு தீர்க்கதரிசி (ஊழியக்காரன்) கர்த்தரின் நாமத்தினாலே சொல்லும் காரியம் நடவாமலும் நிறைவேறாமலும் போனால் அது கர்த்தர் சொல்லாத வார்த்தை; அந்த தீர்க்கதரிசி அதை துணிகரத்தினால் சொன்னான்; அவனுக்கு நீ பயப்பட வேண்டாம்" (உபா 18 : 22) என்று கர்த்தருடைய வார்த்தை திட்டமாய் சொல்லுகிறது. ஆனபடியினால் கள்ளத் தீர்க்கதரிசிகளுக்கு எச்சரிக்கையாயிருங்கள். தடை செய்கிறவன் (வலுசர்ப்பம்) நடுவிலிருந்து நீக்கப்படுமுன்னே அது வெளிப்படாது (II தெச. 2 : 7). சிலர் நினைக்கிறபடி தடை செய்கிறவன் பரிசுத்த ஆவியல்ல, சாத்தானே. சாத்தான் நடுவிலிருந்து நீக்கப்படும் சம்பவம் முதலில் நடைபெற நாம் எல்லோரும் ஜெபிப்போம். அதன் பின்பே கர்த்தருடைய வருகையாயிருக்கட்டும், மூன்றாம் உலக யுத்தமாயிருக்கட்டும் - நிகழும் - நாம் எடுத்துக்கொள்ளப்படுவோம்.

கர்த்தருடைய வருகைக்கு ஆயத்தப்படுங்கள். உன் தேவனை சந்திக்க ஆயத்தப்படு, விழிப்பாயிரு, உன் செய்கையை சோதித்துப்பார்.

கிறிஸ்துவுக்குள்,

N. Lazar

Chief Pastor N. Lazar

# அவன் ஒரு தீர்க்கதரிசி நீ பிழைக்கும்படி அவன் உனக்காக வேண்டுதல் செய்வான்

"அன்றியும் மனுஷரில் தெரிந்து கொள்ளப்பட்ட எந்த பிரதான ஆசாரியனும் பாவங்களுக்காகக் காணிக்கைகளையும், பலிகளையும் செலுத்தும்படி மனுஷருக்காக தேவகாரியங்களைப்பற்றி நியமிக்கப் படுகிறான்" - எபி. 5 : 1. தேவன் தம்முடைய ஜனங்களின் மேல் ஜனங்களுக்காக திறப்பிலே நிற்க தமது ஊழியர்களை நியமிக்கிறார். அந்தப்படி ஆரோன் திறப்பிலே நின்றார். மோசே சொன்னபடி ஆரோன் அதை (நிறப்பப்பட்ட தூப கலசத்தை) எடுத்துக் கொண்டு சபையின் நடுவில் ஓடினான்; ஜனங்களுக்குள்ளே வாதை தொடங்கியிருந்தது; அவன் தூபவர்க்கம் போட்டு ஜனங்களுக்காகப் பாவ நிவிர்த்தி செய்து, செத்தவர்களுக்கும் உயிரோடிருக்கிறவர்களுக்கும் நடுவே நின்றான். அப்பொழுது வாதை நிறுத்தப் பட்டது (எண் 16 : 47, 48).

இவ்விதமாய் ஜனங்களுக்காக தேவனிடம் பரிந்து பேசவும், தேவனுக்காக ஜனங்களோடு வாதாடவும், தேவனைப் பற்றி போதிக்கவும், வழி நடத்தவும் தேவன் மனுஷரிலிருந்து சிலரை தம்முடைய பிரதிநிதிகளாக, ஊழியர்களாக, தலைவர்களாக நியமிக்கிறார். இவ்விதமாய் தேவனால் நியமிக்கப்பட்டவர்களுடைய ஜெபத்தை அதிக பிரியமாய் தேவன் ஏற்றுக் கொள்ளுகிறார், செவி கொடுக்கிறார், அதன்படி செய்கிறார் "அவன் ஒரு தீர்க்கதரிசி நீ பிழைக்கும் படிக்கு அவன் உனக்காக வேண்டுதல் செய்வான்" (ஆதி 20 : 7). இது வேதாகமத்தில் காணப்படும் முக்கியமான தேவ நியமமாகும். இதை அனேக தேவ ஜனங்கள் சரிவர அறியாமலும் உணராமலும் இருக்கிறார்கள்.

விழுந்து போன ஊழியர்களையும், தேவனால் எழுப்பப்படாத, தேவனால் நியமிக்கப்படாத ஊழியர்களையும் மனதில் எண்ணி சிலர் தேவ ஊழியர்களின் ஸ்தானத்தை, மதிப்பை அருமையை உணராதபடி சமத்துவ வாதம் பேசி நடக்கின்றனர். எல்லோரும் ஒன்றுதான், விசுவாசி (தேவனுடைய பிள்ளைகள்) எல்லோரும் சமம்தான், அதில் யாரும் பெரியவர்களில்லை, சின்னவர்களில்லை Pastor (பாஸ்டர், மேய்ப்பர்) என்றோ ஊழியர் என்றோ பெயர் வைக்கக்கூடாது; மதிக்க தேவையில்லை; யாரும் எதையும் செய்யலாம், எவரும் கூட்டம் நடத்தலாம், தலையில் கைவைத்து ஜெபிக்கலாம், ஞானஸ்நானம் கொடுக்கலாம், திருவிருந்து நடத்தலாம் என துணிகின்றனர். இது விழ்ச்சியடைந்த திருச்சபையின் கோர நிலையாகும். மந்தையை மேய்க்கிற மேய்ப்பனுக்கு மேய்ப்பன் என்றுதான் பெயர் (Pastor). அப்போஸ்தலன் அப்போஸ்தலன்தான் (Apostle) தீர்க்கதரிசி தீர்க்கதரிசிதான் (Prophet), போதகன் போதகன்தான் (Teacher), சுவிசேஷகன் சுவிசேஷகன்தான் (Evangelist) "அவர் சிலரை அப்போஸ்தலராகவும், சிலரை தீர்க்கதரிசிகளாகவும், சிலரை சுவிசேஷகராகவும், சிலரை மேய்ப்பராகவும், போதகராகவும் ஏற்படுத்தினார்" (எபே 4 : 13).

ஜனங்கள் கர்த்தருக்கு ஏலாத பாவம் செய்தார்கள். ஜனங்கள் எல்லோரையும் அழித்துப் போட கர்த்தர் மோசேயோடு பேசினார். மோசே ஜனங்களுக்காக... "கெஞ்சிப் பிரார்த்தித்தான். அப்பொழுது கர்த்தர் தமது ஜனங்களுக்குச் செய்ய நினைத்த தீங்கைச் செய்யாதபடி பரிதாபங் கொண்டார்" (யாத் அதி 32). பின்னுமொருமுறை அவ்விதமே இஸ்ரவேல் ஜனங்கள் முரட்டாட்டம் கொண்டனர். கர்த்தர் ஜனங்களைக் கொன்றுபோட எண்ணினார். அப்பொழுது அவரால் தெரிந்து கொள்ளப்பட்ட மோசே ஜனங்களுக்காக மன்றாடி பிரார்த்தித்து "இந்நாள் வரைக்கும் இந்த ஜனங்களுக்கு மன்னித்து வந்ததின் படியேயும் இந்த ஜனங்களின் அக்கிரமத்தை மன்னித்தருளும்" என்றான்.

அப்பொழுது கர்த்தர் "உன் வார்த்தையின்படியே மன்னித்தேன்" என்றார் (எண் 14 : 19, 20).

ஜனங்கள் தேவனுடைய சித்தத்திற்கு விரோதமாய் இராஜா கேட்டது தவறு என்பதை நிரூபிக்கும்படி தேவனுடைய தீர்க்கதரிசியாகிய சாமுவேல் கர்த்தரை நோக்கி விண்ணப்பம் பண்ணினான். அன்றைய தினமே கர்த்தர் இடிமுழக்கங்களையும் மழையையும் கட்டளையிட்டார் (I சாமு 12 : 18). ஜனங்கள் பஸ்காவுக்குரிய சுத்தாங்கம் அடையாதிருந்தும் பஸ்காவை புசித்தவர்களுக்கு மன்னிக்கும்படி இராஜாவாகிய எசேக்கியா அவர்களுக்காக விண்ணப்பம் பண்ணி தங்கள் பிதாக்களின் தேவனாகிய கர்த்தரான தேவனைத் தேடும்படிக்கு தங்கள் இருதயத்தை நோக்கினவர்கள் பரிசுத்த ஸ்தலத்துக்கேற்ற சுத்தாங்கம் அடையாதிருந்தாலும், கிருபையுள்ள கர்த்தர் அவர்கள் எல்லாருக்கும் மன்னிப்பாராக என்றான். கர்த்தர் எசேக்கியாவின் விண்ணப்பத்தைக் கேட்டு ஜனங்களுக்கு அனுகூலம் செய்தார் (II நாளா 30 : 19, 20). யோபுவின் சிநேகிதர் தாங்கள் கடவுளுக்காகப் பேசுகிறதாக எண்ணி பேசின வார்த்தைகள் மேல் தேவன் கோபம் கொண்டு "நீங்கள் என்னைக்குறித்து நிதானமாய்ப் பேசவில்லை. ஆதலால் நீங்கள் ஏழு காளைகளையும், ஏழு ஆட்டு கடாக்களையும் தெரிந்து கொண்டு என் தாசனாகிய யோபினிடத்தில் போய் உங்களுக்காக சர்வாங்க தகன பலிகளை இடுங்கள்; என் தாசனாகிய யோபும் உங்களுக்காக வேண்டுதல் செய்வான். நான் அவன் முகத்தைப் பார்த்து, உங்களை உங்கள் புத்தியீனத்துக்குத் தக்கதாக நடத்தாதிருப்பேன்" என்றார் (யோபு 42 : 7, 8). "ஆம். என் தாசனாகிய யோபும் உங்களுக்காக வேண்டுதல் செய்வான்" என்றார். ஆபிரகாமுடைய ப ரி ந் து வேண்டுதல் கேட்கப்பட்டது. சோதோம் கொமோரா பட்டணங்களைக் கர்த்தர் கந்தகத்தினாலும், அக்கினியினாலும் அழிக்கும்போது கர்த்தர் ஆபிரகாமுடைய வேண்டுதலைக் கேட்டு லோத்தையும், லோத்தின் குடும்பத்தையும் அழிவினின்று இரட்சித்தார் (ஆதி. அதிகாரம் 18, 19). 'ஆபிரகாம் தேவனை நோக்கி வேண்டிக் கொண்டார்; அப்பொழுது தேவன் அபிமெலேக்கையும், அவன் மனைவியையும் அவன் வேலைக்காரரையும் குணமாக்கி, பிள்ளை பெறும்படி அநுக்கிரகம் பண்ணினார்' (ஆதி 20 : 18). அப்படியே தேவனால் நியமிக்கப்பட்ட தீர்க்கதரிசிகள், ஆசாரியர், இராஜாக்கள், தலைவர்கள் ஜெபத்தைக் கர்த்தர் கேட்டார். ஜனங்களுடைய ஜெபத்தையல்ல, தம்மால் நியமிக்கப்பட்ட தலைவர்களுடைய - தம்முடைய பிரதிநிதிகளுடைய ஜெபத்தைக் கேட்டு தேவன் அதிசயங்களையும், அற்புதங்களையும், விடுதலைகளையும், தெய்வீக சுகங்களையும், ஆசீர்வாதங்களையும் நல்குகிறார். புதிய ஏற்பாட்டிலும் ஆசாரியர் வரிசையில் அப்போஸ்தலர்கள் வருகின்றனர். ஜெபம் பண்ணுவது புதிய ஏற்பாட்டின் விசுவாசிகள் எல்லாரும் செய்யக் கூடியதாயிருந்தாலும் இதற்காக இந்த ஊழியத்திற்காக நியமிக்கப்பட்டவர்கள் அப்போஸ்தலரும், தீர்க்கதரிசிகளும், மேய்ப்பர்களும், போதகரும், சுவிசேஷகர்களும், மூப்பர்களும், ஊழியர்களுமேயாவர். அவர்கள் வேண்டிக் கொள்வதே முக்கியம். "அவன் ஒரு தீர்க்கதரிசி அவன் நீ பிழைக்கும்படிக்கு உனக்காக வேண்டிக் கொள்வான்" என்றார் (ஆதி 20:7). அப்போஸ்தலர் பன்னிருவரும் சீஷர் கூட்டத்தை வரவழைத்து "...நாங்களோ ஜெபம் பண்ணுவதிலும் தேவ வசனத்தைப் போதிக்கிற ஊழியத்திலும் இடைவிடாமல் தரித்திருப்போம்" என்றார்கள் (அப் 6 : 2 - 4). ஆம். "எப்பாப்பிராவும் உங்களுக்காக வாழ்த்துதல் சொல்லுகிறான். உங்களைச் சேர்ந்தவனும், கிறிஸ்துவின் ஊழியக்காரனுமாகிய இவன் நீங்கள் தேவனுக்கு சித்தமானவைகளெல்லாவற்றிலும் தேறினவர்களாகவும் பூரண நிச்சயமுள்ளவர்களாகவும் நிலைநிற்க வேண்டுமென்று தன் ஜெபங்களில் உங்களுக்காக எப்பொழுதும் போராடுகிறான்" (கொலோ 4 : 12).

'அன்றியும் சகோதரரே, உங்களுக்குள்ளே பிரயாசப்பட்டு, கர்த்தருக்குள் உங்களை விசாரணை செய்கிறவர்களை

யிருந்து, உங்களுக்குப் புத்தி சொல்லுகிறவர்களை நீங்கள் மதித்து அவர்களுடைய கிரியைகளினிமித்தம் அவர்களை மிகவும் அன்பாய் எண்ணிக் கொள்ளும்படி உங்களை வேண்டிக் கொள்ளுகிறோம்' என்றும் (I தெச 5 : 12, 13) 'உங்களை நடத்துகிறவர்கள் உங்கள் ஆத்துமாக்களுக்காக உத்தரவாதம் பண்ணுகிறவர்களாய் விழித்திருக்கிறவர்களானபடியால் அவர்கள் துக்கத்தோடேயல்ல சந்தோஷத்தோடே அதைச் செய்யும்படி அவர்களுக்குக் கீழ்ப்படிந்து அடங்குங்கள்; அவர்கள் துக்கத்தோடே அப்படிச் செய்தால் அது உங்களுக்குப் பிரயோஜனமாயிருக்கமாட்டாதே' என்றும் (எபி. 13 : 17) 'தேவவசனத்தை உங்களுக்குப் போதித்து உங்களை நடத்தினவர்களை நீங்கள் நினைத்து அவர்களுடைய நடக்கையின் முடிவை நன்றாய் சிந்தித்து அவர்களுடைய விசுவாசத்தைப் பின்பற்றுங்கள்' என்றும் (எபி. 13 : 7) 'அந்தப்படி இளைஞரே மூப்பருக்குக் கீழ்ப்படியுங்கள்' (I பேது 5 : 5) என்றும் உண்மையுள்ள ஊழியர்களை '...நாங்கள் உங்களுக்காக வழிகாட்டுகிறபடி நடக்கிறவர்களை மாதிரியாக நோக்குங்கள்' (பிலி 3 : 17) என்றும் புதிய ஏற்பாட்டில் பரிசுத்த ஆவியானவர் பற்பல விதமாய் தேவ ஊழியர்களைப் பற்றி எழுதுகிறார்.

தேவனுடைய ஊழியர்கள் ஒரு பக்கமும், ஜனங்கள் ஒரு பக்கமுமாக இருக்கிறார்கள். ஜனங்கள் தேவ ஊழியர்களுக்கு விரோதமாய் ஜெபிப்பதில் பிரயோஜனமில்லை. தேவ ஊழியர்கள் ஜெபத்தையே தேவன் கவனிப்பார். ஜனங்கள் தேவ ஜனங்களாயிருந்தாலும் அவர்கள் பின்மாறி விடுவர் புறமுதுகிடுவர், மறுதலித்து விடுவர். அவர்களுக்கு தேவ வைராக்கியம் கிடையாது. தேவனுடைய தீர்க்கதரிசிகளோ தேவ வைராக்கியம் கொண்டு தேவனுக்கு தொண்டு செய்து எதிர்ப்பின் மத்தியிலும் சோதனையின் மத்தியிலும், துன்ப, துக்க, இழப்பின் நடுவிலும், தேவனுக்காக போராடி மரிப்பர். அவர்கள் ஜனங்களின் பட்டியலில் அல்ல, தேவனுடைய சார்பில் நிற்கிறார்கள். ஆனபடியால் தேவ ஜனங்கள் ஊழியர்களோடும், ஊழியர்கள் அப்போஸ்தலர்களோடும், அப்போஸ்தலர்கள் பிரதான அப்போஸ்தலனோடும், பிரதான அப்போஸ்தலன் இயேசு கிறிஸ்துவோடும், இயேசு கிறிஸ்து பிதாவாகிய தேவனோடும் ஐக்கியமாயிருக்க வேண்டும். இது தங்க சட்டம் (Golden rule) என்று தேவன் வெளிப்படுத்தியுள்ளார். வேதாகமத்தில் தேவன் எழுதியுள்ள தேவனுடைய நியமத்திற்காக அவருக்கு ஸ்தோத்திரம். இதற்கு விரோதமாய் கோராகு கூட்டத்தார் எழும்பி "...நீங்கள் மிஞ்சிப் போகிறீர்கள், சபையார் எல்லாரும் பரிசுத்தமானவர்கள்; கர்த்தர் அவர்கள் நடுவில் இருக்கிறாரே; இப்படியிருக்க, கர்த்தருடைய சபைக்கு மேலாக உங்களை ஏன் உயர்த்துகிறீர்கள்..." என கூறலாம் (எண் 16 : 1 - 3). பெருமை கொண்ட மிரியாம்களும், ஆரோன்களும் எழும்பி விரோதமாய்ப் பேசி 'கர்த்தர் மோசேயைக் கொண்டு மாத்திரம் பேசினாரோ, எங்களைக் கொண்டும் அவர் பேசினதில்லையோ? எனக் கூறலாம் (எண் 12 : 1, 2) தேவன் எங்களுக்கு வெளிப்படுத்தி அறிவித்ததையே நாங்கள் உங்களுக்கு அறிவிக்கிறோம். மறைந்து போன உபதேசங்களை வெளியிடுவதும், விழுந்து போன சபையை மறுபடியும் நிலைநிறுத்தி கட்டி முடிப்பதுமே, புதிய எருசலேமின் திருப்பணியாகும். கர்த்தருடைய பரிசுத்த நாமத்திற்கு ஸ்தோத்திரம். அல்லேலூயா!

---

"சாமுவேலைப் பார்த்து: நாங்கள் சாகாதபடிக்கு உம்முடைய தேவனாகிய கர்த்தரிடத்தில் உம்முடைய அடியாருக்காக விண்ணப்பம் செய்யும்...... என்று ஜனங்கள் எல்லாரும் சொன்னார்கள்"

1 சாமு 12 : 19

---

# மகிழ்ச்சி

"நீதிமான்களே கர்த்தருக்குள் மகிழ்ந்து களிகூருங்கள்..." (சங். 32 : 11)

உலகத்தில் பிறந்த எல்லா மனிதர்களுக்கும் இந்த மகிழ்ச்சி கிடைப்பதில்லை காரணம் "நீதிமான்களுக்காக வெளிச்சமும், செம்மையான இருதயத்தாருக்காக மகிழ்ச்சியும் விதைக்கப்பட்டிருக்கிறது" (சங் 97 : 11) என்று வேதம் கூறுகிறது. எனவேதான் "நீதிமான்களே கர்த்தருக்குள் மகிழ்ந்து களிகூருங்கள், செம்மையான இருதயமுள்ளவர்களே நீங்கள் எல்லோரும் ஆனந்த முழக்கமிடுங்கள்" (சங் 32 : 11) என்று இஸ்ரவேலின் இராஜாவாகிய தாவீது கூறுகிறார்.

உலகத்தில் நீதிமான்கள் என்று ஒரு கூட்டத்தார் இருப்பார்கள் என்றும் அவர்களுக்காகவே மகிழ்ச்சி விதைக்கப்பட்டிருக்கிறது என்றும் வேதத்திலே நாம் பார்க்கிறோம். ஆதாம் பாவம் செய்தபடியால் அவனிலிருந்து உண்டான மனித இனம் அனைவரும் பாவிகளானார்கள் (ரோம 5 : 14) என்றே வேதம் விளம்புகிறது.

. இப்படியிருக்க பாவியான மனிதன் எப்படி நீதிமான் ஆகிறான்? இதற்குரிய தேவனுடைய திட்டங்கள் எப்படிப்பட்டது? பரிசுத்த வேதம் என்ன சொல்லுகிறது? என்பதை நாம் அறிந்து கொள்வது நல்லது. பாவத்தின் சம்பளம் மரணம் (ரோ 6 : 23) என்று வேதம் கூறுகிறது. ஆகையால் மனுக்குலம் அனைத்தும் பாவம் செய்து மரணமாகிய தண்டனையை ஏற்றுக்கொண்டபடியால் மனுக்குலத்தை சிருஷ்டித்த இறைவனாகிய ஆண்டவர் தாமே மனிதனாய் தோன்றி மனிதன் அடைய வேண்டிய பாவத்தின் தண்டனையாகிய மரணத்தை அவர் ஏற்றுக் கொண்டு, மனிதனுக்காக இரத்தம் சிந்தி மரித்தார். இவருடைய மரணத்தினால்தான் மனுக்குலத்திற்கு பாவ நிவிர்த்தி, அதாவது பாவமன்னிப்பு அல்லது அகத்தூய்மை, செம்மையான இருதயம் உண்டாகிறது என்று வேதத்தில் பார்க்கிறோம்.

பாவியான ஒரு மனிதன் முற்றிலும் பாவமில்லாத ஒரு தன்மையை அடைந்து கொள்ளுதல் அதாவது, செம்மையான இருதயத்தைப் பெற்றுக் கொள்ளுதல் இதுவே நீதிமானுக்கப்படும் அனுபவமாகும். சில நீதி நால்களைப்படிப்பதினால் இந்த அனுபவம் கிடைப்பதில்லை. இயேசு கிறிஸ்துவின் மூலமே கிடைக்கும். "இயேசு கிறிஸ்துவின் இரத்தம் சகல பாவங்களையும் நீக்கி நம்மை சுத்திகரிக்கும்" (I யோவா 1 : 7) "நாம் அவருடைய இரத்தத்தினாலே நீதிமான்களாக்கப்பட்டிருக்கிறோம்" (ரோம 5 : 9).

ஆனால் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் இரத்தம் சகல பாவங்களையும் சுத்திகரிக்கிறது என்கிற சத்தியத்தை அறிந்திருந்தாலும் பெரும் பாலான மக்கள் இன்றையவரைக்கும் பாவிகளாகவே வாழ்கிறார்கள். "கிறிஸ்து இயேசுவினாலே ஜீவனுள்ள தேவனுடைய ஆவியின் பிரமாணம் என்னை பாவம், மரணம் என்பவைகளின் பிரமாணத்தினின்று விடுதலையாக்கிற்றே" (ரோ 8 : 2) "முன்னே நீங்கள் பாவத்திற்கு அடிமைகளாயிருந்தும், இப்பொழுது உங்களுக்கு ஒப்புவிக்கப்பட்ட உபதேச சட்டத்திற்கு மனப்பூர்வமாய் கீழ்ப்படிந்தபடியால்...... பாவத்தினின்று விடுதலையாக்கப்பட்டு, நீதிக்கு அடிமைகளானீர்கள்" (ரோ 6 : 17, 18) என்று அப்போஸ்தலனாகிய பவுல் கூறுகிறார். இப்படி கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் இரத்தத்தினால் தேவன் சம்பாதித்து வைத்த மீட்பை, நீதியுள்ள வாழ்வை அவருடைய வார்த்தையைக் கைக் கொள்ளும் ஒவ்வொரு மனிதனும் அடைகிறான்.

இவ்விதமாய் நீதிமான்களாக்கப்பட்டோருக்கு இறைவன் அருளும் மகிழ்ச்சிகள், நன்மைகள் ஏராளம்.

முதலாவதாக சங். 34 : 15 "கர்த்தருடைய கண்கள் நீதிமான்கள்மேல் நோக்கமாயிருக்கிறது, அவருடைய செவிகள் அவர்கள் கூப்பிடுதலுக்குத் திறந்திருக்கிறது"

என்று பார்க்கிறோம். ஒரு மனிதனுடைய இருதயம் செம்மையாகும் பொழுது அவனுடைய ஜெபத்தை உடனே ஆண்டவர் கேட்கிறார். பரலோகத்தில் வீற்றிருக்கும் ஆண்டவர் பூலோகத்திலிருந்து அவரை நோக்கிக் கூப்பிடும் ஒவ்வொரு ஆத்துமாவுக்கும் செவி கொடுக்கிறார், பதில் அளிக்கிறார் என்றால் அது எத்தனை பெரிய ஆச்சரியம் என்று பாருங்கள். ஆனால் "பாவிகளுக்கு தேவன் செவி கொடுப்பதில்லை என்று வேதம் கூறுகிறது (யோ 9 : 31). "தானியேலின் இருதயம் ஆண்டவருக்கு ரொம்பப் பிரியமாயிருந்தபடியால் வேண்டிக் கொள்ளத் தொடங்கின போதே கட்டளை வெளிப்பட்டது" (தானி 9 : 23) என்று வேதம் கூறுவதை நாம் பார்க்கிறோம்.

இரண்டாவதாக: "நீதிமானுக்கு வரும் துன்பங்கள் எல்லாவற்றினின்றும் தேவன் அவனை விடுதலையாக்குகிறார் (சங் 34 : 19) என்று வேதம் கூறுகிறது. இதில் ஒரு பெரிய அதிசயம் என்னவென்றால், நீதிமான்களுக்கு எப்படிப்பட்ட துன்பங்களைக் கொடுக்க வேண்டும் என்று துன்மார்க்கர்கள் விரும்புகிறார்களோ, அதே துன்பங்களை அந்த துன்மார்க்கர்கள் அனுபவிக்கும்படி கர்த்தர் செய்கிறார். "நீதிமான் இக்கட்டினின்று விடுவிக்கப்படுவான் அவன் இருந்த இடத்திலே துன்மார்க்கன் வருவான்" (நீதி 11 : 8). தானியேலை சிங்கக்கெபியிலே போடுவதற்குக் காரணமாயிருந்த மனிதர்கள் அதே கெபியில் போடப்பட்டார்கள் (தானி 6 : 24) அப்படியே மொர்தெகாய்க்கு ஆயத்தம் பண்ணின தூக்கு மரத்தில் ஆமான் தூக்கிப் போடப்பட்டான்" (எஸ் 7 : 10) என்று வேதத்தில் பார்க்கிறோம். இன்றைக்கும் அப்படியே நடந்து வருகிறது. இது எத்தனை ஆச்சரியம்.

மூன்றாவதாக "கர்த்தர் நீதிமான்களைப் பசியினால் வருந்த விடார் (நீதி 10 : 3) என்று பார்க்கிறோம். உலகத்தில் பல வேளைகளில் பணம் இருந்தும் மக்கள் பசியினால் வாடுகிறதை நாம் கண்டிருக்கிறோம். ஆனால் தேவனாகிய கர்த்தர் நீதிமான்களைப் பசியினால் வருந்த விடமாட்டார் என்று வேதம் திட்டமாய் கூறுகிறது.

தேசத்தில் மழையில்லாமல் மூன்றரை வருடம் கொடியபஞ்சம் உண்டாகி மக்கள் அவதிப்பட்டுக் கொண்டிருந்த நேரம், தேவன் தம்முடைய பக்தனாகிய எலியாவுக்கு காகத்தைக் கொண்டு அப்பமும், இறைச்சியும் கொடுத்து வந்தார் (I இரா 17 : 5, 6) அல்லேலூயா. மறுபடியும் தாவீது கூறும் பொழுது: "நான் இளைஞனாயிருந்தேன் முதிர் வயது முள்ளவனுமானேன், ஆனாலும் நீதிமான் கைவிடப்பட்டதையும், அவன் சந்ததி அப்பத்துக்கு இரந்து திரிகிறதையும் நான் காணவில்லை (சங் 37 : 25) என்னே ஆச்சரியம்! தேவனுடைய பிள்ளையே உன் உள்ளம் கர்த்தரிடத்தில் செம்மையாய் இருக்குமானால் நீ வருங்காலத்தைக் குறித்து கலங்காதே, உன் பிள்ளைகளைக் குறித்தும் கவலைப்படாதே.

நான்காவதாக: நீதிமான்கள் அழிவினின்று காக்கப்படுகிறார்கள். ஆதி 7 : 1 ல் கர்த்தர் நோவாவை நோக்கி: நீயும் உன் வீட்டார் அனைவரும் பேழைக்குள் பிரவேசியுங்கள். இந்தச் சந்ததியில் உன்னை எனக்கு முன்பாக நீதிமானாகக் கண்டேன் என்று தேவனாகிய கர்த்தர் கூறினதாகப் பார்க்கிறோம்.

முதல் உலகத்தை தேவன் அழிக்கும் பொழுது, நோவாவையும் அவனுடைய குடும்பத்தையுமே பாதுகாத்தார். அப்படியே சோதோம், கொமோரா போன்ற பட்டணங்களைத் தேவன் அழிக்கும் பொழுதும் லோத்தையும், அவருடைய குடும்பத்தையுமே தேவன் பாதுகாத்தார் என்று பார்க்கிறோம். இனி மனுஷகுமாரனுடைய நாளிலும் இப்படியே நடக்கும் என்று வேதம் கூறுகிறது (II பேது 3 : 7). ஆகையால் நீதிமான்கள் மாத்திரம் அழிவினின்றுகாக்கப்படுவார்கள்.

ஐந்தாவதாக: நீதிமான்கள் மாத்திரம் கர்த்தருடைய வருகையில் எடுத்துக்கொள்ளப்படுவார்கள். இன்று அநேகர் இவ்விதமாகப் போதிக்கிறார்கள். இயேசுவே என்னை இரட்சியும் என்று வேண்டிக் கொண்ட உடனே அவனுக்குப் பரலோகம் கிடைக்கும். இயேசு என்ற நாமத்தை உச்சரித்தாலே போதும். மற்றபடி வேறு உபதே

சங்கள் தேவையில்லை என்று மக்களுக்கு தப்பிதமாக போதனை செய்து தாங்களும் கெட்டு தங்கள் உபதேசத்தை கேட்கிற வர்களையும் கெடுக்க வைக்கிறார்கள்.

வேதம் என்ன கூறுகிறது? "ஏனெனில் கர்த்தர் தாமே ஆரவாரத்தோடும், பிரதான தூதனுடைய சத்தத்தோடும், தேவ எக்காளத்தோடும் வானத்திலிருந்து இறங்கி வருவார். அப்பொழுது கிறிஸ்துவுக்குள் மரித்தவர்கள் முதலாவது எழுந்திருப்பார்கள் (Iதெச 4 : 16) என்று கூறுகிறது. "கிறிஸ்துவுக்குள் இருப்பவர்கள் புதுசிருஷ்டியாய் இருக்கிறார்கள் என்று (II கொரி 5 : 17) அப்பவுல் கூறுகிறார். இது இயேசுகிறிஸ்துவின் இரத்தத்தினால் உண்டாகிற ஒரு புது ஜீவியமாகும்.

"பின்பு உயிரோடிருக்கும் நாமும் கர்த்தருக்கு எதிர் கொண்டுபோக மேகங்கள் மேல் அவர்களோடே கூட ஆகாயத்தில் எடுத்துக் கொள்ளப்பட்டு இவ்விதமாய் எப்பொழுதும் கர்த்தருடனே கூட இருப்போம்" (I தெச 4 : 17) என்று பரிசுத்த பவுல் கூறுகிறார். உயிரோடே பரலோகம் செல்லும் ஒரு உன்னத அனுபவம். இது யாருக்கு கிடைக்கும்? "ஏனோக்கு தேவனோடு சஞ்சரித்துக் கொண்டிருக்கையில் காணப்படாமற்போனான். தேவன் அவனை எடுத்துக் கொண்டார் (ஆதி 5 : 24) தேவனோடு சஞ்சரிக்கும் அனுபவம் ஒரு பாவிக்குக் கிடைக்காது. பாவம் மனிதனைத் தேவனை விட்டுப் பிரித்து விடுகிறது (ஏசா 59 : 2). ஒரு மனிதன் இயேசுகிறிஸ்துவின் இரத்தத்தால் கழுவப்பட்டு நீதிமானாக மாறின பிறகே தேவனோடு அவன் சஞ்சரிக்கிறான். நோவா தன் காலத்தில் இருந்தவர்களுக்குள்ளே நீதிமானும், உத்தமனுமாயிருந்தான் நோவா தேவனோடு சஞ்சரித்துக் கொண்டிருந்தான் (ஆதி 6 : 9) என்று பார்க்கிறோம்.

பிரியமானவர்களே! ஆதாம் பாவம் செய்யாத வரையிலும் தேவனோடு ஏதேன் தோட்டத்தில் சஞ்சரித்து வந்தான். பாவம் செய்ததும் தேவனுடைய சத்தத்தை தோட்டத்திலே கேட்டதும் ஓடி ஒளித்துக் கொண்டான். தோட்டத்தை விட்டும் துரத்தப்பட்டான். மறுபடியும் மனித இனம் தன்னோடு உறவாட விருப்பம் கொண்ட பிதாவாகிய தேவன் தம்முடைய குமாரனுடைய இரத்தத்தை மனுக்குலத்துக்கு கொடுத்தார். அந்த இரத்தத்தினாலே பாவம்போகக் கழுவப்பட்டவர்கள், நீதிமான்களாக்கப்பட்டவர்கள் இன்றைக்கும் உண்டு (Iகொரி 6 : 11) அவர்கள் மாத்திரம் கர்த்தருடைய வருகையில் எடுத்துக் கொள்ளப்படுவார்கள் அப்பொழுது மிகுந்த மகிழ்ச்சியும், களிப்பும் உண்டாகும்.

ஆகையால் நீதிமான்களே, கர்த்தருக்குள் மகிழ்ந்து களிகூருங்கள், செம்மையான இருதயமுடையவர்களே நீங்கள் எல்லாரும் ஆனந்த முழக்கமிடுங்கள் என்று பரிசுத்த ஆவியானவர் கூறுகிறார்.

---

"நீங்கள் இரட்சிப்பின் ஊற்றுகளிலிருந்து மகிழ்ச்சியோடே தண்ணீர் மொண்டு கொள்வீர்கள்"

—ஏசா 12 : 3.

---

# தேவ தூதர்களின் சேவை உங்களுக்குத் தேவையா?

தேவனாகிய கர்த்தர் ஆயிரம், பதினாயிரமான எண்ணிறந்த தேவ தூதர்களை உருவாக்கி வைத்திருக்கிறார். இவர்கள் மாம்ச தேகத்திற்கு அப்பாற்பட்ட ஆவிகளாக இருக்கிறார்கள். இவர்களை நம்முடைய மாம்சீகக் கண்களால் நாம் காண முடியாது. கர்த்தர் இந்தத் தேவ தூதர்களை காணத்தக்கதாய் நம்முடைய கண்களைத் திறப்பாரானால் நாம் காண முடியும் (II இராஜா 6 : 17) இவர்கள் மனுஷ ரூபங் கொண்டும் நமக்குத் தென்படக் கூடும் (எபி 13 : 2). இவர்கள் இரட்சிப்பை சுதந்தரிக்கப் போகிறவர்களினிமித்தமாய் அனுப்பப்படும் பணி விடை ஆவிகளாயிருக்கிறார்கள்

(எபி 1 : 14). இந்த தேவ தூதர்கள் எப்படிப்பட்டவர்களுக்கு எவ்விதமாய் சேவை செய்கிறார்கள் என்று சில காரியங்களைக் கவனிப்போம்.

**சோதனையை ஜெயித்தவர்கள்:-**

கர்த்தர் தம்முடைய பிள்ளைகளை உயர்த்தி, உபயோகப்படுத்துமுன் அவர்களை சோதித்தறிகிறார். தம்முடைய பிள்ளைகள் தமக்கு எவ்வளவாய் பயப்படுகிறார்கள், தம்முடைய வார்த்தைகளை எவ்விதமாய் மதிக்கிறார்கள். எந்த சூழ்நிலையிலும் தம்முடைய பிரமாணங்களை விட்டு வழி விலகாமல் உறுதியாக இருக்கிறார்களா என்று சோதித்தறியும்படி கர்த்தர் சோதித்துப் பார்க்கிறார். இப்படிப்பட்ட சோதனைகளில் தேர்ச்சி பெறுகிறவர்களுக்கு தேவ தூதர்கள் தீவிரமாய் கடந்து வந்து பணி விடை செய்யும் படி தேவனால் அனுப்பப்படுகிறார்கள். சாத்ராக், மேஷாக், ஆபேத்நேகோ என்ற தேவ பக்தியுள்ள புருஷர்கள் விக்கிரகங்களை நமஸ்கரிக்காதே என்ற தேவ கட்டளையை மதித்து, ராஜாவாகிய நேபுகாத்நேச்சாரின் கட்டளையை அவனுடைய சகல பிரபுக்களுடைய முன்னிலையில் நிராகரித்து, தாங்கள் அறிந்த சத்தியத்தை உறுதியாய் பற்றிக் கொண்டது நிமித்தமாய் இராஜாவின் கடுங்கோபத்திற்கு ஆளாகி, அக்கினிச் சூளையில் தூக்கிப் போடப்பட்டார்கள். உடனே தேவன் தம்முடைய தூதனை அனுப்பி, அந்த புருஷர்களின் கட்டுகளை அவிழ்த்து அவர்கள் மேல் தீ தொடாதபடி பாதுகாப்பளித்தார். தங்கள் ஜீவனையும் பாராமல் வசனத்தை மதித்து பிரமாணத்தைப் பற்றிக் கொண்ட இவர்களுக்கு தேவ தூதர்கள் பணி விடை செய்தார்கள்.

கர்த்தராகிய இயேசு கிறிஸ்து ஞானஸ்நானம் பெற்று, பரிசுத்த ஆவியையும் பெற்று தம்முடைய ஊழியத்தை தொடங்கு முன் பிசாசினால் சோதிக்கப்படுவதற்கு ஆவியானவராலே வனாந்தரத்துக்கு கொண்டு போகப்பட்டார் (மத் 4:1). பரிசுத்தாவி பெறாமல் ஒருவனும் ஊழியம் செய்ய முற்படக்கூடாது. அந்த ஆவியினாலே யன்றி இயேசுவைக் கர்த்தர் (LORD) அதாவது ஆண்டவர், எஜமான், அவருக்கு நான் ஊழியக்காரன் என்று ஒருவனும் சொல்லக் கூடாது (1 கொரி 12 : 3, 5). இயேசு கிறிஸ்து சாத்தானின் தூண்டுதலுக்கு உடன்படாமல், வேத வாக்கியங்களை முக்கியப்படுத்தி அதை பிரஸ்தாபமாக்கி சாத்தானை மேற் கொண்டார். சாத்தான் அவரை விட்டு விலகி சென்ற உடன் தேவ தூதர்கள் வந்து அவருக்கு பணி விடை செய்தார்கள் (மத் 4 : 11). பரிசுத்தாவி பெற்றபின், ஆவியானவர் நம்மை சாத்தான் சோதிக்கதக்கதாக ஒப்புக் கொடுக்கிறார். இந்த சோதனைகளில் கர்த்தருக்கு கீழ்ப்படிவதே முக்கியம் என்று, சோதனைகளை ஜெயித்து, சாத்தானை மேற்கொள்கிறவர்களுக்கு தேவ தூதர்கள் பணிவிடை செய்கிறார்கள். அவர்களுக்குரிய சகல காரியங்களிலும் தலையிட்டு காரியத்தைக் கைகூடிவர எல்லா ஏற்பாடுகளையும் செய்கிறார்கள். ஏனெனில் யார் தேவனை கனம் பண்ணுகிறார்களோ, அவர்களை கர்த்தர் கனம் பண்ணுகிறார். இயேசு கிறிஸ்துவினிமித்தமாக தாய், தகப்பன், உறவினர்கள், நண்பர்கள் முதலியோரை யார் இழந்து போகிறார்களோ, அவர்களுக்கு தேவன் தாமே தந்தையாகவும், தேவ தூதர்கள் உதவி ஆட்களாகவும், நண்பர்களாகவும் இருந்து இவர்கள் செய்ய வேண்டியயாவற்றையும் அவர்கள் (தேவ-தூதர்கள்) செய்கிறார்கள். சோதனையைச் சகித்து தேவ பிரமாணங்களை பெரிதுபடுத்துகிறவர்கள் பாக்கியவான்கள், அவர்கள் வாக்குத்தத்தம் பண்ணப்பட்ட ஜீவ கிரீடத்தை பெறுவார்கள் (யாக் 1 : 12).

**தேவ சித்தம் செய்பவர்கள் :-**

இந்நாட்களில் அநேகர் எந்தெந்த காரியமெல்லாம் எளிதாக கை கூடி வருகிறதோ, அவைகள் எல்லாம் தேவ சித்தம் என்றும், எந்தக் காரியங்களிலெல்லாம், தடைகளும் குழப்பங்களும், எதிர்ப்புகளும் வருத்தங்களும், சஞ்சலங்களும் உருவாகிறதோ, அவைகள் தேவனுக்கு சித்தமானவைகள் அல்ல என்று தோற்றத்தின்படி தீர்ப்புச் செய்கிறார்கள். அனபடியால்தான் பரி. பவுல் : உலக மக்களைப்போல் சூழ்நிலைகளுக்கேற்றவாறு தங்களுடைய விருப்பங்களை நிறை வேற்றுகிறவர்களாக காணப்

படாமல் தேவனுடைய நன்மையும் பிரியமும் பரிபூரணமுமான சித்தம் இன்னதென்று பகுத்தறியத்தக்கதாக உங்கள் மனம் புதிதாகிறதினாலே மறுரூபமாகுங்கள் (ரோம 12 : 2) என்று புத்தி சொல்கிறார். ஆதிமுதல் சாத்தான் போராடுவதெல்லாம் மனிதர்கள் தேவசித்தம் செய்து விடக்கூடாது என்பதற்கே. ஆகையால் எந்தெந்தக் காரியங்களில் தேவன் மேலான நோக்கம் கொண்டிருக்கிறாரோ, அவைகளில் எல்லாம் சாத்தானின் வல்லமையான போராட்டங்கள் காணப்படும். அநேகர் இந்த போர்களை எதிர்த்து நிற்கப் பயந்து, சோர்வடைந்து, பின்வாங்கி தோற்றுப் போய் தேவ சித்தத்தை நிறைவேற்றுவதில் தவறிப்போய் விடுகிறார்கள். சிலர் தங்களுடைய வாழ்க்கையில் நடப்பதெல்லாம் தேவ சித்தமே என்று எண்ணிக் கொண்டு தங்களுடைய சுய சித்தத்தை நிறைவேற்றி தங்களைத் தாங்களே ஏமாற்றிக் கொண்டிருக்கிறார்கள். முதலாவது தேவ சித்தத்தை ஒரு மனிதன் அறிய வேண்டும். இரண்டாவது அதை நிறைவேற்ற தன்னை ஒப்புக் கொடுக்க வேண்டும் மூன்றாவது அதை நிறைவேற்ற விடாமுயற்சியோடு போராட வேண்டும். அப்போஸ்தலர் பவுலும் தம்முடைய மந்தையில் இருப்பவர்கள் தேவ சித்தத்தை முழுமையாய் செய்யும்படி எப்பொழுதும் வேண்டுதல் செய்தார் (2 தெச 1 : 12).

தேவ சித்தம் செய்ய ஒரு மனிதன் மனப் பூர்வமாய் ஒப்புக் கொடுத்து, அதை நிறைவேற்ற பலனற்று தவிக்கையிலே தேவ தூதர்கள் அப்படிப்பட்டவர்களை பலப்படுத்தும்படி அனுப்பப்படுகிறார்கள்.

எல்லா விதத்திலும் நம்மைப் போல் சோதிக்கப்பட்ட கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் கடைசி வேளை வந்தபோது, அவருடைய ஆத்துமா மிகவும் கலங்கினது. முற்றிலும் பாவத்தில் பிறந்து, அநியாயத்தை (பாவத்தை) தண்ணீரைப் போல் பருகிக் கொண்டிருந்த நாம் தேவனுடைய உருக்கமான இரக்கத்தினாலே இரட்சிக்கப்பட்ட பின்பு, நமது வாழ்க்கையில் ஒரு சிறிய தவறு நேரிடும் போது நம்முடைய ஆத்துமா எவ்வளவாய் கலங்குகிறது. அதை அறிக்கை செய்து, பாவ மன்னிப்பு பெறும் வரை எவ்வளவாய் தியங்குகிறோம். இந்த சின்ன காரியம் அற்பமான நமக்கே இவ்வளவு வேதனை உண்டாக்குகையில், எவ்வளவேனும், பாவம் இல்லாத மகா பரிசுத்தரானவர், சர்வலோகத்தின் அனைத்து மக்களின், அனைத்து பாவங்களையும் தான் செய்தவர் போல் அதின் பாரத்தை சுமக்க நேரிடும் போது அது எவ்வளவு பெரிதான காரியம். இந்தப் பாவ பாரத்தை இவர் சுமப்பது தேவனுடைய சித்தமாயிருந்தது. அந்தப் பழு தன் மீது சுமத்தப்படும் வேளை வந்த போது மிகவும் துக்கப்படவும், வியாகுலப்படவும் தொடங்கினார். மிகவும் கலங்கிப் போனார். ஆனாலும் மந்தையின் முன் நடக்கிற ஆட்டுக் கடாவான அவர் தேவ சித்தம் செய்வதிலிருந்து பின் வாங்கவில்லை. தன்னிலே பிதாவின் சித்தம் முற்றிலும் நிறைவேற தன்னை ஒப்புக் கொடுத்து : என் சித்தப்படி அல்ல உம் சித்தப்படியே ஆகக்கடவது என்று ஜெபம் பண்ணினார். அப்பொழுது வானத்திலிருந்து ஒரு தூதன் தோன்றி அவரைப் பலப்படுத்தினான் (லூக் 22 : 42, 43).

**கர்த்தரைத் தங்களுக்கு தாபரமாய் கொண்டவர்கள் :**

அரணிப்பானக் கோட்டைக்கு உள் இருக்கிறதான மனிதன் சத்துருக்களால் தாக்கப்படாதபடி பாதுகாக்கப்படுகிறான். இந்தக் கோட்டை எவ்வளவு பெரிதாய் இருந்தாலும் அதனுள் அவன் எங்கு வேண்டுமானாலும் போகலாம். எந்த இடத்திலும் உட்காரலாம். அவனை சத்துரு ஒன்றும் செய்யவே முடியாது. ஆனால் என்றைக்கு அவன் கோட்டையிலிருந்து தன் காலை வெளியே எடுத்து வைக்கிறானோ அதிலிருந்து அவனுக்கு உண்டான பாதுகாப்பு எடுக்கப்பட்டு, இசைவினைப்பாய்க் கட்டப்பட்ட எருசலேமிலிருந்து எரிகோவுக்கு போன மனிதன் கள்ளர் கையால் தாக்கப் பட்டதுபோல், சத்துருவால் தாக்கப்படுவான்.

**கிறிஸ்துவுக்குள்ளாக** இருக்கிறதான மனிதன் புதுசிருஷ்டியாக இருக்கிறான்.

பழைய உபதேசம், பழைய பாவ வாழ்க்கை, பழைய தோழர்கள், பழைய பாரம்பரியங்கள், கீழ்ப்படியாமை, தேவ ஆளுகையற்ற தன்மை முதலானவைகளை புறம்பாக்கி, புது சிருஷ்டியாக கிறிஸ்துவுக்குள் மறைந்திருக்கிறான். கிறிஸ்துவுக்குள் ஏற்றவைகளை எதை வேண்டுமானாலும் செய்யலாம். பரிசுத்தாவியின் நடத்துதல்படி, அனுமதியின்படி எங்கு வேண்டுமானாலும் போகலாம், வரலாம். இவனுக்கு எந்த பொல்லாப்பும் நேரிடுவதில்லை. சுவிசேஷத்தினிமித்தமாக வருகிற பாடு, சேதமேயல்லாமல் ஒரு தீங்கும் இவனை அணுகாதவாறு தேவ தூதர்கள் காவல் காக்கிறார்கள்.

ஏனெனில் இவன் கர்த்தரைத் தாபரமாக (Place to live in) கொண்டிருக்கிறான். அதாவது கர்த்தருக்குள்ளாக வாசம் செய்கிறான். ஆகையால் பொல்லாப்பு நேரிடாது. வாதை அணுகாது வழிகளிலெல்லாம் பாதம் கல்லில் இடறாதபடி காக்கும்படி தூதர்கள் அனுப்பப்படுகிறார்கள்.

பழையவைகளை நாடிச்செல்வேன். எனக்கு தேவ ஆலோசனை தேவை இல்லை. எனக்கு நலமாய் தோன்றுகிறதைச் செய்வேன், எங்காவது போவேன், வருவேன் என்று சொல்லிக் கொண்டிருப்பானானால் இவனுக்கு தேவ தூதர்கள் காவல் கொடுப்பது கிடையாது.

அருமையானவர்களே, தேவனுடைய கட்டளைகளை (வசனத்தை) மதித்து, சோதனையில் ஜெயம் பெறுங்கள். தேவ சித்தத்தை அறிந்து அதை செய்ய ஒப்புக் கொடுங்கள், கர்த்தர் செட்டைகளுக்குள் (தாபரத்திற்குள்) அடங்கி இருங்கள் தேவ தூதர்களின் சேவையைப் பெற்றுக் கொள்வீர்கள்.

---

"அப்பொழுது பிசாசானவன் அவரை விட்டு விலகிப் போனான். உடனே தேவ தூதர்கள் வந்து அவருக்குப் பணி விடை செய்தார்கள்" —மத். 4 : 11

---

# பரியாசமோ பரியாசம்

மானிட மீட்புக்காய் கர்த்தராகிய இயேசு கிறிஸ்து தம்மை கல்வாரி சிலுவையில் ஜீவ பலியாக ஒப்புக் கொடுத்தார். மீட்கப்படுகிறவர்கள் தம்முடைய குமாரனாகிய கிறிஸ்து இயேசுவின் சாயலுக்கொப்பாக வேண்டுமென தேவன் சித்தமுடையவராயிருக்கிறார் (ரோமர் 8:29). இந்த மேன்மையை மனிதன் அடைந்து கொள்ள அவன் முதலாவது தன்னை கர்த்தருக்கென்று ஒப்புக் கொடுக்க வேண்டும். இப்படி மனிதன் தன்னை முற்றிலும் அதாவது எல்லாவற்றிலும் எந்த சமயத்திலும் தேவ சித்தம் செய்ய ஆயத்தமாயிருக்கிறேன் என்று ஒப்புவிக்கும் வேளை வரைக்கும் சாத்தான் நன்மை செய்ய விரும்பும் நெருங்கிய நண்பனைப்போல் இருந்து ஒப்புக் கொடுக்காதிருக்க என்னென்ன ஏற்பாடுகள் உண்டோ அதைச் செய்கிறான்.

இதோ பார்: இந்த புனித வாழ்க்கைக்கு உன்னை ஒப்புக்கொடுத்தால் நீ அனுபவிக்க வேண்டிய இன்பங்களை இழக்க வேண்டும். உன்னுடைய நெருங்கினவர்கள் வருத்தப் படுவார்கள். நண்பர்கள் பிரிந்து போய் விடுவார்கள். திருமண விசயமாய் கொடுக்கல் வாங்கல்களில் சிக்கல் ஏற்படும். இவ்வளவு நாள் பொய்யினால் பொருளீட்டி விட்டு திடீரென மெய் பேசினால் குழப்பங்கள் உருவாகும். அப்படியே உனக்கு இந்த தெய்வீக நிலை வேண்டுமானால் இப்போ என்ன அவசரம் எல்லாக்காரியங்களையும் ஒருவாறு ஒழுங்குபடுத்திவிட்டு பின்னால் பார்த்துக் கொள்ளலாம் என்று பலவாறு துர்போதனை கொடுத்து பிசாசு ஒப்புக் கொடுத்தலை தடுக்கிறான்.

இந்த தடைகளை எல்லாம் மீறி ஒரு ஆத்துமா தன்னை ஒப்புக்கொடுத்து விட்

டால் சாத்தானின் முகபாவம் மாறி தன் சுய ரூபத்தை வெளிப்படுத்தி அதுமுதல் பகைஞனாய் காணப்படுகிறான். எதிராளியாகிய பிசாசு கோபமடைந்து, எரிச்சலாகி, சரி ஒப்புக்கொடுத்ததைத் தான் தடுக்க முடியவில்லை. ஆனால் இனிமேல் முன்னேற விடக்கூடாது அதைத் தடை செய்வோம் என தீர்மானம் பண்ணி தன்னுடைய ஆயுதங்களில் ஒவ்வொன்றாய் எடுத்து யுத்தம் பண்ண ஆரம்பிக்கிறான். அருமையான தேவனுடைய மக்களே, சாத்தானின் போர் ஆயுதங்களில் ஒன்று பரியாசம்.

தேவன் தம்முடையவர்களைத் தெரிந்துக் கொண்டு தமது ஆவியை அருளி தமது சித்தத்தை செயல் படுத்துகிறார். சாத்தானும் மாம்சமான மனிதர்களை இயக்கி, ஆவிக்குரியவர்களுக்கு விரோதமாய் யுத்தம் கலக்க செய்கிறான்.

நெகேமியா என்ற தேவ பக்தியும், தேவனுடைய நகரத்தின் பற்றும் உடைய மனிதர் எருசலேம் பட்டணம் இடிபட்டு, தேவ ஆலயம் சேதப்பட்டு போனதால், பெருந்துக்கமடைந்து. தனக்கு அதிகாரியான ராஜாவிடத்தில் உத்தரவு பெற்று, சுய தேசம் வந்து ஜனங்களைத் திரட்டி நம்முடைய நிந்தை நீங்கும்படி எருசலேமின் அலங்கத்தை கட்டுவோம் என்றார் ஜனங்களும் இந்த நல்ல வேலைக்கு தங்களை ஒப்புக் கொடுத்து. வாருங்கள், நாம் எழும்பிக் கட்டுவோம் என்று தங்களுடைய கரங்களைப் பலப்படுத்தினார்கள் (நெகே 2:17,18).

எருசலேம் குடிகளின் இந்த தீர்மானத்தை சாத்தானின் கையாட்களான, சன்பலாத், தொபியா, கேசேம் முதலியோர் கேள்விப்பட்ட போது, அற்பமாய் தோன்றுகிற இந்த ஆரம்பத்தின் வேலையை அசட்டை பண்ணி பரியாசம் பண்ணினார்கள். (நெகேமியா 2:19) உணர்வில்லாத மிருகங்கள் போல் நிர்வாணமாய் எல்லாரும் திரிந்து கொண்டிருக்கிற ஒரு கிராமத்தில், அவர்களில் ஒருவன் உணர்வடைந்து வஸ்திரம் தரித்துக் கொண்டால் மற்றவர்கள் அவனை பரியாசம் பண்ணுவார்கள் என்று பழஞ்சொல்லுண்டு. தெய்வத்தின் பிரமாணத்தை மீறி நிர்வாணமான மனிதர்களில் ஒரு மனிதன், உணர்வடைந்து கிறிஸ்து இயேசு சிந்தின இரத்தத்தை விலைக்கிரயமாய்க் கொடுத்து இரட்சிப்பாகிய வஸ்திரத்தை வாங்கி தன் நிர்வாணத்தை மூடின உடனே, மற்ற நிர்வாணிகள் பரியாசம் பண்ணினால் இதில் ஆச்சரியப்பட என்ன இருக்கிறது. பரியாசம் சாத்தானுடைய போர் ஆயுதங்களில் ஒன்று. இந்த ஆயுதத்தை சிநேகிதர்கள், உறவினர்கள், அக்கம் பக்கத்தார்கள் மூலம் பயன் படுத்துகிறான்.

சிலுவையிலே கர்த்தர் தன்னை ஜீவபலியாக்க ஒப்புக் கொடுத்ததான வேளையில் இந்த ஆயுதத்தை சாத்தான் வல்லமையாய் பல முறை பயன்படுத்தினான் பாருங்கள்! காணீர் கர்த்தர் அடைந்த பரியாசப் பாடுகளை: இயேசுவைப் பிடித்துக் கட்டி, தேவ சபையிலே பிரதான ஆசாரியருக்கு முன்பாக நிறுத்தினார்கள்—யோ 18:12 அங்கே, அவர் முகத்தில் துப்பினார்கள்—மத். 26 : 67; அவரைக் குட்டினார்கள். மத்—26:67.

தேவ சந்நிதானத்தில் இருந்து வந்த மோசேயினுடைய முகம் பிரகாசித்ததினால் ஜனங்கள் பயந்ததால் அவர் முக்காடு போட்டுக் கொண்டாரே, நீ பெரிய தேவனுடைய குமாரனாயிற்றே, உன்னுடைய முகத்தின் ஒளியை எங்களால் பார்க்க முடியவில்லை, நீ உன் முகத்தை மூடிக்கொள் என்று அவர் முகத்தை மூடினார்கள். மாற். 14:65.

ஓகோ, நீ பெரிய தீர்க்கதரிசியோ, உனக்கு எல்லாம் தெரியுமோ, இப்போது சொல் பார்க்கலாம் என்று அவருடைய கண்களைக்கட்டி, அவருடைய முகத்தில் அறைந்து உன்னை அடித்தவன் யார் அதை ஞான திருஷ்டியால் சொல் என்று கேட்டார்கள்—லூக் 22:64. தான் தேவனுடைய குமாரனாகிய கிறிஸ்துதான் என்று உண்மையை சொன்னதினால் உணர்வில்லா செத்துப்போன தேவ ஜனம் என்று பெயர் மாத்திரம் வைத்திருந்த யூதர், தேவ சபையில் கர்த்தரை இலவிதமாய் பரியாசம் பண்ணினார்கள் (மத் 26:63,64; லூக் 22:63).

இயேசு கிறிஸ்துவின் தெய்வீகத்தினிமித்தம், தேவ ஞானத்தினிமித்தம் அவர் பரியாசம் பண்ணப்பட்டார். தேவனை அறிகிற அறிவு நமக்கு உண்டாகும் போது, தேவ ஞானம் வெளிப்படும்போது, தெய்வீக குணாதிசயங்கள் காணப்படும்போது சாத்தான் உள்ளாக கலங்கி வெளியாக பரியாசம் பண்ணுகிறான். நம்முடைய ஆவிக்குரிய முன்னேற்றத்தை தடுக்க பிசாசு இவ்விதம் செய்கிறான். உலகத்துக்கு தேவ ஞானம் பைத்தியமாயிருக்கிறது. ஆனால் நமக்கோ அது பலனாய் இருக்கிறது.

இயேசு தம்மை யூதர்களின் ராஜா என்று அறிக்கையிட்டிருந்தார். இதினிமித்தமாய் அவரை ராஜ சபையில் கொண்டு போய், சிவப்பான வஸ்திரத்தை அவருக்கு உடுத்தி, ராஜ முடிக்கொப்பாய் முள்முடியை சிரசிலே வைத்து வலது கையிலே ஒரு கோலைக் கொடுத்து அவர் முன் முழங்கால்படியிட்டு யூதருடைய ராஜாவே நீர் வாழ்க என்று பரியாசம் பண்ணி, அவர் மேல் துப்பி, அந்தக் கோலையே எடுத்து சிரசிலே அடித்தார்கள் (மத். 27:28-31).

நாம் இந்த பூமியை அரசாளுவோம். ஆட்டுக்குட்டியானவர் நம்மை, ராஜாக்களாக்கி இருக்கிறார்—என்ற நம்முடைய நம்பிக்கையை வெளிப்படுத்தும்போது, பச்சை மரத்தையே அந்தப்பாடுபடுத்தினவன் பட்டமரமாகிய நம்மை விட்டா வைப்பான். நமக்கு உண்டாயிருக்கிற (காணப்படாத) மகா மேன்மையை எண்ணி சந்தோஷமாய் நாம் ஓடிக் கொண்டிருக்கும் போது, நம்முடைய நம்பிக்கையை தளர்த்த சாத்தான் லௌகீக ஞானிகளைக் கொண்டு பரியாசம் பண்ணுகிறான். அறிவு பெருத்த இந்த விஞ்ஞான உலகில் நம்மை மூட நம்பிக்கை உள்ளவர்கள் என ஏளனம் பண்ணுகிறான். நம்முடைய நம்பிக்கை வீண் போகாது நிச்சயமாய் முடிவு உண்டு. நம்முடைய நம்பிக்கை ஒரு போதும் நம்மை வெட்கப் படுத்தாது என்றெல்லாம் திருமறை நம்மை ஊக்குவிக்கிறது.

நாம் நம்பிக்கையில் பெருகி ஆவியில் பலங்கொண்டு மனுஷர் முன்பாக இயேசுவை அறிக்கை செய்யவும் ஆரம்பிப்போமானால் அவ்வளவுதான் சாத்தானுக்கு சகிக்கமுடியாமல், தான் கெட்டது போதாதென்று மற்றவர்களையும் கெடுக்க ஆரம்பித்து விட்டானே என பீதி அடைந்து, ஆனால் அவனது உள்ளான நிலையை காட்டாமல் நம்முடைய ஊழியத்தை தடுக்க பரியாசம் பண்ணுகிறான்.

எசேக்கியா ராஜா, ஜனங்களை கர்த்தரிடம் திரும்பும்படி, ஊராக ஆட்களை அனுப்பி, கர்த்தருடைய இரக்கத்தை அறிவித்தான். அவர்கள் இந்த நற்செய்தியாளர்களை பரியாசம் பண்ணினார்கள் (II நாளா 30:10). பலர் பரியாசம் பண்ணினாலும் சிலர் உணர்வடைந்து மனத்தாழ்மையாகி தேவனை ஆராதிக்க எருசலேமுக்கு வந்தார்கள் (II நாளா 30:11).

பலர் நம்மை பரிகசித்தாலும் இந்த சிலரை நித்திய அழிவினின்று மீட்டு தேவனுடைய ராஜ்ஜியத்திற்குட்படுத்தி இறைவனிடம் மகிமையை பெற்றுக் கொள்வோம். இந்த உலகம் நமக்கு ஒரு பொருட்டாயிருக்க வேண்டாம்.

இவ்விதமாய் நம்முடைய தெய்வீகத்தையும், நம்பிக்கையையும், ஊழியத்தையும் மனிதர்கள் பரியாசம் பண்ணினாலும், நம்முடைய வார்த்தையைக் குறித்தும், நம்மை பற்றிய பயமும், தனி மதிப்பும் அவர்களுக்கு உண்டு (II இராஜா 9:1-13). ஆகவே பரியாசத்தைக் கண்டு பயப்படாமல் முன்னேறுவோம்.

---

> "கடைசிக் காலத்திலே தங்கள் துன்மார்க்கமான இச்சைகளின்படி நடக்கிற பரியாசக் காரர்கள் தோன்றுவார்கள்"— யூதா 18.

---

# மோட்ச வழி

## குரு-சிஷ்ய உரையாடல்

(தொடர்ச்சி)

**ஏழாம் கற்பனை : "விபச்சாரம் செய்யாதிருப்பாயாக"— யாத் 20 : 14**

இதன் அர்த்தம் நாம் தேவன் மேல் அன்புகூர்ந்து அவருக்கு பயந்து கீழ்ப்படிந்து வார்த்தைகளிலேயும், கிரியைகளிலேயும் பரிசுத்தமும், கற்புமுள்ளவர்களாய் புருஷனும்; மனைவியும் ஒருவருக்கொருவர் பட்சத்தையும் மரியாதையையும் அன்பையும் காட்டி வரவேண்டும் என்பதாகும்.

விவாகம் என்பது ஒரு புருஷனையும் ஒரு ஸ்திரீயையும் மரணபரியந்தம் இணைக்கும் பந்தக்கட்டாகும். இது கடவுளுடைய ஏற்பாடு, ஒழுங்கும் நியாயமுமான விவாக நியமகத்தினால் இது உண்டாகும்.

விவாக நிலைமையிலாவது, விவாகமில்லாத நிலைமையிலாவது தேவ ஏற்பாடாகிய விவாகத்தை மீறி கறைப்படுத்தி பரிசுத்தக்குலைச்சலாக்கும் கிரியை, வார்த்தை இச்சை இவைகளை இக்கற்பனை முற்றிலும் விலக்குகிறது.

விவாகம் தேவனால் ஏற்படுத்தப்பட்டது. (ஆதி 2 : 18—24; மத் 1 18—25) விவாகத்துக்குப் பின்னே கூடி வரவேண்டும். குழந்தை பிறப்புக்கான செய்கை பாவமல்ல (ஆதி 1 : 27, 28; 8 : 17; 9 : 1) விவாகத்துக்கு முன் களவுறவு செய்வது கற்புக்குலைவதாகும். அப்படியே விவாகத்துக்குப் பின் பிறர் முகம் பார்ப்பது அல்லது விபச்சாரம் செய்வது விபச்சாரம் என்றால் விவாகமான பெண் பிற புருஷனோடு சேருவது, புருஷன் பிற பெண்ணோடு களவுறவு செய்வதற்கு விபச்சாரம் என்றும், தகாத நடக்கையை தன் பழக்க வழக்கமாய் செய்கிற ஆணோடு பெண்ணும், பெண்ணோடு ஆணும் உடலுறவில் ஈடுபடுவது வேசித்தனமென்றும் பெயர். "...விபச்சாரரையும் வேசிக்கள்ளரையும் தேவன் நியாயந்தீர்ப்பார்" (எபி 13 : 4). விபச்சாரம் செய்யாதிருப்பாயாக என்று பழைய பிரமாணம் சொல்கிறது. இச்சையோடு பார்க்காதே இச்சைக்கு இடங்கொடுக்காதே (மத் 5 : 27, 28), பேசாதே (எபேசி 5 : 12). விபச்சார வேசித்தன முகாந்தரமின்றி தன் மனைவியைத் தள்ளிவிட்டு வேறொருத்தியை விவாகம் பண்ணுகிறவனும், தள்ளிவிடப்பட்டவளை விவாகம் பண்ணுகிறவனும் விபச்சாரம் பண்ணுகிறான் (மத் 19 : 9) ஆகாத வார்த்தை கூடாது (எபே 4 : 29). வேசித்தனத்துக்கு விலகி ஓடுங்கள் (I கொரி 6 : 18); உன்னைக் கற்புள்ளவனாகக் காத்துக் கொள் (II தீமோ 2 : 22). நீ மதுபானம் பண்ணாதே உன் கண்கள் பரஸ்திரீயை நோக்கும் (நீதி 23 : 31—33). சரீரத்தையும் மனதையும் தீட்டுப் படுத்தும் எக்காரியத்தையும் செய்யாதே (I கொரி 6 : 9—11). பகலில் நடக்கிறவனைப் போல் சீராய் நட. பெருந்தீண்டி தின்னாதே (ரோ 13 : 13, 14). வேசித்தனமிராதபடி விவாகம் முடி (I கொரி 7 : 2). என் மகனே பாவிகள் உனக்கு ஆசை காட்டினால் இச்சியாதே (நீதி 1 : 10).

**எட்டாம் கற்பனை : "களவு செய்யாதிருப்பாயாக"—யாத் 20 : 15**

இதன் அர்த்தம் நாம் தேவனுக்குப் பயந்து பிறத்தியாருடைய பணத்தையாகிலும் சொத்துக்களையாகிலும் திருடாமலும், அவைகளை கள்ளத்தனமாய் நம்முடையதாக்காமலும் அவனது சொத்துக்களையும் பிழைப்புகளையும் வர்த்திக்கப் பண்ணி காப்பதற்கு உதவியாயிருக்க வேண்டும் என்பதாகும்.

இந்தக் கற்பனை எல்லாவிதக் கொள்ளை, திருட்டு, கடும் வட்டி, ஏமாற்றுதல் என்பவைகளை மாத்திரமல்ல நமது இருதயத்திலிருந்து பொறாமை, பொருளாசைகளை விலக்குகிறது.

திருடுகிறவன் இனித் திருடாதே, பிறருக்கு உதவத் தக்கதாய் நன்றாய் வேலை செய் (எபேசி 4 : 28). தன்னுடையதல்லாததை சேர்க்கிறவனுக்கு ஐயோ! (ஆப 2 : 6.) தொழிலிலே சகோதரனை ஒடுக்காமலும் வஞ்சியாமலும் இருக்கவேண்டும் (I தெச 4 : 6). நியாய விசாரணையிலும், அளவிலும், நிறுக்கிற நிறையிலும், அளக்கிற படியிலும் அநியாயம் செய்யாதிருப்பீர்களாக. சுமுத்திரையான படிக் கல்லும், சுமுத்திரையான மரக்காலும், படியும் உங்களுக்கு இருப்பதாக (லேவி 19 : 35, 35). உன் சகோதரன் உன்னோடே பிழைக்கும்படி அவன் கையில் வட்டி வாங்காயாக (லேவி 25 : 35, 36). கூலியை பிடித்து வைக்காதே (எரே 22 : 14). திருடனோடு பங்கிட்டுக் கொள்ளுகிறவன் தன் ஆத்துமாவைப் பகைக்கிறான் (நீதி 29 : 24). பிறனுடைய மறதியை, தவறை, கவலையீனத்தை உனக்கு ஆதாயமாக்காதே, பிறனுடையது என்று தெரிந்தால் கண்டெடுத்ததைக் கொடுத்துவிடு (லேவி 6 : 1—5) அநியாயமாய் வாங்கியதை திருப்பிக்கொடு (லூக் 19: 8; 3 : 12—14). பிறனுடைய சொத்தும் தொழிலும் விருத்தியடையவும், நஷ்டமாகாதிருக்கவும் வார்த்தையினாலும் கிரியையினாலும் அவனுக்கு உதவி செய்ய வேண்டும் என்று கற்பிக்கிறது என்பதாம்.

(தொடரும்)

"வழியை விட்டு விலகுகிறவனுக்கு புத்திமதி விசனமாயிருக்கும்" —நீதி 15 : 10

மாதர் பகுதி

# குடும்பம்

"எந்த புருஷனும் தன் வீட்டுக்கு தானே அதிகாரியாயிருக்க வேண்டும்..." —எஸ் 1 : 22. குடும்பம் என்பது ஓர் தெய்வீக அமைப்பு. தன்னைப்பற்றியே கவலைப்பட்டு தன்னையே நேசித்துக் கொண்டிருந்த மனிதன், விவாகமானதும் ஓர் புதிய சூழ்நிலைக்குள் பிரவேசிக்கிறான். இன்னொரு ஆத்துமாவை நேசிக்க அன்பு கூற—உதவி செய்ய—விட்டுக்கொடுக்க—அவளுடைய (மனைவி) தவறுகளை மன்னிக்கக் கற்றுக் கொள்ளுகிறான். அவளை பிரியப்படுத்த முனைகிறான். இப்படியாக அவனுடைய அன்பு விரியத் தொடங்குகிறது. அப்படி ஸ்திரியும் புகும் வீட்டில் புதிய சூழ்நிலையில் தன் வாழ்வைத் தொடருகிறாள். வீட்டில் எவ்வளவு செல்லமாக வளர்ந்தாலும், இப்போது புருஷனை நேசிக்கவும்—அன்பு கூறவும், புருஷனுக்காக தியாகம் செய்யவும், துன்பம் சகிக்கவும், விட்டுக் கொடுக்கவும், புருஷனுடைய வாழ்வே தன் வாழ்வு என்று செயல்பட ஆரம்பிக்கிறாள். கணவனுடைய பெற்றோர், உடன் பிறப்புகளையும் களம் பண்ணக் கற்றுக் கொள்ளுகிறாள். இப்படியாக அவள் வாலிப நிலையை விட்டு தாயாக வளர ஆரம்பிக்கிறாள் அன்பு விரிவடைகிறது. மனிதன் வளர ஆரம்பிக்கிறான். தனி வாழ்க்கையில் தோன்றா பொறுமை, தாழ்மை, பிறர் சிநேகம், விட்டுக் கொடுத்தல், இரக்கம், சுய தியாகம் இப்பொழுது வளர ஆரம்பிக்கிறது. குடும்ப வாழ்க்கையில் சரியான வருவாயும் வசதியும் குடும்ப சூழ்நிலைகளும், இல்லாமையாலும் உண்டாகிற துன்பங்கள் அநேகம் இருந்தாலும் குடும்பமே மனிதனுக்கு தேவன் அளித்த முதல் பாதுகாப்பும் கலாசாலையுமாகும். இங்கேயிருந்துதான் எல்லாம் ஆரம்பமாகிறது.

(தொடரும்)

"கர்த்தர் வீட்டைக் கட்டாராகில் அதைக் கட்டுகிறவர்களின் பிரயாசம் விருதா"—சங் 127 : 1

# புதிய எருசலேம் சபை நடபடிகளில் சில

கிறிஸ்துவுக்குள் அருமையானவர்களே, கர்த்தராகிய தேவனுடைய வாயிலிருந்து புறப்பட்ட வார்த்தையினால் உண்டான வல்லமை எத்தனை பெரியது என்பதை உணர்ந்த நான் மீண்டும் உங்களோடு அந்த வல்லமையின் மகத்துவத்தைப் பகிர்ந்து கொள்ள தேவன் உதவி செய்ததற்காக என் தேவனை ஸ்துதிக்கிறேன்.

பிரியமானவர்களே, பரிசுத்த வேதாகமத்தின் பழைய ஏற்பாட்டைப் படிக்கும் பொழுதெல்லாம் எனக்கு ஒரு சம்பவம் ஞாபகத்திற்குவரும். அது தேவனுடைய பெட்டியாகிய உடன்படிக்கைப் பெட்டியைக் குறித்த சம்பவமே அது. தேவனாகிய கர்த்தர் தம்முடைய தாசனாகிய மோசேயினிடத்தில்: இஸ்ரவேலர்கள் நடுவே வாசம் பண்ண எனக்கு ஒரு பரிசுத்த ஸ்தலத்தை உண்டாக்க வேண்டும் என்று கூறி அதற்கான மாதிரிகளையும் கொடுத்திருந்தார். பரிசுத்த ஸ்தலம், மகா பரிசுத்த ஸ்தலம், பிரகாரம் என்று மூன்று பாகங்களாக அந்த வாசஸ்தலம் அமைக்கப்பட்டது. இதில் மகா பரிசுத்த ஸ்தலத்திற்குள்ளே முழுவதும் பொற்றகடு பொதிந்திருந்த உடன்படிக்கைப் பெட்டி இருந்தது. இந்த உடன்படிக்கை பெட்டியின் மேல் இரண்டு கேருபீன்கள் நிறுத்தப்பட வேண்டும். இந்தக் கேருபீன்கள் நடுவிலிருந்து நான் இஸ்ரவேல் புத்திரருக்காக உனக்குக் கற்பிக்கப் போகிறவைகளையெல்லாம் உன்னோடே சொல்லுவேன் (யாத் 25 : 22) என்று தேவனாகிய கர்த்தர் மோசேயோடே பேசிச் சொன்னார் என்று வேதத்தில் பார்க்கிறோம்.

இஸ்ரவேல் ஜனங்கள் கானான் தேசத்துக்கு பிரயாணமாய் போகும் பொழுது இந்த உடன்படிக்கைப் பெட்டியை சுமந்து வந்த ஆசாரியரின் கால்கள் யோர்தான் ஆற்றுத் தண்ணீரில் ஒரு குவியலாக நின்று வேறு திசைக்கு ஓடிவிட்டதாக (யோசு 3 : 13-15) வேதத்தில் பார்க்கிறோம்.

தீர்க்கதரிசியாகிய சாமுவேலின் காலத்தில் இந்த தேவனுடைய பெட்டியை பெலிஸ்தர்கள் எடுத்துக்கொண்டு போய் அவர்களுடைய தெய்வமாகிய தாகோனின் சிலையண்டையில் வைத்தார்கள். மறுநாள் காலமே அவர்கள் பார்த்தபோது தாகோனின் உருவச்சிலையானது தேவனுடைய பெட்டிக்கு முன்பாக முகங்குப்புற விழுந்து கிடந்தது. மீண்டும் அதை எடுத்து நிறுத்தி வைத்தார்கள். மறுநாள் காலமே அவர்கள் வந்து தங்கள் தெய்வத்தைப் பார்த்த பொழுது தாகோனின் சிலையானது தேவனுடைய பெட்டிக்கு முன்பாக முகங்குப்புற விழுந்து கிடந்ததுமல்லாமல் தாகோனின் தலையும் இரண்டு கைகளும் உடைந்து கிடந்ததாக (1 சாமு 5 : 2—4) வேதத்தில் வாசிக்கிறோம்

இந்தச் செய்தியானது என் உள்ளத்தில் அதிகமாய்க் கிரியை செய்து கொண்டிருந்தது. அன்று இஸ்ரவேல் ஜனங்கள் நடுவே வாசஞ் செய்ய ஒரு கூடாரத்தை உண்டு பண்ணி அதிலுள்ள உடன்படிக்கைப் பெட்டியின் மேல் தேவன் எழுந்தருளினார். தேவன் வாசஞ்செய்யக் கூடிய தேவனுடைய பெட்டியண்டையிலே விக்கிரகம் நிற்க முடியாதபடி கீழே விழுந்து உடைந்து விட்டதே. இன்றைக்கு தேவனுடைய ஆலயமாக, தேவனுடைய வாசஸ்தலமாக மாற்றப்பட்டுள்ள நமக்கும் அப்படிப்பட்ட வல்லமை இருக்க வேண்டுமே என்கிற உணர்வு என்னைப் பல நாட்கள் நெருக்கினது. இன்றைக்கும் அசுத்த ஆவிகள் அலறி ஓடுகிறதை தேவனுடைய வல்லமையால் காண்கிறோம். ஆனால் மேற்கூறிய சம்பவங்கள் நடக்காதோ என்று எண்ணிக் கொண்டிருந்தேன்.

ஒரு நாள் உடன் ஊழியரும் நானுமாக வள்ளியூருக்கு அருகேயுள்ள ஒரு கிராமத்தில் ஒரு ஆத்துமாவை சந்திப்பதற்காகப் போய்க்கொண்டிருந்தோம். அன்றைக்கு மேற்படி சிந்தனை என்னில் அதிகமாய் கிரியை செய்தது. நாங்கள் போய்க்கொண்டிருந்த வழியில் ஒரு விக்கிரகம் வலது கரத்தில் ஓங்கிய ஒரு அரிவாளுடன் நின்று கொண்டிருந்தது. அந்த இடத்தில் வந்ததும் என் உள்ளிருந்து பரிசுத்த

ஆவியானவர், சீறிது நில் என்றார். நான் அந்தச் சிலையைப் பார்த்தவண்ணம் நின்றேன். வரும்பொழுது இதில் என்ன நடந்திருக்கிறது என்று பார் என்று பரிசுத்த ஆவியானவர் பேசினார். நாங்கள் அந்தக் கிராமத்தினுள் குறிக்கப்பட்ட ஆத்துமாவை சந்தித்துவிட்டு மறுபடியும் அதே பாதை வழியாக திரும்பி வந்தோம். என்ன ஆச்சரியம்! நம்மிலிருக்கும் பரிசுத்த ஆவியானவர் எவ்வளவு வைராக்கிய வாஞ்சையாய் இருக்கிறார் என்பதை உணர்ந்து கொண்டேன். நடந்தது என்ன தெரியுமா? அந்தச் சிலையில் அரிவாளை ஏந்திக் கொண்டிருந்த வலது கரம் உடைந்து அரிவாளுடன் கீழே கிடந்ததைத் தேவன் காணச் செய்தார். நமது தேவனுக்கே மகிமையுண்டாவதாக! அல்லேலூயா!!

சிலர் நினைப்பது போல் பழைய ஏற்பாட்டின் சம்பவங்கள் இனிமேலும் நடக்காது என்று நாம் நினைக்க வேண்டாம். தேவனுடைய வார்த்தை வல்லமையுள்ளது. அது ஜீவனுள்ளது அது ஆவியாய் இருக்கிறது. ஆகையால் தேவ ஆவியானவர் விரும்பும் பொழுது தம்முடைய வார்த்தைகளை அனுப்புகிறார். அது இன்றைக்கும் கிரியை செய்கிறது. கர்த்தருக்கே மகிமையுண்டாவதாக! ஆமென்.

(தொடரும்)

Pastor S. Sundarraj
Vallioor.

---

இயேசு கிறிஸ்து நேற்றும் இன்றும் என்றும் மாறாதவராயிருக்கிறார்— எபி 13 : 8.

---

# He is a Prophet and he shall pray for you and you shall live

Every high priest taken from among men is ordained for men in things pertaining to God, that he may offer both gifts and sacrifies for sins—Heb 5:1. God appoints his servants over his people to stand in the breach for the people. Aaron stood at the breach. He took the censer, as Moses commanded, and ran into the midst of the congregation; and behold, the plague was begun among the people and made an atonement for the people and stood between the dead and the living and the plague was stayed (Num 16:47,48).

Likewise God appoints a few, who are chosen among the people, as his representatives and servants and heads over the people to plead for the people with God, contend with people for God, teach and lead. God hears the prayers of those who are appointed in this manner and do accordingly. He is a prophet and he shall pray for you (Gen 20:7). This is an important ordinance mentioned in the scriptures.

Making note of the fallen ministers and those who were neither raised nor appointed by God, some claim equality with the servants of God without understanding their position and value. Many walk in their boldness saying," "All are one, all believers (children of God) are same; nobody is great or low and no one should be called as Pastor or minister and they need not be regarded. Anybody can do anything. Anybody can conduct meetings, lay hands on others, baptise and give Lord's supper." This is the cruel position of the fallen church. The man who feeds the flock is the shepherd (Pastor). The apostle is the apostle, the prophet is the prophet, the teacher is the teacher and the evangelist is the evangelist. God gave some, apostles; and some, prophets; and some evangelists; and some, pastors and teachers (Eph 4:11).

People sinned against God and God desired to destroy them and he talked this with Moses. Moses interceded and Lord repented of the evil which he thought to do unto his people (Ex. ch. 32). In the same way people rebelled against God at another time and God wanted to kill the people. Then Moses, the chosen man of God pleaded for the people saying. "Pardon, I beseech the iniquity of this people according unto the greatness of thy mercy and as you have forgiven this people, from Egypt even until now and the Lord said, "I have pardoned according to thy word" (Num 14:19,20).

Samuel, the prophet of God prayed that he may prove that people have erred in asking a king for them, against the will of God. In the same day itself God commanded thunders and rains (I Sam 12:18). People had not cleansed themselves, yet they ate the passover. But Hezekiah prayed for them saying. The good Lord pardon everyone who prepares his heart to seek God, the Lord God of his fathers, though he be not cleansed according to the purification of the sanctuary, and the Lord hearkened to Hezekiah and healed the people (2 Chro 30:18-20).

God's anger was kindled against the words of Job's friends who spoke as if they speak for God and God said unto them, "You have not spoken of me the thing that is right, as my servant Job has. Therefore, take unto you now seven bullocks and seven rams and go to my servant Job, and offer up for yourselves a burnt offering. And my servant, Job shall pray for you, for him I will accept, lest I deal with you after your folly (Job 42:7,8). When God purposed to destroy the cities Sodam and Gomorrah with brimestone and fire, he gave ear to the intercession of Abraham and delivered lot and his family from destruction (Gen. ch.18,19). Thus God answered the prayers of prophets, priests, kings and leaders who were appointed by him. God commanded signs, wonders, deliverance, devine healing and blessings for the prayers of his appointed leaders, but not of the people. In New Testament the apostles come in the line of priests. All can pray to God, but only the apostles, prophets, pastors, teachers evangelists and ministers are appointed for this ministry. Their prayer gets more importance. He is a prophet and he shall pray for you (Gen 20:7). The twelve apostles called the multitude of the disciples and said unto them," We, will give ourselves continually to prayer and to the ministry of the word (Acts 6:2-4). Yea, Epaphras, who is one of you, a servant of Christ, greets you, always labouring fervently for you in prayers, that you may stand perfect and complete in all the will of God (Col 4:12).

We beseach you, breathern to know them who labour among you, and are over you in the Lord, and admonish you, and esteem them very highly in love for their work's sake (1Th. 5: 12,13).

Obey them that have the rule over you and submit yourselves for they watch for your souls, as they must give account that they may do it with joy and not with grief, for that is unprofitable for you (Heb 13:17). Remember them who have the rule over you, who have spoken unto you the word of God, who faith follow considering the end of their manner of life (Heb 13:7). In like manner, ye younger submit yourselves unto the elder (1 Peter 5:5). Brethren, be followers together of me and walk even as ye have us for an example (Phil. 3:17). Thus the Holy Spirit has mentioned in the new testament about the ministers of God.

(contd.)

# புதிய எருசலேம் செய்தி

# PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் - 19 ★ JULY 1985

"புதிய எருசலேம் சபை"

"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ, நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள்.... விழித்திருங்கள்... உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லோருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்..."

மாற்கு 13 : 35-37

**EDITOR: CHIEF PASTOR N. LAZAR**

BOMBAY, INDIA

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லோரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒருமனப்பட்டு கிறிஸ்துவுக்கேற்பான பூரண வளர்ச்சியடையும் படியாகவும் தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய்க் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும்; சபையானது வஞ்சக போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய்ப் பூரண வளர்ச்சியடையும் படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது. (எபே.4:11-16)

## இதழின் உள்ளே



வள்ளியூர் புதிய எருசலேம் சபையின் புதிய தொலைபேசி (Telephone) நம்பர்: 334

சகோதரர் சாம்ராஜுக்கும் சகோதரி பிரடா ஜெனட்டுக்கும் 6—6—1985 அன்று காரியர் மிஷனில் பரிசுத்த விவாகம் நடந்தது. கர்த்தர் இந்த தம்பதிகளை ஆசீர்வதிக்க யாவரும் ஜெபிக்க வேண்டுகிறோம்.

# ஆசிரியர் உரை

தேவன் காலா காலங்களுக்கென்று சத்தியத்தை மறைத்து வைக்கிறார். இது கடைசி காலமாயிருக்கிறது. மறைக்கப்பட்ட சத்தியங்களெல்லாம் வெளிப்படும் காலமாயிருக்கிறது. குறிப்பிட்ட சத்தியங்கள் நடைமுறைக்கு வரும் காலமாகவுமிருக்கிறது. தேவன் தம்முடைய காலங்களில் தாம் தெரிந்து கொண்ட மனிதருக்கு இரகசியங்களை வெளிப்படுத்துகிறார். ஒவ்வொரு காலத்திலும் ஒரு தேவனுடைய மனிதனுக்கே தேவன் தம்முடைய இரகசியங்களை வெளிப்படுத்துகிறார். ஓரேபிலே இஸ்ரவேலருக்கெல்லாருக்காகவும் தேவன் மோசேயினிடம் நியாயப்பிரமாணத்தைக் கற்பித்தார். அப்படியே காலாகாலங்களிலும் தேவன் செய்து வருகிறார். தேவ ஆவி பெற்ற மற்ற தீர்க்கதரிசிகளும் அந்த தேவனுடைய செய்திக்கு சார்பாகவே தீர்க்கதரிசனம் சொல்லுவார்கள். கோராகு கூட்டத்தார் எதிர்க்கலாம், மாம்சீக பிரகாரமாக ஆரோன்களும் மிரியாம்களும் விரோதமாய் பேசலாம்; ஜனங்கள் இச்சையுள்ளவர்களாகி கலகம் விளைவித்து வேறொரு தலைவனை நியமித்துக்கொண்டு மறுபடியும் எகிப்துக்கு புறப்படலாம்; நம்மால் அதை சுதந்தரிக்க முடியாது, ஜெயிக்க முடியாது, தேசம் நல்ல தேசம்தான் ஆனால் நம்மால் முடியாது என்று துரோகிகள் துர்ச்செய்தி பரப்பலாம். தேவனுடைய சத்தியமோ மாறாமலிருக்கிறது. தேவன் தாம் திட்டமிட்டபடியே காரியங்களை நிகழ்த்துவார். நிறைவேறாமல் இருந்த தீர்க்கதரிசனங்கள் நிறைவேறுகிறது. மறைக்கப்பட்ட சத்தியங்கள் வெளிப்படுகின்றன. நாம் பாக்கியவான்கள்; கேட்கிறதற்கு காதுள்ளவன் கேட்கக்கடவன். கர்த்தருடைய வருகைக்கு தேவனுடைய பிள்ளைகளை உயர்த்த, ஆயத்தப்படுத்த தேவன் சபையை எழுப்பி தம்முடைய கிரியையை பூரணப்படுத்துகிறார். தேவனுடைய சரீரமான சபையில், சபையைக் கொண்டே தேவனுடைய திட்டம் (தீர்மானம்) பூரணப்படும். இறைவனுடைய மாறா ஆலோசனைக்காக நாம் அவரை துதிப்போமாக. "இதோ கர்த்தர் வருகிறார்."

கிறிஸ்துவுக்குள்,

Chief Pastor N. Lazar

# பாவத்தை அறிக்கை செய்

"தன் பாவங்களை மறைக்கிறவன் வாழ்வடைய மாட்டான். அவைகளை அறிக்கை செய்து விட்டுவிடுகிறவனே இரக்கம் பெறுவான்" — *நீதி 28 : 13.*

பொதுவாக மனிதன் மாய்மாலக்காரன், உண்மையற்றவன். நீதிமான் ஒருவனாகிலும் இல்லை என்று வேதம் கூறுகிறது. மனிதன் இறைவனுடைய கற்பனையை மீறி பாவம் செய்கிறது மாத்திரமல்ல அதை மூடி மறைத்து வேஷதாரியாக நடிப்பதில் கைதேர்ந்தவன். இங்கேதான் மனிதனுடைய பாவம் இரட்டிப்பான மடங்காகிறது. பாவத்துக்கெல்லாம் அடிப்படை பொய்யாகும். பொய் சம்பந்தப்படாத பாவம் உலகில் இல்லை. "அவன் பொய்யனும் பொய்க்கு பிதாவுமாக இருக்கிறான். அவன் பொய் பேசும்போது தன் சொந்தத்திலிருந்து எடுத்துப் பேசுகிறான்" (யோவா 8 : 44) என்று சாத்தானைப்பற்றி சத்திய வேதத்தில் சொல்லியிருக்கிறது. உலகத்தில் அநேக மதங்கள் பொய்யை, கற்பனையை அடிப்படையாகக் கொண்டவையாகும். இதை ஆராய்ச்சி மூலம் அறியலாம். மதங்களில் பெரும்பகுதி மக்களின் நடத்தையை சீர்திருத்தப் பிரயாசப்படுகிறதில்லை. நடக்கை எவ்விதமாயிருந்தாலும் சரி பக்தியே முக்கியம், மதகாரியங்களுக்கு உதவி செய்ய வேண்டும் அவரே பெரிய பக்தர் என புகழ்கின்றன.

கிறிஸ்தவம் இதற்கு முற்றிலும் வித்தியாசமானதாகும். கிறிஸ்தவர்களின் தேவனாகிய யெகோவா (இயேசுகிறிஸ்து) தன் அரச பக்தனான தாவீது பிறன் மனைவியைக் கவர்ந்ததை தவறு என்று கடிந்து 'நீயே அந்த மனிதன்' என்று தன் தீர்க்கதரிசி மூலம் கடிந்து கொண்டார். அவ்வரசனும் நான் கர்த்தருக்கு விரோதமாய் பாவம் செய்தேன் என்று தீர்க்கன் முன் அறிக்கை செய்தார், ஒப்புக் கொண்டார் (II சாமு 12 : 7, 13). பின் ஒருபோதும் தாவீது அப்படிப்பட்ட தவறை செய்யவில்லை. கிறிஸ்தவத்தின் மேன்மை இங்கேதான் இருக்கிறது.

"தன் பாவங்களை மறைக்கிறவன் வாழ்வடைய மாட்டான். அவைகளை அறிக்கை செய்து விட்டு விடுகிறவனே இரக்கம் பெறுவான்". மனிதன் என்றால் தவறு செய்கிறவன் என்று அர்த்தம் என்றொரு பழமொழியுண்டு. தெய்வம் தவறே செய்யார். சாத்தான் தவறைத் தவிர வேறொன்றையும் செய்யான். இவ்விதமான மனிதனுக்கு முன்பாக கல்வாரி கொண்டு வரப்படுகிறது. எனக்காக, என்னுடைய பாவங்களுக்காக இறைவன் இரத்தம் சிந்தி கல்வாரி சிலுவையில் மரித்தார். அவருடைய மரணத்துக்குக் காரணம் என்னுடைய பாவமே என்று உணருகிற எந்த ஆத்துமாவும் தன் பாவத்திற்காக மனஸ்தாபப்பட்டு மனந்திரும்பி இனிமேல் பாவம் செய்யமாட்டேன் என்று ஜெபம் பண்ணி இயேசுவை தன் சொந்த இரட்சகராக ஏற்றுக்கொள்ளுகிறான். தன் பாவங்களை தேவ ஊழியர் முன் அறிக்கையிட்டு தன்னை முழுவதுமாக ஒப்புக்கொடுத்து முழுகி ஞானஸ்நானம் பெற்றுக் கொள்ளுகிறான். அவன் பாவம் மன்னிக்கப் படுகிறது.

"நீங்கள் மனந்திரும்பி ஒவ்வொருவரும் பாவமன்னிப்புக்கென்று ஞானஸ்நானம் பெற்றுக் கொள்ளுங்கள்..." (அப் 2 : 38). "நீ இப்பொழுது தாமதிக்கிறதென்ன நீ எழுந்து கர்த்தருடைய நாமத்தை தொழுது கொண்டு ஞானஸ்நானம் பெற்று உன் பாவங்கள் போகக் கழுவப்படு என்றான்" (அப் 22 : 16). அவன் ரட்சிக்கப் படுகிறான். "விசுவாசமுள்ளவனாகி ஞானஸ்நானம் பெற்றவன் இரட்சிக்கப் படுவான்" (மாற் 16 : 16). ஆயக்காரரும், வேசிகளும் யோவானை விசுவாசித்து (யோவான்ஸ்நானகன்) அவனால் ஞானஸ்நானம் பெற்று தேவனுடைய இராஜ்யத்துக்குள் பிரவேசிக்கிறார்கள் (மத் 21 : 28 - 32 : லூக் 7 : 29 – 35) "அப்பொழுது எருசலேம் நகரத்தாரும், யூதேயா தேசத்தார் அனைவரும் யோர்தானுக்கடுத்த சுற்றுப் புறத்தார் யாவரும் அவனிடத்திற்குப் போய் தங்கள் பாவங்களை அறிக்கையிட்டு யோர்தான் நதி

யில் அவனால் ஞானஸ்நானம் பெற்றார்கள்" (மத் 3 : 5, 6). புதிய ஏற்பாட்டில் மக்கள் ஞானஸ்நானம் பெறும் போதுதான் கிறிஸ்தவர்களாகிறார்கள். ஏனெனில் உங்களில் கிறிஸ்துவுக்குள்ளாக ஞானஸ்நானம் பெற்றவர்கள் எத்தனைபேரோ அத்தனை பேரும் கிறிஸ்துவைத் தரித்துக் கொண்டீர்களே!" (கலா 3 : 27).

இவ்விதமாய் கிறிஸ்தவர்களான பின்பும் விசுவாசிகள் சிற்சில வேளைகளில் குற்றம் புரிய நேரிடலாம். கடமைகளில் தவற நேரிடும். சிலர் பின்மாற்றம் அடைவதும் உண்டு. உடனே அவர்கள் மெய் மனஸ்தாபத்துடன் பாவங்களை சபையின் மத்தியிலோ அல்லது ஒரு உண்மையான அதிகாரம் பெற்ற ஊழியக்காரனிடமோ தன் பாவங்களை அறிக்கை செய்ய வேண்டும், சொல்ல வேண்டும். பாவத்தை மறைக்கக் கூடாது. "தன் பாவங்களை மறைக்கிறவன் வாழ்வடைய மாட்டான்; அவைகளை அறிக்கை செய்து விட்டுவிடுகிறவனே இரக்கம் பெறுவான்" (நீதி 28 :13); "நம்முடைய பாவங்களை நாம் அறிக்கையிட்டால் பாவங்களை நமக்கு மன்னித்து, எல்லா அநியாயத்தையும் நீக்கி நம்மை சுத்திகரிப்பதற்கு அவர் உண்மையும் நீதியுள்ளவருமாயிருக்கிறார் (I யோ 1 : 9).

நாம் பாவங்களை மறைக்கக்கூடாது. யாரிடத்தில் மறைக்கிறோம்? தேவனுக்கு மறைக்க முடியுமா? "அவருடைய பார்வைக்கு மறைவான சிருஷ்டி ஒன்றும் இல்லை சகலமும் அவருடைய கண்களுக்கு முன்பாக நிர்வாணமாயும் வெளியரங்கமாயுமிருக்கிறது" (எபி 4 : 13). "எவனாகிலும் நான் காணக்கூடாதபடி தன்னை மறைக்கக் கூடுமோ?" என்று தேவன் கேட்கிறார். மனிதன் மறைப்பதும் பொய் சொல்லுவதும் மனிதரிடமே தேவனிடமல்ல. மறைக்கிற இடத்தில் வெளிப்படுத்தி அறிக்கையிட வேண்டும். "விசுவாசித்தவர்களில் அநேகர் வந்து தங்கள் செய்கைகளை வெளிப்படுத்தி அறிக்கை செய்தார்கள்" (அப் 19 : 18). "...மகனே நீ கர்த்தருக்கு முன்பாக அறிக்கையிட்டு நீ செய்ததை எனக்குச் சொல்லு" (யோசு 7 : 19). இவ்விதமாய் சபையினிடம், தேவ ஊழியரிடம் மறைப்பது பொய் சொல்லுவதே, தேவனிடம் பொய் சொல்வதாகும் (உ-ம்) அனனியா, சப்பீராள் (அப் 5 : 1-10). தேவ ஊழியருக்கு முன்பாக பாவ அறிக்கை செய்வதே தேவனுக்கு முன்பாக பாவ அறிக்கை செய்வதாகும். சிலர் நாங்கள் கர்த்தரிடமே பாவ அறிக்கை செய்கிறோம் என்கின்றனர். கர்த்தர் எங்கேயிருக்கிறார் "ஏனெனில் இரண்டு பேராவது மூன்று பேராவது என் நாமத்திலே எங்கே கூடியிருக்கிறார்களோ அங்கே அவர்கள் நடுவிலே இருக்கிறேன் என்றார்" (மத் 18:20). அங்கேதான் பாவ அறிக்கை செய்ய வேண்டும். ஆதிசபையார் அவ்விதமே செய்தனர். "விசுவாசித்தவர்களில் அநேகர் வந்து தங்கள் செய்கைகளை வெளிப்படுத்தி அறிக்கையிட்டார்கள்" (அப் 19 : 18). விசுவாசி வியாதிப்பட்டால் சொஸ்தமடையும்படி சபையின் மூப்பர்களை வரவழைப்பானாக. விசுவாசி குற்றங்களை அறிக்கை செய்யக் கடவன். அவர்கள் அவனுக்காக எண்ணெய் பூசி ஜெபிக்கக் கடவர்கள். கர்த்தர் அவனை எழுப்புவார். விசுவாசமுள்ள ஜெபம் பிணியாளியை இரட்சிக்கும். அவன் பாவம் செய்தவனானால் அது அவனுக்கு மன்னிக்கப்படும். நீதிமான் செய்யும் ஊக்கமான வேண்டுதல் மிகவும் பெலனுள்ளதாயிருக்கிறது (யாக் 5 : 14 - 16). பாவம் செய்த விசுவாசி தானே ஜெபிப்பதனாலல்ல; பாவிகளுக்கு தேவன் செவிகொடுப்பதில்லையென்று அறிந்திருக்கிறோம்..." (யோ 9 : 31).

பாவ அறிக்கை ஊழியர்களிடம் செய்வதினால் உண்டாகும் நன்மைகள்.

1. தன்னை பாவியென்று ஒத்துக்கொண்டு தன்னை தாழ்த்துகிறான்.

2. தேவ வசனத்தின்படி தன் பாவங்களை வெளிப்படுத்தி அறிக்கை செய்கிறான்.

3. தன் பாவங்கள் மன்னிக்கப் படுவதற்கான ஜெப வேண்டுதல்களைப் பெறுகிறான். அவனுக்காக தேவ ஊழியர்கள் ஜெபிக்கின்றனர்.

4. பாவ மன்னிப்பையும் ஆறுதலையும் பெறுகிறான்.

5. பாவம் செய்யாதிருக்க திட்டமான கட்டளை பெறுகிறான். புதிய தீர்மானம் எடுக்கிறான்.

6. விடமுடியாத பாவ பழக்கங்களிலிருந்து விடுபடுவதற்கான தெய்வீக ஆலோசனை பெற்றுக் கொள்ளுகிறான்.

7. மறுமுறை பாவம் செய்ய பயப்படுகிறான் ஏனெனில் சபையின் மத்தியில் அல்லது தேவ ஊழியர்கள் முன் பாவ அறிக்கை செய்ய வேண்டியது வருமே என்ற தெய்வீக பயம் அவனை ஆட்கொள்ளுகிறது.

கடவுளிடம் பாவ மன்னிப்புக்காக ஜெபிப்பதும், பாவ அறிக்கை செய்து, ஜெபிக்கும்படி கேட்பதும் கிறிஸ்தவ ஜீவியத்தில் அவசியம். ஒவ்வொரு விசுவாசியும் தனக்கு நம்பிக்கையான ஒரு ஊழியரிடம் பாவ அறிக்கை செய்து ஆலோசனை கேட்பதவசியம். அந்த ஊழியர் தூரஇடம் சென்றுவிட்டாரோ சந்திக்க வாய்ப்பில்லாமலே போய்விட்டாரோ, வேறொரு ஊழியரிடம் பாவ அறிக்கை செய்து ஆலோசனை கேட்கலாம். அடிக்கடி ஊழியரை மாற்றி பாவ அறிக்கை செய்யக்கூடாது. இப்படி செய்கிற விசுவாசிகள் முந்திய ஊழியர் கொடுத்த ஆலோசனையை கட்டளையை நிறைவேற்றாமல் மாய்மாலம் செய்வர். வளர்ச்சியடைய மாட்டார்கள். ஊழியர்களும் பொறுப்பாய் சபைமக்களை சீர்ப்படுத்த, பக்குவப்படுத்த, முன்னேற்றமடையச் செய்ய முடியாது. பாவ அறிக்கைகளின் மூலம் ஊழியர்கள் ஆடுகளின் நிலைமையை நன்றாய் அறிந்து கொள்ள முடிகிறது (நீதி 27 : 23). இது மிகப்பெரிய தெய்வீக உபதேசம்.

ஒரு விசுவாசி ஊழியர்களிடம் பாவ அறிக்கை செய்ய பயப்படத் தேவையில்லை. ஊழியர் வெளியிட்டு விடுவாரோ என்று சந்தேகப்பட அவசியமில்லை. இது முத்திரிக்கப்பட்ட உபதேசம். ஒரு ஊழியர் பாவ அறிக்கை கேட்கும்போது அது பரலோகம் சென்றுவிடுகிறது. பின் ஊழியருக்கே ஞாபகமிருக்காது. யார் வற்புறுத்திக் கேட்டாலும் வெளியிடப்படாது. தன்னைப்பற்றி ஊழியர் என்ன நினைப்பார் என்று சந்தேகப்பட தேவையில்லை. ஊழியரும் பெலவீனமுள்ள மனிதனே. கேவலமாக நினைக்க மாட்டார்கள். "தாமும் பலவீனமுள்ளவனானபடியினாலே, அறியாதவர்களுக்கும் நெறிதப்பிப் போனவர்களுக்கும் இரங்கத் தக்கவனாயிருக்கிறான்" (எபி 5 : 2). ஒரு மனிதன் தன் பாவங்களை குற்றங்களை மறைக்காமல் பாவ அறிக்கை செய்து வரும்வரை (எத்தனை முறையானாலும்) அவனை பரிசுத்தவான் என்று சபை கருதுகிறது. ஏனெனில் அவன் தன் பாவத்தை ஒப்புக்கொண்டு விட்டுவிட, பரிசுத்தமடைய பிரயாசப் படுகிறான். யாதாமொரு விசுவாசி பாவம் செய்தும், தவறிழைத்தும் அதை அறிக்கை செய்யாமலும் மனஸ்தாபப் படாமலும் இருக்கிறானே அவனை பாவி என்று திருச்சபை கருதுகிறது. ஏனெனில் அவன் தன் பாவத்தை மறைக்கிறான். பாவத்தில் நிலைகொண்டிருக்க விரும்புகிறான். திருச்சபைக்கும் அவனுக்குமுள்ள ஐக்கியம் கெட்டுப்போகிறது. அவனால் இடையூறு உண்டாகும். அவனை சபை சந்தேகக் கண்ணோட்டத்துடன்தான் பார்க்கும்.

மேலும் ஒருவன் வெளிப்படையாய் பாவ அறிக்கை செய்து மன்னிப்பு பெறுவதின் மூலம் சரிசெய்ய வேண்டியவைகளை சரிசெய்யும்போது ஒப்புரவாகுதல் உண்டாகிறது. ஒருவன் பாவம் செய்வதால் அவனுக்கும் தேவனுக்கும் உள்ள ஐக்கியம் கெடுகிறது. திருச்சபையையும் வேதனைபடுத்துகிறான். உடன் விசுவாசி, ஊழியரோடு முரண்படுகிறான் (சம்பந்தப்பட்ட) ஐக்கியம் கெடுகிறது. இருளிலே விசுவாசி இருக்கிறான். விசுவாசி பாவ அறிக்கை செய்து ஒப்புரவாகும்போது ஒளியில் நடக்கிறான், தேவனோடுள்ள ஐக்கியம் சீர்படுகிறது. சபை ஆறுதல் அடைகிறது. சபையோடுள்ள உறவு சீர்படுகிறது. சம்பந்தப்பட்ட விசுவாசியும் இவரும் ஒளிக்குள்ளாகிறார்கள், ஒளியில் நடக்கிறார்கள். "அவர் ஒளியிலிருக்கிறதுபோல நாமும் (விசுவாசியும், ஊழியரும்) ஒளியில் நடந்தால் ஒருவரோடொருவர் ஐக்கியப் பட்டிருப்போம். அவருடைய குமாரனாகிய

இயேசுகிறிஸ்துவின் இரத்தம் சகல பாவங்களையும் நீக்கி நம்மைச் சுத்திகரிக்கும் (I யோ 1 : 7).

பாவங்களை மறைக்காமல் அறிக்கை செய்வது மட்டுமல்ல உறுதியான தீர்மானமெடுத்து பாவத்தை விட்டு விட வேண்டும். உறுதியான தீர்மானம் பின்பு மனஸ்தாபபடுவதற்கு இடமில்லாமல் மனந்திரும்புதலை உண்டாக்குகிறது (II கொரி 7 : 9 - 11). பாவ அறிக்கை மூலமாக சுத்திகரணம் உண்டாகிறது. "முழுகினவன் தன் கால்களை மாத்திரம் கழுவ வேண்டியதாயிருக்கும்" (யோவான் 13 : 10). இவ்விதமாய் தன்னை சுத்திகரித்துக் கொண்டு கர்த்தருடைய பந்தியில் தவறாமல் பங்கு பெற்று கொள்ளுவர்களுடைய பாவங்கள் மன்னிக்கப்படுகின்றன. அவன் பரிசுத்தமாகிறான், கர்த்தருடைய வருகைக்கு ஆயத்தமாயிருக்கிறான். ஆகையால் நீங்கள் புளிப்பில்லாதவர்களாயிருக்கிறபடியே பழைய புளித்த மாவைப் புறம்பே கழித்துப் போடுங்கள். ஏனெனில் நம்முடைய பஸ்காவாகிய கிறிஸ்து நமக்காக பலியிடப் பட்டிருக்கிறாரே. ஆதலால் பழைய புளித்தமாவோடே அல்ல, துர்க்குணம், பொல்லாப்பு என்னும் புளித்த மாவோடும் அல்ல, துப்புரவு உண்மை என்னும் புளிப்பில்லாத அப்பத்தோடே பண்டிகையை ஆசரிக்கக் கடவோம் (I கொரி 5 : 7, 8).

"அவர்மேல் இப்படிப்பட்ட நம்பிக்கை வைக்கிற எவனும், அவர் சுத்தமுள்ளவராயிருக்கிறது போல தன்னையும் சுத்திகரித்துக் கொள்ளுகிறான்" (I யோ 3 : 3). தங்களை பரிசுத்தவான்கள், நீதிமான்கள் என்று நம்பிக் கொண்டிருக்கிறவர்களுக்கல்ல இந்த உபதேசம். தான் பாவி தன் பாவம் தன் முன் நிற்கிறது, தன்னை பின் தொடருகிறது, மெய்சமாதானமில்லையே, விடுதலை பெற முடியவில்லையே என்பவர்களுக்கே இந்த உபதேச சட்டம். "முன்னே நீங்கள் பாவத்திற்கு அடிமைகளாயிருந்தும் இப்பொழுது உங்களுக்கு ஒப்புவிக்கப்பட்ட உபதேச சட்டத்திற்கு நீங்கள் மனப்பூர்வமாய் கீழ்படிந்ததினாலே தேவனுக்கு ஸ்தோத்திரம். பாவத்தினின்று நீங்கள் விடுதலையாக்கப்பட்டு நீதிக்கு அடிமைகளானீர்கள்" (ரோம 6 : 17, 18). "கிறிஸ்து இயேசுவினாலே ஜீவனுடைய ஆவியின் பிரமாணம் என்னை பாவம் மரணம் என்பவைகளின் பிரமாணத்தினின்று விடுதலையாக்கிற்றே" (ரோம 8 : 2).

அல்லேலூயா! பாவ அறிக்கை செய்யுங்கள் பாவத்தை விட்டு விடுங்கள், தேவனுடைய ஆசீர்வாதம் பெறுங்கள்.

---

"நான் ஆதாமைப் போல் என் மீறுதல்களை மூடி, என் அக்கிரமத்தை என் மடியிலே ஒளித்து வைத்தேனோ?" யோபு 31 : 33

---

# பிரிந்து போகிறீர்களோ? போகட்டும்! போகட்டும்!!

கிறிஸ்துவானவர் தம்மைத்தாமே ஒப்புக்கொடுத்ததற்கு ஒரு பிரதான நோக்கம் உண்டு. அதென்னவெனில், கறைதிரை முதலானவைகள் ஒன்றுமில்லாமல் பரிசுத்தமும், பிழையற்றதுமான மகிமையுள்ள சபையாக (சபைகளாக அல்ல) அதை தமக்கு முன் நிறுத்திக் கொள்வதற்கே (எபே 5 : 27). தேவனுடைய பார்வையில் சபை ஒன்றே, அதுவே கிறிஸ்துவினுடைய சரீரமாகி சபை (எபே 4 : 4).

இயேசுகிறிஸ்து தம்மை சிலுவையில் ஒப்புக் கொடுக்கும் வேளை சமீபித்தபோது அவர் தாம் தெரிந்து கொண்ட அப்போஸ்தலர்களும், அவர்களுடைய வார்த்தையினால் அவரை விசுவாசித்தவர்களும், பிதாவும் அவரும் ஒன்றாய் இசைந்திருந்தது

போல், ஒன்றாய் அதாவது ஒரே மனிதன் போல் இருக்க வேண்டும் என வேண்டிக் கொண்டார் (யோவா : 17 : 20-22). பிதா எப்போதும் அவருக்கு செவி கொடுக்கிறவர் என அவர் அறிவார் (யோவா 11 : 42). இயேசு கிறிஸ்துவின் ஜெபத்திற்கேற்றபடி தேவனுடைய பிள்ளைகளாகிய நாமெல்லாரும் அவயங்களாக இருந்து அவராலே சரீரமாக இசைவாய் கூட்டி இணைக்கப்பட்டு கட்டப்பட்டிருக்கிறோம் (எபே 4 : 16). வேரானது பரிசுத்தமாயிருக்க, கிளைகளும் பரிசுத்தமாயிருக்கும், சில கிளைகள் முறித்துப் போடப்பட்டு வேரின் பரிசுத்தத்திற்கு தூரமாகிறது. வேறு கிளைகள் அந்த இடத்தில் ஒட்ட வைக்கப்படவே அவைகள் வேரின் பரிசுத்தத்திற்கு பங்குள்ளதாகிறது (ரோம 11 : 16, 17).

இந்த இசைவிணைப்பின் கட்டிலிருந்து சிலர் பிரிந்து போவதற்குரிய காரணம் என்ன என ஆராயலாம். ஒரு தேவ ஊழியருக்கு தேவன் தரிசனத்தில் வெளிப்படுத்தினதின் விவரமாவது : கிறிஸ்துவை விட்டு, ஐக்கியத்தை விட்டு பிரிந்து போன ஒருவன், வெகு நாட்களுக்குப் பின் தன்னுடைய தற்போதைய உலக நண்பர்கள் முன் புலம்புகிறான். உத்தியோகத்தில் உயர்வு இல்லை, படிப்பை முடிக்க இயலவில்லை, எதிலும் முன்னேற்றம் இல்லை என்று. இவன் தன்னுடைய பெற்றோர்களை (உறவினர்களை)ப் பிரியப் படுத்த பிரிந்தவன்.

அடுத்து ஒரு ஊழியக்காரனாய் இருந்தவன் நெற்றியில் திருநீறு அணிந்த வண்ணமாய் ஏதோ வேலை செய்து கொண்டிருக்கிறான். விசாரிக்கையில் இவன் உபதேசத்தில் இடறி, கிறிஸ்துவை விட்டுப் பிரிந்து அசுத்தாவியால் தீட்டுப்பட்டவன் என தெரிய வருகிறது.

அடுத்து ஒரு ஊழியனுக்கு தனி அறை கொடுக்கப்பட்டிருக்கிறது. அவன் ஒரு சிற்றின்பப்பிரியன். ஒருவருக்கும் தெரியாமல் இரவில் வாரத்திற்கு 2 தடவை சினிமா பார்த்து விட்டு வந்து படுத்துக் கொள்கிறான். இவன் சிற்றின்பத்திற்காய் கிறிஸ்துவை விட்டு பிரிந்தவன்.

இவைகளைக் கண்ட தேவ ஊழியன் வருத்தப்பட்டு, தன்னுடைய சகாக்களிடம் : இடுக்கமான வாசல் வழியாய் சிலர் தானே போவார்கள். சிலர் என்றால் 4 பேரோ 5 பேரோ என்று சொல்வதற்கொப்ப என சொல்கிறார்.

**உறவினரை முக்கியப்படுத்தி பிரிந்து போகிறவர்கள் :-**

இயேசு சொன்னார் : ஒரு மனுஷனுக்கு சத்துருக்கள் அவன் வீட்டாரே. தகப்பனையாவது, தாயையாவது என்னிலும் அதிகமாய் நேசிக்கிறவன் எனக்குப் பாத்திரன் அல்ல. மகனையாவது மகளையாவது என்னிலும் அதிகமாய் நேசிக்கிறவன் எனக்குப் பாத்திரன் அல்ல என்று (மத் 10 : 36, 37). பரலோக ராஜ்ஜியம் நிலத்தில் புதைந்திருக்கிற பொக்கிஷத்திற்கொப்பாயிருக்கிறது. அதன் மதிப்பை நீ அறிவாய் ஆனால் உன் உறவினர்கள் அதைப் பார்க்கும்படி கண் திறக்கப்படாத குருடர்களாய் இருக்கிறபடியால், அந்தப் பொக்கிஷம் இருக்கிற நிலத்தைக் கொள்ளும்படி உனக்குள்ளதை எல்லாம் விற்க ஆரம்பிக்கும்போது நெருங்கினவர்கள் எதிர்ப்பதும், பயமுறுத்தி தடை செய்வதும், கண்ணீர் வடித்து உன் இருதயத்தை கரைந்து போக செய்வதும் இயல்பே. முன் வைத்த காலை பின் வைக்காமல், பின் வாங்கி போகாமல் உறுதியாய் நிற்பாயாகில் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசி, அப்பொழுது நீயும் உன் வீட்டாரும் இரட்சிக்கப்படுவீர்கள் என்ற தவறாத வேதவாக்கின்படி எல்லாரும் நித்திய மகிழ்ச்சிக்குள் பிரவேசிப்பார்கள். மாறாக உறவினர்களை அற்பகாலம் சந்தோஷப்படுத்தும்படி இறைவனை விட்டு பிரிவாயாகில் நீயும், உன் வீட்டார் அனைவரும் நித்திய நரகம் போக நேரிடுமே.

உண்மையிலேயே நீ உன் பெற்றோரை, உற்றோரை நேசிக்கிறவனானால் அவர்களை நித்திய வேதனை நிறைந்த நரக அக்கினியின்று தப்புவிக்கும்படி கொஞ்சகாலம் வேதனையைசோதனையைசகிக்கக்கூடாதோ. எந்தக் காரியத்திற்காய் உறவினரை பிரியப் படுத்தி கிறிஸ்துவை விடுகிறாயோ, அதே காரியத்தின் பலனும் அவர்கள் உன்னை

விட்டு பிரிவார்கள். இப்படி தேவனை விட்டு, சபையை விட்டு பிரிகிறவர்கள், மாறாத வேதனைக்கும், தவிப்புக்கும், துயரத்திற்கும் ஆளாவார்கள். பின்பு வருந்துவதால் ஒரு பிரயோஜனமுமிராது. மாற்கு பர்னபாவினுடைய சகோதரியின் மகன், பவுல் முற்றிலும் பரிசுத்தாவியால் நடத்தப்பட்டவர். அதற்கு தேவனையே சாட்சியாக வைக்கிறார் (II கொரி 1 : 18). இதை அறியாத அவர் மூலமாய் கிறிஸ்துவை அறிந்து, ஆவியைப் பெற்ற கொரிந்தியர்கள், பவுல் மாம்சத்தின்படி நடக்கிறவர் என்றும் (II கொரி 13 : 3) சந்தேகித்ததை அவர் மறுத்து நிரூபிக்கத் தக்க அளவுக்கு ஆவியானவராலே வழி நடத்தப்பட்ட பவுல், மாற்குவை ஊழியத்திற்கு கூட்டிச் செல்லக் கூடாதென்றார். மருமகனாயிற்றே, பர்னபாவுக்கு கோபம் பொத்துக் கொண்டு வந்தது. உம்முடைய நடத்துதலுக்கு நான் கீழ்ப்படிய வேண்டுவதில்லை, நீர் உம் வழியே போரும். நான் என் இஷ்டப்படி போகிறேன் என்று சொல்லி பவுலை விட்டு பிரிந்து போனார். போனவர் போனவரே, அவருடைய பெயரும் அதற்குப் பின்பு வேதத்தில் இடம் பெறவில்லை. மாம்சம் மாம்சமே. மாம்சம் தேவனுடைய இராஜ்ஜியத்தை (சபையை) சுதந்தரிப்பதில்லை (அப் 15 : 36-41).

**உபதேசத்தால் இடறுவோர்கள் :**

இயேசுவைக் குறித்து யோவான் ஸ்நானகன் சாட்சி கொடுத்தார். தேவன் அவருக்கு வெளிப்படுத்தியிருந்தார். ஆனாலும் இயேசு இவ்விதமாய் கிரியை செய்வார் என அவராகவே நினைத்துக் கொண்டார். இயேசுவின் நடபடிகள் அவர் நினைவுக்கு மாறாக இருந்ததால் ஆள் அனுப்பி இயேசுவைப் பற்றிய காரியத்தை உறுதிப்படுத்த விரும்பியபோது, இயேசு: என்னிடத்தில் இடறலடையாதிருக்கிறவன் பாக்கியவான் என்றார் (மத் 11 : 6). இவ்விதமாய் நாம் எதிர்பார்க்கிறபடி எல்லாம் பரிசுத்தவான்கள் நடக்க வேண்டும் என எண்ணக் கூடாது. நம்முடைய வழிகளல்ல கர்த்தருடைய வழிகள். நமக்கு கொடுக்கப்பட்ட காரியத்தை மாத்திரம் கவனித்துக் கொண்டு போவதே நலம். கர்த்தர் இரகசியங்களை பேசுகிறார், அதை நாம் புரிந்து கொள்ள முடியாமல் இருக்கும் (யோவா 10 : 6). இப்போது புரியாவிட்டாலும், காலம் வரும் போது அறிவோம் (யோவா 13 : 7) என்ற தெளிவோடு நடந்து கொள்ள வேண்டும். என் மாம்சம் மெய்யான போஜனம், என் இரத்தம் மெய்யான பானம் என்கிற நித்திய ஜீவ வழியை இயேசு காண்பித்த போது அவருடைய சீஷரில் அநேகர் இடறி அவரை விட்டு பிரிந்து போனார்கள். (யோவா 6 : 54-60). இவர்கள் பிதாவின் அருளைப் பெறாதவர்கள். வசனத் தெளிவில்லாதவர்கள், பரம பிதாவால் நடப்படாத நாற்றுகள் (யோவா 6 : 65, 68; மத் 15 : 13). அன்பரே, நீர் அறிந்ததையே இன்னொருவர் உமக்கு பேச வேண்டுவதென்ன? பிரசங்கம் நன்றாய் இருக்கிறது என நீர் மெச்சிக் கொள்ளும்படியாகவா, கர்த்தர் புதுமையானவைகளை உமக்கு போதிக்கிறார், கற்றுக் கொள்ள வகை பாருங்கள். ஆவியில் எளிமை உள்ளவன் பாக்கியவான்.

**உலக நேசத்தால் சிலர் பிரிகிறார்கள்:**

அநேக ஆண்களுடன் உடலுறவின் இன்பம் அனுபவிக்கிற ஒரு பெண் தன்னுடைய கணவனோடே உறவு கொள்வதில் நாட்டமில்லாதவளாய் இருப்பாளல்லவா. இவள் விபச்சாரியல்லவா? அப்படியே தேவன் விலக்கின உலக காரியங்களில் இன்பங் காண்கிறவர்கள் இறைவனுடைய அன்பின் ஐக்கியத்தில் இன்பங் காண்பதெப்படி? இவர்களுக்கு இறைவன் முக்கியமல்ல. ஆகையால் அவரை விட்டு பிரிகிறார்கள் (யாக் 4 : 4) தேமா இப்பிரபஞ்சத்தின் மேல் ஆசைவைத்து பவுலை விட்டு பிரிந்து போனான். சிலர் சிற்றின்பப் பிரியர்களாகி, பாவத்தைவிட மனதில்லாமல் அசுத்தத்தை ஆவலோடே நடப்பித்து, காம விகாரங் கொண்டு, தங்களுடைய மோக இச்சையை நிறைவேற்ற சபை தடையாயிருப்பதால் சபையை விட்டுப் பிரிகிறார்கள். அநியாயக்காரர்கள் தேவனுடைய இராஜ்ஜியத்தை சுதந்தரிக்க முடியாதுதானே? வேசிமார்க்கத்தாரும், விபச்சாரக்காரரும், சுயபுணர்ச்சிக்காரரும், ஆண்புணர்ச்சிக்காரரும், தேவனுடைய இராஜ்ஜியத்தில் பங்கு பெறுவ

தெப்படி? நீட்டுள்ளதும், அருவருப்பையும், பொய்யையும் நடப்பிக்கிறதுமாகிய ஒன்றும் புதிய எருசலேம் நகரத்தில் பிரவேசிப்ப தில்லை (I கொரி 6 : 9; வெளி 21 : 27). பிரிய மானவர்களே! நீங்கள் பரிசுத்தமுள்ளவர்க ளாக வேண்டுமென்று தேவன் சித்தங் கொண்டு, உங்களை அசுத்தத்திற்கல்ல, பரிசுத்தத்திற்கே அழைத்திருக்கிறார் (I தெச 4 : 3,7).

இப்படி பிரிந்து போகிறவர்கள், தங்கள் துன்மார்க்கமான இச்சைகளின்படி நடக்கிற பரியாசக்காரர்கள், ஜென்ம சுபாவமுடைய வர்கள், ஆவியில்லாதவர்கள் (யூதா 18, 19). இவர்கள் நம்மை விட்டு பிரிந்து போனால் போகட்டும். நீங்களோ பிரியமானவர்களே நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்து வின் அப்போஸ்தலரால் சொல்லப்பட்ட வார்த்தைகளை நினைவு கூறுங்கள் (யூதா 17) நிலைத்திருங்கள். "அவர்கள் திருவசனத் துக்குக் கீழ்ப்படியாதவர்களாயிருந்து இடறு கிறார்கள். அதற்கென்றே நியமிக்கப்பட்ட வர்களாயும் இருக்கிறார்கள் (I பேது 2 : 8).

---

"எல்லாரும் நம்முடையவர்களல்ல வென்று வெளியாகும்படிக்கே பிரிந்து போனார்கள்" I யோவா 2 : 19

---

# வேத பாடம்

**ஆதி 28 : 1 – 9** யாக்கோபு ஏசாவைப்போல் கானானியருடைய குமாரத்திகளில் பெண் கொள்ளாமல் இருக்கும்படி ஈசாக்கும் ரெபெக்காளும் யாக்கோபை பதான் அராமுக்கு ஆசீர்வதித்து அனுப்பி விடுகிறார்கள். புறஜாதி பெண்கள் அந்நிய தெய்வங்களுடைய குமாரத்திகளாயிருக்கிறார்கள்.

**ஆதி 28 : 10 – 19** யாக்கோபு பெற்றோர்களுக்கு கீழ்ப்படிந்து பெயர்சபாவை விட்டுப் புறப்பட்டார். அது தேவ சித்தமாயிருந்தது. வழியில் இருட்டி விட்டதினால் ஒரு கல்லை தலைக்கு வைத்து நித்திரை செய்யும்படி படுத்துக் கொண்டபோது ஒரு தரிசனம் கண்டார். ஒரு ஏணி வானத்துக்கும் பூமிக்குமாய் வைக்கப்பட்டிருப்பதாகவும், தேவ தூதர்கள் ஏறுகிறவர்களும் இறங்குகிறவர்களுமாயிருந்தார்கள். அதன் உச்சியில் கர்த்தர் நின்று யாக்கோபோடே பேசி வாக்குத்தத்தங்களை அருளினார். ஆபிரகாமுக்கு அருளிய வாக்குத்தத்தம் யாக்கோபுக்கும் அருளப்படுகிறது. மேலும் போகிற இடத்தில் கூட இருந்து காப்பாற்றி திரும்பவும் கொண்டு வருவதாக வாக்கருளினார். யாக்கோபு நித்திரை தெளிந்து எழுந்து அந்த ஸ்தலத்திற்கு தேவன் வாசம் செய்யும் ஸ்தலம் என்றர்த்தங்கொள்ளும் பெத்தேல் என்று பெயரிட்டார்.

**ஆதி 28 : 20 – 22** யாக்கோபு தேவனுக்கு ஒரு பொருத்தனை செய்கிறார். கர்த்தர் என்னை போஷித்து காப்பாற்றி சுகமாய் திரும்பிவரப்பண்ணுவாரானால் கர்த்தர் தரும் எல்லாவற்றிலும் தசமபாகம் செலுத்துவேன் என்பதே. தசமபாக உபதேசம் நியாயப்பிரமாணத்தில் கட்டளையாக வெளிப்படுமுன்னே முற்பிதாக்களால் கைக் கொள்ளப்பட்ட ஜீவப் பிரமாணமாயிருக்கிறது. இதைச் செய்யாமல் தங்களை விசுவாசிகள் என்று சொல்லிக் கொள்ளுகிறவர்களுமுண்டு. தசமபாகம் ஜீவப்பிரமாணங் களில் ஒன்று. இதை நிறைவேற்றுவோர் பூரண இரட்சிப்படைவதோ, நிலை நிற்பதோ அரிது. விழுவதும் எழுந்திருப்பதுமாயிருப்பார்கள் வளர்ச்சியிருக்காது. புதிய ஏற்பாடும் இதை அறிவிக்கிறது (கலா 6 : 6 ; I கொரி 16 : 2 ; மத் 23 : 23).

**ஆதி 29 : 1 - 9** யாக்கோபு பிரயாணப்பட்டு பதாம் அராமுக்கு வந்தார். அங்கே கிணற்றண்டை தன் மாமனாகிய லாபானுடைய ஆடுகளைக் கண்டார்.

**ஆதி 29 : 10 - 13** லாபானின் இளையமகள் ராகேல் ஆடுகளை ஓட்டி வந்தாள். யாக்கோபு அவளுக்கு துணை நின்று ஆடுகளுக்கு தண்ணீர் காட்டி தான் இன்னார் என்று

ராகேலுக்குத் தன்னை அறிமுகப் படுத்துகிறார். அவள் ஓடிப்போய் தகப்பனுக்கு அறிவிக்க லாபான் வந்து யாக்கோபை வீட்டிற்கு அழைத்துப் போகிறார். யாக்கோபு தன் காரியங்களையெல்லாம் மாமனுக்கு அறிவிக்கிறார்.

ஆதி 29 : 14 - 20 யாக்கோபு லாபானுடைய ஆடுகளை ராகேலுக்காக ஏழு வருஷம் மேய்க்கிறார். ராகேல் மேலுள்ள பிரியத்தினால் அந்த ஏழு வருஷங்கள் சீக்கிரமாய் கடந்தது போலிருந்தது.

ஆதி 29 : 21 – 30 விவாக நாள் வந்தபோது லாபான் இரவில் தன் மூத்த மகளை அழைத்து யாக்கோபுக்குக் கொடுத்தார், பொழுது விடிந்தபோது அது லேயாள் என்று அறிந்து ஏன் எனக்கு இப்படி செய்தீர் என்றபோது ஏழு நாளுக்குப் பின் ராகேலையும் தருகிறேன் இன்னும் ஏழு வருஷம் எனக்கு வேலை செய் என்றார். யாக்கோபு பின்னும் ஏழு வருஷம் லாபானிடத்தில் சேவித்தார். லேயாளைக் காட்டிலும் ராகேலிடம் யாக்கோபு அதிகம் பிரியம் வைத்தார். அக்காலத்தில் பலதார வழக்கம் ஜாதிகளிடம் இருந்தது.

(தொடரும்)

"ஞானமுள்ள மகன் தகப்பனைச் சந்தோஷப் படுத்துகிறான். மதியற்ற மனுஷனோ தன் தாயை அலட்சியம் பண்ணுகிறான்" — நீதி 15 : 20.

# மோட்ச வழி

## குரு - சிஷ்ய உரையாடல்

(தொடர்ச்சி)

ஒன்பதாம் கற்பனை : "பிறனுக்கு விரோதமாகப் பொய்ச் சாட்சி சொல்லாதிருப்பாயாக"

இதன் அர்த்தம் நாம் கடவுளுக்குப் பயந்து அவரை சிநேகித்து பிறத்தியானுக்கு விரோதமாய் வஞ்சகமாய்ப் பொய் சொல்லாமலும், இரண்டகம் பண்ணாமலும், அவன் பேரில் புறணி பேசாமலும், அவனுக்கு அபகீர்த்தி வரப் பண்ணாமலும், அவனுக்காகப் பரிந்து பேசி, நல்லவைகளைச் சொல்லி எல்லாவற்றையும் உண்மையாக்க வேண்டும்.

இந்தக் கற்பனை நியாய ஸ்தலத்தில் பிறனுக்கு விரோதமாய்ச் சொல்லப்படும் பொய்ச் சாட்சியையும், வஞ்சகமுள்ள நெஞ்சத்திலிருந்து பிறனுக்கு விரோதமாய் வரும் சகல வார்த்தைகளையும் நினைவுகளையும் விலக்குகிறது. ஒருவனும் தனக்கடுத்தவனுக்கு விரோதமாய் உங்கள் இருதயங்களில் பொல்லாப்பை நினையாதிருங்கள். பிறனுக்கு விரோதமாய்ப் பொய் சொல்லுதல் என்றால் வஞ்சகமுள்ள இருதயத்தோடு பிறனிடத்தில் இல்லாததைச் சொல்லுவதும் இருக்கிற நல்ல காரியங்களை மறைப்பதுமாகும். பொய்ச் சாட்சிக்காரன் கள்ள சாட்சிக்காரன் ஆக்கினைக்குத்தப்பான். பொய்களை ஊதுகிறவன் தப்புவதில்லை (நீதி 19 : 5). கேயாசி (II இராஜா 5 : 25); நாபோத்துக்கு விரோதமான கள்ளச்சாட்சிகள் (I இராஜ 21 : 13); இயேசு கிறிஸ்துவுக்கு விரோதமான சாட்சிகள் (மத் 26 : 59 – 61). இரண்டகம் பண்ணுவதென்பது வஞ்சகமுள்ள இருதயத்தோடே ஒருவனுடைய இரகசியங்களை வெளிப்படுத்துவதாகும். அவதூறு பண்ணித்திரிகிறவன் இரகசியத்தை வெளியாக்குகிறான். ஆவியின் உண்மையுள்ளவனோ காரியத்தை அடக்குகிறான் (நீதி 11 : 13). பின்புறணியாவது : ஒருவன் இல்லாத சமயத்தில் வஞ்சக

முள்ள இருதயத்தோடே அவனைப்பற்றித் தீமையான காரியங்களைப் பேசுவதாம். "சகோதரரே ஒருவருக்கொருவர் விரோதமாகப் பேசாதிருங்கள்" (யாக் 4 : 11) குற்றமாய் நிர்ணயிக்காதேயுங்கள் நீங்களும் குற்றவாளிகளாய் நிர்ணயிக்கப் படாதிருப்பீர்கள். ஆக்கினைக்குள்ளாய்த் தீர்க்காதேயுங்கள். அப்போது ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கப் படாதிருப்பீர்கள் (உ-ம்) அப்சலோம் (II சாமு 15 : 1 - 6). அபகீர்த்தி உண்டாக்குவதென்றால்: வஞ்சகமுள்ள இருதயத்தோடே ஒருவனைக் குறித்துக் குறைவாய்ப் பேசிக்கொண்டு அவனுடைய நற்கீர்த்தியைக் கெடுப்பதாம். இவ்வித கெட்டவர்களுக்கு தேவன் சொல்லுவதாவது, தேவன் துன்மார்க்கனை நோக்கி: நீ என் பிரமாணங்களை எடுத்துரைக்கவும், என் உடன்படிக்கையை உன் வாயினால் சொல்லவும் உனக்கு என்ன நியாயமுண்டு. என் வார்த்தையை உனக்கு பின்னாக எறிந்து போடுகிறாய். திருடனுடனும், விபச்சாரக் காரனோடும் உனக்கு தொடர்பிருக்கிறது. நீ உட்கார்ந்து உன் தாயின் மகனுக்கு விரோதமாய் பேசி அவதூறு செய்கிறாய். உன் வாயை பொல்லாப்புக்கு திறந்து விடுகிறாய். உன் நாவு சற்பனையைப் பிணைக்கிறது. இவைகளை நீ செய்யும்போது மௌனமாயிருந்தேன். உன்னைப் போல நானும் இருப்பேன் என்று நினைவு கொண்டாய். நான் உன்னை கண்டித்து உன் கண்களுக்கு முன்பாக ஒவ்வொன்றையும் நிறுத்துவேன். தேவனை மறக்கிறவர்களே விடுவிக்கிறவன் இல்லாதபடி நான் உங்களைப் பீறிப்போடுவேன் (சங் 50 : 16 - 22).

இந்த கற்பனை விதிப்பாதவது நாம் அவனுக்காக பரிந்துபேசி பொய் பிராதுகளிலிருந்து அவனைக் காப்பாற்றுவதும்; ஊமையனுக்காகவும், திக்கற்றவர்களுக்காகவும், சாகப் போகிறவர்களுக்காகவும் உன் வாயைத் திறந்து நீதியாய் நியாயந்தீர்த்து சிறுமையும் எளிமையுமானவனுக்கு நன்மை செய்வது (நீதி 31 : 8, 9). பிறனுடைய நற்செய்கைகளையும், நற்குணங்களையும் கூடிய அளவு புகழ்ந்து சொல்லுவதும் அவனை சிநேகித்து அவனுடைய பாவங்களை மூடுவதுமாகும். சிநேகம் திரளான பாவங்களை மூடும் (I பேது 4 : 5; I கொரி 13 : 7).

(தொடரும்)

"...அவனவன் பிறனுடனே மெய்யைப் பேசக் கடவன்" — எபே 4:25

பாலர் பகுதி

# நான் அவருடைய வஸ்திரங்களையாகிலும் தொடுவேன்

புனித யோவான் பாலர் பள்ளியில் அன்று ஞாயிறு வேதாகம வகுப்பு நடந்து கொண்டிருந்தது. அது கிறிஸ்தவ பள்ளிக் கூடம் ஆகையால் ஞாயிற்றுக்கிழமைகள் தோறும் சிறு பிள்ளைகளுக்கென வேதாகம வகுப்பு நடத்துவார்கள். அந்த பள்ளிக் கூடத்தின் ஆசிரியரும், தேவனுடைய ஊழியருமாகிய வாசன் ஞாயிறு வகுப்பு நடத்திக்கொண்டு வந்தார். ஒவ்வொரு வாரமும் அவர் ஜெபத்துடன் கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் வாழ்க்கை வரலாறுகளை அவர் செய்த அற்புதங்களை குழந்தைகளுக்கு சொல்லி வருவார். இந்த ஞாயிறு: நான் அவருடைய வஸ்திரங்களையாகிலும் தொட்டால் சொஸ்தமாவேன் என்று சொல்லி (மாற் 5 : 27) பன்னிரண்டு வருடங்களாய் வியாதிப்பட்டிருந்த ஒரு ஸ்திரீ ஜனக்கூட்டத்துக்குள்ளே வந்து இயேசுவின் வஸ்திரத்தை தொட்டாள் என்றும், அந்நேரமே அவள் ஆரோக்கியமடைந்தாள் என்றும் குழந்தைகளுக்கு இயேசுவின் வரலாற்றை சொல்லிக் கொண்டிருந்தார்.

ஜெப ஆலயத்தின் தலைவனாகிய யவீரு என்பவன் இயேசுவை தன் வீட்டிற்கு

அழைத்துச் செல்லும்போது இயேசுவைக் உரிந்து கேள்விப்பட்ட பன்னிரண்டு வருடங்களாய் பெரும் பாடுள்ளவளாயிருந்து தன் ஆஸ்திகளையெல்லாம் வைத்தியர்களுக்கு செலவழித்தும் குணமாகாமலிருந்த ஒரு ஸ்திரீ, இயேசுவிற்கு பின்னாக ஓடி வந்து அவருடைய வஸ்திரத்தின் ஓரத்தை தொட்டாள். உடனே அவள் குணமானாள். தன்னிடத்திலிருந்து வல்லமை புறப்பட்டதை இயேசு அறிந்தார். தன்னை தொட்டது யார் என்றார். சுற்றிலும் இருந்தவர்கள் எங்களுக்கு தெரியாது என்றார்கள். இயேசுவின் சீடர்கள் அவரிடம் ஆண்டவரே திரளான ஜனங்கள் உம்மை சூழ்ந்து நெருக்கிக் கொண்டிருக்கிறார்களே, என்னை தொட்டது யார் என்று எப்படி கேட்க முடியும் என்றார்கள்.

ஆனால் அந்த ஸ்திரீயோ தான் மறைந்திருக்கவில்லை என்று கண்டு இயேசுவின் முன் வந்து விழுந்து தான் அவருடைய வஸ்திரத்தின் ஓரத்தை தொட்டதால் குணமானதை அறிவித்தாள். இயேசு அவளைப் பார்த்து "மகளே, திடன் கொள், உன விசுவாசம் உன்னை இரட்சித்தது சமாதானத்தோடே போ என்றார்.

இந்த சம்பவம் அங்கிருந்த பிஞ்சு உள்ளங்களிலெல்லாம் ஆழமாய் பதிந்தது. மேரி, ராஜா, எலியா, ராணி போன்ற பிள்ளைகள் எல்லாரும் அதைக்கேட்டு இயேசுவின் மேல் ரொம்ப பக்தியுள்ளவர்களாய் அந்த இயேசு இப்போதும் நம் மத்தியில் உலாவுகிறார் அல்லவா என்று ஆசிரியரிடம் கேட்டு சந்தோசப்பட்டார்கள்.

மறுநாள் திங்கள் கிழமை வாசன் ஐந்தாம் வகுப்பில் பாடம் எடுத்துக் கொண்டிருந்தார். அவர் பாடம் எடுத்துக்கொண்டிருக்கும் போது கடைசி பெஞ்சில் மேரி சுவர் ஓரமாய் சாய்ந்து தலையை தொங்கப் போட்டவளாய் உட்கார்ந்திருப்பதை பார்த்தார்.

மேரிக்கு 2 நாட்களாக உடல்நலமில்லை. இரண்டுநாளாய் நல்ல மழை பெய்திருந்தது. மழையில் நனைந்து கொண்டு பள்ளிகூடம் வந்ததால் காய்ச்சல் வந்திருந்தது. அப்போது காய்ச்சல் அதிகமாகி ஜுரம் அடித்தது. அதனால் சோர்ந்து போய் உட்கார்ந்திருந்தாள் மேரி. மேரி ஒரு ஏழை குழந்தை. அவளுக்கு ஆஸ்பத்திரிக்கு போக பணவசதி கிடையாது. ஆண்டவரே நீர்தான் சுகமாக்க வேண்டும் என்று மனதிற்குள்ளே சொல்லி கொண்டிருந்தாள்.

மேரியை பார்த்தவுடன் வாசன், மேரி, என்ன அப்படி உட்கார்ந்திருக்கிறாய், பாடத்தை கவனிக்கவில்லையா? என்றார் சத்தமாய். சத்தம் கேட்டதும் விழித்து பார்த்த மேரி எழுந்து ஓடிவந்து ஆசிரியரின் வேட்டியை தனது பிஞ்சுகையினால் தொட்டாள். வாசன், மேரி என்ன இது என்று சொல்லி மேரியை தொட்டதும் அவருக்கே ஷாக் அடித்தாற்போல் இருந்தது. அந்த அளவு மேரியின் உடல் சுட்டது.

மேரி அப்போது சொன்னாள். ஐயா எனக்கு இரண்டு நாளாய் ஒரே காய்ச்சல், ஜுரம் அடிக்குது. நேற்று நீங்க ஞாயிறு பள்ளியில் சொன்னீர்கள் அல்லவா? ஒரு ஸ்திரீ இயேசுவின் வஸ்திரத்தின் ஓரத்தை தொட்டபோது குணமானாள் என்று. இப்போ இயேசுவுக்கு நீங்கதானே பிரதிநிதி, அதனால் எனக்கு ஜுரம் குணமாகனும் என்று ஓடி வந்து உங்கள் வேட்டியை தொட்டேன் என்றாள்.

இந்த சின்ன குழந்தையின் வார்த்தை ஆசிரியர் வாசனுக்கே பெரிய அதிர்ச்சியாய் இருந்தது. அப்படியே திகைத்து நின்று விட்டார். அவருடைய ஊழியத்தில் இப்படி விசுவாசமுள்ள சின்ன குழந்தையைப் பார்த்து திகைத்து விட்டார். அப்போது அவரை பரிசுத்த ஆவியானவர் ஆட்கொள்வதை உணர்ந்தார். அவரிடமிருந்து வல்லமை புறப்படுவதை உணர்ந்தார். மேரியின் மேல் இப்போது கைகளை வைத்தார். என்ன ஆச்சரியம்! கொஞ்சம் கூட ஜுரம் இல்லாமல் மேரி குணமடைந்திருந்தாள். ஆம், அந்த சின்ன குழந்தை மேரியின் விசுவாசத்தைக் கண்டு ஆண்டவர் "மகளே திடன் கொள், உன் விசுவாசம் உன்னை இரட்சித்தது, சமாதானத்தோடே போ" என்று சொல்லி அற்புதம் நடப்பித்தார். ஆம், அவர் இயேசு கிறிஸ்து

நேற்றும், இன்றும், என்றும் மாறாதவராய் இருக்கிறார்.

இதை படிக்கும் சிறுபிள்ளைகளே, நீங்களும் விசுவாசியுங்கள். மேரியை மாதிரி நீங்களும் விசுவாசியுங்கள், தரித்திரருக்கு சுவிசேஷத்தை பிரசங்கிக்கும் படிக்கும், இருதயம் நருங்குண்டவர்களை குணமாக்கவும், சிறைபட்டவர்களுக்கு விடுதலையையும் குருடருக்குப் பார்வையையும் அளிக்கும்படி சுற்றித் திரிந்த கர்த்தராகிய இயேசு கிறிஸ்து இப்போதும் நம் மத்தியில் உலாவுகிறார். அதுவும் அவருடைய ஊழியர்கள் மூலம் தம்முடைய வல்லமையை வெளிப்படுத்தும் படியாக உலாவுகிறார்.

நீங்களும் மேரியைப் போலவே இயேசுவின் மீதும் அவருடைய ஊழியர்கள் மீதும் விசுவாசமுள்ளவர்களாயிருந்து தேவ பக்தியில் வளருங்கள்.

---

"இயேசு கிறிஸ்து நேற்றும், இன்றும் என்றும் மாறாதவராயிருக்கிறார்"

—எபி 13 : 8

---

மாதர் பகுதி

# குடும்பம்

வீடு என்றால் மனிதனுக்கு மிக மகிழ்ச்சி. வெளியே அலைந்து களைத்து அல்லது வேலை செய்து, பிரயாணம் செய்து வரும் மனிதன் எப்பொழுது வீடு போய்ச் சேரலாம் என்ற ஒரே ஆசையாய்த் தீவிரமாய் வருவான். வீட்டிலேதான் இளைப்பாறுதல், சுகம், பாதுகாப்பு அமைதி கிடைக்கும். வீடானது நமது நித்திய வீட்டிற்கு முன்னடையாளமாகும். ஒரு நல்ல குடும்பம் (வீடு) பரலோகத்திற்குச் சமம். நமது கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை ஏற்றுக் கொண்டு உபசரித்த அருமையான குடும்பங்கள், வீடுகள் பல உண்டு. பேதுருவின் மாமிவீடு (மத். 8 : 14, 15); மார்த்தாள், மரியாள், லாசருவின் வீடு (லூக் 10 : 38-42; யோவா 11 : 1, 2); சகேயுவின் வீடு (லூக் 19 : 5, 6) முதலியன. விருந்தோம்பலும் வீட்டிலேதான் நடை பெறும். மனிதனுக்குத் தேவன் கொடுத்த இயற்கைத் தூண்டுதலினாலே தான் குடும்பம் அமைகிறது. தேவன் மனிதனை ஆணும், பெண்ணுமாக சிருஷ்டித்தார். பலுகிப் பெருகி பூமியை ஆண்டு கொள்ளும்படி கொடுத்த கட்டளையும் ஜீவனுள்ள வாக்கும் அன்று தொடங்கி நிறைவேறி வருகிறது (ஆதி 1 : 27, 28). மனிதனுக்கு சில பசித்தூண்டுதல்கள் உண்டு. அந்தத் தூண்டுதல்களைக் கட்டுப் படுத்தி அவற்றிற்கு நியாயமான போக்கை உண்டு பண்ணி வர வேண்டும். அல்லவென்றால், கட்டவிழ்த்து விட்டு விட்டால் அவை நம்மை அவற்றிற்கு பரிபூரண அடிமைகளாக்கி நம்மை அழித்து விடும்.

வயிற்றுப் பசி: உணவு வேண்டும் என்று தெரிவிக்கும் நிலையே பசியுணர்வு. பசித்து புசித்தால் உணவு நன்றாய் செரிமானமாகி உடலுக்கு சக்தியையும், சத்துக்களையும் அளிக்கும். கண்டதையெல்லாம் கண்ட கண்ட நேரத்தில் தின்று வயிற்றை நிரப்பிக் கொண்டிருந்தால் வயிறு கெடுகிறது. 'பசித்துப்புசி' 'அளவோடு புசி' என்பது முதியோர்களின் வாக்கு. அப்படியில்லை என்றால் வயிறு கெடுகிறது வயிறு கெட்டால் உடலும் கெட்டு பழுதுபட்டுப் போகிறது.

இந்த வயிற்றுப் பசியைப் போலவே உடல்பசியும் ஆனால் வயிற்றுப்பசியைப் போல் உடற்பசி தொடர்ந்து நின்று வாதிப்பதில்லை. இந்த வேட்கையே குடும்ப உறவின் நெருக்கத்திற்கும் நிலைபேற்றிற்கும் அடிப்படையாக இருந்து உதவுகிறது. விவாகத்தினுடைய முக்கிய நோக்கம் துணையின் தேவையைப் பூர்த்தி செய்யவும் பிற்கால வாழ்க்கையின் பாதுகாப்புக்காகவுமாகும். இதே சமயம் உடற்தேவையை பூர்த்திசெய்யவும் விவாகமே தேவனுடைய அனுமதி. பிறந்த குழந்தையைப் பேணுகின்ற கடமைக்கும் பாசத்திற்கும் இதுதான் மூலகாரணமாக இருக்கின்றது. இது அளவோடு இருந்தால் இன்பமும், குடும்ப

சுபிட்சமும் உண்டாகும். அளவு கடந்து போனால் வினையும் தீமைகளும், நோய்களும் அதிகம். விவாகமின்றி பசியை தீர்க்க முற்படுகிறவர்களையும் விவாக வாழ்க்கைக்கு துரோகம் செய்கிறவர்களையும் (விவாக கட்டுப்பாட்டிற்கு வெளியே திருப்தியடைய முற்படுகிறவர்கள்) தேவன் நியாயம் விசாரித்து நரகத்திலே போடுவார் (எபி 13 : 4; 1 கொரி 6 : 9, 10; வெளி 21:8) விவாகமஞ்சம் பரிசுத்தமாயிருக்கட்டும்.

(தொடரும்)

---

"...தேவன் தாம் உண்டாக்கின எல்லாவற்றையும் பார்த்தார், அது மிகவும் நன்றாயிருந்தது .." ஆதி 1 : 31

---

## சாட்சி

"நானே தேவன் என்பதற்கு நீங்கள் எனக்கு சாட்சிகள்" என்று சொன்ன தேவன் என்னையும் சாட்சியாக ஏற்படுத்திய கிருபைக்காக முதலாவது ஸ்தோத்தரிக்கிறேன். எனது இயற்பெயர் இராஜேந்திரன். இரட்சிக்கப்பட்ட பின் எலியா என்பது. நான் ஒரு இந்து குடும்பத்தில் பிறந்தவன். அது இந்து மார்க்கத்தில் பக்தியுள்ள சன்மார்க்க குடும்பமாகையால் எனது இளம்பிராயம் முதல் இந்து மதத்தில் பக்தியாய் இருக்கும் வண்ணம் வளர்க்கப்பட்டேன். நான் என் பெற்றோருக்கு மிகவும் செல்லப் பையனாகையால் நான் விரும்பின - கேட்ட, தேவைப்பட்ட பொருட்களை எனக்கு வாங்கித் தந்து மிகுந்த அன்போடு வளர்த்தனர். எனக்கு நிரம்ப நண்பர்களும் இருந்தபடியால் என் உலக வாழ்வில் கவலை, துன்பம் ஏதும் இன்றி பூரண சந்தோஷமாய் வளர்ந்தேன்.

ஆனாலும் என் வாழ்வில் - இருதயத்தில் (மனதில்) ஏதோ வெறுமை, சமாதானமின்மை பெலவீனத்தை உணர்ந்தேன். எனவே இது ஆத்மீக குறைவாதலால் இறைவனே இதை சரி செய்து ஆசீர்வாதத்தால் நிறைக்க வேண்டும் என்று அறிந்து இந்து வழிபாட்டில் தீவிரமானேன். இந்து சமயத்தின் உபதேசங்களை அதிகமாய் அறிந்து, ஆழமாய் இறைவனைத் தேடினேன். ஆனால் ஆண்டுகள் கடந்தும், இன்னும் அந்த வெறுமை நீங்காதிருந்தது. கடவுளைத் தேடின எனக்கு இந்துக் கடவுள்களின் வாழ்க்கை வரலாறுகள் அருவருப்பையும் அவ நம்பிக்கையையும் தந்தன. நான் எவ்வளவாய் அவற்றை நம்பி தேடினேனோ அவ்வளவாய் எனக்குள் காமம், அசுத்தம், இச்சை, சீர்கேடுகள், பொறாமை, வெறிகள், சுயபுணர்ச்சி, பெண்களுடன் தவறான தொடர்புகள், புகை பிடித்தல் போன்ற பாவங்கள் பெருகி என்னை ஆண்டன. என் ஆபத்துக் காலத்தில் அவை எனக்கு உதவவில்லை; ஆலோசனைகளைத் தேடும் போது தரவில்லை; பரிசுத்தமாக்கவில்லை. சங் 135 : 15 - 18 - ல் அறிவது போலவே குருட்டாட்டமாய் நடந்த எனக்கு, கடவுளைத் தேடின ஐந்தாண்டுப் பிரயாசங்கள் வெறுமையைத் தந்து பாவத்தைப் பெருக்கி வேதனையை முடிவாகக் காண்பித்தன.

இந்நிலையில் தான் 'பக்தியுள்ளவனை தேவன் தமக்காகத் தெரிந்து கொண்டார்' என்ற வேத வாக்கியப்படியே தேவன் என்னைத் தொட்டார். 'நான் பிறப்பில் இந்துவாய் இருப்பதால் தொடர்ந்து மூடத்தனமாய் இருக்க அவசியமில்லை; எனக்குள்ள சுயாதீன சித்தப்படி நானே மெய்யான இறைவனைத் தேடி எனக்கு ஆசீர்வாதத்தைத் தேடிக் கொள்ள வேண்டும்' என்ற உறுதியான தீர்மானம் கொண்டவனாய் முதலாவது கிறிஸ்தவத்தில் இயேசு கிறிஸ்துவை தேடும்படி தீர்மானித்தேன். எனக்கு இயேசு கிறிஸ்துவை அறிவிப்பார் இல்லாததால் (R C., C.S.I. போன்றவற்றில் தெய்வீக பிரசன்னம் இல்லாததை அறிந்து கொண்டபின்) தினமும் முழங்காலில், தனியே என் அறையில் நின்று "இயேசு கிறிஸ்துவே! நீரே இறைவனானால் நீர் எனக்கு அதைத் தெரியப்படுத்தி என்னை ஆசீர்வதிக்க வேண்டும்" என்று விண்ணப்பித்தேன். தேவன் என்னை சந்தித்தார்.

இயேசு கிறிஸ்துவின் அன்பு என்மேல் வந்தபடியால் – ஆனால் நான் இன்னும் பரிசுத்தவானாய் காணப்படாததால் - என் ஆத்மா வெறுமையில் பாதி நீங்கி என் உள்ளத்தில் இனம் புரியாத, புதிய நம்பிக்கையையும், பெலனையும் உண்டாக்கின, சந்தோஷம் பிறந்தது. புதிய தீர்மானங்களும், திருப்பங்களும் என் வாழ்வில் உண்டாயின. நான் விசுவாசமுள்ளவனானேன்.

இச்சமயத்தில் B.E. படிப்பில் சேர்ந்து சேலம் பொறியியற் கல்லூரியில் படிக்க ஆரம்பித்தேன். தேவனை அறிய - ஆராதிக்க எந்த சபைக்கு செல்வது என்றிருந்த போது 'புதிய எருசலேம் சபை' விசுவாசியான ஒரு சகோதரனின் பரிசுத்த நடக்கையால் கவரப்பட்டு அவருடன் இணைந்து தேவ பிரசன்னமும், பரிசுத்தமும் கூடிய 'புதிய எருசலேம் சபை'யில் தேவனை ஆராதிக்க ஆரம்பித்தேன். தேவன் என்னைப் பரிசுத்த ஆவியினால் அபிஷேகித்தும், ஞானஸ்நானத்தினால் உண்டாகும் புதிதாக்குதலினாலும் இரட்சித்தார். வேதம் வெளிப்படுகிற 'புதிய எருசலேம் சபையின்' மூலம் இயேசு கிறிஸ்துவை, அவரின் பரிசுத்தத்தை, அவர் செய்து முடித்த இரட்சிப்பின் கிரியையை அறிந்து கொண்டேன். இஸ்லாமிய மதக் கொள்கைகள் மாம்ச பிரகாரமான பிரமாணத்தின் மேல் எழும்பின பெலவீன மதம் என்பதையும் அறிந்த நான் இயேசுகிறிஸ்து ஒருவரே மெய்யான இறைவன் என்பதை திட்டமாய் தெரிந்து கொண்டேன். அவரே இறைவன் என்பதை எனக்கு பல அதிசய கிரியைகளை என் வாழ்வில் நடப்பித்து விளங்கப் பண்ணினார். இப்போது என்னுடைய ஆத்துமாவில் பூரணமாய் வெறுமை நீக்கப்பட்டது. ஜீவனுள்ள நம்பிக்கை உண்டாயிருந்து பெருகிறது. இத்தனை ஆசீர்வாதங்களுக்கும் காரணம் தேவனால் ஒப்புவிக்கப்பட்ட பாவமன்னிப்பு உபதேசத்தை, அவர் ஒப்புவித்த வண்ணமே, அவரால் அதிகாரப்படுத்தப்பட்ட தேவ ஊழியர்களுக்கு முன்னிலையில், அவரே கட்டியெழுப்பி கிரியை செய்துவருகிற 'புதிய எருசலேம் சபை'யில் கைக் கொள்வதே. பாவங்களை அறிக்கை செய்வதால் பரிசுத்தமும், சமாதானம் உண்டாவதையும், அவற்றை மூடி மறைப்பதால் தேவ பிரசன்னத்தை இழந்து ஆத்துமாவில் வல்லமை, பெலன்குன்றி, அதற்கு அடிமையாவதையும் என் அனுபவத்தில் திட்டமாய் உணர்ந்த நான், என்னுடைய எல்லாப் பாவங்களையும் தேவனிடத்தில் அதிகாரம் பெற்ற ஊழியர்களுக்கு முன்பாக அறிக்கையிட்டேன். தேவன் என்னைப் பரிசுத்தமாக்கினார். அவர் அன்பு என்னில் பெருகிறது. அவர், தகப்பன் தன் பிள்ளையை நடத்துவது போல நடத்துகிறார்; ஆலோசனை தருகிறார்; தேற்றுகிறார்; தாங்குகிறார். அவருக்கே துதியும் கனமும் மகிமையுமுண்டாவதாக.

இவ்விதமாய் முழு இருதயத்தோடும் போராடி மெய்த் தேவனாகிய இயேசுவை அறிந்து இரட்சிக்கப்பட்டு அவரின் 'புதிய எருசலேம் சபை'க்கு சாட்சியாய் இருக்கிறேன். கர்த்தர் எனக்குப் பாராட்டின கிருபை பெரியது. அவர் என் ஆத்துமாவை தாழ்ந்த பாதாளத்திற்குத் தப்புவித்தார். அல்லேலூயா!

Bro. S. Rajendran (Elijah)
Pondicherry.

## HE IS A PROPHET AND HE SHALL PRAY FOR YOU AND YOU SHALL LIVE (Contd...)

The servants of God are in one side and the people are in the other side. There shall no answer if the people pray against the servants of God, but God will listen to the prayers of the ministers. Though the people are of God, they may turn back or deny. They shall not have zeal for God. But the servants of God, having zeal for God, will struggle for God, and die, even in the midst of opposition, trails, sorrow and loss. They are in the side of God, not in the peoples,

side. Hence the people must be in union with the ministers, the ministers should be in union with the apostles, the apostles should be in union with the chief apostle, the chief apostle should be in union with Jesus Christ and Jesus Christ should be in union with God the Father. This is Golden Rule. Thus God has revealed. Praise God for his ordinances which he has mentioned in the scriptures and against this the men of Korah may rise up and say, "You take too much upon you, seeing all the congregation is holy and the Lord is among them. wherefore, then, lift ye up yourselves above the congregation of the Lord? (Num 16:1-3). the haughty Miriam and Aaron may come up and say, "Has the Lord indeed spoken only by Moses? Has he not spoken also by us?, but we declare what the Lord has revealed and declared unto us. The service of New Jerusalem is to reveal the hidden teachings and stabilise the fallen church once again. Praise to the Holy name of God.

## Confess Your Sins

He that covers his sins shall not prosper, but whoso confesses and forsakes them shall have mercy—Prov. 28:13.

In general man is of hypocrisy and truthless. The scripture says, there is no righteous man. Not only committing sin in transgressing the commandment of God, man has become an expert to cover the sin and act. Hence the sin of man is doubled here. The root of sin is lie and there is no sin which is not connected with lie. The scripture points out about satan as, "when he speaks a lie, he speaks of his own; for he is a liar, and the father of it". Many religions have been established with the foundation of lie. It will be manifested through search. Most of the religions do not take any effort to perfect the conduct of the people, but they appriciate those who help for the religious activities, saying whatever may be the life, piousness is sufficient.

Christianity is entirely different from this. Jehovah (Jesus Christ), the God of christians rebuked his beloved David who was a king, through his prophet, when he "coveted his neighbour's wife saying. "You are that man". Immediatly the king humbled himself and confessed his sin to the prophet saying. "I have sinned against the Lord" (II Sam. 12:7,13). After that David never did such type of sin. Here is the highness of christianity. He who conceals his sins will not prosper, but he who confesses and forsakes shall have mercy. There is a saying which define, Man means the one who commits error. God never does mistakes. Satan does nothing, except mistakes. Calvary is brought before this type of man. The man who understands that God shed his blood and died in the cross of calvary for him and for his sins and the cause of his death is his sins, repents for his sins, praying that he will not sin again and accept Jesus as his personal saviour. Then he confesses his sins to the servant of God and takes immersion baptism, surrendering himself fully. His sins are forgiven.

Repent and be baptized everyone of you, for the remission of sins—Acts 2:38. Why tarriest thou? Arise and be baptized and wash away thy sins, calling on the name of the Lord—Acts 22:16. He that believeth and is baptized shall be saved — Mk. 16:16. The publicans and harlots enters into the kingdom of God, believing John the baptist and being baptized of him

(Lk. 7:29-35). Then went out to him Jerusalem, and all Judea, and all the region round about the Jordan and were baptized by him in Jordan, confessing their sins— Mt 3:5,6. Only when people receive baptism, they become christians, in the new testament. For as many as of you have been baptized into christ have put on christ (Gal 3:27).

Even after becoming christians like this, there are chances for the believers to err, fail in duty or some may go back. In such occassions they must confess their sins either in midst of the congregation or to a true and authorised servant of God, with repentance. They should not hide. He that covers his sin shall not prosper, but whose confesses and forsakes them shall have mercy. If we confess our sins, he is faithful and just to forgive us our sins, and to cleanse us from unrighteousness (I Jn 1:9)

We should not hide our sins. To whom we hide? Can we hide anything to God. Neither is there any creature that not manifest in his sight, but all things are naked and opened unto the eyes of him (Heb 4:13). God asks, "Can anybody cover himself, that I may not see him". Man hides and lies only to man, not to God. Where he hides, there he should confess. "Many that believed came and confessed and showed their deeds" (Acts 19:18). "My son, I pray thee, make confession unto him, and tell me now what thou hast done" (Jos 7:19). Hiding thus is nothing but telling a lie to the servant of God For example: Ananias and Sapphira (Act 5:1-10). Confessing the sins to servant of God is nothing but confessing to God. Some say that they confess directly to God. Where God is dwelling? For where two or three are gathered together in my name, there, am I in the midst of them (Mt. 18:20). There only sins should be confessed. The ancient church members did so. Many that believed came and confessed and showed their deeds. (Acts 19:18). If a believer falls in sickness, let him call for the elders of the church and let him confess his sins and let them pray over him, anointing him with oil and the Lord shall raise him up. The prayer of faith shall save the sick. If he has committed sins, they shall be forgiven him. The effectual fervent prayer of a righteous man avails much (James 5:14-16). The prayer of the believer who has committed sin has no effect, for we know that God hears not the sinners (Jn 9:31).

The benefits of confessing sin to the servant of God :

1. The person humbles himself, accepting him as a sinner.
2. He confesses and show his sins according to the word of God.
3. He gets the chance of receiving intercession of the saints, for they pray for him.
4. He obtains the remission of sin and hence the comfort.
5. He gets a specific commandment not to sin and takes a new decision.
6. He gets the good counsel of God to overcome the sins, which he was not able to forsake.
7. He fears to commit sin again, because he has confess in the midst of the congregation or to the servant of God. Such a godly fear possesses him.

Praying to God for the remission of sin and seeking for prayer, after making confession are essential in Christian life. Every believer should confess his sins to a servant of God, who is faithful to him and get the counsel. If that minister is gone to a foraway place, he can confess to another

minister. He should not confess to different, different ministers. Such believers would not have kept the counsel of the minister to whom he has confessed priviously. They will not grow. The ministers also can not bring them up to perfection. By this doctrine the ministers are able to know the state of the sheep (Prov 27:23). This is a superior godly doctrine.

A believer not have fear to confess his sins to a minister. He need not doubt that the minister may tell it out. This is a sealed doctrine. When a minister hears the confession of sin, it directly goes to heaven, after that it may not come to remembrance. It will not be revealed under any pressure. There is no need to think, what the minister will think about me. The minister is also a weak person, and hence he will not think low. The priest can have compassion on the ignorant, and on them that are out of the way, for he himself also is compassed with infirmity (Heb 5:2). As long as a man confesses sins and faults any number of times without covering, the church counts him as a saint, because he takes effort to leave the sins, accepting his sins.

If a believer doesn't repent and confess even after committing sin the church counts him as a sinner, because he covers his sin. He desires to live in sin. The communion between him and the church gets affected. Offense will arise by him. The church will watch him with doubtful eyes.

When a person confess his sins openly and obtains forgiveness, he is able to set right the things, by which reconciliation takes place. When a person commits sin, the fellowship with God gets affected and he grieves the Church also. He developes difference of opinion with the servant of God (whomsoever concerned). Now that believer is in darkness. When he reconciles, confessing his sins, he walks in the light. The fellowship with God is perfected, and the church is comforted. The communion with the church is rectified. He and the respective believer walk in the light. If we walk in the light as he is in the light, we have fellowship one with another, and the blood of Jesus Christ, his son cleans us from all sin (Jn 1 : 7).

Not only confessing the sin, but also one must take a strong decision to give up that. A strong decision will not give way for repentance later, but it will make a change (II cor 7 : 9-11) Through confession of sins sanctification comes. He that is washed needs not except to wash his feet (Jn 13 : 10). The sins are forgiven to him, who confess like this and takes part in Lord's supper without break. He is sanctified and ready for the Lord's coming. Purgeout, therefore, the old leaven, that you may be a new lump, as you are unleavend. For even christ, our passover is sacrificed for us. Therefore let us keep the feast, not with old leaven, neither with the leaven of malice and wickedness, but with the unleavend bread of sincerity and truth (I cor 5 : 7, 8).

Everyman that has this hope in him purifies himself even as he is pure (I Jn 3 : 3). This doctrine is not meant for those who trust themselves as saints and righteous men. This form of doctrine is given for those who say that they are sinners and their sins are before their eyes, and follow them and there is no real peace in them and not able to be delivered from this. God be thanked that where as you were the servants of sin, you have obeyed from the heart that form of doctrine which was delivered to you. Being then made free from sin, you became the servants of righteousness (Rom 6 : 17, 18). The law of the spirit of life in Christ Jesus has made me free from the law of sin and death (Rom 8 : 2).

Hallelujah! Confess your sins. Forsake sins. Be blessed of God.

# புதிய எருசலேம் செய்தி

# PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் - 20 ★ AUGUST 1985




"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ, நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள்.... விழித்திருங்கள்... உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லோருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்..."

மாற்கு 13 : 35-37

**EDITOR: CHIEF PASTOR N. LAZAR**

BOMBAY, INDIA

## பத்திரிகையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லோரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒருமைப்பட்டு கிறிஸ்துவுக்கேற்பான பூரண வளர்ச்சியடையும்படியாகவும் தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய்க் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும்; சபையானது வஞ்சக போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும்படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது. (எபே.4:11-16)

## இதழின் உள்ளே



"புதிய எருசலேம் செய்தி"க் கென்று (Printing Press) அச்சகம் அமைக்க இடம் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. அதற்காக கர்த்தரை துதிக்கும்படி வேண்டுகிறோம். அந்த இடத்தில் அச்சகம் சீக்கிரம் அமைக்கப்பட யாவரும் ஜெபிக்கும்படியாக வேண்டுகிறோம்."

# ஆசிரியர் உரை

ஆதி சபை வீழ்ச்சியினால் ரோமன் கத்தோலிக்க சபையும், பிராட்டஸ்டன்ட் சபைகளும், குழுக்களும் தோன்றின. சபையின் அஸ்திபாரமோ காணப்படாமற்போயிற்று. ஒவ்வொரு சபையும் வேறுவேறு விசுவாச உபதேசங்களையுடையவைகளாயிருக்கின்றன. ஒவ்வொரு சபையும், அல்லது பிரிவுகளும் யாதாமொரு தனிமனிதனின் அல்லது குழுவின் வேதவிளக்கங்களை பாரம்பரியமாகப் பின்பற்றி வருகின்றன. காலத்துக்கு காலம் தங்கள் விசுவாசக் கொள்கைகளையும், நடைமுறைகளையும் மாற்றி வருகின்றனர். ஆதி சபையின் மாதிரியோ ஒருவருக்கும் பூரணமாய் தெரியாமற்போயிற்று. பரிசுத்த ஆவியின் ஆளுகையை இழந்த சபை மறுபடியும் இந்தக் கடைசி காலத்தில் பூரணமாய் தேவ ஆவியினால் நிரப்பப்படவும், அப்போஸ்தல உபதேசத்தைப் பெற்றுக் கொள்ளவும் வேண்டியதாயிருக்கிறது. இப்பொழுது முக்கியம் அப்போஸ்தல உபதேசமே. அப்போஸ்தலருடைய ஐக்கியம் அவர்களுடைய ஆளுகை இல்லாமல் சபையானது பூரணப்படமுடியாது. "நான் அனுப்புகிறவனை ஏற்றுக் கொள்ளுகிறவன் என்னை ஏற்றுக் கொள்ளுகிறான், என்னை ஏற்றுக் கொள்ளுகிறவன் என்னை அனுப்பினவரை ஏற்றுக் கொள்கிறான் என்று மெய்யாகவே மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்" (யோ 13 : 20) என்று இயேசு சொன்னதையும் "பரலோகத்திலிருந்து ஒருவனுக்கு கொடுக்கப்பட்டாலொழிய அவன் ஒன்றையும் பெற்றுக் கொள்ள மாட்டான்" (யோவா 3 : 27) என்று ஸ்நானக யோவான் சொன்னதையும் நாம் நினைவு கூற வேண்டும். அப்போஸ்தலர்களும், மெய்யான சபையும் இந்த கடைசிக் காலத்தில் மிகவும் தேவை. சபைகளும், சங்கங்களும், சொஸைடிகளும், குழுக்களும் தங்களை இரட்சிப்பின் குழுக்கள் என்று எண்ணிக்கொண்டிருக்கிறார்கள். பூரணமான சபையின்றேல் பூரண இரட்சிப்புமில்லை. சபை அப்போஸ்தலனால் எழுப்பப்பட்டிருக்க வேண்டும். கொள்கை விளக்கம் கொடுப்பவர் அப்போஸ்தலனா? இல்லையென்றால் தள்ளிப் போடலாம். அப்போஸ்தலரல்லாதவர்களுடைய கொள்கைகளும், விளக்கங்களும், அடிப்படைகளும் மாறும். பெயர் பலகை மாறுவதுபோல் எல்லாம் மாறும். முந்தியது சரியா பிந்தியது சரியா என்பதை இவர்களே உறுதிப்படுத்த முடியாது. ஆனபடியால் தேவனுடைய மக்கள்மெய்யான சபையைத் தேடுங்கள், அதை பற்றிக்கொள்ளுங்கள். சபையே எல்லாவற்றிற்கும் முடிவு.

கிறிஸ்துவுக்குள்,

N. Lazar

Chief Pastor N. Lazar

# எச்சரிக்கை

மலைகளில் வாகனங்கள் ஓட்டுபவர்களுக்கு ஆங்காங்கு வளைவுகளில் எச்சரிக்கை என்று எழுதப்பட்ட கைகாட்டிகள் சிகப்பு எழுத்துக்களில் காணப்படும். அதைக் கவனித்து மெதுவாக, ஜாக்கிரதையாக வாகனங்களை ஓட்டிச் செல்வார்கள். ஒருவன் நான் அதைக் கவனிக்க மாட்டேன் என்று வேகமாகச் சென்றால் அவனுடைய வாகனம் நிலைகுலைந்து தலை கீழாய் விழுந்து நொறுங்கி அவனும் மரிக்க வேண்டியதுதான். அவ்விதமே ஆவிக்குரிய வாழ்க்கையிலும் சில எச்சரிப்புகள்.

1. சகோதரரே, ஜீவனுள்ள தேவனை விட்டு விலகுவதற்கேதுவான அவிசுவாசமுள்ள பொல்லாத இருதயம் உங்களில் ஒருவனுக்குள்ளும் இராதபடிக்கு நீங்கள் எச்சரிக்கையாயிருங்கள்—எபி3:12. கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசித்து இரட்சிப்பின் மார்க்கத்துக்குள் வந்தவர்கள் மரணத்தை விட்டு நீங்கி ஜீவனுக்குட்பட்டிருக்கிறார்கள். ஜீவ மார்க்கத்தில் இருக்கிறார்கள். இதன் முடிவு நித்திய ஜீவன், நீடித்த பெருவாழ்வாகும். இவ்வித ஜீவ மார்க்கத்திலிருக்கிறவர்கள் மறுதலித்து தேவனை விட்டு ஜீவமார்க்கத்தை, வழியை விட்டு பின்விலகவோ, பின் மாறவோ செய்வார்களானால் மரண பாதையில் பிரவேசிக்கிறார்கள். கேட்டின் வழியான விசாலமான வழியைத் தெரிந்து கொண்டு பிரயாணப்பட ஆரம்பிக்கிறார்கள். அதனுடைய முடிவு அக்கினியும், கந்தகமும் எரிகிற நரகமாகும். ஆகையால் உன்னிலுள்ள வெளிச்சம் இருளாகாதபடிக்கு எச்சரிக்கையாயிரு—லூக் 11:35; நிலைத்திரு— யோ 15:3.

2. ஒருவனும் வேசிக்கள்ளனாகவும், ஒரு வேளைப் போஜனத்துக்காக தன் சேஷ்டபுத்திரபாகத்தை விற்றுப்போட்ட ஏசாவைப் போல சீர்கெட்டவனாகவும் இராதபடிக்கும் எச்சரிக்கையாயிருங்கள்-எபி 12:16.

இப்போ அநுபவிப்போம் பின்பு மன்னிப்பு கேட்டு—ஆசீர்வாதம் பெற்றுக் கொள்ளலாம் என்ற அசட்டையான வாழ்க்கை, தெளிவில்லாத வாழ்க்கை, இச்சையடக்கமில்லாத வாழ்க்கை சபிக்கப்பட்டதாகும். பின்பு ஆசீர்வாதத்தை தேடியும் கிடைக்காது. ஏனென்றால் பிற்பாடு அவன் ஆசீர்வாதத்தைச் சுதந்தரித்துக்கொள்ள விரும்பியும் ஆகாதவனென்று தள்ளப்பட்டதை அறிவீர்கள். அவன் கண்ணீர் விட்டு கவலையோடு தேடியும் மனம்மாறுதலைக் காணாமற்போனான்—எபி 12:17. ஆம் "அப்படிப்பட்டவன் இந்த ஆணையுறுதியின் வார்த்தைகளைக் கேட்டும், தாகத்தினிமித்தம் வெறிக்கக் குடித்து மனஇஷ்டபடி நடந்தாலும் எனக்கு சுகமுண்டாயிருக்கும் என்று தன் உள்ளத்தைத் தேற்றிக்கொண்டால் கர்த்தர் அவனுக்கு மன்னிக்கச் சித்தமாயிரார்" (உபா 29:19—21).

3. "பொருளாசையைக்குறித்து எச்சரிக்கையாயிருங்கள்..."-லூக் 12:15. ஆஸ்தி ஒருவனுக்கு ஜீவனல்ல. நாம் ஆகாரத்தை தான் புசிக்க முடியும், பணத்தையல்ல. ஆனபடியால் தேவாசீர்வாதமே முக்கியம். பணம் எல்லாவற்றிற்கும் உதவும்(பிர 10:19). ஆனால் பண ஆசை கூடாது. பொருளாசையுள்ளவர்கள் குறுக்கு வழியில் பணம் சம்பாதிக்க எண்ணுவர். கர்த்தருடைய தசம பாகம் காணிக்கைகளை திருடுவர். தேவனுடையதை தேவனுக்குச் செலுத்த விரும்ப மாட்டார்கள். ஏழை எளியவர்களுக்கு இரக்கம் காட்டமாட்டார்கள். வட்டிக்கு கொடுத்து பணம் சேர்க்க நினைப்பர். சதா பணத்தைக் குறித்தே சொத்தைக் குறித்தே கவலையாயிருப்பர். பொருளாசை ஒரு எஜமானாகும் (மத் 6 : 24). அவர்கள் உண்மை மனதோடு தேவனைச் சேவிக்க மாட்டார்கள், முடியாது. கூலியைப் பிடிப்பார்கள்; பிறரை வஞ்சிப்பார்கள். பொருளாசையுடையவர்களை சபையை விட்டு விலக்கச் சொல்லுகிறது வேதம் (I கொரி 5: 11—13). பண ஆசை எல்லாத்தீமைக்கும் வேராயிருக்கிறது சிலர் அதை இச்சித்து விசுவாசத்தை விட்டு வழுவி, அநேக வேதனைகளாலே தங்களை உருவகுத்திக் கொண்டிருக்கிறார்கள் (I தீமோ 6:10). போதுமென்ற மனமே பொன் செய்யும் மருந்து. கர்த்தர்

போதுமானவராயிருக்கிறார் (உங்கள் தேவைகளை நிறைவு செய்ய). ஆதலால் பொருளாசையை, ஐசுவரியவான்களாக வேண்டும் என்கிற ஆசையை விட்டு விடுங்கள். இல்லாத பொருள் மேல் ஆசை கொள்ளாதிருங்கள். கடினமாக உழையுங்கள். இருக்கிறதில் திருப்தியாயிருங்கள்.

4. கள்ளத் தீர்க்கதரிசிகளுக்கு எச்சரிக்கையாயிருங்கள்—மத் 7:15.

தேவனுடைய சித்தத்துக்குமாறுய் மனுஷருக்குப் பிரியமாய் ஊழியஞ் செய்கிறவர்கள், பாவத்தைக் குறித்து எச்சரிக்காதவர்கள், தேவனுடைய வேதத்தைப் புரட்டி அது அந்த காலம் இந்த காலத்தில் எப்படியும் நடக்கலாம் இப்படியும் நடக்கலாம் என்பவர்கள், தாங்களே இரட்சிக்கப்படாதிருந்தும் இரட்சிப்பைக் குறித்து பிரசங்கிக்கிற சங்கப்பிரசங்கிகள், வாயாடிகள், தந்திரமான வஞ்சனையான வார்த்தைகளாலும், காமவிகாரத்தினாலும் மாம்சத்துக் கேதுவாகவும், ஊழியம் செய்கிறவர்கள், கக்கினதையே தின்னும் நாய்களை, அற்புத அடையாளங்களை முக்கியப் படுத்தி இரட்சிப்பையும், பரிசுத்த ஜீவியத்தையும் விட்டு விட்டவர்களை கள்ளத்தீர்க்கதரிசிகள் என்று வேதம் எச்சரித்துள்ளது. இவர்களுக்கு எச்சரிக்கையாயிருந்து இவர்களை விட்டு விலகு என கர்த்தர் சொல்லுகிறார் (மத் 7:15-23).

5 கண்ட கண்ட இடமெல்லாம் உன் சர்வாங்க தகனபலிகளை இடாதபடிக்கு எச்சரிக்கையாயிரு-உபா 12:13.

உன் தேவனாகிய கர்த்தர் தம்முடைய நாமம் விளங்கும்படி தெரிந்து கொள்ளும் ஓர் இடம் உண்டாயிருக்கும். அங்கேதான் பலியிடு. ஆராதனை செய், காணிக்கைகளைச் செலுத்து. எல்லாம் தேவன் வாசம் செய்யும் இடமுமல்ல. எல்லாம் உண்மையான ஆராதனையுமல்ல. கர்த்தர் பிரசன்னமாகும் இடமே, கர்த்தர் வெளிப்படுத்திய இடமே, கர்த்தரால் தெரிந்து கொள்ளப்பட்ட மக்கள் கூடும் இடமே, ஆராதனையே சரியான தொழுகையிடமாகும். கர்த்தர் தெரிந்து கொண்ட இடம் எருசலேம். மாறுபாடான சந்ததியை விட்டு விலகு. அப்போஸ் தலரோடு சேர்ந்து ஆராதி (அப்பம்பிட்டு) சுத்த இருதயத்தோடு கர்த்தரைத் தொழுது கொள்ளுகிறவர்களுடனே சேர்ந்து நாடு (II தீமோ 2:22). உண்மையாய்த் தொழுது கொள்ளுகிறவர்கள் ஆவியோடும் [பரிசுத்த ஆவியோடும்] உண்மையோடும் [ஜீவத்தில் உண்மையாய் ஜீவித்து] தொழுது கொள்ள வேண்டும். கர்த்தர் ஆபேலையும் அவன் காணிக்கையையும் அங்கீகரித்தார்(ஆதி4:4). உனக்கும் ஒரு எருசலேம் வேண்டும். கண்டகண்ட இடமெல்லாம் உன் காணிக்கையை செலுத்தாதே. ஆபிரகாம் தனக்கு அப்பமும் திராட்சரசமும் கொடுத்தவருக்கே தன்னுடைய தசமபாகத்தைப் பிரித்துக் கொடுத்தார் (ஆதி 14 : 18-20). உபதேசிக்கப்படுகிறவன் தனக்கு உபதேசிக்கிறவனுக்கு சகல நன்மைகளிலும் பகிர்ந்து கொடுக்கக்கடவன் (கலா 6:6). அவருடைய ஆலயத்தில் [சபையில்] ஆகாரமுண்டாயிருக்கும்படி தசமபாகங்களையெல்லாம் கொண்டு வாருங்கள் என்கிறார் (மல் 3:8-10).

தசமபாகங்களை உன் இஷ்டபடி உனக்கு இஷ்டமானவர்களுக்கும், ஸ்தாபனங்களுக்கும், ஊழியங்களுக்கும் கொடுக்காதே. தசமபாகங்களை உன்னை நடத்துகிறவர்களுக்கு மேய்ப்பர்களுக்கு உன் சபைக்கு [நீ ஆராதிக்கும் ஆலயம்]கொடுத்து விட்டு மற்றவர்களுக்கு உன் சொந்த பணத்திலிருந்து வேனுமானல் எடுத்துக்கொடு. தசமபாகமெல்லாம் கர்த்தருடையது. கர்த்தருடையதை உன் இஷ்டப்படி கண்ட கண்ட இடத்தில் செலுத்தாதே அது அங்கீகரிக்கப படுவதில்லை. உன்...லேவியனைக் கைவிடாதபடிக்கு எச்சரிக்கையாயிரு-உபா12:19.

6. ஓய்வுநாளை பரிசுத்தமாக்க எச்சரிக்கையாயிரு—எரே 17:22.

விக்கிரக ஆராதனை பெருகிப்போன காலமாகும் இது. தேவ ஜனங்களுக்கு அடையாளம் கர்த்தருடைய நாளை ஆசரிப்பதாகும். ஆனல் இந்நாட்களில் சில நல்ல கிறிஸ்தவர்களும்கூட சபைகூடி வருதலை விட்டு விடுகிறார்கள் (எபி 10:25). மனதின் கபட ஆவிக்கும், வஞ்சிக்கிற ஆவிகளுக்கும் செவி கொடுத்து கோயிலில் போய் தொழுது கொண்டால்தான் கர்த்தர் இருக்கிறாரா?

கர்த்தர் வீட்டில் இல்லையோ வீட்டில் ஜெபம் பண்ணிக்கொள்கிறவர்களும், ரேடியோமுன் [ரேடியோ சிலை] ஆராதனை செய்யலாமே என்று சொல்லி ரேடியோவோடே சேர்ந்து பாடி ஆராதித்து ரேடியோவில கள்ள பிரசங்கிகள் நடத்தும் ஆராதனையில் பங்கெடுத்து நிம்மதியாயிருக்கிறார்கள். அந்த சிலை கர்த்தரைப்பற்றி மட்டுமல்ல கொஞ்ச நேரத்தில் முருகா என்றும் பாட ஆரம்பித்து விடுமே; அடுத்து காதல் களிரசமே என்று காதல்கீதமும் இழிவான இச்சையைத் தூண்டும் சினிமா பாடல்களும் வெளிவரும். நீ ரேடியோ முன் ரேடியோ ஆராதனை செய்யும்படி உன்னைத் தூண்டும் போலி மேய்ப்பர்களுக்கும், கள்ளத் தீர்க்கதரிசிகளுக்கும் எச்சரிக்கையாயிரு. "என்னை நினைவு கூரும்படி இதைச்செய்யுங்கள்" (I கொரி 11:23-26)என்று கூறிய கட்டளையை அப்பம்பிட்டு ஆராதிக்க கவனமாயிரு. அப்போஸ்தலருடைய உபதேசத்தைப் பெற்றுக்கொள். அவர்களுடைய ஐக்கியத்தில் அப்பம் பிட்குதலிலும் ஆராதனை செய்வதிலும் கவனமாயிரு (அப் 2:42). தேவ பக்தியை முயற்சி செய். தவறாமல் ஆராதனைகளில் விசேஷமாய் கர்த்தருடைய நாளில் [ஞாயிறு] அவர் சந்நிதானத்தில் தேவனுடைய சபைகூடி வரும் இடத்தில் வழக்கமாய் ஒழுங்காய் அவரை ஆராதி. பரிசுத்த நாளை பரிசுத்தமாக ஆசரி. பரிசுத்த நாளில் உன் சொந்த வேலையைச் செய்யாதே. உன் சொந்தப் பேச்சைப் பேசாதே ஏசா 58:13,14. உன் கடவுள் இயேசு நாதருக்கு கூட தேவ ஆலயம் போகும் ஒரு வழக்கமிருந்ததே (லூக் 4:16). உனக்கு தேவ சமூகம் போகும் வழக்கமுண்டா? கர்த்தருடைய நாளை பரிசுத்தமாக ஆசரிக்க எச்சரிக்கையாயிரு.

7. "அக்காலத்தை [மனுஷகுமாரன் வரும் காலத்தை] நீங்கள் அறியாத படியால் எச்சரிக்கையாயிருங்கள். விழித்திருந்து ஜெபம் பண்ணுங்கள்"—மாற்13:33.

பாவம், அந்தகார இருளை தூக்கத்தைக் குறிப்பிடுகிறது. பரிசுத்த வாழ்க்கை விழிப்பு நிலை வெளிச்சத்தை பகலைக் குறிப்பிடுகிறது. நாம் ஜெபம்பண்ணி விழித்திருக்க வேண்டும். கர்த்தருடைய நாள் சீக்கிரம் நிகழும். யாராவது வருஷம், மாதம், நாள் குறிப்பிட்டால் நம்பாதிருங்கள். இன்றே நம்முடைய மரணநாளாய் அல்லது கர்த்தருடைய வருகை நாளாயிருக்கலாம். அவர்களுக்கு சமாதானமும் சவுக்கியமும் உண்டாயிருக்கும்போதே கர்ப்பவதிக்கு வேதனை வருகிறது போல்—திடீரென்று கர்த்தருடைய வருகையிருக்கும். நீ எச்சரிக்கையாயிரு. ஆயத்தமாயிரு. எச்சரிக்கையைக் கவனித்து ஜாக்கிரதையாய் நட.

"இதோ கர்த்தர் வருகிறார்".

பேசுகிறவருக்கு செவி கொடுக்க மாட்டோமென்று விலகாதபடி எச்சரிக்கையாயிருங்கள்—எபி 12:25.

## வேத வாக்கியம்

கிறிஸ்தவர்களின வேதமாகிய சத்திய வேதாகம வாக்கியங்களுக்கு வேத வாக்கியம், அல்லது வேதம், வேத வாக்கியங்கள் என்று சொல்லப்படுகிறது. பரிசுத்த வேதாகமத்தை குறிக்கும் பல சொற்களில் வேதவாக்கியம் என்பதும் ஒன்று அப்படி இருந்தும் வேத வாக்கியம் என்ற சொல் புதிய ஏற்பாட்டில் தான் பார்க்கிறோம். ஆனால் பழைய, புதிய ஏற்பாட்டிலுள்ள எல்லா வாக்கியங்களைக் குறித்தும் வேதவாக்கியம் என்று நாம் அறிந்து கொள்ள முடிகிறது. அதுவும் பழைய ஏற்பாட்டு வாக்கியங்களைக் குறித்தே புதிய ஏற்பாட்டில் வேதவாக்கியம், வேதவாக்கியங்கள், வேதம் என்று குறிப்பிட்டுள்ளது. காண் : மத் 21 : 42 ; யோ 5 : 39 ; அப் 13 : 11 சில இடங்களில் தனிப்பட்ட ஒரு வேதவாக்கியத்தை மாத்திரம் குறிப்பிடுகிறது வேதவாக்கியம் என்று கூறுகிறது (மாற் 12 : 10, 11 ; யோ 10 : 34, 35). ஒரு

இடத்தில் பழைய ஏற்பாட்டையும், முழு வேதத்தையும் குறிப்பிட்டுள்ளது (II தீமோ 3 : 16, 17)

புதிய ஏற்பாட்டில் அப்போஸ்தலர் பேசின வார்த்தைகளும் அவர்களிடம் கேட்டு எழுதினவர்களுடைய எழுத்தும் வேதவாக்கியங்களாகும். காண் : அப் 11 : 13, 14 ; 13 : 16 - 26 ; கலா 1 : 8, 9 : I கொரி 3 : 9, 10 : II பேது 1 : 14 - 16 ; 3 : 1, 2 ; வெளி 1 : 1 - 3, 19. வேத வாக்கியங்களெல்லாம் தேவ ஆவியானவர் மொத்தமாய் வெளிப்படுத்தினார் என்றோ அல்லது அவ்வக் காலத்தில் வேதாகமத்தை எழுதினவர்களை எழுதுகோல் போல் ஆவியானவர் உபயோகித்தார் என்றோ அல்லது அவர்களுடைய எழுதுகோல்களை ஆவியானவர் பிடித்து எழுதினார் என்றோ அர்த்தமல்ல. எழுத்தாளர்கள் தங்கள் சொந்த விளக்கங்களையும் சிந்தனை சக்தியையும் கூட உபயோகித்தனர். அதனால் மனிதபெலவீனங்களும், குறைபாடுகளும் அவைகளில் உண்டு. இவைகளின் மத்தியில் தேவனுடைய சித்தமும், வழியும், நடைமுறையும் வேதாகமத்தில் நமக்கு பூரணமாக எழுதப்பட்டுள்ளது.

காலாகாலங்களில் கர்த்தருடைய வசனம் நமக்கு அவைகளை வெளிப்படுத்தி வியாக்கியானம் செய்து வருகிறது. வேதாகமத்தில் உள்ள எந்த தீர்க்கதரிசனமும் முழுவதும் தேவ ஆவியால் அருளப்பட்டுள்ளது. இதில் மனித சிந்தனைக்கு இடமில்லை. அந்த வேத வாக்கியங்களெல்லாம் தேவ ஆவியால் அருளப்பட்டிருக்கிறது (II தீமோ 3 : 16). தேவனுடைய பரிசுத்த மனிதர்கள் பரிசுத்த ஆவியால் ஏவப்பட்டு பேசினார்கள், எழுதினார்கள் (II பேது 1 : 21).

புதிய ஏற்பாட்டினால் மட்டுமே பழைய ஏற்பாட்டை புரிந்து கொள்ள முடியும். இயேசு கிறிஸ்துவில் உண்டான புதிய உடன்படிக்கையின் அடிப்படையில் பழைய ஏற்பாட்டை சரிவர அறிந்து கொள்ள முடியும். ''வேதவாக்கியங்களை ஆராய்ந்து பாருங்கள் அவைகளால் உங்களுக்கு நித்திய ஜீவன் உண்டென்று எண்ணுகிறீர்களே என்னைக்குறித்து சாட்சி கொடுக்கிறவைகளும் அவைகளே'' (யோவா 5 : 39) என்று இயேசுவானவர் கூறுவதால் பழைய ஏற்பாடானது எந்த அளவுக்கு இயேசுவுக்கு சாட்சியாயிருக்கிறதோ அந்த அளவுக்கு அது கிறிஸ்தவ மார்க்கத்துக்கு முக்கியமானது. உ-ம். பஸ்கா ஆட்டுக்குட்டி, பாவநிவாரணபலி, கம்பத்தில் தூக்கப்பட்ட வெண்கல சர்ப்பம், பிரதான ஆசாரியன் முதலியன.

கிறிஸ்துவுக்கு முன்னடையாளமாயும், கிறிஸ்துவினால் முழுமை பெற்றதாகவும் காண்கிறோம். யாத் 12 : 1 - 28 + I கொரி 5 : 7, 8 ; லேவி அதி 16 + எபி 9 : 23 - 26 ; 10 : 4 - 12 ; எண் அதி 21 + யோவா 3 : 14, 15 ; லேவி 9 : 22 + லூக் 24 : 50. பழைய ஏற்பாடு கிறிஸ்துவின் வெளிச்சத்தில் புரிந்து கொள்ளப்பட்டு, கிறிஸ்துவைக் கொண்டு வியாக்கியானம் செய்யப்பட வேண்டும். பழைய ஏற்பாட்டின் வேத வாக்கியங்கள் அநேகம் (தீர்க்க தரிசனங்கள், வாக்குத்தத்தங்கள்) கிறிஸ்துவிலும், அவரால் ஏற்படுத்தப்பட்ட திருச்சபையிலும் நிறைவேறிற்று. மீதியானவை நிறைவேறும்.

உ-ம். மத் 1 : 18 – 23 ; 2 : 13 - 15 ; 3 : 1 - 3; லூக் 4 : 16 - 21 ; மாற் 14 : 49 ; லூக் 24 : 25 - 27, 44 ; அப் 2 : 16 - 36 ; 15 : 14 - 18 ; எபி 2 : 10 - 14 ; II பேது 3 : 7 - 13; வெளி 21 : 5.

பழைய ஏற்பாட்டு பக்தர்களும் புதிய ஏற்பாட்டின் நூலாசிரியர்களும் வேதத்தை மிகவும் கனப்படுத்தினார்கள். பழைய ஏற்பாட்டின் பக்தர்கள் ஒருவேளையில் விக்கிரக ஆராதனைபோல் பூஜித்தார்கள் என்று நம்ப ஏதுவுண்டு (நெகே 8 : 4 - 6). புதிய ஏற்பாட்டின் நூலாசிரியர்கள் வேதத்துக்கு ஆளத்துவம் கொடுத்துப் பேசுகிறார்கள். கிறிஸ்து வருவார் என்று வேதவாக்கியம் சொல்லவில்லையா (யோ 7 : 42) என்றும், வேதம் கண்டது (கலா 3 : 8) என்றும், வேதம் எல்லோரையும் பாவத்தின் கீழ் அடைத்துப் போட்டது (கலா 3 : 22) என்றும் கூறியுள்ளார்கள். ''சொன்னது'', ''கண்டது'', ''அடைத்தது'' ஆகிய சொற்

கள் ஆள்தத்துவத்தோடு சேர்த்தவை யாகும்.

இப்படி நாம் ஏற்றுக் கொள்ளா விட்டாலும் வேத வாக்கியங்கள் உயிருள்ள ஒரு ஆளைப்போல் செயல்பட வல்லமை யுள்ளது என்பதை நாம் அநுபவரீதியாக உணருகிறோம். அது தேவ ஆவியினால் அப்படி செயல்படுகிறது. அதனால் வேதா கமத்தை எல்லோரும் மதியுங்கள், கனப் படுத்துங்கள், தலையணையாக்கி படுக்கா திருங்கள். தினந்தோறும் அதை வாசித்து தியானியுங்கள். கண்ட கண்ட இடத்தில் போடாதிருங்கள். (வீடுகளில், ஆலயங் களில்) படித்து முடித்தபின் (கால்களை நீட்டிக் கொண்டோ, படுத்துக் கொண்டோ படியாதிருங்கள்) மூடி உயரமான, மதிப் பான இடத்தில் அல்லது பெட்டிகளில், பீரோக்களில் பத்திரப் படுத்துங்கள். இதோ புதிய ஏற்பாட்டில் காணப்படும் பழைய ஏற்பாட்டு வேதவாக்கியங்கள் பின்வருமாறு :—

| | | | | |
|---|---|---|---|---|
| மத் | — | 1 : 22, 23 | = | ஏசா 7 : 14 |
| ,, | — | 2 : 6, 15, 17, 18, 23 | = | மீகா 5 : 2, ஓசி 11 : 1, எரே 31 : 15, பழைய ஏற்பாட்டில் நசரேத்து என்ற பெயர் கிடையாது. |
| ,, | — | 3 : 3 | = | ஏசா 40 : 3 |
| ,, | — | 4 : 15 | = | ஏசா 9 : 2 |
| ,, | — | 8 : 17 | = | ஏசா 53 : 4 |
| ,, | — | 9 : 13 | = | ஓசியா 6 : 6 |
| ,, | — | 11 : 10 | = | மல்கி 3 : 1 |
| ,, | — | 12 : 18 - 21 | = | ஏசா 42 : 1 ; ஏசா 6 : 10 |
| ,, | — | 13 : 14, 35 | = | சங் 78 : 2 |
| ,, | — | 15 : 8, 9 | = | ஏசா 29 : 13 |
| ,, | — | 21 : 4, 13, 16, 42 | = | சகரி 9 : 9 ; ஏசா 56 : 7 ; எரே 7 : 11 ; சங் 8 : 2 ; 118 : 22 |
| ,, | — | 22 : 45 | = | சங் 110 : 1 |
| ,, | — | 26 : 31 | = | சகரி 13 : 7 |
| ,, | — | 27 : 9, 10 | = | சகரி 11 : 12, 13 எரேமியாவில் அல்ல |
| மாற்கு | — | 7 : 6, 10 | = | ஏசா 29 : 13, யாத் 21 : 15, லேவி 20 : 9 |
| ,, | — | 9 : 11, 12, 13 | = | மல்கி 4 : 5; ஏசா 50 : 6; மத் 17 : 11 - 13 |
| ,, | — | 12 : 10, 19, 36 | = | சங் 118 : 22, உபா 25 : 5, 6, 7 ; சங் 110 : 1 |
| ,, | — | 14 : 21, 27 | = | சகரியா 13 : 7 |
| ,, | — | 15 : 28 | = | ஏசா 53 : 12 |
| லூக் | — | 2 : 23, 24 | = | லேவி 12 : 1 - 6 |
| ,, | — | 3 : 4, 5 | = | ஏசா 40 : 4, 5 |
| ,, | — | 4 : 18, 19 | = | ஏசா 61 : 1, 2 |
| ரோமர் | — | 3 : 4 | = | சங் 5 : 4 |
| ,, | — | 8 : 33 | = | எண் 23 : 21 |
| ,, | — | 9 : 15, 26, 28, 29, 33 | = | யாத் 33 : 19; ஓசி 1 : 10; ஏசா 62 : 1, 2 ஏசா 6 : 9 - 13 ; 8 : 14 |
| ,, | — | 10 : 5, 6, 7, 11, 15, 16, 18, 19, 20, 21 | = | உபா 32 : 47, உபா 30 : 11 - 15; யோவேல் 2 : 26, ஏசா 52 : 7, நாகூம் 1 : 15; ஏசா 53 : 1 சங் 19 : 4, உபா 32 : 21; ஏசா 65 : 1, 2. |

| | | |
|---|---|---|
| ரோமர் | — 11 : 3, 8, 9, 10, 26, 27, 31 | — I இரா 19 : 10, 14; ஏசா 29 : 10; சங் 69 : 22<br>ஏசா 59:10; எரே 31 : 33 - 37, ஏசா 40 : 13 |
| ,, | — 14 : 11 | — ஏசா 45 : 23 |
| ,, | — 15 : 3, 9, 10, 11, 12, 20 | — சங் 69 : 9 : சங் 18 : 49 ; உபா 32 : 43;<br>சங் 117 : 1 |
| I கொரி | — 2 : 9 | — ஏசா 64 : 4 |
| ,, | — 3 : 20 | — யோபு 5 : 13 |
| ,, | — 10 : 7 | — யாத் 32 : 6 |
| ,, | — 14 : 21 | — ஏசா 28 : 11 |
| II கொரி | — 4 : 13 | — சங் 116 : 10 |
| ,, | — 6 : 2, 16, 17, 18 | — ஏசா 49 : 8, லேவி 26 : 12, உபா 14 : 8 |
| ,, | — 9 : 9 | — சங் 112 : 9 |
| எபிரே | — 2 : 13 | — சங் 22 : 22 |
| ,, | — 3 : 15 | — சங் 95 : 8 |
| ,, | — 7 : 15, 20 | — சங் 110 : 4 |
| I பேதுரு | — 1 : 16, 24, 25. | — லேவி 11 : 45 ; 19 : 2; 20 : 26<br>ஏசா 40 : 6, 7, 8 |
| | 2 : 6, 13, 24 | — ஏசா 28 : 16; ரோம 13 : 1 – 4;<br>I பேது 2 : 14 ; ஏசா 53 : 5 |
| யூதா 14, 15 ம் வசனம் | | — தள்ளுபடியாகமம். |

"அவர் வேதத்தை முக்கியப்படுத்தி அதை மகிமையுள்ளதாக்குவார்" ஏசா 42:21

சுவிசேஷம்

# தஞ்சம்

தேசத்தில் யுத்தம் நடந்து கொண்டிருக்கிறது. எங்கும் பரபரப்பு. எதிரியின் விமானம் குண்டு வீச புறப்பட்டு வருகிறதை ரடார் (Radar) கருவி கண்டு பிடிக்கிறது. உடனே அபாயச் சங்கு அலறுகிறது. ஜனங்களெல்லாம் உயிர் பிழைக்கும்படி எல்லாவற்றையும் விட்டு விட்டு, தீவிரமாய் ஓடிப்போய் நிலவறைக்குள் பதுங்குகின்றனர். குண்டுகள் வீசப்படுகிறது. கட்டிடங்கள் நொறுங்கி விழுந்தன. நிலவறைக்குள் புகுந்து கொள்ளாத மனிதர்களெல்லாம் மாண்டு போயினர். வெளியே இருந்தோர் திரளாய் இருந்ததினால், எதிரி இரக்கம் காட்டவில்லை. அந்நாட்களில், ஆபத்துக் காலத்தில் ஜனங்கள் பட்டணத்தின் நடுவே உள்ள துருக்கத்திற்குள் புகுந்து பாதுகாப்படைவர் (நியாய 10 : 23).

நியாயப் பிரமாண காலத்தில் கைப் பிசகாய் கொலை செய்து விட்டவன், பழி வாங்குகிறவனின் கைக்குத் தப்பி அடைக்கல பட்டணத்திற்குள் புகுந்து ஜீவனைக் காத்துக் கொள்ளுவான். தேசத்தில் இனக் கலவரம் நடக்கையில், கொடியவர்களின் வெறிக்குத் தப்ப, சிறுபான்மையினர் அகதிகள் முகாமிற்குள் (Refuge Camp) நுழைந்து தங்களைத் தப்புவித்துக் கொள்வர்.

ஆதிமனிதன் ஒரு பிரமாணத்தை மீறி பாவஞ் செய்தான். அவன் மகன்

சகோதரனை கொலை செய்தான். மனித சமுதாயம் பெருக, பெருக பாவமும் பெருகிக் கொண்டே போகிறது. எங்கும் பொய், பித்தலாட்டம், சூது, வஞ்சனை, துரோகம், ஏமாற்று, எத்து, விபச்சாரம், வேசித்தனம், காம விகாரம், மோகம், துர் இச்சை, ஆண்புணர்ச்சி, சுயபுணர்ச்சி, முறைகேடு, அசுத்தம், அருவருப்பு, மதிகேடு, சண்டை, போட்டி, பொறாமை, வெறித்தனம், இனக் கலவரம், கொலை, கொள்ளை, லஞ்ச ஊழல், அக்கிரமம், அநியாயம், நீதிக் கேடு, பொறாமை இப்படி எத்தனையோ பாவத்தீ மனித சமுதாயத்தை தீவிரமாய்க் கவ்விப் பிடித்து நித்திய அக்கினி நோக்கி இழுத்துச் செல்லுகிறது, உலகமே கெட்டுப்போயிற்று. நாம் மாத்திரம் நல்லவர்களாக வாழ முடியுமா? லஞ்சம் நான் மாத்திரமா வாங்குகிறேன். எல்லாருந் தான் வாங்குகிறார்களே? பெரும்பான்மையினர், ஏன் எல்லாருந்தான் தப்பாய் இருக்கிறார்கள், நான் மாத்திரம், நேர்மையாக நீதியாக, யோக்கியமாக இருப்பதெப்படி என்கிறார்களே? உள்வாயே உன்னை நேர்மையற்றவன், அநியாயக் காரன், அயோக்கியன் என்று சாட்சி கொடுக்கிறதே. லஞ்சம் வாங்குகிற நீ பிடிக்கப்பட்டு நீதிபதிக்கு முன்பாக நிறுத்தப்படும் போது நான் மட்டுமா வாங்குகிறேன் எல்லாருந்தான் வாங்கினார்கள், என்று சொல்வதால் தப்புவித்துக் கொள்வாயோ? சட்டம் உன்னைத் தண்டிக்குமே. இந்த அநீதியான நீதிபதி முன்னேயே உன் நியாயம் செல்லுபடியாகாதிருக்க, நீதிபரராகிய தெய்வத்திற்கு முன் நியாயத் தீர்ப்பில் நீ நிறுத்தப்படும்போது உன்னை எந்த நீதியால் தப்புவிப்பாய்? பொய் சொல்லாதிருப்பாயாக, விபச்சாரம் செய்யாதிருப்பாயாக, கொலை செய்யாதிருப்பாயாக, என்றெல்லாம் உனக்கு சட்டம் விதித்திருக்கிறாரே.

நற்கிரியை ஒன்று செய்வதால் உன் ஆத்துமா உள்ளில் மகிழ்கிறது. துர்கிரியை ஒன்று செய்வதால் உன் ஆத்துமா உள்ளில் துக்கித்து, பயந்து, கலங்குகிறது. அந்த உணர்ச்சியை தூங்கியோ, மற்றொரு அலுவலில் ஈடுபட்டோ அல்லது இன்னொரு துர்க்கிரியை செய்தோ மாற்றிக் கொள்ளுகிறாய், அல்லது மறைத்து போடுகிறாய். குப்பையை எடுத்து ஒரு தொட்டிக்குள் போட, அது கண்ணுக்கு தெரிகிறது. அதன் மேல் இன்னும் குப்பையை கொட்ட மூத்தினது மறைந்து போகிறது. இப்படி போட்டு போட்டு ஒவ்வொன்றையும் மறைக்கலாம். ஓர் நாள் அந்த தொட்டியை உடைக்க எல்லாக் குப்பையும் வெளிக்குத் தெரியும். சே! அது எத்தனை அசிங்கமாயிருக்கும். இன்று நீ சரீரத்தில் இருப்பதால் பாவத்தின் வேதனையை இன்னொரு பாவத்தால் மறைக்கிறாய். ஓர் நாள் உன் சரீரமாகிய தொட்டி உடைபடும். எல்லாம் வெளியரங்கமாகும். உன் இளம்பிராயம் முதல் முடிவு வரை செய்த பாவத்தினால் உண்டாகும் வேதனை உன்னை மொத்தமாய் அழுத்த, ஐயோ உன் நிலை எப்படி இருக்கும். அங்கே அழுகையும், பற்கடிப்பும் உண்டாகுமே, அது நித்திய வேதனையாயிற்றே, இதை மாற்ற மறைக்க உனக்கு சரீரம் வேண்டுமே? "ஏனென்றால் சரீரத்தில் அவனவன் செய்த நன்மைக்காவது, தீமைக்காவது தக்க பலனை அடையும்படிக்கு நாமெல்லாரும் கிறிஸ்துவின் நியாயசனத்திற்கு முன்பாக வெளிப்பட வேண்டும்" (II கொரி 5 : 10) என்றும் வேதம் சொல்லுகிறது. அநியாயத்தை தண்ணீரைப் போல் பருகுகிறவன் எத்தனை அசுத்தமும் அருவருப்புமானவன் (யோபு 15 : 16).

உனக்கு இத்தகைய பயங்கரம் காத்திருக்கிறது என எச்சரிக்கப்படுகிறாய். தப்பி பிழைக்க, ஜீவனைக் காண வாஞ்சையா? ஓடி ஒளிந்து கொள் இயேசுவுக்குள். யுத்தத்தில் நிலவறையாய், ஆபத்தில் துருக்கமாய், ஜீவனுக்கு அடைக்கலமாய், கலவரத்தில் அகதிகள் முகாமாய் இயேசு இருக்கிறார். மனந்திரும்பு, பாவ வழியை விட்டு திரும்பு, இயேசு கிறிஸ்துவை விசுவாசி, பாவ மன்னிப்புக்கென்று ஞானஸ்நானம் பெற்றுக் கொள். அவர் உன்னை மன்னித்து இரட்சிக்கிறார், தம் ஆவியை தருகிறார். பரிசுத்த வாழ்வு தருகிறார். பரம சமாதானம் அருள்கிறார். நற்கிரியை செய்ய கற்று தந்து, அதனாலே உண்டாகும் சந்தோஷம் பெருகிப் பெருகி, நித்திய சந்தோஷம் தருகிறார். இன்றைக்கு இவரை அண்டிக் கொள்ளுங்கள். அவரை அண்டிக்கொள்கிறவன் பாக்கியவான்.

"அவரை விசுவாசிக்கிறவன் ஆக்கினைக்குள்ளாக தீர்க்கப்படான்"-யோவா 3 : 18

# மோட்ச வழி

## குரு-சிஷ்ய உரையாடல்

**பத்தாம் கற்பனை :—** பிறத்தியானுடைய வீட்டையாவது, பெண்ஜாதியையாவது, வேலைக்காரனையாவது, வேலைக்காரியையாவது மிருக ஜீவன்களையாவது அவனுக்குள்ள யாதொன்றையாகிலும் இச்சியாதிருப்பாயாக-யாத் 20 : 17.

இதன் அர்த்தம் நாம் தேவனுக்குப் பயந்து அவரை சிநேகித்து பிறனுடைய மனைவியையாகிலும், வீட்டையாவது, பணிவிடைக்காரன், பணிவிடைக்காரியையாகிலும், மிருக ஜீவன்களையாகிலும், பிறனுக்குடைய யாதொன்றின் மேல் பிரியப்படாமலும், பிடுங்கிக் கொள்ளாமலும், அவனை விட்டுப் பிரிக்காமலும், எல்லாம் அவனிடமாய் நிலைத்திருந்து அவனுக்குச் செய்ய வேண்டியவைகளைச் செய்யும்படியாய் பிரயாசப்பட்டு வர வேண்டும் என்பதாம்.

இந்தக் கற்பனை நாம் பிறனுடைய மனைவியையாகிலும், வீட்டையாகிலும், பணிவிடைக்காரர்களையாகிலும் மிருக ஜீவன்களையாகிலும் அவனிடத்தில் பாராமுகமாயிருக்கப் பண்ணவோ, அவனை விட்டுப் பிரியும் படி நாம் காட்டியிழுக்கவோ, நெருக்கிப் பிடுங்கிக் கொள்ளவோ வஞ்சிக்கவோ கூடாதென்கிறது. அதாவது அவனை விட்டுப் பிரிந்து நம்மிடம் வரும்படி நாம் எந்த விதத்திலாவது அவர்களைத் தூண்டி விடவோ நயம் பண்ணியிழுக்கவோ கூடாது. பிறனுடைய மனைவியோ, பணிவிடைக்காரர்களோ அவனிடம் நிலைத்திருந்து செய்ய வேண்டியவைகளைச் செய்யும் படி நாம் அவர்களுக்குப் புத்தி சொல்லிப் பிரயாசப்பட வேண்டும். அவனுடைய சொத்து அவனிடம் நிலைத்திருக்க நாம் ஆவன செய்ய வேண்டும். இந்த அருமையான கற்பனையின் மூலமாய் தேவன் இச்சியாதிருப்பாயாக என்று கட்டளையிட்டு அவனவன் பிறத்தியானுக்கு உதவுகிறவர்களாயிருக்கவும் தேவனை தெய்வீகக் காரியங்களைப் பற்றிய ஆசையேயன்றி துர் இச்சை நம் இருதயத்தில் இருக்கக் கூடாது என்று எச்சரித்துள்ளார்.

ஏனெனில் இச்சிக்காயாக என்று நியாயப்பிரமாணம் சொல்லாதிருந்தால் இச்சை பாவமென்று அறியேன் (ரோம 7 : 7). அவனவன் தன் தன் சுய இச்சையினாலே இழுக்கப்பட்டு, சிக்குண்டு சோதிக்கப்படுகிறான். பின்பு இச்சையானது கர்ப்பம் தரித்து பாவத்தைப் பிறப்பிக்கும், பாவம் பூரணமாகும் போது மரணத்தைப் பிறப்பிக்கும் (யாக் 1 : 14, 15). ஆகையால் "உங்கள் தேவனும் கர்த்தருமாகிய நான் பரிசுத்தர் ஆகையால் நீங்களும் பரிசுத்தராயிருங்கள்" (லேவி 19 : 2). பரமண்டலங்களிலிருக்கிற உங்கள் பிதா பூரண சற்குணராயிருக்கிறது போல நீங்களும் பூரண சற்குணராயிருங்கள் (மத் 5 : 45). கர்த்தரிடத்தில் மனமகிழ்ச்சியாயிரு, அவர் உன் இருதயத்தின் வேண்டுதல்களை உனக்கு அருள் செய்வார் (சங் 34 : 4) என்று தேவன் சொல்லியிருக்கிறார்.

இந்த பத்துக் கற்பனைகளையும் பரிசுத்த தேவன் கட்டளையிட்டதோடே தேவனாகிய கர்த்தர் உன் தேவனாகிய கர்த்தராயிருக்கிற நான் எரிச்சலுள்ள தேவனாயிருந்து தம்மைப் பகைக்கிறவர்களை மூன்றும் நான்காம் தலைமுறை மட்டும் அக்கிரமத்தை விசாரிக்கிறவராயிருக்கிறேன் என்றும் அவரிடத்தில் அன்பு கூர்ந்து அவர் கற்பனைகளைக் கைக்கொள்ளுகிறவர்களுக்கோ ஆயிரம் தலை முறை மட்டும் இரக்கம் செய்வேன் என்று கூறியிருக்கிறார் (யாத் 20 : 5, 6).

சர்வ வல்லமையுள்ள தேவன் தாம் கட்டளையிட்ட இந்த பத்துக் கற்பனைகளையும் மீறி நடக்கிற யாவரையும் தண்டிப்போமென்று எச்சரிக்கிறார். ஆகையால் நாம் தேவனுக்குப் பயந்து அவர் மேல் அன்பு வைத்து இந்த கற்பனைகளுக்கு விரோதமாக நடவாமலிருப்போமாக. இந்த கற்பனைகளைக் கைக்கொண்டு நடக்கிற எல்லோருக்கும் அவர்

கிருபையையும் சகல நன்மைகளையும் தருவோம் என்று வாக்கருளியுள்ளதால் நாம் தேவன் மேல் அன்பு கூர்ந்து அவர்பேரில் நம்பிக்கை வைத்து சந்தோஷமாக அவருடைய கற்பனைகளின்படி நடக்க வேண்டும். நியாயப்பிரமாணத்தைக் கட்டளையிட்டவர் ஒருவரே, அவரே இரட்சிக்கவும் அழிக்கவும் வல்லவர் (யாக் 4 : 12) கற்பனைகளை மீறுவதால் தேவ கோபம், பிரியக்கேடு, சாபம், சரீரமரணம், நித்திய மரணம் ஆகியவைகளைத் தேவன் தண்டனையாக அனுப்புவார். ஏனெனில் பாவத்தின் சம்பளம் மரணம் (ரோம 6: 23). பாவம் செய்கிற ஆத்துமா சாகும் (எசேக் 18 : 20) உ-ம். ஜலப்பிரளயம் (ஆதி 7 அதி) சோதோம், கொமோரா (ஆதி 19 அதி) எருசலேமின் அழிவு (லூக் 19 : 43, 44) தேவபக்தியோ இந்த ஜீவனுக்கும் இனிவரும் ஜீவனுக்கும் பிரயோஜனமுள்ளது (1 தீமோ 4 : 8) நியாயப் பிரமாணத்தை மீறுகிறதே பாவம். பாவம் இன்னதென்ற அறிவு நியாயப்பிரமாணத்தினால் வருகிறது (ரோம 3 : 20).

(தொடரும்)

> கீழ்ப்படிந்து நடக்கிற மனுஷன் செய்து பிழைக்கிற உம்முடைய நீதி நியாயங்கள்... —நெக 9 : 29.

# வேத பாடம்

ஆதி 29 : 31-35 லேயாள் அற்பமாக எண்ணப்பட்டதைக் கர்த்தர் கண்டு, அவள் கர்ப்பமடையும்படி செய்து அவளுக்கு ரூபன், சிமியோன், லேவி, யூதா என்ற நான்கு குமாரர்களைக் கொடுத்தார். பிற்பாடு அவளுக்கு பிள்ளை பேறு நின்று போயிற்று.

30 : 1-8 ராகேலுக்கு குழந்தை பிறக்காததால் தன் கணவனோடு வழக்காடினாள். பின் தன் வேலைக்காரியான பில்காளை யாக்கோபுக்கு மனைவியாகக் கொடுத்தாள். அவளுக்கு தாண், நப்தலி ஆகிய இரண்டு குமாரர்களைப் பெற்றாள்.

30 : 9-21 இதைக் கண்ட லேயாள் தன் வேலைக்காரி சில்பாளை யாக்கோபுக்கு மனைவியாகக் கொடுத்தாள். சில்பாள் யாக்கோபுக்கு காத், ஆசேர் ஆகிய இரு குமாரர்களைப் பெற்றாள். பின்பு லேயாள் கர்ப்பவதியாகி இசக்கார், செபுலோன் ஆகிய குமாரர்களையும் தீனாள் என்னப்பட்ட குமாரத்தியையும் பெற்றாள்.

30 : 22-24 கர்த்தர் ராகேலுக்கு செவி கொடுத்து அவள் ஜெபத்தைக் கேட்டு பிள்ளை பெறும்படி அநுக்கிரகம் செய்தார். ராகேல் கர்ப்பவதியாகி யோசேப்பைப் பெற்றாள்.

30 : 25 யோசேப்பு பிறந்த பின் யாக்கோபு தன் பிதாவின் வீட்டிற்குப் போக ஆயத்தப்படுகிறான். குடும்பத்துக்காக சம்பாத்தியம் பண்ண வேண்டும் என்றார். ஆனால் லாபான் தடுத்து உன்னால் என் வீட்டிற்கு ஆசீர்வாதம் என்று குறிப்பாயறிந்தேன், நீ நில், போக வேண்டாம், உனக்கு சம்பளம் தருவேன், என் ஆடுகளை மேய்த்துக் கொண்டிரு என்றான். சம்பளம் வரியும் புள்ளியுமுள்ள, கறுப்பான செம்மறி ஆடுகளும், வரியும், புள்ளியுமுள்ள வெள்ளாடுகளும் என்று முடிவு செய்யப்பட்டது. கர்த்தர் யாக்கோபுக்கு தரிசனம் கொடுத்து யாக்கோபை விருத்தியடையச் செய்தார். பத்து முறை லாபான் சம்பளத்தை மாற்றிய போதிலும் (ஆதி 31 :7, 41) யாக்கோபு ஐசுவரியவானானார். யார் அநியாயம் செய்தாலும் கர்த்தருடைய ஆசீர்வாதமே ஐசுவரியத்தைத் தரும். கர்த்தர் அதனோடே வேதனையைக் கூட்டார். உண்மையான உழைப்புக்குப் பலனுண்டு.

**ஆதி 31 : 1-21** பின்பு லாபானுடைய குமாரர் யாக்கோபின் மேல் முறுமுறுத்து பகைக்க ஆரம்பித்ததால் யாக்கோபு தன் மனைவிமாரோடு ஆலோசனை பண்ணி தேவ உத்தரவுடன் தன் தகப்பனாகிய ஈசாக்கிடம் கானான் தேசத்துக்குப் போகப் புறப்பட்டு தன்னுடைய மனைவிகள், பிள்ளைகள், மிருக ஜீவன்களுடனும், எல்லாப் பொருட்களுடனும் லாபானுக்குப் பயந்ததினால் திருட்டளவாய்ப் புறப்பட்டு போய் விட்டார். துன்மார்க்கருக்குப் பயந்து யாக்கோபு இடம் மாறிப் போனது தேவ சித்தமே.

(தொடரும்)

> ''நான் உன்னோடே இருந்து, நீ போகிற இடத்திலெல்லாம் உன்னை காத்து, இந்த தேசத்துக்கு உன்னை திரும்பி வரப் பண்ணுவேன்" —ஆதி 28 : 15

**பாலர் பகுதி**

# தேவனின் அன்பு

ஒரு அழகிய பெரிய நகரம். நல்ல வியாபார ஸ்தலம், மக்கள் தொகையும் ஏராளம். மனிதனுடைய கைத்திறமையினால் உருவாக்கப்பட்டிருந்த நெடுஞ்சாலை, சாலையின் இரு ஓரங்களிலும் வானளாவிய மாளிகைகள், அவைகளை பூமியிலிருந்தும் பார்ப்பது மிகவும் கஷ்டம்.

இவைகளின் மத்தியில் அமைந்திருந்த ஒரு வீதியில் வரிசையாக அமைந்திருந்தது உயரமான அடுக்கு மாளிகைகள். ஒரு கட்டிடத்தின் கீழ் அடுக்கில் பெரிய ஓட்டலும், திரையரங்கமும் அமைந்திருந்தது. அவைகளுக்கு மேலாக குடியிருப்புகள். மனிதர்களின் அசுத்தமான கிரியைகளை திரைபடத்தின் மூலமாக மக்கள் பார்த்துக் கொண்டிருந்த இரவு வேளை. புசிப்போம், குடிப்போம் நாளைக்குச் சாவோம் என்று சொல்லிக் கொண்டு புசித்துக் குடித்து வெறித்திருந்தனர் அநேகர் அந்த ஓட்டலினுள். மேலே குடியிருப்புகளில் அனேகர்கள் அன்று ஓய்வு நாளாக இருந்தபடியால் தொலைக்காட்சிப் பார்த்துக் கொண்டிருந்தனர்.

ஒருவரும் எதிர்பாராத நேரத்தில் ஏற்பட்ட மின்சார கோளாறினால் முதலில் தியேட்டரிலும், அருகிலிருந்த ஓட்டலிலும் அதைத் தொடர்ந்து அந்த மாடி கட்டிடம் முழுவதும் தீ பரவியது. அவற்றில் தீயில் கருகி மாண்டனர் பலர். உயிரை காப்பாற்ற அங்கும் இங்கும் ஓடி நெரிப்பட்டு மாண்டனர் பலர். தீ கீழிருந்து மேலாக ஒவ்வொரு மாடியையும் பிடித்துக் கொண்டு மேல் நோக்கி சென்று கொண்டிருக்கின்றது.

அந்தக் கட்டிடத்தின் பதினைந்தாவது மாடியில் உள்ள ஒரு குடும்பத் தலைவர் செய்வது அறியாது திகைத்தார். குழந்தைகளையாவது காப்பாற்ற வேண்டும் என்ற ஆசை அவரைப் பற்றிக் கொண்டது. அவருக்கு ஒரு ஆலோசனைத் தோன்றியது தனது மனைவியிடம், நீயும் குழந்தைகளும் நான் சொல்கிறபடி செய்யுங்கள் என்று கூறி பலகணி பக்கம் சென்றார். தீப்பிடித்துக் கொண்டிருந்த கட்டிடத்தின் பலகணிக்கும் அடுத்திருந்த கட்டிடத்தின் பலகணிக்கும் சிறிது இடைவெளிதான் இருந்தது, உடனே அவர், அவருடைய கால்களை தனது பலகணியில் கட்டிக் கொண்டு, அருகிலிருந்த பலகணியை தாவிப் பிடித்துக் கொண்டார். தனது குழந்தைகளை முதலாவது தனது முதுகின் மீது நடந்து அருகிலுள்ள கட்டிடத்திற்கு போகும்படி செய்தார், பின்னர் மனைவியை போகும்படிச் செய்தார். அவ்வேலைகள் முடியவும் தீயின் நாக்கானது அவரைப் பற்றவும் சமயம் சரியாக இருந்

தது. அவர் கருகி செத்தார். இப்படியாக அந்த குடும்பத தலைவர் ,தனது குழந்தைகளையும் மனைவியையும் காப்பாற்றுவதற்காக தனது ஜீவனைக் கொடுத்தார்.

குழந்தைகளே! நமது கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவும், நாம் சுகித்திருக்க நம்மை பரலோகில் சேர்க்க தம்மை தாமே பலியாக ஒப்புக் கொடுத்து நம் மேல் அவர் அநாதியாய் கொண்டிருந்த அன்பை வெளிப்படுத்தினார். என்னே அவருடைய அன்பு. உனக்காக உயிர் கொடுத்தவரை நீ நேசிக்கிறாயா? "ஒருவன் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவினிடத்தில் அன்பு கூராமல் போனால் அவன் சபிக்கப்பட்டவன்" (I கொரி 16 : 22).

---

பிரியமானவர்களே, தேவன் இவ்விதமாய் நம்மிடத்தில் அன்பு கூர்ந்திருக்க...

— I யோ 4 : 11

---

மாதர் பகுதி

# குடும்பம்

விவாகத் தம்பதிகள் தேவனுடைய விசுவாசிகளாயிருக்க வேண்டும். அந்நிய நுகத்திலே பிணைக்கப்படக் கூடாது (II கொரி 6 : 14 - 18). கலியாணத்திற்காக கிறிஸ்தவர்களானவர்களாகக் கூடாது. அப்படி தீவர் கிறிஸ்தவர்களாகி கல்யாணம் முடிப்பது தவறு. உறவின் பையன் நெருங்கிய பெண் என்று சிலர் அப்படி கிறிஸ்தவர்களாக்கி விவாகத்தை நடப்பிக்கின்றனர். அது தவறு.

இரட்சிக்கப்பட்ட ஜனம் இரட்சிக்கப் பட்டவர்களிடையே தான் பெண்களைத் தெரிந்துகொள்ள வேண்டும். அப்படியே தேவனுடைய பிள்ளைகள் தவறான உபதேசமுள்ள கூட்டங்களிலிருந்தும் பெண் கொள்ளக் கூடாது. தங்கள் நித்திய ஜீவ ஓட்டத்தில் தாங்களே தங்கள் கால்களிலே கட்டையைக் கட்டிக்கொள்ளக் கூடாது. ஒவ்வொரு மகனும் ஊக்கமாய் ஜெபித்தால் கர்த்தர் அவனுக்காக முன் குறித்த பெண்ணை வெளிப்படுத்துவார்.

ஜாதி அடிப்படையை விட்டுவிட வேண்டும். கிறிஸ்துவுக்குள் தங்களுக்கு துணையைத் தெரிந்துகொள்ள வேண்டும். இந்த குடும்ப வாழ்க்கையில் தெய்வீக ஆசீர்வாதமும் தேவபிரசன்னமும் உண்டாயிருக்கும். குடும்பத்தின் நோக்கம் தேவ பக்தியுள்ள ஒரு சந்ததியைப் பிறப்பிப்பதே (மல்கி 2 : 15). பிள்ளைகளின் வளர்ப்பு தகப்பன்மாரைவிட தாய்களின் பொறுப்பிலேயே இருக்கிறது. குடும்ப ஸ்திரீகள் தன் குடும்பத்தை சரிவர கவனிக்காமல் ஆபீஸ்க்கும்(Office). கம்பெனிகளுக்கும்(Company) வேலைக்குச் செல்லுவதும், செவிலித்தாய்கள் பொறுப்பில் தன் பிள்ளைகளை விடுவதும் மிகவும் தவறானவைகளாகும்.

பிள்ளைகளை வளர்க்கும் மற்றவர்கள் தங்கள் சுபாவப்படியே பிள்ளைகளை வளர்ப்பார்கள். மேலும் தாய்கள் பிள்ளைகளுக்கு பாலூட்ட வேண்டிய நேரத்தில் வேலை ஸ்தலங்களில் இருப்பதால் பிள்ளைகளுக்கு புட்டிப்பால் புகட்டப்படுகிறது. இது பிள்ளைகளின் ஆரோக்கியத்துக்கும், குண நலன்களுக்கும் கேடு. தாய்ப்பாசமின்றி வளரும் பிள்ளைகள் பிற்காலத்தில் தன் தாயின் முதிர்வயதில் அவளை ஆதரித்து பராமரிப்பதை மரியாதை செய்வதை தட்டிக் கழித்து விடுகிறான். அந்தந்த நேரம் சமையல் செய்து தன் கணவனுக்கும் பிள்ளைகளுக்கும் பரிமாறி தன் குடும்பத்தையும், வரும் விருந்தினரையும் போஷிக்கும் அன்பின் கடமைக்கு ஏதும் நிகரில்லை.

ஆகாரம் சமைக்கும் பொறுப்பை மற்றவர்களிடம் விடுவது சரியில்லை. தன் புருஷன், பிள்ளைகளின் மனநிலை, உடல் நிலையறிந்து அதற்கேற்றபடி ஆகாரம் வழங்க குடும்பத்தலைவிக்குத்தான் தெரியும். அவளே பொறுப்பாளி, ஆகையால் சகோதரிகள் நன்றாய் சமைக்கப் படித்துக் கொள்ள வேண்டும். அல்லவென்றால் வாய்க்கு ருசியாய் சமைக்கத் தெரிந்த

பெண்கள் உங்கள் வீட்டிலுள்ளவர்களுக்கு (புருஷனுக்கு, பிள்ளைகளுக்கு) விருந்தளித்து அவர்களைக் கவரக்கூடும். அல்லது பசித்தூண்டலுக்கு நல்ல ஆகாரம கிடைக்கும் உணவு விடுதிகளை அவர்கள் நாடக்கூடும்.

வாய்க்கு ருசியாக வயிற்றுக்கு சாப்பாடு கொடுத்து மக்களை கவர்ச்சிக்க முடியும். இந்தக் கலையில் தேர்ச்சி பெற்றவன் நெப்போலியன். அவன் தன் படைவீரர்களுக்கு நல்ல ஆகாரம் வழங்க கவனமாயிருந்தான். சிறை பிடிக்கப்பட்ட எதிரி நாட்டு வீரர்களுக்கும் அப்படி நல்ல ஆகாரம் வழங்கினனும். அதனல் அவனமேல் அன்புகொண்ட எதிரியின் வீரர்கள் மறுமுறை யுத்தக்களத்தில் நெப்போலியனைக் கண்டதும் கூட்டம் கூட்டமாய் சரணடைந்தார்களாம். என தமிழ்நாட்டில் முதல் மந்திரி எம். ஜி. ஆர் (M.G. Rama-chandran) சோறு போட்டு (சத்துணவுத் திட்டம்) ஓட்டுவாங்கி தேர்தலில் ஜெயித்துவிட்டதை மறக்காதிருங்கள்.

(தொடரும்)

---

"சுகபோகமாய் வாழ்கிறவள் உயிரோடே செத்தவள்"

— 1 தீமோ 5 : 6.

---

# நான் நன்றி சொல்லுவேன்

என் ஆதி பிதாவாகிய ஆதாம் தேவ சாயலாக சிருஷ்டிக்கப்பட்டு ஜீவனுள்ள ஆத்துமாவாக இருந்தார். தேவனுடைய கற்பனையை மீறி பாவம் செய்தார். பாவியானர். அச்சமயம் அவருடைய அரையிலிருந்த (எபி 7 : 9) நானும் பாவியானேன், தேவனுக்கும், அவருடைய காணியாட்சிக்கும் தூரமானேன், ஜீவனை இழந்தேன், தேவனுடைய பகைஞனுய் போய் சாத்தானின் அடிமையானேன். அவன என்னை தன் இஷ்டம் போல் ஆட்டிப் படைத்து, நித்திய நரக பாதையில் நடத்திச் சென்றுகொண்டிருந்தான். நித்திய மரணம் (அக்கினி) என்னை ஆவலோடே எதிர்நோக்கிற்று. அந்தோ பரிதாபம், மரண பயம் என்னை ஆட்டிப் படைத்தது. நித்திய அழிவினின்று யார் என்னை விடுதலையாக்குவார் என ஏங்கினேன்.

இரக்கமும், மன உருக்கமும், மன்னிக்க தயவும் பெருத்த தேவனே என்னை மீட்க சித்தங் கொண்டார். பிதாவாகிய தேவன் எனக்கு செய்த மிகப்பெரிய உபகாரம் யாதெனில் தம்முடைய சொந்த குமாரன் என்றும் பாராமல் எனக்காக இயேசுகிறிஸ்துவை என்னுடைய பாவங்களைப் போக்கும் கிருபாதாரபலியாக கோரச் சிலுவையில் கொடுத்ததே (ரோமர் 8 : 32). இயேசுவை எனக்குத் தந்த பிதாவுக்கு நான் நன்றி சொல்லுவேன.

இயேசுவானவர் எனக்கு செய்த மிகப் பெரிய உபகாரம் யாதெனில் அவர்தாம் உயர்த்தப்பட்டு, பிதாவிடமிருந்து பரிசுத்தாவியைப் பெற்று (அப். 2 : 33) என்னை சத்திய பாதையில் நடத்தும்படி பரிசுத்தாவியை கொடுத்ததே (யோ 16 : 13). எனக்கு பரிசுத்தாவியை கொடுத்த இயேசுவுக்கு நான் நன்றி சொல்லுவேன்.

பரிசுத்த ஆவியானவர் எனக்கு செய்த மிகப் பெரிய உபகாரம் கர்த்தரின் ஆடாகிய என்னை மேய்த்து, காப்பதற்காக எனக்காக ஏற்படுத்தின மேய்ப்பர்களே (அப் 20 : 28). அவர்கள் என்னை அறிவோடும், புத்தியோடும் மேய்த்து (எரே 3 : 15), உபதேச சட்டத்தை பெற்று (அப் 1 : 1, மத் 28 : 20) எனக்கு கொடுத்து, அதை நான் விளங்கிக்கொண்டு அதன் மகிமையை உணர்ந்து கீழ்ப்படிய எனக்கு பிரகாசமான மனக்கண்களை இறைவன் கொடுக்க வேண்டுதல் செய்கிறார்கள் (எபே 1 : 17 – 19). இந்த உபதேச சட்டத்திற்கு நான் மனப்பூர்வமாய் கீழ்ப்படிய எனக்கு பாவத்தினின்று விடுதலை உண்டாயிற்று. எனக்கு கிடைத்த பலன் பரிசுத்த

மாறுதல், அதன் முடிவோ நித்திய ஜீவன் (ரோமர் 6 : 17 - 22). எனக்கு மேய்ப்பர்களை கொடுத்த பரிசுத்தாவிக்கு நான் நன்றி சொல்லுவேன். என்னை கண்ணும் கருத்துமாய் மேய்க்கிற மேய்ப்பருக்கும் நான நான் நன்றி சொல்லுவேன்.

தேவனுக்கு

நன்றி! நன்றி! நன்றி!!

> "என் ஆத்துமாவே, கர்த்தரை ஸ்தோத்தரி, என முழு உள்ளமே அவருடைய பரிசுத்த நாமத்தை ஸ்தோத்தரி, என் ஆத்துமாவே கர்த்தரை ஸ்தோத்தரி, அவர் செய்த சகல உபகாரங்களையும் மறவாதே"
> சங் 103 : 1, 2

சாட்சி

# பூர்வப் பாதையைக் கண்டு கொண்டேன்

"அறியாமையுள்ள காலங்களைத் தேவன் காணாதவர் போலிருந்தார்; இப்பொழுதோ மனந்திரும்ப வேண்டுமென்று எங்குமுள்ள மனுஷரெல்லாருக்கும் கட்டளையிடுகிறார்" (அப் 17 : 30).

இந்தியாவின் தென் எல்லையாம் குமரி முனைக்கு அருகில் உள்ள வெள்ளையந் தோப்பு என்னும் சிற்றூரில் மிகுந்த பக்தி வைராக்கியம் உள்ள ஒரு C. S. I கிறிஸ்தவ பெற்றோருக்கு கடைசி மகவாய் யான் பிறந்தேன். என் பெயர் டென்னிஜஸ்டிஸ் ராஜன் என்னுடைய தாயார் மிகுந்த பக்தியுள்ளவர்களாகையால் நானும் மிகுந்த தெய்வ பக்தியுள்ளவனாகவே அன்போடு வளர்க்கப் பட்டேன். நோய்வாய்ப்பட்டால் அன்றி, ஒரு நாள் கூடத் தவறாமல் ஆலயத்திற்கு செல்பவனாகக் காணப்பட்டேன். நான் பள்ளிச் சிறுவனாய் இருக்கும் காலம் தொட்டே, மாலையில் என்னுடைய பாடங்களை படிக்கச் செல்லுமுன் குறைந்த பட்சம் பரிசுத்த வேதாகமத்திலிருந்து ஒரு அத்தியாயமாவது படிக்காமல் இருக்க மாட்டேன். வேதவாசிப்பு மட்டுமின்றி ஜெப ஜீவியத்திலும் சிறு வயதிலிருந்தே பழக்குவிக்கப்பட்டேன். சுருங்கக் கூறின், மற்றவர்கள் முன்பாக ஒரு சன்மார்க்கனாகவே ஜீவித்து வந்தேன். வேத புத்தகத்தின் கடைசி புத்தகமான வெளிப்படுத்தல் ஆகமத்தை திரும்பத்திரும்ப படிப்பேன். மனுக்குலத்திற்கு கடைசிக்காலத்தில் ஏற்படப் போகிற நித்திய அழிவைக் குறித்து அப்போதே சிந்திக்க ஆரம்பித்தேன். வேதத்தை தியானிக்கும்போது என்னுடைய உள்ளத்தில் அநேக கேள்விகள் எழ ஆரம்பித்து விட்டது. என்றால் என் கேள்விகளுக்கு விடையே கண்டு பிடிக்க முடியவில்லை.

நான் வேதத்தை அதிகம் நேசித்த படியால் தேவன் தம்முடைய ஞானத்தால் என்னை அதிகம் நிரப்பினார். கர்த்தருடைய கிருபையால் என்னுடைய பள்ளி இறுதித் தேர்வில் நான் அதிக மதிப்பெண்கள் பெற முடிந்தது. ஆகவே எனக்கு பொறியியல் கல்வி பயிலுவதற்கான வாய்ப்பு கிடைத்தது. கல்லூரி வாழ்க்கைக்குள்ளாக காலெடுத்து வைத்ததும் என்னுடைய வாழ்க்கையில் பெரிய மாறுதல்கள் ஏற்பட ஆரம்பித்தன. மற்றவர்கள் முன்பாக நான் அதிக சன்மார்க்கனாய் ஜீவித்தாலும் என்னுடைய உள்ளான வாழ்க்கையில் அநேக இரகசிய பாவங்கள் தோன்ற ஆரம்பித்தன. நான் எவைகளை பாவமாக வெறுத்தேனோ அவைகளே என் வாழ்வில் மீண்டும், மீண்டும் நிகழ்ந்தன. "அந்தப்படி நான் விரும்பாததை நான் செய்தால், நான் அல்ல, எனக்குள்ளே வாசமாயிருக்கிற (ஜென்ம) பாவமே அப்படி

செய்கிறது. அது என் அவயவங்களில் உண்டாயிருக்கிற பாவப்பிரமாணத்துக்கு என்னைச் சிறையாக்கிக் கொள்கிறது" (ரோம 7 : 15-24) என்னும் பிரமாணத்தை அறிந்து கொண்டேன். நிர்ப்பந்தமான மனுஷன் நான்! இந்த மரண சரீரத்தினின்று யார் என்னை விடுதலையாக்குவார்? என்று கதறினேன். அநேக நாட்கள் என்னுடைய படுக்கையை கண்ணீரால் நனைத்திருக்கிறேன் வேதத்தை அதிகமாக ஆராயத் தலைப்பட்டேன். பாவ பிரமாணத்தை எவ்வாறு அகற்றுவது என்று ஆராய்ந்தேன். எல்லா சபைகளையும் குறித்து ஆராய்ந்தேன் குறிப்பாக என்னுடைய C. S. I சபை மக்களுடைய வாழ்க்கையையும், போதகருடைய வாழ்க்கையையும் குறித்து சிந்தித்தேன். எங்கேயும் பரிசுத்தத்தைக் காண முடியவில்லை. பீடங்கள் எல்லாம் அசுத்தமாக இருப்பதைக் கண்டேன் (ஏசா 28 : 7, 8). காரணம் சபைப் பிரதானிகள் (டீக்கன்மார்) அநேகர் பீடி, சிகரெட், மதுபானங்களுக்கு அடிமையானவர்களாகவே காணப்பட்டார்கள். எனக்குத் தெரிந்த சில போதகர்களே பொடி, வெற்றிலை உபயோகிப்பவர்களாய் இருந்ததை நினைத்த போது என்னுடைய உள்ளம் வெதும்பியது. ஆலயத்திற்கு செல்பவர்கள் ஏதோ பொழுது போக்குக்காக தங்களை விக்கிரகங்களைப் போல அலங்கரித்துக் கொண்டு மற்றவர்களை கவருவதற்காக வருகிறார்கள்.

ஒருமுறை கிறிஸ்து பிறப்பை அறிவிக்கச் செல்லும் கேரல் (Carol) குழுவோடு செல்ல நேர்ந்தது. அங்கே வந்திருந்த வாலிபர்கள் அநேகர் குடித்து வெறித்து விட்டு பாடுவதையும், ஆடுவதையும் பார்க்க என் உள்ளம் சகிக்கவில்லை. இந்த சம்பவத்திலிருந்து நான் சபை காரியங்களில் (Church activities) அதிகம் ஈடுபடுவதை நிறுத்தி விட்டேன். இவ்வாறு கிறிஸ்தவ சமுதாயம் ஒரு கோமாளித்தனமாக மாறி விட்டதைக் கண்டு அதிகம் வேதனை அடைந்தேன். "உன் கால்களில் இருக்கிற பாதரட்சையைக் கழற்றிப் போடு, நீ நிற்கிற இடம் பரிசுத்த பூமி (யாத் 3 : 5) என்று மோசேயிடம் சொன்ன அதே இறைவனை தரிசிக்கப் போகும் மக்கள் எவ்வளவு துணிகரமாக தங்கள் காலணிகளோடு ஆலயத்திற்குள் செல்கிறார்கள். பாருங்கள்! ஒரு இந்து அவன் பெரிய குடிகாரனாய் இருந்தாலுங்கூட அவனுடைய கடவுளை வழிபடச் செல்லும்போது குளித்து விட்டு அரையில் துண்டை கட்டிக் கொண்டு எவ்வளவு பய பக்தியோடு வழிபடுகிறான்; ஆனால் கிறிஸ்தவர்களிடம் இந்த பயபக்தியைக் காண முடியவில்லையே என்று சிந்தித்தேன். அநேக பெந்தெகொஸ்தே (Pentecost) சபையில் உள்ளவர்களையும் எனக்குத் தெரியும். அவர்கள் வாழ்க்கையிலும் பரிசுத்தத்தைக் காண முடியவில்லை.

அநேக போராட்டங்களுக்கும், பிரச்சினைகளுக்கும் மத்தியில் நான் என்னுடைய கல்லூரி படிப்பை முடித்தேன். இப்போது வேலைதேடும் பிரச்சினை வந்து விட்டது. நான் என்னுடைய படிப்பில் அதிக மதிப்பெண்கள் பெற்றிருந்த போதிலும் தேவன் ஒரு வருடகாலமாக என்னுடைய வேலையைத் தடை பண்ணி வைத்திருந்தார். இந்த காலக்கட்டத்தில் நான் வேதத்தை அதிகம் ஆராயத்தலைப்பட்டேன். பாவத்தை நான் கடுமையாக வெறுத்தேன். முதலாவது நான் சென்று கொண்டிருந்ததான சபையில் உள்ள அக்கிரமங்களையெல்லாம் அகற்ற வேண்டுமென்கிற ஒரு அசட்டுத்தனமான வைராக்கியம் எனக்குள் எழுந்தது. 18 வயதே நிரம்பிய சிறுவனாகிய நான் என்ன செய்ய முடியும் என்று சிந்தித்துக் கொண்டிருந்தேன்.

அப்போது அங்குள்ள C. S. I சபையின் குருவுக்கு ஒரு மொட்டைக்கடிதம் எழுதினேன். அதில் "சபையில் போதை பொருட்களுக்கு அடிமையானவர்களே சபை பிரதானிகளாக இருக்கிறார்கள், சபைக்கு குடித்துக் கொண்டு அநேகர் வருகிறார்கள்; தாங்கள் இந்த சபையின் பொறுப்பை ஏற்றதிலிருந்து இன்று வரை பாவத்தைக் குறித்து கண்டித்து பேசியதே கிடையாது. மற்றும் சில காரியங்களை அதில் குறிப்பிட்டு விட்டு தேவன் இவைகளுக்கு உங்களிடத்தில் கணக்கு கேட்பார் என்று எழுதி முடித்தேன்." இவைகளை நான் என் சொந்தமாக எழுதவில்லை.

எனக்குள்ளாக பரிசுத்த ஆவியானவர் இவைகளை இருக்குவதை உணர்த்தவே, அன்றிலிருந்து நான் செல்லுகிறதான இடம் எனக்கு மிகவும் அசுத்தமாக காணப்பட்டது. அன்று எசேக்கியேல் தீர்க்கதரிசி பள்ளத்தாக்கிலே கண்ட (எசேக் 37) எலும்புக்கூட்டங்களைப் போன்ற ஒரு உயிரற்றக் கூட்டமாகவே அது காட்சியளித்தது. எசேக்கியேலைப் போன்ற ஒரு பரிசுத்தவான் எழும்பி தீர்க்கதரிசனம் உரைத்தாலன்றி இந்த உலர்ந்த எலும்புக் கூட்டங்கள் உயிரடையா. என்னுடைய முயற்சிகள் எல்லாம் வீண் என்பதை உணர்ந்து கொண்டேன். எனக்குள்ளாக பெரிய போராட்டமே உருவாகி விட்டது. என்னுடைய வயது வாலிபப்பருவத்தை எட்டிப் பார்க்கும் வயதானதால் அநேக பாவப் போராட்டங்களும் கடந்து வந்தது. இந்த நிலை நீடித்தால் நான் நரகத்துக்கு செல்ல வேண்டி வருமே என்ற பயம் என்னை வாட்டியது. ஒருவன் ஜலத்தினாலும், ஆவியினாலும் பிறவாவிட்டால் தேவனுடைய இராஜ்யத்தில் பிரவேசிக்க முடியாது (யோவா 3 : 5) என்னும் வசனத்தின் மூலம் தேவன் என்னோடு பேசினார். நான் C. S. I. யில் பெற்றிருந்த தான தெளிப்பு ஞானஸ்நானம் ஒரு சடங்காச்சாரமான பெயர் சூட்டும் விழாவே என்று உணர்ந்து கொண்டேன்.

இந்த சூழ்நிலையில் எனக்கு மிகவும் அறிமுகமான ஒரு தேவ ஊழியக்காரரிடம் [Rev. Devadhasan] ஞான உபதேசங்களைப் பெறுவதற்காகச் சென்றேன். அவர் எனக்கு ஞானஸ்நானத்தின் முக்கியத்தைப்பற்றியும், ஞானஸ்நானம் எப்படி? எப்பொழுது யாரிடத்தில்? எதற்காக? எடுக்க வேண்டும் என்றும் போதித்தார். விசுவாசமுள்ளவர்களாகி ஞானஸ்நானம் பெற வேண்டும் (மாற் 16:16). தண்ணீரில் மூழ்கி ஞானஸ்நானம் பெற வேண்டும். [எபே 5:26; தீத் 3:5; யோவா 13:10]. மனந்திரும்பினவன் பெறவேண்டும் [அப் 2:38]. தேவனால் அனுப்பப்பட்ட தேவனுடைய ஊழியரிடம் பெறவேண்டும் [யோவா 1:6]. பாவமன்னிப்புக்காக பாவம் போக கழுவப்பட ஞானஸ்நானம் பெற வேண்டும் (அப் 2:38; 22:16) என்கிற வசனங்களை எனக்கு எடுத்துக் கூறினார்.

அவர் சொல்லியவைகளில் ஒரு காரியம் என்னவென்றால் முழுக்கு ஞானஸ்நானம் எடுப்பதற்கு முன்னால் நம்முடைய பாவங்களை தேவனிடம் அறிக்கை செய்து விட்டு, பாவங்கள் மன்னிக்கப்பட்டு விட்டது என்று விசுவாசிக்க வேண்டும் என்பதாகும். நானும் அவ்வாறு விசுவாசித்து ஞானஸ்நானம் எடுத்தேன். ஆனால் மீண்டும் சில நாட்களுக்குள் என்னுடைய பழைய பாவங்கள் கிரியை செய்ய ஆரம்பித்தன. பெரிய ஏமாற்றத்துக்குள்ளானேன். அந்த பெரியவர் போதித்த இன்னொரு காரியம் என்னவென்றால், C. S. I. சபைக்கு செல்ல வேண்டாம், ஆவிக்குரிய சபைகளுக்குச் செல்லுங்கள், எதிலும் அங்கத்தினராக வேண்டாம் (காரணம் எந்த பெந்தெகொஸ்தே (Pente cost) சபையும் சரியில்லை). ஆனால் "புதிய எருசலேம்சபை"க்கோ செல்லவே கூடாது!; அங்கே அநேக நூதன உபதேசங்கள் உண்டு! என்று எச்சரித்திருந்தார். நான் எல்லாவற்றையும் மனதிலே அடக்கிக் கொண்டிருந்தேன்.

நான் எந்த ஆவிக்குரிய சபைக்கும் செல்லவில்லை. ஆனால் தினமும் ஜெபிக்கும் போது, "கர்த்தாவே பூர்வப் பாதையை (எரே 6:16) எனக்கு காட்ட வேண்டும், உம்முடைய மெய்யான சரீரமாகிய திருச்சபையில் என்னை கொண்டு சேர்த்தருளும்" என்று கேட்பதுண்டு. இவ்வாறிருக்கும் போது வேலை தேட அதிகமாக முயற்சிக்க ஆரம்பித்தேன். எப்படியும் சென்னை வந்து வேலை தேட வேண்டும் என்னும் முடிவுக்குள்ளானேன். நான் சென்னை புறப்படுவதற்கு 2,3 நாட்களுக்கு முன்னால் "புதிய எருசலேம் சபை"யின் அப்போஸ்தலரும், தீர்க்கதரிசியும் என்னுடைய ஊரிலுள்ள ஒரு சகோதரன் வீட்டிற்கு வந்திருந்தார்கள். எனக்கு இது தெரிய வந்த போது, இவர்களிடம் சென்று பேசிப்பார்ப்போமே என்று அநேக கேள்விகளோடு அவர்களிடம் சென்றேன். சிறிது நேரம் அவர்களிடம் பேசும்போதே தெய்வீக சாயலை அவர்களிடம் காணமுடிந்தது. தேவன் என்னுடைய இருதயத்தை

திறந்து வைத்திருந்தபடியால் பூர்வ பாதையை புரிந்து கொள்ள முடிந்தது.

நான் அவர்களை சந்தித்த 2,3 நாட்களுக்குள் சென்னை வந்தேன். அதே வாரம் 13-3-83 அன்று சென்னையில் உள்ள "புதிய எருசலேம் சபை"க்கு பரிசுத்த ஆராதனைக்குச் சென்றேன். அவரைத் தொழுது கொள்கிறவர்கள் ஆவியோடும், உண்மையோடும் தொழுது கொள்ள வேண்டும் என்கிற வசனம் அங்கே நிறைவேறுவதைக் கண்டேன். ஆராதனை முறைமைகள் அதிக ஒழுங்கும் கிரமமுமாய் செய்யப்படுவது என்னை மிகவும் கவர்ந்தது. அங்கே பாவத்திலிருந்து பூரணமான விடுதலையைப் பெறுவது எப்படி என்பதை வசன ஆதாரத்தோடு எடுத்துக் கூறினார்கள். பாவங்களை இரகசியமாக இறைவனிடம் சொல்லி விட்டு பாவம் மன்னிக்கப்பட்டு விட்டது என்று விசுவாசித்தால் பாவமன்னிப்பும் அதிலிருந்து விடுதலையும் கிடைத்து விடும் என்பது தவறான உபதேசம் என்பதை அறிந்து கொண்டேன். ஏனென்றால் இறைவன் நாம் செய்யும் பாவங்களை அறிந்தவராகவே காணப்படுகிறார்.

அறிக்கை செய்தல் என்பது மெய் மனஸ்தாபத்தோடு வெளிப்படுத்தி அதிகாரம் பெற்ற ஊழியர்களிடமோ (யோவா 20:21-23; மத் 3:5,6; மாற் 1:5) அல்லது சபையிலோ வெளிப்படுத்தி (அப் 19:18; II கொரி 2:10; ரோம 10:10) அறிவிப்பது என்பதை அறிந்து கொண்டேன். இது புதிய ஏற்பாட்டு நியமம் மட்டுமல்ல, இதுவே பூர்வீக வழியென்பதை பழைய ஏற்பாட்டு வேத வாக்கியங்களின் மூலமாகவும் அறிந்து கொண்டேன் நியாயப்பிரமாணம் வருங்காரியங்களுக்கு நிழலாய் (மாதிரியாய்) இருந்தது (எபி 10:1) நியாயப் பிரமாணத்தை மீறுவதே பாவம்(I யோவா 3:4) நியாயப்பிரமாணத்தின்படி மனுஷனுக்கு பாவநிவிர்த்தி செய்ய ஆசாரியர்கள் நியமிக்கப்பட்டிருந்தார்கள் (லேவி 4:20, 26, 31, 35; 5:5, 67); பாவங்களை மன்னிக்க; மன்னியாதிருக்க சபையைப் பரிசுத்தப்படுத்த சபையின் தலைவர்களுக்கு தேவன் அதிகாரம் கொடுத்திருந்தார் (யாத் 19:10,14; I சாமு 15:25; 16:5).

நிழலாய் மாத்திரம் காணப்பட்ட பழைய ஏற்பாட்டுச் சபையின் நியமம் இவ்வாறிருக்கும் போது, வரப்போகிற பொருளாய் இருக்கிற புதிய ஏற்பாட்டு ஆதி சபைக்கும், அதனுடைய அதிகாரிகளுக்கும் இந்த அதிகாரங்கள் நிச்சயம் இருக்க வேண்டும் என்று உறுதிப்படுத்திக் கொண்டேன். ஆதிச்சபை வீழ்ந்து விட்டதால் அதனுடைய அஸ்திபார உபதேசங்கள் அழிந்து விட்டதால் தேவன் தம்முடைய திட்டத்தை நிறைவேற்ற கிறிஸ்து இயேசுவை மூலைக்கல்லாகவும், அப்போஸ்தலர், தீர்க்கர்களை அஸ்திபாரமாகவும் கொண்ட (எபே 4:11, 12, 13) "புதிய எருசலேம் சபை"யை இந்த நாட்களில் தேவன் ஸ்தாபித்துள்ளார் என்பதை அறிந்து கொண்டேன்.

பாவத்திலிருந்து பூரணமான விடுதலையைப் பெறுவதற்கு பழைய ஏற்பாட்டிலும், புதிய ஏற்பாட்டிலும் காணப்படுகிற வழிமுறைகளுக்கு கீழ்ப்படிந்து சபைக்கு முன்னால் அறிக்கை பண்ணக்கூடிய காரியங்களை சபைக்கு முன்பாகவும், சபையில் அறிக்கை பண்ண முடியாத பாவங்களை அதிகாரம் பெற்ற ஊழியர்களிடமும் அறிக்கையிட்டேன். ஆ! என்ன ஆனந்தம்! என்னுடைய பாவங்கள் எல்லாம் மன்னிக்கப்படுவதை, பாவத்திலிருந்து பூரண விடுதலை ஏற்படுவதை உணர்ந்தேன். அப்போஸ்தலர் தலையில் கைவைத்து ஜெபித்ததும், பரிசுத்த ஆவியானவரால் நிரப்பப்பட்டேன். அல்லேலூயா! மனுஷருக்கு இப்படிப்பட்ட அதிகாரத்தை கொடுத்தவராகிய தேவனை மகிமைப் படுத்தினேன். இவ்வாறு தேவன்தாமே பூர்வபாதையை எனக்குக்காட்டி அப்போஸ்தலருடைய உபதேசத்திலும், அந்நியோந்நியத்திலும், அப்பம் பிட்குதலிலும், ஜெபம் பண்ணுதலிலும் உறுதியாய் தரித்திருக்க (அப் 2:42) கிருபை செய்தார்.

இதை வாசிக்கும் பிரியமான வாசகர்களே "இதுவே சுத்தமும் பிரகாசமுமான மெல்லிய வஸ்திரம் (பரிசுத்தம்) தரித்துக் கொள்ளும்படி அதிகாரம் அளிக்கப்பட்ட ஆட்டுக்குட்டியானவருடைய மணவாட்டியாகிய திருச்சபை (வெளி 19:8.9) என்றும் இதுவே பரலோகத்திலிருந்து இறங்கி வந்ததாக பரி. யோவான் கண்ட பரிசுத்த நகரமாகிய "புதிய எருசலேம்" என்று உங்களுக்கு சாட்சியாய் அறிவிக்கிறேன். ஆமென்.

சகோ. டென்னி ஜஸ்டிஸ்ராஜன்
சென்னை. (Madras)

---

"நீங்களோ சீயோன் மலையினிடத்திற்கும், ஜீவனுள்ள தேவனுடைய நகரமாகிய பரம எருசலேமிடத்திற்கும், ஆயிரம் பதினாயிரமான தேவதூதர்களிடத்திற்கும்... வந்து சேர்ந்தீர்கள்" (எபி 12:22, 23, 24).

---

# புதிய எருசலேம் செய்தி

## PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம்-21 ★ SEPTEMBER 1985

"புதிய எருசலேம் சபை"

"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ, நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள்.... விழித்திருங்கள்...உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லோருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்..."

மாற்கு 13 : 35-37

EDITOR: CHIEF PASTOR N. LAZAR

BOMBAY, INDIA

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லோரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒருமனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும் படியாகவும் தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய்க் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும்; சபையானது வஞ்சக போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய்ப் பூரண வளர்ச்சியடையும் படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது. (எபே.4:11-16)

## இதழின் உள்ளே



"புதிய எருசலேம் செய்தி"க் கென்று (Printing Press) அச்சகம் அமைக்க இடம் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. அதற்காக கர்த்தரை துதிக்கும்படி வேண்டுகிறோம். அந்த இடத்தில் அச்சகம் சீக்கிரம் அமைக்கப்பட யாவரும் ஜெபிக்கும்படியாக வேண்டுகிறோம்."

# ஆசிரியர் உரை

அன்பான தேவனுடைய பிள்ளைகளே, ஆதிசபையின் வீழ்ச்சிக்குப்பின் ரோமன் கத்தோலிக்கு சபையின் காலமாயிருந்தது. கி.பி. 3-ம் நூற்றாண்டு முதல் 16-ம் நூற்றாண்டு வரை சபையின் இருண்ட காலமாகும் (Dark Age). சபைக்குள் உலகம் புகுந்தது. ரோமானியருடையதும் மற்ற புறஜாதிகளுடைய அஞ்ஞான மார்க்கங்களின் பல அஞ்ஞான சடங்காச்சாரங்களும் சபைக்குள் புகுந்தன. எது திருச்சபை என்பதே அறியமுடியாதபடி வேத-வசனம் மறைக்கப்பட்டது. 16-ம் நூற்றாண்டில் தேவன் டாக்டர் மார்ட்டின் லூத்தரை (Dr. Martin Luther) எழுப்பினார். இவர் மெழுகுவர்த்தி ஏற்றுதல், ஜெபமாலை உருட்டுதல், பூஜை பண்ணுதல் போன்ற கிரியைகளினாலல்ல விசுவாசத்தினால் மனிதன் இரட்சிக்கப்படுகிறான் (ரோம 1:17) என்ற சத்தியத்தை தேவன் தனக்கு ஒப்புவித்த பிரகாரம் பிரசங்கித்தார். இதை அவர் பிரசங்கித்த பொழுது பலதுன்பங்களும் உபத்திரவங்களும் நேரிட்டன. ஆனாலும் மார்ட்டின் லூத்தருக்கு ஆதி அப்போஸ்தல மற்ற சத்தியங்கள் வெளிப்படவில்லை. 18-ம் நூற்றாண்டில் ஜான் வெஸ்லி, (John Wesley) சார்லஸ் வெஸ்லி (Charles Wesley) ஆகிய சகோதரர்கள் எழும்பி மனிதன் விசுவாசத்தினால் இரட்சிக்கப்படுவது மாத்திரமல்ல பரிசுத்தமாக்கப்பட வேண்டும் என்ற சத்தியத்தை வெளிப்படுத்தல் பெற்று பரிசுத்த ஜீவியத்தைப் பற்றி பிரசங்கித்தார்கள். அப்பொழுது கிறிஸ்தவ கோவில்களில் இவர்களுக்கு பிரசங்கம் செய்ய இடம் கிடைக்கவில்லை. ஆனாலும் இவர்களுடைய ஊழியத்தால் இங்கிலாந்தில் எழுப்புதல் உண்டாகி பரவிற்று. இதே சமயத்தில் முழுக்கு ஞானஸ்நானம்தான் சரி என்ற சத்தியமும் வெளிப்பட ஆரம்பித்தது. ஜான் கால்வின் (John Calwin) 20-ம் நூற்றாண்டின் துவக்கத்தில் அமெரிக்காவில் அந்நிய பாஷை அடையாளத்துடன் பரிசுத்தாவியானவர் விசுவாசிகளை அபிஷேகித்தார். அது முதற் கொண்டு பெந்தெகொஸ்து சபைகள் தோன்றி உலகமெங்கும் பரவ ஆரம்பித்தன. இப்படியாக தேவன் படிப்படியாக ஆதி அப்போஸ்தல உபதேசத்தை வெளிப்படுத்திக் கொண்டே வந்து, இந்தக்கடைசிக்காலத்தில் ஆதி அப்போஸ்தலருக்கு இயேசு கிறிஸ்து கொடுத்த அதிகாரங்களையும், கட்டளைகளையும் எங்களுக்கு தரிசனமாகி கையளித்து கட்டளையிட்டுள்ளார். அவைகளில் பாவமன்னிப்பு அதிகாரமும் ஒன்று (யோவா 20:23). ஆதி அப்போஸ்தல உபதேசங்கள் படிப்படியாக நிலை நாட்டப்பட்டது போல் இதுவும் தேவனால் நிலை நாட்டப்படும். ஆகையால் நீங்களும் இதை ஏற்றுக் கொண்டு பரிசுத்தமடைந்து திருச்சபையோடு சேர்ந்து கர்த்தருடைய வருகைக்கு ஆயத்தப்படுவீர்களாக, "இதோ கர்த்தர் வருகிறார்."

கிறிஸ்துவுக்குள்,

Chief Pastor N. Lazar.

# பாவ அறிக்கை என்றால் என்ன?

நம்முடைய பாவங்களுக்கு நாம் மன்னிப்பு பெறுவதற்காக இயேசுகிறிஸ்து வாகிய நமது கர்த்தர் ஏற்படுத்திய வழி:

இயேசு நாதருக்கு கீழ்ப்படியவும், கடவுளின் மன்னிப்பைப் பெற்றுக் கொள்ளவும், கடவுள் மீது நமது அன்பை உறுதிப் படுத்தவும், நாம் பாவத்திலிருந்து, சுயமதிப் பாகிய அந்தகாரத்திலிருந்து விடுபடவும் பாவ அறிக்கை செய்ய வேண்டும்.

**எந்தப் பாவங்களைச் சொல்ல வேண்டும்?**

நாம் செய்த சகலசாவான பாவங்களையும், அற்பப் பாவங்களையும் சொல்ல வேண்டும்.

**யாரிடம் சொல்ல வேண்டும்?**

தேவனால் அழைக்கப் பெற்று, அபிஷேகிக்கப்பட்டு, அதிகாரம் உள்ள எந்த (தேவனுடைய) குருவிடமும் அவர்கள் ஏற்றுக் கொண்டால் சொல்லலாம். குருவானவர் இயேசுவானவருக்குப் பதிலாக இருக்கிறார். ஆகவே பயப்படாதே. தவிர அவரும் உன்னைப்போல (சிறுவனாய்) இருந்தார் ஆகையால் பயமின்றி உன் பாவங்களையெல்லாம் அவரிடம் வெளிப் படுத்த வேண்டும்.

**எப்பொழுது பாவ அறிக்கை செய்ய வேண்டும்?**

சாவான பாவம் செய்தால் உடனே குருவானவரிடம் பாவ அறிக்கை செய்ய வேண்டும். சாதாரணமாக வாரத்திற்கு ஒரு முறையாவது பாவ அறிக்கை செய்ய வேண்டும். விடுமுறை காலத்திலும் சமயம் கிடைக்கும் பொழுதும் பாவ அறிக்கை செய்ய கவனமாயிருக்க வேண்டும்.

**எப்படி பாவ அறிக்கை செய்ய வேண்டும்?**

I. பாவங்களுக்காக மனஸ்தாபப் பட வேண்டும் (வருத்தப்பட வேண்டும்), மனஸ்தாபமின்றி பாவமன்னிப்பு பெற முடியாது. "இனிமேல் எந்தப்பாவமும் செய்வதில்லை" என்று உறுதியான தீர் மானம் செய்ய வேண்டும்.

II. (1) **ஆத்ம சோதனைக்கு முன் :**

தெய்வத்தை நோக்கி ஜெபித்து, கல்வாரியை நோக்கி பார்த்து தேவன் உனக்கு ஞான ஒளியை அளிக்குமாறு உன் பாவங்களைக் காட்டுமாறு (உணர்த்துமாறு) வேண்டுதல் செய்.

(2) **ஆத்ம சோதனைக்குப் பின்**

உன் பாவங்களை அறிந்து கொள்ளக் கீழ்கண்ட கேள்விகளை உன்னிடமே கேள்.

III (1) **கடவுள் மட்டில் நம் கடமைகள்**

கடந்த பாவஅறிக்கை நன்றாகச் செய்தேனா? மனம் பொருந்தி சாவான பாவங்களை மறைத்தேனா? "மறைத்திருந்தால் அப்பாவங்களை கட்டாயமாகச் சொல்ல வேண்டும்". ஏனெனில் கடந்த பாவ அறிக்கையில் உன்பாவங்கள் மன்னிக்கப் படவில்லை. மேலும் தேவ துரோகம் என்னும் பாவத்தையும் செய்தாய்.

சாவான பாவங்களை மறந்து போனேனா? மறந்திருந்தால் கடந்த பாவ அறிக்கை பயனுள்ளதாயினும், இப்பொழுது மறந்து போன பாவங்களைச் சொல்ல வேண்டும்.

என் கடந்த பாவ அறிக்கைக்கு ஆயத்தம் எப்படிச் செய்தேன்? என் பாவங்களை அறிந்து கொள்ள நான் முயற்சி செய்தேனா? மற்றவர்களோடு பரியாசமாய் பேசினேனா? சிரித்தேனா?.

ஞாயிற்றுக்கிழமைகளிலும் மற்ற வாராந்திர கூட்டங்களிலும் பிரசன்னமாயிருக்கத் தவறினேனா? எத்தனை தடவை? ஆராதனை ஆரம்பித்த பின் வந்தேனா? ஆராதனை நேரத்தில் பராக்காயிருந்தேனா? மற்றவர்களோடு பேசினேனா? விளையாடினேனா? ஜெபிப்பதிற்குப் பதிலாக தூங்கினேனா? தினமும் காலையிலும் மாலையிலும் பக்தியோடு கடவுளை ஆராதித்தேனா? வேதம் வாசித்தேனா? சத்தியம் செய்தேனா? பொய் சொன்னேனா? ஒரு நாளைக்கு எத்தனை தடவை? பிறருக்குப் பயந்தோ, வெட்கப்

பட்டோ கிறிஸ்துவ கடமைகளில் தவறினேனா? சாவான பாவத்தோடு திருவிருந்தில் பங்கு கொண்டேனா? பக்தியில்லாமல் திருவிருந்தில் பங்கு பெற்றேனா? கர்த்தருடைய பந்தியில் பங்கு பெற்ற பின் நன்றி செலுத்தத் தவறினேனா? உபவாசித்தேனா? சபைகளில் உபவாச நியமமிருந்தால் அதை கடைபிடித்தேனா?

(2) பிறர் மட்டில் நம் கடமைகள்:

என் பெற்றோர்களை நேசித்தேனா? அவர்களுக்கு கர்த்தருக்குள் கீழ்ப்படிந்தேனா? சந்தோஷத்தோடு கீழ்ப்படிந்தேனா? அவர்களுக்கு உதவி செய்தேனா? என் வகுப்பிலும், மற்ற பிள்ளைகளுக்கும், உதவி தேவைப்பட்டவர்களுக்கும் உதவி செய்தேனா? வீட்டிலும் பள்ளிக் கூடத்திலும், தெருவிலும் எங்கும் நல்ல முன்மாதிரியாயிருந்தேனா? மற்றவர்கள் பேரில் காய்மாரமாக இருந்தேனா? மற்றவர்கள் மேல் கோபமாயிருந்தேனா? சண்டை போட்டேனா? மற்றவர்களை அநியாயமாயடித்தேனா? அவர்கள் மனம் வருந்தும்படி பேசினேனா? மற்றவர்களைப் பழி வாங்க நினைத்தேனா? திருடினேனா? திருட ஆசைப்பட்டேனா? பிறருடைய சொத்துக்களைச் சேதப்படுத்தினேனா? திருடின பொருளைத் திருப்பிக் கொடுத்தேனா? மன்னிப்புப் பெற்றேனா? மற்றவர்களைப்பற்றி அபாண்டமாய் சொன்னேனா? மற்றவர்களைப்பற்றி கோள் சொன்னேனா? தகுதியான காரணமின்றி மற்றவர்களுடை குற்றங்களை அறிவித்தேனா? (ஆனால் ஒருவன் மற்றவர்களுக்குத் தீமையைச் செய்கிறான், வழிதவறிப் போகிறான் என்று மெய்யாகவே உனக்குத் தெரிந்தால் கட்டாயமாகப் பெரியோர்களுக்கு அதாவது குருவானவர் ஆசிரியர், பெற்றோர்கள், அவனைப்பற்றி வெளிப்படுத்த வேண்டும் இது உன் கடமை).

எனக்குப்பதிலாக மற்றவர்கள் தண்டிக்கப்பட்டால், நான்தான்] குற்றம் செய்தேன் என்று ஏற்றுக் கொண்டேனா? பொய் சொன்னேனா? வகுப்பிலோ, விளையாட்டிலோ, தொழிலிலோ, மற்றவர்களைப் பொய் சொல்லி ஏமாற்றினேனா? பரீட்சையில் பிறரைப் பார்த்து எழுதினேனா?

(3) உன் மீதுள்ள கடமைகள்

சோம்பேறியாயிருந்தேனா? (எழுந்திருக்க, வீட்டு வேலையைச் செய்ய, பள்ளி, சபை ஒழுங்கை அனுசரிக்க, உதவி செய்ய) என் தவறுதலினால் பள்ளிக்குப் போகாமலிருந்தேனா? வீட்டுப் பாடங்களை நன்றாகச் செய்தேனா? மேய்ப்பர் அறிவித்தவைகளை நன்றாய் நிறைவேற்றினேனா? பெருமை கொண்டேனா? பொறாமை கொண்டேனா? என் நினைவுகளும் விருப்பங்களும் நல்லவைகளாக, நன்றாகவிருந்தனவா? கண்ணடக்கமாயிருந்தேனா? கெட்ட புஸ்தகங்களை வாசித்தேனா? கெட்ட படங்களைப் பார்த்தேனா? கெட்ட பேச்சு பேசினேனா? தனியாகவோ, மற்றவர்களோடோ கெட்ட செய்கை செய்தேனா? சோதனைக் காலத்தில் ஜெபித்தேனா? ஊழியத்தில் உதவி செய்தேனா?

(4) ஆன்ம சோதனைக்குப் பின்

"மனஸ்தாபமின்றி பாவ மன்னிப்பு இல்லை" ஆகவே உன் பாவங்களை அறிந்து அவைகளைக் குருவானவரிடம் சொல்லும் முன் அவைகளுக்காக மனஸ்தாபப்பட வேண்டும். பாவங்களை அகற்ற தேவனின் உதவியைக் கேள். ஜெபித்து கிருபைக்காக கெஞ்ச வேண்டும்.

IV (1) பாவ அறிக்கை செய்யும் போது:-

முழந்தாளிட்டு குருவை நோக்கி "நான் பாவம் செய்துவிட்டேன் எனக்கு மன்னியுங்கள்" என்று சொல்ல வேண்டும். குருவானவர் "கர்த்தாவே நல்ல பாவ அறிக்கை செய்ய நீர் இந்த ஆத்துமாவுக்கு உதவி செய்யும்" என்று ஜெபிக்க வேண்டும். பிறகு "ஐயா நான் பாவ அறிக்கை செய்து- நாள்- வாரம் - மாதம் - ஆயிற்று" என்று சொல்லி, கடந்த பாவ அறிக்கை செய்த போது மேய்ப்பர் கொடுத்த கட்டளையை நிறைவேற்றி விட்டேன் என்று சொல்ல வேண்டும்.

(2) ஒன்றையும் மறைக்காமல் தெளிவாக உன் பாவங்களைச் சொல். குருவானவரை ஏமாற்றலாம். ஆனால் கடவுளை ஏமாற்ற முடியாது. சமயத்தில் குருவானவரும் கண்டு

பிடித்து விடுவார். ஒரு பாவத்தைச் சொல்ல கடினமாயிருந்தால் குருவிடம் உதவி கேள்.

(3) உன் பாவங்களை வெளிப்படுத்திய பின் "இந்தப் பாவங்களுக்காகவும், நான் மறந்து போன பாவங்களுக்காகவும் என் ஜீவிய காலத்தில் செய்த எல்லாத் தவறுதல்களுக்காகவும் மனஸ்தாபப்படுகிறேன். தெய்வமே பாவமன்னிப்பு தாருமைய்யா" என்று ஜெபிக்க வேண்டும். குருவானவரும் இந்த சமயத்தில் ஜெபிப்பார். பாவ மன்னிப்பின் செய்தி குருவானவர் மூலம் வெளிப்படும் அது உன் உள்ளத்துக்கும் தெரியும்.

(4) குருவானவர் கொடுக்கும் புத்திமதியை கவனமாய் கேள். இந்த நேரத்தில் உன் பாவங்களை நினைக்க வேண்டாம். குருவிடம் அதிக நேரம் பேச வேண்டுமானால், குருவானவருக்கு வசதியான நேரம் எது என்று கேட்டறிந்து அந்த வேளையில் போய் ஆலோசனைக் கேள்.

(5) கடைசியில் குருவானவர் பாவமன்னித்தல், ஆசீர்வாதம் கொடுக்கும் போது உன் மனதில் நம்பிக்கையோடு அதை ஏற்றுக் கொண்டு குருவானவருக்கு (வந்தனம்) ஸ்தோத்திரம் சொன்ன பிறகு எழுந்திருந்து போக வேண்டும்.

V பாவ அறிக்கைக்குப் பின்:-

(1) கடவுளுக்கு ஸ்தோத்திரம் செய்து பக்தியோடு குருவானவர் உனக்கிட்ட கட்டளையை நிறைவேற்று.

(2) குருவின் ஆலோசனையைப் பற்றிக் கவனத்தோடு தியானி.

(3) பயபக்தியோடு ஜெ ப ம் ப ண் ணி வெளியே போய் நல்ல கிறிஸ்தவனாக ஜீவிதம் செய்ய வேண்டும்.

(4) உன்னைச் சமூலமாய் தேவனுக்கு ஒப்புக் கொடு.

"தன்னைத்தான் நடத்துகிறவன் எவனோ அவன் தகாதவனால் நடத்தப்படுகிறான்" (புனித பெர்னார்ட்). உன் ஆன்ம ஜீவியத்தை நடத்த ஒரு குருவானவர் தேவை. நீ ஒரு தீர்மானத்தைச் செய்யு முன் அவர் ஆலோசனைகள் உனக்கு உதவியாயிருக்கும்.

நீ தெரிந்து கொள்ளும் குருவானவரிடம் உனக்கு முழு நம்பிக்கை இருக்க வேண்டும். அப்பொழுதுதான் கஷ்டமில்லாமல் உன் நற்குணங்களையும், தீயகுணங்களையும் சொல்லுவாய். அவருடைய ஆலோசனைகளைச் சந்தோஷமாய்க் கேட்பாய். சாதாரணமாக உன் ஆன்ம குரு உனக்குப் பாவ மன்னித்தல் கொடுப்பவராய் இருப்பார். உனக்குப் பிரியமான குருவைத் தெரிந்து கொண்டு அவரிடம் போய் "ஐயா, நீங்கள் எனக்கு குருவாயிருப்பீர்களா? உங்களை அதிகமாய் நம்புகிறேன். உங்களுக்கு என்னைப் பற்றி எல்லாம் சொல்லுவேன்" என்று அவரிடம் சொல்.

குரு சந்தோசத்தோடு உனக்கு உதவி செய்வார். உன் நற்குணங்கள், துர்க்குணங்கள் சந்தோசங்கள் சந்தேகங்கள் எல்லாவற்றையும் அவருக்கு வெளிப்படுத்து அவரோடு பேசும்போது எப்போதும் நம்பிக்கையோடு உண்மையைச் சொல். ஏறக்குறைய ஒவ்வொரு மாதமும், இரண்டு வாரங்களுக்கு ஒரு முறை அவருடைய ஆலோசனைகளை ஏற்கும்படி அவரைப் பார்க்க வேண்டும்.

அவசியம் ஏற்பட்டால் *(எப்படி என்றால், அவர்மட்டில் உனக்கு நம்பிக்கை இல்லை. அல்லது அதிக காலம் அவர் அங்கேயிருக்கமாட்டார் அல்லது உனக்கு நல்ல உறுதியான உதவி செய்யாவிடில்) உடனே வேறு ஆன்ம குருவானவரைத் தெரிந்து கொள்ளவும்.

கடைசியாக உனக்கு நல்ல வழி காட்டும் படியாக அவருக்காக வேண்டிக்கொள்.

> "நம்முடைய பாவங்களை நாம் அறிக்கையிட்டால் பாவங்களை நமக்கு மன்னித்து எல்லா அநியாயத்தையும் நீக்கி நம்மைச் சுத்திகரிப்பதற்கு அவர் உண்மையும் நீதியும் உள்ளவராயிருக்கிறார்"
>
> (1யோ 1 : 9)

# மறு ஜெனனம்

"...ஒருவன் மறுபடியும் பிறவாவிட்டால் தேவனுடைய ராஜ்யத்தைக் காண மாட்டான் என்று மெய்யாகவே உனக்குச் சொல்லுகிறேன்..." (யோ 3 : 3)

"...ஒருவன் ஜலத்தினாலும் ஆவியினாலும் பிறவாவிட்டால் தேவனுடைய ராஜ்யத்தில் பிரவேசிக்கமாட்டான் என்று மெய்யாகவே உனக்குச் சொல்லுகிறேன்" (யோ 3 : 5)

இரண்டு பிறப்புகள், முதல் பிறப்பு மாமிசத்திற்குரியது, இரண்டாம் பிறப்பு ஆவிக்குரியது. முதல் பிறப்பு (புருஷனுடைய) மாமிச சித்தத்தினாலானது. இரண்டாம் பிறப்பு ஆவிக்குரியது தேவனால் உண்டாவது. முதல் பிறப்பு நாம் அறியாமல் பிறப்பது இரண்டாம் பிறப்பு நம்முடைய விருப்பத்தினால், விசுவாசத்தினால் பிறப்பது. மற்றவர்கள் இதற்கு உடந்தையாவதில்லை (ஞானத்தாய்-தகப்பனில்லை).

இந்த பிறப்பினால் அந்த மனிதனும், தேவனும் கிரியை செய்கிறார்கள். இயேசு கிறிஸ்துவை விசுவாசிப்பதும் ஏற்றுக் கொண்டு மனந்திரும்புவதும் மனிதனுடைய கடமை. அதை செயல்படுத்துவதும், மறுபடியும் பிறப்பித்தலும் தேவனுடைய கடமை. அந்த மறுபிறப்பு ஜலத்தினாலும், ஆவியினாலும் உண்டாகிறது. ஜலத்தினால் ஞானஸ்நானம். இந்த ஞானஸ்நானமானது என்ன? எப்படி? ஸ்நானம் என்றால் முழுகுதல் என்றர்த்தம். அதற்கு மிகுதியான தண்ணீர் தேவை (யோ 3: 22,23). தண்ணீருக்குள் இறங்க வேண்டும் (அப் 8 : 38). தண்ணீரை விட்டு கரை ஏற வேண்டும் (மத் 3 : 16). அதற்கு விசுவாசம் வேண்டும் (மாற் 16: 16).

இயேசு கிறிஸ்துவை சுவிசேஷத்தை விசுவாசித்து மனந்திரும்ப வேண்டும். பாவ அறிக்கை செய்ய வேண்டும், மாதிரி ஸ்நானம் யோவான் ஸ்நானகனுடையது. அப்பொழுதுதான் அவன் கிறிஸ்தவனாகிறான் (கலா 3 : 27). அவன் பாவம் மன்னிக்கப்படுகிறது. கழுவப்படுகிறது (அப் 2 : 38; 22 : 16). அவர்கள் தேவனுடைய இராஜ்யத்துக்குள் பிரவேசிக்கிறார்கள். தேவ ஆவியினால் கிறிஸ்து அவர்களுக்குள், வாசம்பண்ண வருகிறார் (பரிசுத்த ஆவியின் அபிஷேகம்).

முழுக்கு ஞானஸ்நானமும், பரிசுத்தாவியின் அபிஷேகமும் பெறாதோர் மெய் கிறிஸ்தவரல்ல (ரோம 8 : 9). ஞானஸ்நானம் எனும் போது தண்ணீரின் ஸ்நானமும், ஆவியின் ஞானஸ்நானத்தையும் சேர்த்தே குறிக்கும் (கலா 3 : 27, Iகொரி 12 : 13; ரோம 6 : 2,3). கிறிஸ்தவமார்க்கத்தின் வல்லமையே பரிசுத்த ஆவியில்தான் இருக்கிறது. சிலர் ஜீவனை ஏற்றும் அதை பரிபூரணமாய்ப் பெற்றுக் கொள்ளாமலிருப்பர்.

ஒரு மனிதனை மாற்றுகிறவர் தேவ ஆவியானவரே. ஆவியில்லாத சரீரம் செத்தது போல் ஜீவன் இல்லாத மதம் செத்ததே. அதிலே ஆவியில்லை. வெறும் மாம்ச கூட்டமே (எசேக் 37 :1-5) இரண்டு முறை தீர்க்கதரிசனமுரைத்தல் வேண்டும் (எசேக் 37: 9,10). நீ மறுபடியும் பிறந்திருக்கிறாயா? நீ பரிசுத்தாவியினால் பிறந்திருக்கிறாயா? நீ மறுபடியும் பிறவாவிட்டால் தேவனுடைய ராஜ்யத்தில் பிரவேசிக்க மாட்டாய் என்று பரலோக ராஜ்யத்தின் திறவுகோல்களைத் தம் கையில் வைத்திருக்கிறவர் சொல்லுகிறார். இடுக்கமான வாசல் வழியாய் உட்பிரவேசி (மத் 7 : 14).

உன்னை உனக்கு போதிக்கிறவன் வஞ்சிக்க இடங்கொடுக்காதே. நீ மாறுபாடுள்ள சந்ததியை விட்டு விலகு. தேவனுடைய அப்போஸ்தலரோடு சேர்ந்து கொள். செத்தவர்கள் கூட்டத்தில் நில்லாதே (அப் 2 : 38,42)

நீங்களும் எங்களோடே ஐக்கியமுள்ளவர்களாகும்படி, ...இதை உங்களுக்கு அறிவிக்கிறோம். எங்களுடைய ஐக்கியம் (உங்க

ளுடையதல்ல) பிதாவோடும் அவருடைய குமாரனாகிய இயேசு கிறிஸ்துவோடும் இருக்கிறது (I யோவா 1 : 3).

"பேதுரு அவர்களை நோக்கி: நீங்கள் மனந்திரும்பி, ஒவ்வொருவரும் பாவமன்னிப்புக்கென்று இயேசுகிறிஸ்துவின் நாமத்தினாலே ஞானஸ்நானம் பெற்றுக் கொள்ளுங்கள், அப்பொழுது பரிசுத்த ஆவியின் வரத்தைப் பெறுவீர்கள்" (அப் 2 : 38). "வாக்குத்தத்தமானது உங்களுக்கும், உங்கள் பிள்ளைகளுக்கும், நம்முடைய தேவனாகிய கர்த்தர் வரவழைக்கும் தூரத்திலுள்ள யாவருக்கும் உண்டாயிருக்கிறது என்று சொல்லி"; "இன்னும் அநேக வார்த்தைகளாலும் சாட்சி கூறி, மாறுபாடுள்ள இந்தச் சந்ததியை விட்டு விலகி உங்களை இரட்சித்துக் கொள்ளுங்கள் என்றும் புத்தி சொன்னான்" (அப் 2 : 39,40).

"அவனுடைய வார்த்தையைச் சந்தோசமாய் ஏற்றுக் கொண்டவர்கள் ஞானஸ்நானம் பெற்றார்கள். அன்றைய தினம் ஏறக்குறைய மூவாயிரம் பேர் சேர்த்துக்கொள்ளப்பட்டார்கள்" (அப் 2 : 41).

"அவர்கள் அப்போஸ்தலருடைய உபதேசத்திலும், அந்நியோந்நியத்திலும், அப்பம்பிட்குதலிலும், ஜெபம் பண்ணுதலிலும் உறுதியாய் தரித்திருந்தார்கள்" (அப் 2 : 42). நீ மறுபடியும் பிறந்திருக்கிறாயா? இல்லையென்றால் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசித்து மறு ஜெனனம் அடைந்து கொள். நரகத்துக்குத்தப்புவாய். ஒரு தரம் பிறந்தவனுக்கு இரண்டு மரணம்: ஒன்று சரீர மரணம் இரண்டாவது அக்கினியும் கந்தகமும் எரிகிற கடலிலே (நரகத்திலே) தள்ளப்படுதல் (வெளி 21 : 8). இரு தரம் பிறந்தவனுக்கு ஒரு மரணம் சரீர மரணம், மரணமடையாமலுமிருப்பான்.

---

"நாம் செய்த நீதியின் கிரியைகளின் நிமித்தம் அவர் நம்மை இரட்சியாமல், தமது இரக்கத்தின் படியே, மறுஜென்ம முழுக்கினாலும், பரிசுத்த ஆவியினுடைய புதிதாக்குதலினாலும் நம்மை இரட்சித்தார்" (தீத்து 3 : 5)

---

## அப்போஸ்தலன் அவசியமா?

நமக்கும் பிதாவுக்கும் மத்தியஸ்தர் இயேசுவே, ஆகையால் இடையில் எந்த மனிதனும் தேவையில்லை என்றும், தேவன் தம்முடைய வார்த்தைகளை வேதமாக எழுதி நம்முடைய கையில் கொடுத்து விட்டார், அதைப் படித்து அதன்படி நடக்க வேண்டியது தான் என்றும், இயேசுவையே பின்பற்று; மனிதர்களைப் பார்க்காதே ஒழுங்கானவன் ஒருவனுமே இல்லை என்றும், பிதா எங்கும் வாசமாயிருக்கிறார், எங்கும் அவரைத் தொழுது கொள்ளலாம், ஆகையால் எந்த மனிதரோடும் சேர்ந்து ஆராதிக்க அவசியமில்லை என்றும், என்னுடைய ஐக்கியம் பிதாவோடும், அவருடைய குமாரனோடும் இருக்கிறது. இதுவே போதும், வேறு எந்த மனிதனுடைய ஐக்கியமோ, ஆளுகையோ அவசியமில்லை என்றும், எல்லாரும் சமம் பெரியவன் சிறியவன் கிடையாது என்றும், இவ்வாறு பல காரணங்களைச் சொல்லி தேவ மனிதர்களை புறம்பாக்கி, தனித்து, சுயமாய் இஷ்டம் போல் மனிதர்கள் செயல்படும் காலமாயிருக்கிறது இது. மனிதர்கள் அதாவது தேவ மனிதர்கள் நமக்குத் தேவை. அப்போஸ்தலன் அவசியம் தேவை என்பதை வேதத்தின் வெளிச்சத்தில் காணலாம்.

1 மாதிரி காட்ட :

தேவன் நம்மை முன் குறித்ததின் நோக்கம் நாம் அவருடைய குமாரனின் சாயலுக் கொப்பாயிருப்பதற்கே (ரோம 8 : 30) ஆகையால் நாம் எல்லாக்காரியங்களிலும் எப்பொழுதும் அவருக்கேற்றபடி நடக்க அவர் விரும்புகிறார். அவருடைய சித்தத்தை அறிந்தவனே அவருக்கேற்றபடி நடக்க முடியும். பரி. பவுல் சொல்கிறார்,

"எங்களுக்கோ கிறிஸ்துவின் சிந்தை உண்டாயிருக்கிறதென்று" (I கொரி 2 : 16). ஆகவே அவர் கிறிஸ்துவுக்கேற்றபடி நடந்து நல்ல போராட்டத்தைப் போராடி ஓட்டத்தை முடிக்கிறார். நாம் என்னென்ன செய்ய வேண்டும் என்று வாழ்ந்து மாதிரி காட்ட இப்படிப்பட்ட ஒரு ஆள் தேவை. அவர் தேவனால் அனுப்பப்பட்டவரானால் தேவனுக்கேற்றவைகளை அறிந்து அதன்படி நடப்பார். நாம் 'அவரிடத்தில் கற்று, அடைந்து, கேட்டு, கண்டு அவைகளைச் செய்து தேவ சமாதானத்துடன் இருக்கலாம் (பிலி 4 : 9). இப்படிப்பட்டவர் வழிகாட்டுகிறபடி நடக்கிறவர்களை நாம் மாதிரியாக நோக்க வேண்டும் (பிலி 3 : 17). வேலை செய்ய மனதில்லாமல் சாப்பிட விரும்புகிறவர்கள், தங்களுடைய மாதிரியைக் கண்டு சீர்படுத்திக் கொள்ள வேண்டுமென பவுல் புத்தி சொல்கிறார் (II தெச 3 : 7-9).

2 ஆத்மீக ஆகாரம்கொடுக்க :

ஒரு வீட்டில் சகலவித போஜனபதார்த்தங்களும் போதுமான அளவு இருப்பது போல், சத்திய வேதத்தில் ஒரு மனிதனுக்குத் தேவையான சகல ஆத்மீக ஆகாரங்களும் இருக்கிறது. அந்த வீட்டின் தலைவி தன்னுடைய பிள்ளையின் உடல் பக்குவத்திற்கேற்ப ஏற்ற ஆகாரத்தைக் கொடுத்து பிள்ளையை போஷித்து காப்பாற்றுகிறார். அது போல் நம்முடைய ஆத்மீக நிலையறிந்து அதற்கேற்ற ஆலோசனைக் கொடுக்க தாய் போன்ற தேவமனிதன் தேவை (I கொரி 3 : 1,2; எபி 5:12-14).

3 ஜெபம் பண்ண :

பரி. பவுல் தேவனை நோக்கி முழங்கால் படியிட்டு, சபையார் தேவ ஆவியினாலே உள்ளான மனுஷனில் வல்லமையாய்ப் பலப்படவும்,...அன்பிலே வேரூன்றி, நிலை பெற்றவர்களாகி, சகல பரிசுத்தவான்களோடுங்கூட கிறிஸ்துவினுடைய அன்பின் அகலமும், நீளமும், ஆழமும், உயரமும் இன்னதென்று உணர்ந்து அறிவுக்கெட்டாத அந்த அன்பை அறிந்து கொள்ள வல்லவர்களாகவும், தேவனுடைய சகல பரிபூரணத்தினாலும் நிறைவுபடவும் (எபே 3 : 15-20). மகிமையின் பிதாவானவர் தம்மை அறிந்து கொள்வதற்கான ஞானத்தையும், தெளிவையும் அளிக்கிற ஆவியை அருளவும், மேன்மையானவைகளை அறியும்படிக்கு பிரகாசமான மனக்கண்களை தரும்படிக்கும் (எபே 1 : 16-19). இடைவிடாமல் தேவனை ஸ்தோத்தரித்து சபையாரை நினைவுக் கூர்ந்து வேண்டிக் கொண்டார் (I தெச 1 : 2-4). இந்த நீதிமானுடைய ஊக்கமான வேண்டுதலால் அவரின் ஆளுகைக்குட்பட்டிருந்த சபையார் மிகுந்த பிரயோஜனமடைந்தனர்.

பிரியமானவர்களே, அப்போஸ்தலன் பவுலின் மாதிரிகளை சிலவற்றை வேதத்தில் அறிகிறோம்; அவர் ஏராளமாய் சபைக்குக் கொடுத்த ஆலோசனைகளில் வார்த்தைகளால் அவர் சொன்னவைகள் நமக்கு தெரியாது (II தெச 2 : 5, 15). ஆனால் அவர் எழுதின நிருபங்கள் நமக்குண்டு. அவரால் இந்தப் பிரயோஜனத்தை நாம் அடைந்த போதிலும், நமக்காய் ஜெபம் பண்ணவும் அவருடைய வார்த்தைகளும் நமக்கு இல்லை. ஆதிசபையாரைப் போல் நாமும் மேன்மை பெற்று விளங்க நமக்காய் ஜெபம் பண்ண ஆலோசனை கொடுக்க இப்படிப்பட்ட ஒரு அப்போஸ்தலன் தேவை.

4 நினைப்பூட்ட :

நாம் ஒருக்காலும் இடறி போகாதிருந்து, நித்தியராஜ்ஜியத்திற்குட்படும் பிரவேசம் பூரணமாய் உண்டாவதற்கேதுவானவைகளை நமக்கு திரும்பத் திரும்ப நினைப்பூட்ட அப்போஸ்தலன் தேவை. (I பேது 1 : 10-12). நாம் இவைகளை அறிந்தும், அறிந்த சத்தியத்தில் நிலை கொண்டிருந்தாலும், வேளாவேளைகளில் தவறிப்போக வாய்ப்புண்டு (II பேது 1 : 12). ஆகையால் அவைகளை எப்போதும் நினைப்பூட்டிக் கொண்டிருக்க ஆள் தேவை. திரும்பத்திரும்ப ஒரு உபதேசத்தை பிரசங்கிப்பதால், பேசுவதால் கேட்கிறவர்களை அதற்கு கீழ்ப்படுத்த முடியும் (இறை வெளிப்படுத்தல்). திரும்ப திரும்ப எச்சரிப்பதால் விழாதிருக்க வாய்ப்புண்டு (பிலி 3 : 1, 2).

5 குழப்பத்தை தெளிவுப்படுத்த :

எல்லாவற்றையும் எல்லாராலும் அறிந்து கொள்ள முடியாது. இதை இப்படிச் செய்ய வேண்டும் என்று அவரவர்களே தீர்மானித்துக் கொள்ள முடியாது. கொரிந்து சபையார் தாங்கள் அறிந்தபடி இராப் போஜனத்தை அனுசரித்தனர். அதனால் குழப்பமுண்டாயிற்று. அங்கே அப்போஸ்தலன் இருந்ததால் இதை இப்படித்தான் செய்ய வேண்டுமென இறை உத்தரவு பெற்று குறையை மாற்ற முடிந்தது (I கொரி 11 : 23). தேவனிடம் நேரடி தொடர்புள்ள ஆள் இல்லாவிட்டால், அவனவன் இஷ்டம் போல் காரியம் நடை பெறும். விருத்தசேனத்தைக் குறித்து கருத்து வேறுபாடுகளுண்டானபோது அப்போஸ்தலரும் மூப்பரும் இந்த காரியத்தைக் குறித்து ஆலோசிக்க கூடினார்கள். (அப் 15 : 6) கூடி தீர்மானித்தார்கள். அந்த தீர்மானம் அவர்களுக்கு மட்டுமல்ல பரிசுத்தாவிக்கும் நலமாக கண்டது (அப் 15: 29) உங்கள் சபையில் கூடி எடுக்கப்படுகிற தீர்மானங்கள் பரிசுத்தாவிக்கும் நலமாக இருக்கிறதா என்று தெரிந்து கொள்ளுங்கள்.

6 வரங்களை பகிர்ந்தளிக்க :

இன்றைய கிறிஸ்தவர்கள் பலருக்கு ஆவிக்குரிய வரங்களைக் குறித்த அறிவில்லை. அன்னியபாஷையா? அது ஒரு ஆவிக் குரிய வரம் ஆகையால் எனக்கு மட்டுமல்ல எங்கள் சபையாருக்கே அது தேவை இல்லை என்று சொல்லுகிறவர்கள் ஏராளம் உண்டு. வசனம் மாத்திரம் போதும் வரங்கள் வேண்டாம் என்பாருமுண்டு. ஆனால் வேதம் சொல்கிறது : ஆவிக்குரிய வரங்களினால் சபை பக்திவிருத்தி அடைகிறது (I கொரி 14 : 12). ஆவிக்குரிய வரங்களினால் விசுவாசிகள் ஸ்திரப்படுகிறார்கள் (ரோம 1 : 10). சபை பக்தி விருத்தி அடைந்து, கிறிஸ்துவின் வருகைக்கு ஆயத்தப்படும்படி தேவன் சபைக்கு எல்லா வரங்களையும் அருளும்போது (I கொரி 1 : 7) எங்களுக்கு அது தேவை இல்லை என்று சொல்லி தேவனைவிட தங்களை ஞானிகளென்று எண்ணுகிறவர்கள் வருகைக்கு ஆயத்தப் படுவது கூடாத காரியம். ஆவிக்குரிய ஒன்பது வரங்களும் நடைமுறையிலில்லாத சபை பூரணமான சபை அல்ல. காரணம் கிறிஸ்துவாகிய அவர் மெய்சபைக்கு தம்மையே கொடுத்திருக்க (எபே 5 : 27) அந்த சபை அவருடைய சம்பூரணத்தினால் நிறைந்திருக்குமே. ஞான வரங்களை நாடுங்கள் (I கொரி 14 : 1)

வரங்களை தேவன் அப்போஸ்தலன் மூலமாகவே அருள்கிறார் (ரோம 1 : 10, I தீமோ 4 : 14). இந்நாட்களில் அநேகர் தீர்க்கதரிசனம் சொல்லுகிறார்கள் பிரசங்கிக்கிறார்கள் ஆனால் விபச்சாரம் செய்கிறார்கள், அற்புதம் செய்கிறார்கள். ஆனால் அக்கிரமம் செய்கிறார்கள் (எரே 29 : 23; மத் 7 : 21-23). அசுத்தர்களிடம் பரிசுத்தாவியானவர் வாசம் செய்ய முடியாது. அவர்கள் என்ன ஆவியை உடையவர்கள் என்பதை அவர்களுடைய கனிகளினால் அறியலாம். அப்போஸ்தலன் மூலமாய் வரங்களைப் பெற்றவர்களிடையே இத்தகைய குழப்பத்திற்கு இடமே இல்லை. ஏனெனில் தகுதியானவர்களுக்கு ஆவியினால் வரங்கள் அருளப்படுகிறது

7 வருகைக்கு ஆயத்தப்படுத்த :

கர்த்தராகிய இயேசு கிறிஸ்து வரப் போகிறார். சீக்கிரம் வரப்போகிறார். நீ எந்த சபையில் இருந்தாலும் சரிதான், எந்த குழியில் இருந்தாலென்ன? நீ எடுத்துக் கொள்ளப்படுவாய். இதற்கு ஒரு சபை அவசியமில்லை, ஊழியர்கள் அவசியமில்லை என்றே, எங்கும் தவறான செய்திகள் பிரசங்கிக்கப்படுகிறது. பிரியமானவர்களே, விவாகம் யாவருக்குள்ளும் கனமுள்ளது. அது பெரியவர்களால் நிச்சயிக்கப்பட்டு பலர் முன்னிலையில் நடைபெறும். மணவாளனாகிய கிறிஸ்துவோடு கூட சேர்த்துவிட அவரிடம் நம்மை ஒப்படைக்க ஆள் தேவை. ஆதி சபையார் எத்தகைய ஆவிக்குரிய வளர்ச்சி அடைந்திருந்தனர், எவ்வளவு தெளிவாய் இருந்தனர். அப்படிப்பட்டவர்களையே கிறிஸ்துவிடம் ஒப்படைக்க ஒரு ஆள் தேவைப்பட்டதே (II கொரி 11 : 2). நமக்குத் தேவை இல்லையோ?

கிறிஸ்து தம்முடைய மணவாட்டியை சேர்த்துக் கொள்ள வரப்போகிறர். ஆதி சபையோரும் வருகையை எதிர்நோக்கி ஆயத்தமாகி கொண்டிருந்தனர். இவர்களுக்கு நடுவே அப்போஸ்தலனுகிய பவுலுக்கு என்ன முக்கியத்துவம் வேண்டிக் கிடக்கிறது என்று பலர் எண்ணலாம். ஆனல் அவர் சொன்னர், நான் உங்களை கற்புள்ள கன்னிகையாக கிறிஸ்து என்னும் ஒரே புருஷனுக்கு ஒப்புக் கொடுக்க நியமித்தபடியால் உங்களுக்காக தேவ வைராக்கியமான வைராக்கியம் கொண்டிருக்கிறேன் என்று (II கொரி 11 : 2). காரணம் கிறிஸ்துவின் மணவாட்டியை ஆயத்தப் படுத்தும் வேலை அவருக்கு ஒப்படைக்கப் பட்டிருந்தது (II கொரி 5 : 18-20).

இறைவன் சேவிப்பபடுத்திற

நீ மரமானல், வேர் அப்போஸ்தலன், கிறிஸ்து மரத்துக்கு ஜீவன். இப்படி இருந்தால் இந்த மரம் பூத்து, காய்த்து, உலகத்தை தன் பலனல் நிரப்பும் என்று. அப்போஸ்தலனேடு ஐக்கியமாயிராதவன் வேரற்றுப்போன மரம் போலாவான் (யூதா 12). அப்போஸ்தலன் தேவை.

---

"தேவனனவர் சபையிலே முதலாவது அப்போஸ்தலரையும்...ஏற்படுத்தினர்"
(I கொரி 12 : 25).

---

# மோட்ச வழி

## குரு-சிஷ்ய உரையாடல்

குரு: இந்த கற்பனைகளை இரண்டு பிரிவாகப் பிரிக்கலாம். I. முதல் 4 கற்பனைகள் இறைவனுக்கு நாம் செய்ய வேண்டிய கடமை, இறைவனுக்கடுத்தது என்றும். II. ஐந்தாம் கற்பனை முதல் 6 கற்பனைகள் மனிதரிடம் நடந்து கொள்ள வேண்டிய நமது கடமை என்றும் பிரிக்கலாம்.

இதைச் சுருக்கி

1 இஸ்ரவேலே கேள், நம்முடைய தேவனுகிய கர்த்தர் ஒருவரே கர்த்தர். உன் தேவனுகிய கர்த்தரிடத்தில் உன் முழு இருதயத்தோடும், உன் முழு ஆத்துமாவோடும், உன் முழு மனதோடும், உன் முழு பலத்தோடும் அன்பு கூறுவாயாக என்றும்.

2 உன்னிடத்தில் நீ அன்பு கூறுவதுபோல் பிறனிடத்திலும் அன்புகூறுவாயாக என்றும் வேதம் கூறுகிறது. இதற்குள்ளாக கற்பனைகளெல்லாம் அடங்கியிருக்கிறது.

இந்த கற்பனைகளில் பலவற்றையோ, ஒருசிலவற்றையோ, ஒன்றையோ நீர் மீறியிருப்பீர் என்பதைக் காணலாம். எவ்விதத்திலும் நீர் உம்மைப் பாவி என்று உணர்ந்து உமது பாவத்திற்காக மனஸ்தாப படவேண்டும்.

சிஷ்யன்: இப்போ நான் இரண்டு விதத்திலும் பெரிய பாவி என்பதை ஒப்புக் கொள்ளுகிறேன்.

குரு: கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவை விசுவாசித்து ஏற்றுக் கொண்டு பாவத்தை விட்டு மனந்திரும்ப வேண்டும், பாவத்தை அறிக்கை செய்து விட்டுவிட்டு கிறிஸ்துவுக்கு முற்றிலுமாய் தன்னை ஒப்பு கொடுத்து (சமர்ப்பணம் பண்ணுதல்) அவரைப் பின்பற்றி நடக்க வேண்டும்.

சிஷ்யன்: ஆம், அப்படியே செய்ய முழுமனதோடு ஆயத்தமாயிருக்கிறேன். இயேசுகிறிஸ்துவை என் சொந்த இரட்சகராகவும், ஆண்டவராகவும் ஏற்றுக் கொள்ளுகிறேன்.

குரு: அவர் உன்னுடைய பாவங்களுக்காக கல்வாரிச் சிலுவையில் [இரண்டு கள்ளர்கள் மத்தியில்] இரத்தம் சிந்தி மரித்தார், அடக்கம்பண்ணப்பட்டார், மூன்றும் நாள் உயிர்த்தெழுந்தார் என்று விசுவாசிக்கிறீரா?

சிஷ்யன்: ஆம், விசுவாசிக்கிறேன்.

குரு: தேவன் உம்மை ஆசீர்வதிப்பாராக. நான் உமக்காக ஜெபம் பண்ணுகிறேன்.

சிஷ்யன்: அடுத்தபடி நான் என்ன செய்யவேண்டும்?

குரு: உம்முடைய பாவத்தை அறிக்கை செய்யும். அவைகளை விட்டுவிட்டு, முழுகி ஞானஸ்நானம் பெற்றுக் கொள்ளும் அப்பொழுது உம்முடைய பாவங்கள் மன்னிக்கப்பட்டு உம்மை விட்டு அகற்றப்படும்.

(தொடரும்)

> "விசுவாசமுள்ளவனாகி ஞானஸ்நானம் பெற்றவன் இரட்சிக்கப்படுவான்; விசுவாசியாதவனோ ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கப் படுவான்" மாற் 16 : 16

# வேதபாடம்

**ஆதி 31 : 22-55** யாக்கோபு ஓடிப்போனது லாபானுக்கு தெரிய வந்ததும் யாக்கோபை தன் ஆட்களுடன் பின் தொடர்ந்தான். ஆனால் இரவில் தேவன் லாபானை எச்சரித்து நீ யாக்கோபோடே நன்மையையேயன்றி தீமையானதொன்றையும் பேசாதே என்றார். அதனால் லாபான் யாக்கோபோடே சமாதானமாய் நடந்து கொண்டு உடன்படிக்கை செய்து கொண்டான். யாக்கோபு லாபானிடம் 20 வருஷம் சேவித்தான். ராகேல் துராபீம் என்ற சிறுவிக்கிரகத்தைத் தன் தகப்பன் வீட்டில் இருந்து திருடிவந்து விட்டாள் ஒருவேளை இது தங்கத்திலானதாக இருக்கலாம். பின்பு லாபான் யாக்கோபிடம் தன் குமாரத்திகளைத் தவிர வேறே விவாகம் முடிக்கக்கூடாது என்று வாக்கு வாங்கிவிட்டு சமாதானமாய் திரும்பி விட்டான்.

**ஆதி 32 : 1-6** யாக்கோபு பிரயாணம் பண்ணுகையில் மகனாயீமில் தேவதூதர்களின் சேனையை யாக்கோபு சந்தித்தார். யாக்கோபுக்கு பாதுகாப்பாக இந்த சேனை வந்தது என்று நினைக்க ஏதுவுண்டு. யாக்கோபு பிரயாணப்பட்டு சேயீரின் சமீபமாய் வந்து தன் சகோதரனாகிய ஏசாவுக்கு நல்ல செய்தி அனுப்பினார். உமது அடியான் வந்திருக்கிறேன் என்று சொல்லச் சொல்லி ஆட்களை முந்தி அனுப்பினார். செய்தி கொண்டுபோன ஆட்கள் திரும்பி வந்து உமது சகோதரன் நானூறு (400) பேர்களுடன் உம்மை எதிர்க்க வருகிறார் என்று மறுசெய்தி கொண்டுவந்தார்கள்.

**ஆதி 32 : 7-32** இதினிமித்தம் யாக்கோபு பயந்து ஜனங்களை இரண்டு பிரிவாய் பிரித்து ஏசாவை சாந்தப்படுத்த திரளாய் வெகுமதிகளை முன் அனுப்பி தன்னுடைய பரிவாரங்கள் எல்லாவற்றையும் ஆற்றை கடக்கச் செய்து விட்டு யாக்கோபு இறைவனை வேண்டிக்கொள்ளும்படி தேவனோடு தனித்திருந்தார். நாம் தனித்திருந்து தேவபெலத்தைப் பெற்றுக் கொள்ள வேண்டும். இராமுழுவதும் ஜெபத்தில் போராட்டம் இருந்தது. முடிவில் அவரோடு போராடியவர் தன்னை போகவிடும்படி கேட்டார். இதனால் யாக்கோபு பக்தருக்கு ஒரு காரியம் தெரியவந்தது. தான் வழிவிட்டாலுப்பினால்தான் அவர் போக முடியுமென்று தெரிந்து கொண்டு நீர் என்னை ஆசீர்வதிக்க வேண்டும் என்று மன்றாடினார். யாக்கோபுக்கு போராட்

டத்தில் பலஹீனமும் உண்டாயிற்று. முடிவில், வந்தவர் யாக்கோபிடம் கேட்டார் உன் பெயர் என்னவென்று. முன்னொரு முறை தகப்பனிடம் பெயரை மாற்றி பொய் சொல்லி ஆசீர்வாதம் பெற்றிருக்கிறர் (ஆதி 27:21-24). இப்போ உண்மையான பெயரைச் சொல்லுகிறர். என் பெயர் யாக்கோபு என்கிறர். யாக்கோபோடே பேசியவர் யாக்கோபுடைய பெயரை இஸ்ரவேல் (தேவபிரபு) என்று மாற்றுகிறர். யாக்கோபை ஆசீர்வதிக்கிறர். யாக்கோபு தேவனுல் ஆசீர்வதிக்கப்படுகிறர். அந்த இடத்திற்கு யாக்கோபு பெனியேல் என்று பெயரிடுகிறர். சூரியனும் உதயமாயிற்று.

(தொடரும்)

> "நீதிமான் செய்யும் ஊக்கமான வேண்டுதல் மிகவும் பெலனுள்ளதாயிருக்கிறது" (யாக் 5:16)

சிறுவர் பகுதி

# இவ்வாண்டு கடந்து விட்டது

தூய யோவான் பள்ளியில் வருட இறுதி ஆண்டு விழாவும், கிறிஸ்மஸ் விழாவும் கொண்டாடப்பட்டது. பள்ளியில் நடந்து கொண்டுவரும் ஞாயிறு பள்ளியின் வருட இறுதி விழாவும், அத்துடன் கொண்டாட ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தது. பள்ளியில் எல்லா துறைகளிலும் முதன்மையான மாணவ, மாணவிகளுக்கு பரிசுகள் வழங்கும் ஏற்பாடுகள் செய்யப்பட்டது.

முதலாவது, ஞாயிறு பள்ளியில் ஒழுங்காக கலந்து கொண்டதற்காக, வருடத்தின் எல்லா ஞாயிறு பள்ளிகளிலும் கலந்து கொண்ட குழந்தை ஜான்ஸிராணிக்கு முதல் பரிசு பெண்களுக்காகவும், ஆண்களுக்காக ஜான்சனும் பரிசுகள் பெற்றனர். ஞாயிறு பள்ளியில் மனப்பாடப் போட்டி, பாட்டுப் போட்டி மற்றும் எல்லா போட்டிகளிலும் ஜான்ஸிராணியே பரிசுகளைத் தட்டிச்சென்றள். அதில் சிறப்பு அம்சம் என்னவென்றல் ஜான்ஸிராணி சங்கீதம் 119-ஐ மனப்பாடம் செய்து சொன்னதுதான்.

தொடர்ந்து நடந்த பள்ளியின் விளையாட்டுப் போட்டி மற்றும் எல்லா போட்டிகளிலும், ஜான்ஸிராணியே பரிசுகளை பெற்று பள்ளியின் Championship ஐ பெற்றுச் சென்றள். இவை எல்லாவற்றிற்கும் காரணம் அவளது தாய்தான். ஜான்ஸிராணியின் தாய் அவளுக்குத் தினமும் தேவனுடைய வார்த்தைகளைச் சொல்வதும், அவளை ஜெபம் செய்ய, வேதம் வாசிக்க அவளை தூண்டினர்கள். ஜான்ஸிராணியும் அப்படியே செய்து வந்தாள். எல்லாவற்றிற்கும் மேலாக அந்த தாயின் ஜெபம் அவளைத் தாங்கியது. தனது தாயைப் போன்று ஜான்ஸிராணியும் ஒரு ஜெப வாழ்க்கையுள்ள பெண்ணுக நடந்து வந்தாள். தினமும் குறைந்தது ஒரு மணி நேரம் அவள் ஜெபித்து வந்தாள். அவள் பெற்ற எல்லா பரிசுகளுக்கும் அவளது ஜெப வாழ்க்கையே முதன்மையானதாக இருந்தது என நாம் உணரலாம்.

அன்றைய தினத்தில்தானே ஜான்ஸிராணியை பள்ளியின் முதல்வர் (School-Principal) அநேகர்களுக்கு முன்பாக ஜான்ஸிராணியைப் பற்றி புகழ்ந்தது மட்டுமின்றி அவளை மேடையில் அழைத்து சிறிது பேச வாய்ப்பும் கொடுத்தார். அப்பொழுது ஜான்ஸிராணி முதலாவது கர்த்தராகிய கிறிஸ்துவுக்கு நன்றி கூறிவிட்டு மிகவும் சுருக்கமாக தனது சாட்சியைக் கூறினுள். இவைகள் எல்லாவற்றிற்கும் எனது தாய் தான் காரணம் என்றும், எல்லாவற்றிற்கும்

மேலாய் கர்த்தராகிய கிறிஸ்து என்னை பலப்படுத்தி புத்தியும், ஞானமும் கொடுத்தார் என முடித்துக் கொண்டாள். அப்பொழுது தானே அவளுடன் படித்த மாணவ, மாணவிகளும் ஞாயிறு பள்ளியின் குழந்தைகளும் தங்களைப்பற்றி உணர ஆரம்பித்தனர். நாம் எவ்வளவு பின் தங்கி இருக்கிறோம் என்றும், எல்லாவற்றிற்கும் காரணம் நமது ஜெபஜீவியமின்மையே என உணர்ந்து கொண்டனர்.

அனேகர் ஒருவருடன் ஒருவர் இப்படியாக சொல்லிக் கொண்டனர். இந்த ஆண்டு கடந்துவிட்டது வருகிற ஆண்டிலாவது நாம் முயற்சி செய்து, ஜெபஜீவியம் செய்து முதல்வராக திகழ வேண்டும் என தீர்மானித்துக் கொண்டனர்.

பிள்ளைகளே நாமும் அப்படியே செய்வதும் 1984 கடந்துவிட்டது 1985 லாவது ஜெபஜீவியம் செய்து, நமது பெற்றோரை, விசேஷமாக தாயாரை ஜெபிக்கத்தூண்டி நமது எல்லாக் காரியங்களிலும் முதல் இடம் பிடிப்போமாக.

"கர்த்தருக்கு பயப்படுகிற மனுஷன் இவ்விதமாய் ஆசீர்வதிக்கப்படுவான்."

*சங் 128 : 4*

# குடும்பம்

## மாதர்பகுதி

பெண்கள் விசித்திரமானவர்கள், அவர்களைச் சீக்கிரம் சினம் என்னும் பிசாசு பிடித்துக் கொள்ளும். குடும்பங்களில் உண்டாகும் சண்டைகளுக்கு பெண்களே அநேகமாக காரணமாயிருப்பர். பெண்கள் ஆண்களுடன் (புருஷன்) எதிர்த்துப் பேசுவதும், வாக்குவாதம் பண்ணுவதும் தவறு. அதை இறைவன் அங்கீகரிப்பதில்லை.

சில வேளைகளில் பிள்ளைகள் காரணமாயிருப்பர். அபூர்வமாய் ஆண்களும் காரணமாயிருப்பர். தாங்கள் சமையல் வேலை, வீட்டு வேலைகள் செய்வதால் களைத்துப்போய் கணவனோடு, பிள்ளைகளோடு பெண்கள் சண்டை பிடிப்பர். தாங்கள் கஷ்டப்படுவது மற்றவர்களுக்காகவென்றும் (கணவர், பிள்ளைகள், உறவினர்) தன்மேல் மற்றவர்களுக்கு இரக்கமில்லை என்பதும் அவர்கள் நினைப்பு. அதனும் மற்றவர்கள் தங்களைக் குறைசொல்லக் கூடாது என்பர். அதே சமயத்தில் தாங்கள் செய்த சமையல் நல்லாயிருக்கா என்று சாப்பிடுகிற ஒவ்வொருவரிடமும் கேட்பர். தன் கடன் பணி செய்து கிடப்பதே, தன் கணவனுக்கும், பிள்ளைகளுக்கும் (உணவு) சமையல் செய்து பரிமாறுவது தனக்கு கிடைத்த பாக்கியம் என்று இவர்கள் எண்ணுதவரை இவர்களுக்கு மன அமைதி கிடைப்பதரிது. தங்கள் கிரியையின் பலனைப் பெற்றுக் கொள்ளுவார்கள்.

வீட்டிலுள்ள எல்லோரும் தங்களுக்கு கீழ்பட்டிருக்க வேண்டும் என்ற மனப்பான்மையுள்ள ஸ்திரிகள் குடும்பத்தில் மனத்தாங்கல் ஏற்பட்டதும் வீட்டில் சமையல் செய்யாமலும், பரிமாறாமலும் ஸ்டிரைக் பண்ணி தன் வீட்டார் பசியினால் வாடும்படி செய்வர். இது கடமை மீறலாகும். இதனால் பல விபரீதங்கள் ஏற்படலாம். குடும்பத்தில் எந்த பிரச்சினை வந்தாலும் அவரவர்கள் தங்கள் கடமைகளை தொடர்ந்து செய்ய வேண்டும். சாப்பிடாமல் ஸ்டிரைக் பண்ணுவதினாலும் யாருக்கும் லாபமில்லை. உபவாசம் தவிர மற்ற நாட்களில் மனத்தாங்கலினால் உணவருந்தாமலிருப்பவரை மற்ற அங்கத்தினர் அலட்ஷியம் செய்யாமல் தாங்கி உணவருந்த வருந்தி அழைத்தல் அவசியம். ஒரேயடியாக மறுத்துவிட்டால் அந்த வேளை விட்டுவிட்டு மறுவேளை ஆகாரம் புசிக்க அழைக்கும் போது அவர் மறுக்காமல் வருவார். மொத்தத்தில் ஒருவருக்கொருவர் பட்சம் காட்ட வேண்டிய குடும்பத்தில் வெறுப்பூட்டும்படி ஒவ்வொருவரும் நடந்து கொண்டால் அக்

குடும்பம் சிதைவுறும். இறை ஆசீர் அங்கிருக்காது. வைராக்கியமும் விரோதமும் எங்கேயுண்டோ அங்கே சகல துர்ச்செய்கைகளும் உண்டாகும். குடும்பத்தில் அன்பே ஆளுகை செய்ய வேண்டும்.

குடும்பத்தில் ஒருவர் நோய்வாய்ப்பட்டால் அவருக்காக குடும்பத்திலுள்ளவர்கள் பட்சம் காட்ட வேண்டும். தனிக்கவனம் செலுத்தப்பட வேண்டும். அவருக்காக சமையலில் மாற்றம், தனி சமையல் செய்வதும் (தேவைப்பட்டால்) செய்யப்பட வேண்டும். அவ்வப்போது அவருடைய உடல் நிலையை விசாரிப்பதும் அவருடைய தேவைகளை அறிந்து உதவுவதும் குடும்பத்திலுள்ள எல்லோரும் அவருக்காக ஜெபிப்பதும், தேவ ஊழியர்களை அழைத்துவந்து எண்ணெய் பூசி ஜெபிப்பதும் அவசியம். ஜெபத்தினாலும், குடும்பத்திலுள்ளவர்களுடைய பரிவினாலும், தனி கவனம், ஆகார மாற்றத்தினாலும் வியாதி சீக்கிரம் குறைந்து அவர் பூரண சுகம் பெறுவார். அவருக்கும் குடும்பத்தின்மேல் பற்றுஉண்டாகும். இவ்வகை குடும்பம் ஆரோக்கியமான குடும்பமாகும்.

(தொடரும்)

---

"அன்பு திரளான பாவங்களை மூடும்"
(1 பேது 4 : 8)

---

# புதிய எருசலேம் சபை நடபடிகளில் சில

(ஜுன் இதழ்த் தொடர்ச்சி)

"நான் உனக்குப் போதித்து நீ நடக்க வேண்டிய வழியை உனக்கு காட்டுவேன்; உன் மேல் என் கண்ணை வைத்து உனக்கு ஆலோசனை சொல்லுவேன்" (சங் 32 : 8) என்று சொன்ன இறைவனாகிய ஆண்டவர் இன்றைக்கும் அவ்வாறே ஆலோசனை தந்து வருகிறபடியால் அவருக்கு கோடாகோடி ஸ்தோத்திரம் ஏறெடுக்க கடமைப்பட்டுள்ளேன்.

1979-ம் ஆண்டில் ஓர் நாள் ஜெபித்துக் கொண்டிருந்தபொழுது, "நீங்கள் இவ்வாண்டின் இறுதிக்குள்ளாக இலங்கை செல்ல வேண்டும்; அங்கே என்னுடைய பிள்ளைகள் அநேகர் உண்டு அவர்களைச் சந்தித்து மந்தையாய் கூட்ட வேண்டும், நான் மகிமையானவைகளைச் செய்வேன்" என்று கர்த்தருடைய ஆவியானவர் பேசினார். அப்படியே தேவனுடைய ஆலோசனையைப் பெற்றுக்கொண்டு குறித்த நாளில் நானும் உடன் ஊழியருமாக சென்னை சென்று இலங்கை—செல்வதற்கான அனுமதிச் சீட்டுகள் பெற்று 26.10.79-ல் ரயில் ஏறி சகோதரர் ஹமீதுடன் ராமேஸ்வரம் 27.10.1979-ல் வந்து சேர்ந்தோம்.

சகோதரர் விக்டர் சார்லஸ் குடும்பமாய் எங்களை வழிவிட்டனுப்புவதற்காக சென்னையிலிருந்து ராமேஸ்வரம் வந்திருந்தார்கள். இலங்கை செல்வதற்காக மக்கள் ஏராளமாய் ராமேஸ்வரத்தில் கூடியிருந்தார்கள். தங்குவதற்கான இடம் கிடைப்பது மிகவும் கஷ்டமாய் இருந்தது. ஆனாலும் தேவன் அதிசயமாய் நாங்கள் தங்குவதற்கான இடவசதிகளை ஆயத்தம் செய்து கொடுத்தார், அவருக்கே மகிமையுண்டாவதாக.

நாங்கள் 1979-ல் விமானம் (Aeroplane) மூலம் தென் ஆப்ரிக்காவிலுள்ள மோரிசைஸ் என்ற தீவுக்கு கர்த்தருடைய சேவைக்காகப் போயிருக்கிறோம். கடல் மார்க்கமாய் நாங்கள் வெளிநாடு செல்வது இதுவே முதல் தடவையாகும். அதோடு ஒவ்வொரு ஆண்டிலும் நவம்பர், டிசம்பர் மாதங்களில் ராமேஸ்வரத்திலிருந்து கப்பல் ஓடுவதில்லை. அப்படியே அக்டோபர் மாதம் 27-ம் நாளில் கப்பல் நின்றுவிடும். நாங்களும் 27.10.79-ல்தான் கப்பலில் செல்ல கர்த்தரால் அனுப்பப்பட்டு போயிருக்கிறோம். ராமேஸ்வரத்தில் தங்கியிருக்கும் மக்கள் தொகையோ இன்னும் பல நாட்கள் பிரயாணம் பண்ணினாலும் குறையாத அளவுக்கு

காணப்பட்டார்கள். நாங்கள் தங்கி இருந்த இடத்தில்கூட ஜெபித்தோம். "இறுதியாக இன்று] செல்லும் கப்பலில் இடம் கிடைக்கும், கலங்க வேண்டாம்" என்று கர்த்தருடைய ஆவியானவர் பேசினார். ரிசர்வேஷன் (Reservation) செய்வதற்காக வரிசையில் |நின்றோம். அன்று செல்லக் கூடிய கடைசி கப்பலிலும் இடம் பூர்த்தியாகிவிட்டது. கப்பலும் புறப்பட்டுவிட்டது. மக்கள் கூட்டம் கலைந்து போய்க்கொண்டிருக்கிறது. எங்களுக்கோ இடம் கிடைக்கவில்லை.

இனி ஜனவரி மாதத்தில்தான் கப்பல் வரும் என்று கூறிக்கொண்டே மக்கள் சென்ற வண்ணமாய் இருக்கிறார்கள். எனக்கோ மிகுந்த மனவேதனையுண்டாகிவிட்டது. கடைசியாய் செல்லும் கப்பலில் இடம் கிடைக்கும் என்று சொன்னீரே ஆண்டவரே, கடைசி கப்பலும் போய்விட்டது என்று அங்கலாய்த்த வண்ணம் நாங்கள் தங்கியிருந்த அறைக்குச் சென்றோம். உடன் வந்திருந்த விசுவாசிகளும் தேவன் சொன்ன வார்த்தை நிறைவேறவில்லையே என்று கலங்கக் கூடிய அளவுக்கு ஆகிவிட்டது. மறுபடியும் என்ன செய்வதென்று கூடி ஜெபிக்க ஆரம்பித்தோம். "போகின்ற கப்பலை உங்களுக்காக மீண்டும் வரச் செய்வேன், நடுராத்திரிக்கு பின் நீங்கள் புறப்படுவீர்கள்" என்று அற்புதமான ஆண்டவர் பேசினார். என்ன ஆச்சரியம்! உடனே விசாரணைக் கவுண்டர் (Enquiry Counter)-ல் வந்து கேட்டோம். "மீண்டும் கப்பல் வரும் முன்னதாகப் பதிவு செய்து கொள்ளுங்கள்" என்று ஆலோசனை தந்தார்கள்.

"அவர் தம்முடைய எல்லா வார்த்தைகளிலும் ஒன்றையாகிலும் தரையிலே விழுந்து போக விடவில்லை" என்பது எத்தனை உண்மை பாருங்கள். அல்லேலூயா! அவருக்கே மகிமையுண்டாகட்டும்.

அப்படியே கப்பல் மீண்டும் வந்தது; நாங்களும் நள்ளிரவில் கப்பல் ஏறி அதிகாலையில் இலங்கை போய்ச் சேர்ந்தோம். சுமார் நான்கு மணிநேரமே கடலில் பிரயாணம் செய்தோம். பாரச்சுமையோடு செல்லும் கப்பலானது தண்ணீரில் அமிழ்ந்து போகாதிருப்பதற்கு கப்பலின் அடிப்பாகத்தை மிக அருமையாக செய்திருக்கிற மனித ஞானத்துக்காக தேவனை ஸ்தோத்தரித்தேன். இரவிலே குளிர்ந்த காற்று வீசுகையில் தண்ணீரை பிளந்து கொண்டு கப்பல் சென்ற அருமையான காட்சியும் கடலில் செல்லும் கப்பலின் வேகத்தினால் தங்கள் பாதைகளினின்று பாய்ந்து செல்லும் மீன்களின் சாயல்களையும் பார்த்துக் கொண்டே பயணத்தை முடித்தோம்.

தலைமன்னார் என்ற இடத்தில் கரை சேர்ந்தோம். துறைமுகத்தை விட்டு வெளியே வந்ததும், ஜெபம் செய்தோம்: "ஆ! கர்த்தாவே உம்முடைய வார்த்தையின்படியே இந்த தீவில் வந்து சேர்ந்தோம். நீர் அனுப்பின காரியமாக எங்களைப் பயன்படுத்தும்" என்று வேண்டுதல் செய்துவிட்டு அங்கிருந்து சுமார் 50கி.மீட்டர் தொலைவிலுள்ள வவுனியா என்ற இடத்துக்குப் பஸ் ஏறி வந்து சேர்ந்தோம். சென்னையிலுள்ள நமது சகோதரர் விக்டர் சார்லஸ்வுடைய சகோதரி வீட்டிற்கு நாங்கள் வந்து சேர்ந்தோம். இந்த சகோதரியின் கணவர் பெயர் S. D. HARRIS. இவர் இலங்கையிலுள்ள மக்கள் வங்கியில் (Bank) மானேஜராகப் பணியாற்றி வருகிறார். எங்களை கர்த்தருக்குள் மிகவும் அன்புடன் வரவேற்றார்கள். சில தினங்கள் அங்கே தங்கியிருந்து இரட்சிப்பின் வழியை அவர்களுக்குக் கூறினோம். மானேஜருடைய துணைவியும், ஒரு மகளும் பரிசுத்த ஆவியைப் பெற்றுக் கொண்டார்கள். கர்த்தருக்கே மகிமையுண்டாவதாக.

பின்னர் இவர்கள் மூலமாய் பல இடங்களுக்கு நாங்கள் அனுப்பப்பட்டு கர்த்தருடைய செய்தியை அறிவிக்கவும், அநேகரை கர்த்தரண்டை மனந்திரும்பச் செய்யவும் தேவன் உதவி செய்தார். அவருக்கே மகிமை உண்டாவதாக. சுமார் 15 தினங்களுக்குப் பின் நாங்கள் ஆகாய மார்க்கமாக இந்தியாவுக்கு வந்துசேர தேவன் உதவி செய்தார். அவருக்கே மகிமையுண்டாவதாக.

அந்த மானேஜர் வீட்டில் குடும்பமாக தினமும் மாலையில் ஜெபித்து வருகிறார்கள். அங்குள்ள மக்களுடைய மீட்புக்காகவும் அவர்கள் ஜெபிப்பது வழக்கம். ஒரு நாள் இந்த மானேஜரைப் பார்ப்பதற்காக அங்குள்ள ரோமன் கத்தோலிக்க சபையின் குருவானவர் மாலை வேளையில் இந்த வீட்டிற்கு வந்திருக்கிறார். அப்பொழுது இவர்களுடைய ஜெப வேளையாய் இருந்திருக்கிறது. இந்தக் குருவானவர் கதவருகே தன்னுடைய காதை வைத்து எப்படி ஜெபிக்கிறார்கள் என்று ஒற்றுக் கேட்டுக் கொண்டிருந்திருக்கிறார். இந்த மானேஜர் துணைவி ஜெபிக்கும் பொழுது "ஆண்டவரே! இங்குள்ள கத்தோலிக்க பாதிரியாரை நீர் சந்தியும், அவரை இரட்சியும். அவர் மூலமாய் எத்தனையோ மக்கள் நரகத்தில் போகிறார்களே அவர்களைத் தடுத்து நிறுத்தும்" என்று ஜெபித்திருக்கிறார்கள். கதவுக்கு வெளியே பாதிரியார் நிற்பது இந்த அம்மாவுக்குத் தெரியாது. இந்தப் பாதிரியாரும் ஜெபம் முடியும்வரை வெளியே நின்று விட்டு கதவைத் தட்டாது திரும்பி போய்விட்டார்.

போனவர் அதே வாரத்தில் தன்னுடைய ஆலயத்தில் நடைபெற்ற ஒரு ஆராதனையில் தன்னுடைய சபையின் மக்களைப் பார்த்து உங்களில் யாராவது எனக்காக ஜெபிக்கிறீர்களா? ஆனால் இந்த ஊரில் எனக்காக ஒரு தாயார் தினமும் மாலையில் கண்ணீரோடு அழுது ஜெபிக்கிறார்கள். என்னுடைய ஆத்துமாவுக்காகவும், என்னோடு கூடச் சேர்ந்த உங்கள் எல்லோருடைய ஆத்துமாவும் பரலோகம் செல்ல வேண்டும் என்பதற்காக ஜெபிக்கிறார்கள். நீங்களும் இன்று முதல் பிறருடைய மீட்புக்காகவும் ஜெபிக்க வேண்டும் என்று கூறினாராம்.

"என் பிள்ளைகள் சத்தியத்திலே நடக்கிறார்கள் என்று நான் கேள்விப்படுகிற சந்தோஷத்திலும் அதிகமான சந்தோஷம் எனக்கு இல்லை" III யோ: 4

(தொடரும்)

Pastor S.SundarRaj
Vallioor.

---

"ஆ, கர்த்தராகிய ஆண்டவரே.... உம்மாலே செய்யக்கூடாத அதிசயமான காரியம் ஒன்றுமில்லை"

(எரே 32:17)

---

# சாட்சி

என்னுடைய பெயர் சங்கரகப்பு. கங்கை கொண்டான் அருகில் இருக்கும் அணைத்தலையூரைச் சேர்ந்தவன். தற்பொழுது கள்ளிகுளம் கல்லூரியில் முதுகலை கணிதவியல் துறையில் பயின்று வருகிறேன். நான் கிறிஸ்துவுக்குள்ளாக வந்து 7 மாதங்களே ஆகிறது என்னைக் கர்த்தர் சந்தித்த விபரமாவது.

இப்பொழுது படிக்கும் கல்லூரியில், மாணவர்களால் காலையிலும், மாலையிலும் ஜெபம் நடப்பதை அறிந்து இருந்தேன். ஜெபத்தை நடத்துகின்ற சகோதரனிடம் சென்று உங்களுடன் கலந்து ஜெபிப்பதற்கு வரலாமா? எனக் கேட்டேன். காரணம் எனக்கு சிறுவயதிலிருந்தே கிறிஸ்தவப் பாடல்கள் என்றாலும், கிறிஸ்தவப் பையன்கள் என்றாலும் மிகவும் பிடிக்கும். கிறிஸ்தவர்கள் பொதுவாக எல்லோரிடமும் அன்பாக இருப்பதே என்னை முதலில் கவர்ந்தது. இவற்றிற்கு அடிப்படைக்காரணமாக இருந்தது புதுகுடியைச் சேர்ந்த சகோதரன் ஸ்டாலின் குடும்பமே. இப்படியாக எனக்கு கிறிஸ்துவின் மீது பற்று அதிகப்படவே ஜெபிப்பதற்கு வரலாமா என அனுமதி கேட்ட நாளிலிருந்து தினமும் காலையிலும் மாலையிலும் அவர்களுக்கு முன்பே ஜெபம் செய்யும் இடத்திற்குச் சென்று அவர்களுக்காக காத்து இருப்பேன்.

இந்து மதத்தில் இருக்கும் போது கடலை என்று சொல்லப்படும் அசுத்த பொல்லாத பிசாசை ஆடிக் கொண்டு இருந்தேன். அது சொல்லுகிறபடியெல்லாம் அதற்கு பயபக்தி

யோடு. விரதம் இருந்தும், அதற்கு படைப்புகளை படைத்தும் வணங்கி வந்தேன். வெள்ளிக்கிழமை, செவ்வாய்க் கிழமை என்றால் அந்த நாள் முடியும் மட்டும் மிகவும் கவனமாக இருப்பேன். அடுத்த வீட்டுப் பொருட்களை சாப்பிட முடியாது. இரவும் பகலும் அடிக்கடி வந்து தொந்தரவு செய்யும். யாராவது பயந்திருந்து அவர்களுக்கு இறந்தவர்களின் ஆவி பிடித்து இருந்தால் உடனே ஒரு சத்தம் இட்டு அந்த ஆளுடைய தலையில் ஓங்கி அறைந்து விரட்டும். மற்றும் இரவு நேரங்களில் எங்கும் பயமில்லாமல் கூட்டிச் செல்லும். பிணங்கள் எரிகிற இடத்திற்கு அருகில் சென்றால் அதை எடுத்து தின்ன வேண்டும் என்ற எண்ணம் தோன்றும். எங்காவது மேளம் அடித்தாலும், வேறு எந்த கோயிலில் விழா நடந்தாலும், தீப ஆராதனை பொருட்களின் வாசனை வந்தாலும் அந்த நேரத்தில் வந்து உருட்டி புரட்டி காயங்களாக்கி விடும். அப்பொழுது எங்காவது புறப்பட்டு செல்லும் இடமாக இருந்தாலும் சரி, படித்துக்கொண்டு இருந்தாலும் சரி; பஸ்ஸில் சென்றாலும் சரி, சாப்பிட்டுக் கொண்டு இருந்தாலும் சரி வந்து தொந்தரவு செய்யும். அது வந்தால் 7 அல்லது 5 பேர் சேர்ந்து பிடித்தாலும் நிற்காது. மேலும் அது ஆட்டுவிக்கப்பட்ட நாளிலிருந்து மனதில் ஒரு நிம்மதியோ சந்தோசமோ இல்லை.

இப்படியிருக்க வீட்டில் யாவருடனும் அடிக்கடி சண்டை வரும். குடும்பம் முழுவதும் ஒரே குழப்பமாக இருக்கும். வீட்டில் யாராவது ஒருவர் மாறி ஒருவர் சுகமில்லாமல் இருந்து கொண்டே இருப்பார்கள். எனக்கும் அடிக்கடி மயக்கம் வரும். அதனால் திருநெல்வேலி குணசீலன் ஆஸ்பத்திரியில் சென்று ரூ. 4000 க்கு மேல் செலவாகியும் குணமாகவில்லை. என்னுடைய சகோதரனுக்கும் அடிக்கடி ஏதாவது பலவீனம் வந்துவிடும். அவனுக்காக கடந்த வருடம் ரூ. 10,000 க்கு மேல் செலவாகியும் பெலவீனமாகவே இருக்கிறான். எனக்கு அடுத்த சகோதரிக்கு கால் திடீரென வீங்கும், வத்தும் இதனால் கல்லூரி படிப்பை முற்றுப்புள்ளி வைத்து வீட்டிலிருக்கிறாள். இப்படியாக பல வழியில் பொருட் சேதம் ஏற்படும் குடும்பத்தில் எ ந் த வி த மா ன சந்தோசமோ நிம்மதியோ கிடையாது.

இப்படி பல கஷ்டங்கள் மேலும், மேலும் வரவே ஊரில் சிலர் ஆறுமுகம், குளம் கடலை கோயிலுக்கு சென்றால் சுகம் கிடைக்கும்; நடப்பதையெல்லாம் முன் கூட்டியே கூறும் எனவும் கூறினார்கள். அதை நம்பிக் கொண்டு அதன் மூலமாவதாவது நிம்மதி கிடைக்காதா என்று அங்கும் சென்றோம். அது கேட்கும் பொருள்களையும், காணிக்கைகளையும் படைத்தாலும் ஏதாவது கூறும். நடக்கப்போவதை கூறுவதில் ஒன்று உண்மையாயிருக்கும் 10-க்கு பேக் பொய்யாகவே இருக்கும். இறுதியில் அங்கும் நிம்மதி இல்லவே இல்லை.

இந்த வருடம் கல்லூரியில் அந்த மாணவர்களோடு சேர்ந்து ஜெபிக்கப் போகும்போது "இனி இவன் நம்மைவிட்டு பிரிந்து பரிசுத்த கூட்டத்தோடு சேர்ந்து விடுவான் என எண்ணிய சாத்தான் என்னை தாக்கினான். சாத்தான் மூலம் பைத்தியம் போல் வந்து என்னவெல்லாமோ பேசியிருக்கிறேன். மறுநாள் நடந்த அகமதிப்பீட்டு தேர்விலே ஏதோ இரு வார்த்தைகளை பேப்பரில் எழுதிவிட்டு பெயரை யூதாஸ் எனவும் எழுதிவைத்துவிட்டு 5 நிமிடத்தில் எழுந்துவிட்டேன். உடனே எங்கள் பேராசிரியர் (Professor) வந்து என்னுடைய பெயரைச் சொல்லி உனக்கு என்ன ஆகிவிட்டது என கேட்டு இருக்கிறார். அவரிடமும் என் பெயர் சங்கரசுப்புவல்ல யூதாஸ் எனவும், பலவாறு பேசி இருக்கிறேன். இது கல்லூரி முதல்வருக்கு தெரியவந்து என்னுடைய விடுதி அறைக்குவந்து என்னை வீட்டுக்கு அனுப்பிவிட்டார். நான் கெஞ்சியும் கண்டிப்புடன் கூறிவிட்டார். பிறகு அன்று வீட்டிற்கும் சென்றிருக்கிறேன். வீட்டிலும் கல்லூரியிலும் இரு நாட்கள் சாப்பிடாமல் இருந்திருக்கிறேன்.

இப்படியாக கல்லூரி முழுவதும் என்னை சா த் தா ன் அம்பலமாக்கிவிட்டான்.

அன்று மறுநாள் சகோதரன் மகேந்திரகுமார் மூலம் வள்ளியூர் "புதிய எருசலேம் சபை"க்கு சென்றேன். அங்கு ஜெபித்தார்கள் உடனே குறைந்து விட்டது. உதவி மேய்ப்பர் ஐயா அவர்கள் கூறியதாவது: நீங்கள் உங்களை முற்றிலும் கர்த்தருக்கு ஒப்புக் கொடுத்து, பாவ அறிக்கை செய்தால்தான் சாத்தான் உங்களை விட்டு ஓடுவான் என கூறினார்கள். உடனே அன்றைய தினமே என்னை கர்த்தருக்கு முற்றிலும் ஒப்புக் கொடுத்தேன். ஆனால் பாவ அறிக்கை என்றால் ஒன்றுமே தெரியாது. பின்பு ஆரல்வாய்மொழி ஐயாவும் விபரம் கூறினார்கள். முதலில் பெரிய, பெரிய பாவங்கள் நினைவுக்கு வந்ததை அறிக்கை செய்தேன். ஆனால் இந்த சாத்தானோ ஐயா ஜெபிக்கும்போது ஓடி விடுவான். ஜெபித்து முடித்ததும் வந்து தொந்தரவு செய்வான். இப்படியாக இரு வாரம் கழிந்தது. ஒருநாள் மகிழ்ச்சிபுரத்தில் நடந்த பரிசுத்த ஆராதனையில் (புதிய எருசலேம் சபையில்) சிறிது தலைக்கனத்துடனும், தலை சுற்றலுடனும் கவிழ்ந்தே தன்னுணர்வு சரியாக இல்லாமல் உட்கார்ந்து இருந்தேன்.

திடீரென என்னை ஆட்டுவித்த அந்த அசுத்த ஆவி என்னை ஒரு உலுக்கு உலுக்கி விட்டு ஓடிவிட்டதை உணர்ந்தேன். அதன் பிறகு எனக்கு தெளிவு கிடைத்தது. தலை கனம், சுற்றல் முற்றிலும் நின்று விட்டது. உடனே சந்தோஷத்துடனே நிமிர்ந்து உட்கார்ந்தேன். அப்போது தமிழ்நாடு பாஸ்டர் ஐயா வாசலுக்கு உள்ளே நுழைந்து கொண்டு இருந்தார்கள். ஐயாவைப் பற்றி கேள்விப்பட்டிருந்தாலும் அன்றுதான் நேரடியாக பார்த்து இருக்கிறேன். பின்பு சபையில் ஆராதனை முடிந்தவுடன் உடன் வந்த சகோதரன் ஐயாவிடம் அறிமுகப் படுத்த, நானும் எனக்கு நடந்த யாவற்றையும் கூறினேன். மிகவும் ஐயாவும் அடியேனும் சந்தோசமாகக் காணப்பட்டோம். பின்பு அன்று மாலை ஆராதனை (வள்ளியூர்)யில் ஐயா பரிசுத்த ஆவிக்காக ஜெபித்த போது ஆவியானவர் எனக்குள் வந்தார். பின்பு ஐயாவிடம் ஆலோசனை கேட்டபடி அடிக்கடி சபைக்குச் சென்றும் ஆவியானவரால் உணர்த்தப்பட்ட பாவங்களை உடனுக்குடன் அறிக்கை செய்து விட்டு விட்டேன். ஆரம்ப நாட்களில் நம்முடைய பாவத்தை எப்படி வெளியில் கூற என்று வெட்கப்பட்டவனாகவும், அவற்றைக் கூறும் போது வார்த்தையை தெளிவாகக் கூறாமல் பாதி முழுங்கியவனாகவும் காணப்பட்டேன். ஆனால் அறிக்கை செய்து இதயம் தூய்மையாகும் போதும் ஆவியானவர் நிரப்பும் போதும் கிடைக்கும் மகிழ்ச்சிக்கும், சந்தோஷத்திற்கும் அளவே இல்லை.

ஒருநாள் சபையிலே தெளிவாக வசன ஆதாரத்துடன் "நீங்கள் பரிசுத்த ஆவியின் அபிஷேகமும், ஞானஸ்நானமும் பெறுவிட்டால் நிச்சயமாக தேவனுடைய இராஜ்யத்தில் நுழைய முடியாது" என்று பிரசங்கித்தார்கள் (யோ 3:5) அதன்பிறகுதான் ஞானஸ்நானம் எடுக்கவேண்டும் என்ற எண்ணம் வந்தது. தேவ ஆலோசனையின் பேரில் கடந்த ஜனவரி 1-ம்தேதியில் 22பேர்களோடு அடியேனும் ஞானஸ்நானம் எடுக்கும் பாக்கியம் கிடைத்தது. ஐயா அடியேனுக்கு ஜெபித்து பர்னபாஸ் என்ற பெயரும் சூட்டினார்கள்.

பிறகு ஒரு நாள் சபையிலே எனக்கு உணர்த்துதல் கிடைத்தது. சிலர் சபைக்கு மட்டும் வருகிறார்கள். ஆனால் வீட்டில் யாவருடனும் மரியாதையற்றவர்களாக நடக்கிறார்கள். ஆனபடியால் நீங்கள் உங்கள் சகோதர, சகோதரிகளிடம் முதலில் ஒப்புரவு ஆகி விட்டு பின்பு சபைக்கு வரவும் என உணர்த்தப்பட்டது. அன்றைய மறுநாளே ஊருக்குச் சென்றேன் காரணம் எனக்கடுத்த சகோதரியிடம் பேசி 5 வருடங்கள் ஆகிறது. எனக்கு அவள் மேல் சந்தேகம் வரும் போதெல்லாம் அடி, உதைதான். அதை தடுத்து கேட்கும் யாவருக்கும் வீட்டில் அதே கதிதான். அப்பாவிற்கும், மூத்த சகோதரனுக்கும் தவிர மற்ற யார் என்றாலும் அடிதான். அந்த நேரங்களில் நான் என்ற செருக்கு என்னிடம் அதிகமாக காணப்பட்டது. மூத்தவர்களாக இருந்தாலும் என்னுடைய பேச்சைத்தான் கேட்க வேண்டும் என்ற திமிரும் என்னிடத்திலிருந்தது. அவை யாவும் பாவம் என உணர்த்தப்பட்டதும் யாவரிடம் சென்று மன்னிப்பு கேட்டு ஒப்புரவாகி விட்டேன். (தொடரும்)

சகோ: பர்னபாஸ்
வள்ளியூர்.

# புதிய எருசலேம் செய்தி

# PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம்-22 ★ OCTOBER 1985



வீட்டெஜமான் இயேசு கிறிஸ்து சாயங்காலத்திலோ, நடுராத்திரியிலோ சேவல்கூவும் நேரத்திலோ காலையிலோ, எப்பொழுது வருவாரோ என்று நீங்கள் அறியீர்கள் விழித்திருங்கள் உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லோருக்கும் சொல்லுகிறேன் விழித்திருங்கள்

மாற்கு 13 35 37

**EDITOR: CHIEF PASTOR N. LAZAR**

BOMBAY. INDIA

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லோரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒருமனப்பட்டு கிறிஸ்துவுக்கேற்பான பூரண வளர்ச்சியடையும் படியாகவும் தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய்க் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும்; சபையானது வஞ்சக போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும் படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது. (எபே.4:11-16)

## இதழின் உள்ளே



## வாசகர்கள் கவனிக்க

பத்திரிக்கை கிடைத்தவுடனே படிக்காமல், அமைதியுடன் ஒரு இடத்தில் போய் அமர்ந்து உங்கள் வேதாகமத்தையும் பக்கத்தில் வைத்துக் கொண்டு, ஜெபம் பண்ணிவிட்டு, அதற்கப்புறம் பத்திரிக்கையை திறந்து வாசிக்கவும். வாசிக்கும் பொழுது செய்தியில் காணப்படுகிற வேத வசனங்களை உடனுக்குடன் உங்கள் வேதாகமத்தை திறந்து அவ்வசனத்தை வாசித்து ஒத்துப்பார்த்து பின் தொடர்ந்து வாசிக்கவும். இப்படி செய்தால் பூரண பலனையும் தேவ ஆசீர்வாதத்தையும் பெறுவீர்கள்.

# ஆசிரியர் உரை

உலகத்தில் பற்பல மதங்களும், கொள்கைகளும், நம்பிக்கைகளும் காணப்படுகின்றன. மக்கள் பெருக்கத்தைப் போல் பாவப்பெருக்கமும், பற்பலவிதமான மதப்பிரிவுகளும் பெருகிக் கொண்டு போகிற இக்காலத்தில் கிறிஸ்தவ விசுவாசிகளாகிய கிறிஸ்துவின் சீஷர்கள் தெளிவான மாதிரியும், பக்தி முயற்சியும், பரிசுத்தமுள்ளவர்களாய், பிரித்த வேறுபட்ட ஜீவியமுடையவர்களாய்க் காணப்படவேண்டும். இந்திய மதத்தத்துவ சம்பந்தப்பட்ட காரியங்களில் ஓரளவு வளர்ச்சியடைந்த நாடு. ஒழுக்க வழக்கங்களில் நல்ல சில பழக்கங்கள் கடைபிடிக்கப்படுகிறது. இது உன்னத தேசமாயிருக்கிறபடியால் இப்பழக்கங்கள் நல்லதே. கிறிஸ்தவர்கள் என்றால் நல்ல பழக்கவழக்கங்களிலும், பக்தி முயற்சிகளிலும், ஒழுக்கங்களிலும் மேம்பட்டவர்களாக நாம் நடந்து காண்பிக்கவேண்டும். கிறிஸ்தவத்தை மேல்நாட்டு மதம் போல் காண்பிக்கக் கூடாது. இந்தியாவுக்கு இயேசு சொந்தமானவர் என்பது போல் காண்பிக்க வேண்டும். ஆவி பெற்று விட்டோம் என்று திருவசனத்தைத் தள்ளிபோட்டு மனதின் சுய ஆவியின் தூண்டுதலுக்கு இடங்கொடுத்து தேவசமுகத்திலும் துணிகரமாய் நடந்து பிறர் கிறிஸ்தவ மார்க்கத்தைக் குறித்து இடறலடையும் அளவு நமது அசட்டையினால் தேவ நாமத்தை தூஷிக்கக் கூடாது.

ஆவிக்குரியவர்கள் என்று சொல்லிக் கொள்ளுகிற ஊழியர் கூட்டமொன்று நடைபெறுகிறது. மேடையில் ஆபரணங்களினால் தங்களை அலங்கரித்துக் கொண்ட பெண்கள் சிலர் பாட்டுகள் பாடுகின்றனர். இடைவேளையில் அங்கு தலைமை ஊழியராயிருந்தவர் அறிவிக்கிறார் நகைகள் அணிந்த பெண்கள் மேடைக்கு வரும்போது நகைகளை கழற்றி விட வேண்டுமென்று. பெண்களில் ஒரு சலசலப்பு இவர் என்ன பெரிய பரிசுத்தவானோ மேடையில் காலணி (Shoc) போட்டுக்கொண்டு ஜெபிக்கலாமோ, பிரசங்கிக்கலாமோ என்றனர். இச் செய்தி தலைவருக்கு தெரிய வருகிறது. உடனே அவர் தாஜா பண்ணுகிறார். பெண்களை நான் நகை போடக்கூடாது என்று சொல்லவில்லையே. அப்படி நான் தவறாய் ஏதாவது சொல்லியிருந்தால் மன்னித்துக் கொள்ளுங்கள் என்கிறார்.

இந்திய கிறிஸ்தவர்களின் பரிதாப மாய்மாலமான நிலை இது. கிறிஸ்தவனென்றால் டை (Tic) கட்ட வேண்டும், கோட்டு போட வேண்டும், செருப்பு, ஷூ போட்டு இறைவனை ஆராதிக்க வேண்டும் என்று இல்லை. ஒரு சிலை வணக்கக்காரன் பொய்யை ஆராதிக்கிறவன் தான் தெய்வமாக நம்புகிறதின் முன் பாதரட்சையை தூர கழற்றி வைத்து விட்டு குளித்து தெண்டனிட்டு மெய்யாய் எண்ணி ஆராதிக்கிறான். மெய்யான இறைவனை ஆராதிக்கிற கிறிஸ்தவன் பொய்யை ஆராதிக்கிறவன் போல் காணப்படும் அவலநிலையை இன்று காணும் இறைபக்தர்கள் இவ்வித மாறுபாடான சந்ததியை விட்டு விலகி உங்களை இரட்சித்துக் கொள்ளுங்கள். உங்கள் பழக்கவழக்கங்களினாலும், ஒழுக்கங்களினாலும், நற்கிரியைகளினாலும், பக்தியினாலும் இயேசுவைக் காண்பியுங்கள். இயேசுவை காண விரும்புகிறோம் என்று இந்திய மக்கள், உலகின் மக்கள் கூக்குரலிடுகின்றனர். இதை நடப்பிக்க தகுதியுள்ளவன் யார்? இதோ நாங்கள் கர்த்தருடைய பட்சம் நிற்கிறோம்.

கிறிஸ்துவுக்குள்,

Chief Pastor N. LAZAR

# இயேசு கிறிஸ்துவின் இரண்டாம் வருகை

ஒவ்வொரு மதத்திற்கும், கட்சிகளுக்கும், இயக்கங்களுக்கும் ஒரு நோக்கம் இருக்க வேண்டும். ஆனால் உலகத்தில் அநேக மதங்களுக்கும், இயக்கங்களுக்கும் உயரிய நோக்கமொன்றும் கிடையாது. சில மதங்களும், கட்சிகளும் ஒரு நாட்டிற்காகவோ, இனத்திற்காகவோ, ஜாதிக்காகவோ இருக்கும். உலகளாவிய நோக்கமோ, உலக முழுவதிற்காக உருவாக்கப்பட்டவைகளோ அல்ல. உலகின் மதங்களில் பெரும்பாலனவை குறைபாடுள்ள மனிதர்களால் உருவானவைகளாகும். சிலவைகள் பொய்யையே அடிப்படையாகக் கொண்ட வெறும் கற்பனை தத்துவங்களாகும். அவைகள் உண்மையாக இருக்க வேண்டுமென்ற அவசியமும் இல்லை.

கிறிஸ்தவ மார்க்கமோ (மதமல்ல) மெய் இறைவன் மனிதன் முக்தியடைய, உயர் நிலையடைய, மனிதனுயிருக்க, அவன் சிருஷ்டிக்கப்பட்ட நோக்கம் நிறைவேற மனிதனுக்காய் இறைவனே நடந்து காண்பித்த வழி, மார்க்கமாகும். வேறொரு வழி இல்லை இறைவன் ஒருவரே, அவதாரமும் ஒன்றே அவர் காண்பித்த வழியும் ஒன்றே. "......... இயேசுவானவர் தமது மாம்சமாகிய திரையின் வழியாய்ப் புதிதும், ஜீவனுமான மார்க்கத்தை நமக்கு உண்டு பண்ணினார்" (எபி 10:19). "அதற்கு இயேசு நானே வழியும் சத்தியமும் ஜீவனுமாயிருக்கிறேன். என்னாலேயல்லாமல் ஒருவனும் பிதாவினிடத்தில் (சாட்க்ஷாத் பரமேஸ்வரனிடத்தில்) வரான்.'

கிறிஸ்து இயேசுவை விசுவாசித்து தேவனுடைய பிள்ளைகளானவர்களுக்காய் தேவனை ஸ்தோத்தரிக்கிறேன். இவ்விதமாய்க் கிறிஸ்தவர்களானவர்களுக்கு ஒரு பெரிய வாக்களித்திருக்கிறார் இறைவன். நான் திரும்பவும் வந்து உங்களை என்னிடமாய்ச் சேர்த்துக் கொள்வேன் என்பதே அவ்வாக்காம் (யோவா 14:18,3).

கிறிஸ்தவத்தின் நோக்கம் இயேசு கிறிஸ்துவின் இரண்டாம் வருகையாகும். கிறிஸ்தவர்கள் ஒவ்வொருவரும் இந்த நோக்கமாயிருக்க வேண்டும்.

நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவினுடைய இரண்டாம் வருகை:-

இயேசு உலகில் குழந்தையாய் பிறந்ததை அவருடைய முதலாம் வருகை என்றும், இனி அவர் நேரடியாய் வானத்திலிருந்து வெளிப்படுவதை அவருடைய இரண்டாம் வருகை என்றும் அழைக்கிறோம். இயேசுகிறிஸ்துவினுடைய முதலாம் வருகை நடப்பதற்கு ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பிருந்தே இறைவாக்கினர் தேவ ஆவியால் ஏவப்பட்டு அதை அறிவித்து வந்தனர். உபமான உபமேயங்கள், அடையாளங்கள் மாதிரிகளினால் தேவன் மனிதனாய் அவதாரமெடுப்பதை அறிவித்து உணர்த்தி வந்தனர். கிறிஸ்துவுக்கு முன் 2000 வருஷங்களுக்கு முன்னிருந்த ஏனோக்கு முதல் மோசே, தாவீது ராஜா முதலானவர்கள் கிறிஸ்துவைப் பற்றி அறிவித்தார்கள்.

கிறிஸ்துவுக்கு 750 வருடங்களுக்கு முன்னிருந்த ஏசாயா தீர்க்கதரிசி இயேசுகிறிஸ்து ஒரு கன்னிகையின் வயிற்றில் அற்புதமாய் பிறப்பார் என்று அறிவித்தார். "இதோ ஒரு கன்னிகை கர்ப்பவதியாகி ஒரு குமாரனைப் பெறுவாள். அவருக்கு இம்மானுவேல் என்று பேரிடுவாள்" என்றார் (ஏசா 7:14). அவர் தாவீது இராஜா பிறந்த ஊராகிய யூதாவிலுள்ள பெத்லகேமில் பிறப்பார் என்று மீகா என்ற தீர்க்கதரிசி எழுதினார். "எப்பிராத்தா என்னப்பட்ட பெத்லகேமே, நீ யூதாவிலுள்ள ஆயிரங்களுக்குள்ளே சிறியதாயிருந்தும், இஸ்ரவேலை ஆளப்போகிறவர் உன்னிடத்திலிருந்து புறப்பட்டு என்னிடத்தில் வருவார்; அவருடைய புறப்படுதல் அநாதி நாட்களாகிய பூர்வத்தினுடையது" என்றார் (மீகா 5:2).

அவர் இவ்விதமாய் ஜீவிப்பார், உபதேசிப்பார், நீதிநியாயங்களை நிலைநாட்டுவார், நன்மை செய்வார், முடிவில் இவ்விதமான மரணத்தை அடைந்து, மூன்றாம்நாள் உயிர்த்தெழுந்து பரமேறுவார் என்ற விபரங்களெல்லாம் மிகவும் திட்டமாகவும், தீர்க்கமாகவும், தீர்க்கர்கள் தங்கள் புஸ்தகங்களில் எழுதி வைத்தனர். அவ்விதமாகவே 1985 வருஷங்

களுக்கு முன் இயேசு கிறிஸ்து இவ்வுலகில் பிறந்து நம்முடைய பாவங்களுக்காக மரித்து அடக்கம்பண்ணப்பட்டு வேத வாக்கியங் களின்படி மூன்றும் நாள் உயிரோடெழுந் தார். பின் 40 நாட்கள் கழித்து உலகமெங் கும் போய் தம்மைப் பற்றிய சுவிசேஷத்தை (நற்செய்தியை) பரப்பவும், விசுவாசித்து ஏற்றுக்கொண்டு அவ்வழியில் நடப்ப வர்களை திரும்பவும் வந்து பரலோகத்தில் சேர்த்துக்கொள்ள வரப்போகிறதாய் வாக் களித்து சென்றுள்ளவர் திரும்பவும் வரப் போகிறார். இதோ இயேசுகிறிஸ்து வரப் போகிறார்.

கிறிஸ்துவின் வருகையைக் குறித்து பல தப்பறையான அபிப்பிராயங்கள் கிறிஸ்தவ உலகத்தில் நிலவி வருகின்ற இக்காலத்தில் அவருடைய வருகையைப்பற்றி தெளிவாக விசுவாசிகள் அறிந்திருக்க வேண்டியது அவசியமாயிருக்கிறது. இல்லையென்றால் தடுமாறவும், பலவித தவறான போதனையில் சிக்கி படுகுழியில் விழவும் ஏமாறவும் நேரிடும்.

இன்றைய கிறிஸ்தவத் தலைவர்களில் அநேகர் கிறிஸ்துவின் இரண்டாவது வருகையை நம்புவதில்லை. இவ்விதமாய் சாத் தான் சில கிறிஸ்தவ தலைமையகங்களைப் பிடித்துள்ளான். அநேகர் தெளிவான வேதவசனங்களை வளைத்து மாற்றி புதுவிளக் கங்களை கொடுக்கின்றனர். சிலர் மக்களை வஞ்சித்து வருகைக்கு ஆயத்தப்படுத்தா மலே நாம் எல்லோரும் எடுத்துக்கொள்ளப் படுவோம் என்று பாவத்தில் திடப்படுத்திக் கொண்டு வருகின்றனர். ஆனால் வேதாக மத்தை படிக்கும் யாவருக்கும் இயேசு மறு படியும் வருவார் என்பதில் கடுகளவும் சந் தேகம் உண்டாவதில்லை.

வேதாகமத்தில் ஆதிமுதல் அந்தம் வரை பலவிதமான உவமைகளாலும், தெளிவான வார்த்தைகளாலும், தீர்க்கதரிசனங்களாலும், மாதிரிகளாலும், அடையாளங்களினாலும் நிரூபிக்கப்பட்ட மிக மிக முக்கியமான காரியமாகும் இயேசுகிறிஸ்துவின் இரண் டாம் வருகை

இயேசுகிறிஸ்துவின் இரண்டாம் வருகை யைப்பற்றி 198 தெளிவான தீர்க்கதரிசன வாக்கியங்கள் உண்டு. 18 வசனங்களுக்கு ஒரு முறை வெளிப்படையாகவோ, மறை முகமாகவோ கிறிஸ்துவின் வருகையை சுட் டிக் காட்டுகின்ற வேதவாக்கியங்கள் வேதா கமத்தில் உண்டு என்று வேதசாஸ்திரிகள் கூறுகின்றனர். அதுமாத்திரமல்ல உவமை களையும், திருஷ்டாந்தங்களையும் கூட்டிப் பார்த்தால் இயேசு இரண்டாம் முறை வரு வார் என்று ஏறக்குறைய 3000 (மூவாயிரம்) வேத பாகங்கள் வேதாகமத்தில் காணப் படுகின்றன.

"கிறிஸ்துவும்...... தமக்காக காத்துக் கொண்டிருக்கிறவர்களுக்கு இரட்சிப்பை அருளும்படி இரண்டாந்தரம் பாவமில்லாமல் தரிசனமாவார்" (எபி 9:28). வேதாகமத்தின் மிகப்பிரதானமான இவ்விஷயத்தை வேத வாக்கிய ஆதாரத்துடன் தெய்வீக வெளிப் படுத்துதல் பெற்று ஆதிசபையில் பிரசங்கிக் கப்பட்டபடியே சுருக்கமாய் உங்களுக்கு விவரித்து எழுத நாங்கள் கடமைப்பட்டுள் ளோம். இயேசுகிறிஸ்து மறுபடியும் வரு வார், வரப்போகிறார்.

(தொடரும்)

"கர்த்தருடைய நாள் இரவிலே திருடன் வருகிற விதமாய் வரும்"—IIபேதுரு 3:10

# பொய் சொல்லாதே

தண்டனையைப் பற்றிய பயம் மனிதனை பொய் சொல்ல தூண்டுகிறது. தண்டனை யில்லை என்றால் மனிதன் பொய் சொல் லான். தண்டனையிலிருந்து தப்பித்துக் கொள்ள, லாபம் அனுபவிக்க, யோக்கியனாய் காட்ட மனிதன் பொய் சொல்லுகிறான்.

ஒவ்வொரு மனிதனும் செய்கிறது அவனுக்கு நன்மையாகவும், பாதிக்கப்படுகிறவர்களுக்கு கஷ்டமாகவும், தீமையாகவும் நஷ்டமாகவும் அமைகிறது.

இறைவன் மனுமக்கள் எல்லோரையும் சமமாகவே பார்க்கிறார். அன்பு கூறுகிறார். அதனால் ஒருவருக்கொருவர் அநியாயம் செய்யாதிருங்கள் என்று கூறுகிறார். நாம் ஒவ்வொருவரும் பொய்யைக்களைந்து பிறனிடம் மெய்யைப் பேசுவோமாக. பிறர் நம்மைப் பார்க்கும் போது நமது உள்ளத்திலிருப்பதெல்லாவற்றையும், நாம் செய்த, பேசிய, சிந்தித்த, சிந்திக்கிற எல்லாவற்றையும் அவர்கள் பார்க்கக்கூடியதாக இருந்தால் நாம் வெட்கப்பட ஏதுவல்லாமல் நமது இருதயம் பளிங்கு போல் தூய வெண்மையாக இருப்பதே பரிசுத்தம். பாவம் நிகழுமானால் அதற்காக மெய் மனஸ்தாபப்பட்டு அப்பாவத்தை பாவம் என்று ஒத்துக்கொண்டு அதை தேவ சந்நிதியில் ஒளிவு மறைவின்றி அறிக்கையிட்டு (விசாரித்தால் உண்மை சொல்லி சம்பந்தப்பட்டவர்களிடம் ஒப்புரவாகி சரிசெய்ய வேண்டியதை சரி செய்து, திருப்பிக்கொடுக்க வேண்டியதை திருப்பிக்கொடுத்து மன்னிப்பு கேட்க வேண்டியதை மன்னிப்பு கேட்டு இனி செய்ய மாட்டேன் என்று உறுதிமொழி கூறி பின் வந்து தேவசந்நிதியில் அறிக்கையிட்டு) மன்னிப்பைப் பெற்று முடிவான தீர்மானமெடுத்து உண்மை வாழ்க்கையில் நிலைத்திருக்க வேண்டும், வளர்ச்சியடைய வேண்டும்.

கிறிஸ்தவர்கள் பாவம் செய்யக்கூடாது. விசேஷமாய் பொய் சொல்லக்கூடாது. பொய்யே பாவத்தின் மூழுநிலை. செய்த பாவத்தை மறைப்பதினாலும், பொய் சொல்லுவதினாலும் பாவம் இரட்டித்து பலப்பட்டு கடைசி நியாயத்தீர்ப்புக்கும், தண்டனைக்கும் அவனை ஆளாக்குகிறது.

மனிதன் பாவத்தை மறைப்பதும், பொய் சொல்வதும் மனிதனிடமே. அதனால் பாவத்தை அறிக்கை செய்து வெளிப்படுத்துவதும் மனிதர் முன்னேதான் செய்யவேண்டும். எங்கே மறைக்கிறோமோ அங்கே வெளிப்படுத்த வேண்டும். பின் தேவசமூகத்தில் அறிக்கை செய்து பாவமன்னிப்பு பெற வேண்டும். இந்த மன்னிப்பு பரலோகத்தில் மன்னிக்கப்படுகிறது. நீ பூலோகத்தில் கட்டுவது எதுவோ அது பரலோகத்தில் கட்டப்படும். பூலோகத்தில் கட்டவிழ்ப்பது எதுவோ அது பரலோகத்திலும் கட்டவிழ்க்கப்படும். நீங்கள் எவர்களுடைய பாவங்களை மன்னிக்கிறீர்களோ அவைகள் அவர்களுக்கு மன்னிக்கப்படும், எவர்களுடைய பாவங்களை மன்னியாதிருக்கிறீர்களோ அவைகள் அவர்களுக்கு மன்னிக்கப்படாதிருக்கும் என்றார் இயேசு (யோவா 20:23).

---

"பொய் என்னும் அடைக்கலத்தைக் கல்மழை அழித்து விடும்" ஏசா 28:17

---

# வயதில் சிறியவர்கள் ஆனால் வரலாற்றில் பெரியவர்கள்

"மனுஷன் முகத்தை பார்ப்பான்; கர்த்தரோ இருதயத்தை பார்க்கிறார் (1சாமு 16 : 7) என்றபடி இன்றைய நாட்களில் ஆவிக்குரிய தன்மையை அறியாத மனிதர்கள் தேவ மனிதர்களுடைய தோற்றத்தை, வயதைப் பார்த்து, அவர்களை கணிக்கிறார்கள். சின்ன பசங்க உற்சாகத்தில் ஏதோ சொல்கிறார்கள் என்று தேவனால் ஏற்படுத்தப்பட்ட வயதில் குறைந்த தேவனுடைய தாசர்களுடைய வார்த்தைகளை அலட்சியம் செய்து தள்ளிப் போடுகிறார்கள். இப்படிப்பட்ட அபிப்பிராயமுடையவர்களுக்கு வரலாற்றை தெய்வீக வரலாற்றைக் காட்டுவோம்.

யோசேப்பு: "நான் தேவனுக்கு விரோதமாய் பாவம் செய்வது எப்படி" என்று பாவத்தை விட்டோடிப்போன ஒரு பரிசுத்தவான், தன்

னுடைய பதினேழாவது வயதில் தேவதரிசனங்களைப் பெற்ருர் (ஆதி 37 : 2, 5). கர்த்தர் யோசேப்போடே இருந்து சொப்பனங்களின் அர்த்தத்தை வெளிப்படுத்த ஞானவானுக்கினுர். யோசேப்புக்கு வயது முப்பது (30) இந்த வயதில் அவர் எகிப்துதேசம் முழுவதற்கும் அதிகாரியானுர். எகிப்து தேசத்திலுள்ள ஒருவனும் யோசேப்பின் உத்தரவின்றி கையையாவது, காலையாவது அசைக்கக் கூடாது. பார்வோன்... ராஜா, யோசேப்பு இரண்டாவது ஆள் அந்த தேசத்தில். இந்த வயதில் அவர் இப்படி உயர்த்தப்பட்டதின் காரணம் அவர் தேவ ஆவியை பெற்றிருந்து, விவேகமும் ஞானமுள்ளவராய் பரிசுத்த முள்ளவராய் இருந்தார் (ஆதி 41 : 46, 41-44, 38, 39).

தாவீது:

"என் இருதயத்திற்கு ஏற்றவனைக் கண்டேன். எனக்கு சித்தமானவைகளையெல்லாம் செய்வான்" என்று தேவனுல் சாட்சி பெற்றவர் (அப் 13 : 22). தாவீது இளைஞனயிருந்தபோது தேவன் சாமுவேல் தீர்க்கதரிசி மூலம் அவரை இஸ்ரவேலின் மேல் ராஜாவாக்கும்படி அபிஷேகம் பண்ணினுர் (I சாமு 16 : 11-13). அப்படியே சவுல் ராஜா மரித்தபின் தாவீது ராஜாவானுர். தாவீது ராஜாவாகும் போது அவருக்கு வயது முப்பதே (30) (IIசாமு 5 : 4). இந்த முப்பது வயதிற்குள் அவர் அடைந்த ஆவிக்குரிய அனுபவங்கள் ஏராளம்.

எரேமியா:

"நான் உன்னை தாயின் வயிற்றில் உருவாக்கு முன்னே உன்னை அறிந்தேன். நீ கர்ப்பத்திலிருந்து வெளிப்படுமுன்னே உன்னை பரிசுத்தம் பண்ணி உன்னை ஜாதிகளுக்கு தீர்க்கதரிசியாக கட்டளையிட்டேன் என்று கர்த்தர் எரேமியாவிடம் சொன்னுர். அதற்கு எரேமியா "நான் சிறு பிள்ளையாயிருக்கிறேன்" என்ருன். ஆனுலும் கர்த்தர் "நீ சிறுபிள்ளை என்று சொல்லாதே...பார்... பிடுங்கவும், இடிக்கவும், அழிக்கவும், கவிழ்க்கவும், கட்டவும், நாட்டவும் உன்னை இன்றைய தினம் ஜாதிகளின் மேலும், ராஜ்ஜியங்களின் மேலும் ஏற்படுத்தினேன் என்ருர் (எரே 1 : 5-10). இவ்விதமாய் எரேமியா சிறுபிள்ளையாயிருக்கும் போதே பெரியவராக தேவனுல் ஏற்படுத்தப்பட்டார்.

நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து:

ஆபிரகாமுக்கும், ஈசாக்குக்கும், யாக்கோபுக்கும், மோசேக்கும், சாலமோனுக்கும் எல்லாருக்கும் பெரியவராகிய இயேசுவானவர், தன்னுடைய முப்பதாவது (30) வயதில் ஞானஸ்நானம் பெற்று, பரிசுத்தாவிபெற்று ஊழியத்தை ஆரம்பித்தார் (லூக் 3 : 23).

யூதாவின் ராஜாவாகிய யோவாஸ், தன்னுடைய ஏழாவது வயதில் ராஜாவானுன். இவன் ராஜாவின் பிள்ளையாக பிறந்ததினுல் ராஜகுமாரனுயிருந்து ராஜாவானுன் (II நாளா 22 : 11, 12; 24 : 1). இது சாதாரணமான காரியமே. இப்படிப்பட்டவர்களுக்கு கனமும், மதிப்பும், அதிகாரமும் இயற்கையாகவே உண்டாயிருக்கிறது. இது பெரிய காரியமல்ல.

ஆனுல் யோசேப்பும், தாவீதும், எரேமியாவும், இயேசுகிறிஸ்துவும், யோவான்ஸ்நானகனும், இன்னும் எத்தனையோ வயதில் குறைந்த பெரியவர்கள் தேவனுலே ஏற்படுத்தப்பட்டு, அதிகாரப்படுத்தப்பட்டு, மேன்மை படுத்தப்பட்டார்கள்.

இந்த சின்ன வயதில் இந்த பக்தி என்னத்திற்கு வயது சென்றபின் பார்த்து கொள்ளலாம் என்ற துர்போதனை செய்யும் கிழங்களுக்கு இடங்கொடாதிருங்கள். இளம் வயதில் நுகத்தை சுமப்பது நல்லது (புலம் 3 : 27). "ஆலோசனையைக் கேளாத கிழவனும் மூடனுமாகிய ராஜாவைப் பார்க்கிலும் ஏழையும் ஞானியுமாகிய இளைஞனே வாசி" (பிரசங்கி 4 : 13).

---

"பலமான ஆகாரமானது... பூரணவயதுள்ளவர்களுக்கே தகும்"-எபி. 5 : 14

---

# மோட்ச வழி

## குரு – சிஷ்ய உரையாடல்

**சிஷ்யன்** : ஞானஸ்நானம் எப்படி பெற வேண்டும், எந்த நாமத்தில் பெறவேண்டும். கிறிஸ்தவர்களில் பலர் பலவிதமாய்ச் சொல்லுகிறார்களே.

**குரு** : முழுகி ஞானஸ்நானம் பெறவேண்டும். மரணத்துக்கும், அடக்கம் பண்ணுதலுக்கும் அடையாளமாக மல்லாக்க முழுகி ஞானஸ்நானம் முறையாக ஒரேதடவையாக பெற்றுக் கொள்ள வேண்டும். பிதா, குமாரன், பரிசுத்த ஆவியின் நாமத்திலே ஞானஸ்நானம் பெற்றுக் கொள்ள வேண்டும். அதிகாரமுள்ள ஊழியர்களிடமே ஞானஸ் நானம் பெற வேண்டும்.

**சிஷ்யன்** : சிலர் இயேசுவின் நாமத்தில் ஞானஸ் நானம் பெறவேண்டும். பிதா, குமாரன், பரிசுத்த ஆவியின் நாமத்திலே ஞானஸ் நானம் பெறுவது தவறு என்று சொல்லுகிறார்களே!

**குரு** : பிதா, குமாரன், பரிசுத்த ஆவியின் நாமத்திலே ஞானஸ் நானம் கொடுக்கும்படி திருச்சபையின் தலைவராகிய கர்த்தராகிய இயேசுகிறிஸ்து கட்டளையிட்டுள்ளார். அதை மாற்றி செய்வது தெய்வ தூஷணமாகும்.

**சிஷ்யன்** : வேதாகமத்தில் இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் ஞானஸ் நானம் பெற்றுக் கொள்ளுங்கள் என்றும், கர்த்தருடைய நாமத்தில் ஞானஸ் நானம் கொடுக்கும்படி கட்டளையிட்டான் என்றும், இயேசுவின் நாமத்தில் ஞானஸ்நானம் பெற்றிருக்கிறதை அப்போஸ்தலர் கண்டு என்றும், இயேசுவின் நாமத்தில் ஞானஸ் நானம் கொடுத்தான் என்றும் எழுதப்பட்டுள்ளதே.

**குரு** : இவைகளெல்லாம் ஞானஸ் நானம் பெற்ற அல்லது கொடுத்த விபரத்தைச் சொல்லாமல் ஞானஸ் நானம் இயேசு கிறிஸ்துவை விசுவாசித்து பெற்றுக் கொண்டார்கள் என்பதையே காண்பிக்கின்றன. இயேசுவின் நாமத்தில் ஞானஸ் நானம் கொடுத்தான் என்றால் இயேசு கிறிஸ்து கட்டளையிட்ட பிரகாரம் பிதா, குமாரன், பரிசுத்த ஆவியின் நாமத்தில் ஞானஸ் நானம் கொடுத்தார்கள் என்றே அர்த்தம். இயேசு கிறிஸ்து கட்டளையிட்ட பிரகாரம் கொடுப்பதால், இயேசுவுக்குப் பதிலாய் கொடுப்பதால் இயேசுவின் நாமத்தில் ஞானஸ் நானம் கொடுத்ததாய் எழுதப்பட்டுள்ளது. தாவீதின் சேவகர் பத்துபேர், நாபாலிடத்தில் போய் தாவீது சொன்ன வார்த்தைகளையே சொல்லி உதவி கேட்டபடியால் தாவீதின் நாமத்தில் கேட்டார்கள் என்று வேதத்தில் எழுதப்பட்டிருக்கிறது தாவீது கேட்டார் என்று அர்த்தம். மேலும் அந்நாட்களில் ஞானஸ் நானம் கொடுத்தவரின் பெயரால் ஞானஸ் நானம் வழங்கப்பட்டதினால் கிறிஸ்தவ ஞானஸ் நானத்தை விளக்கும்படி கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் ஞானஸ் நானம் கொடுத்ததாய் எழுதப்பட்டுள்ளது. பிதா, குமாரன், பரிசுத்த ஆவியின் நாமத்திலேதான் ஞானஸ்நானம் பெற வேண்டும், கொடுக்க வேண்டும். இயேசு கிறிஸ்துவின் இரண்டாம் வருகைவரை இது இப்படியே செய்யப்படும். செய்யப்பட வேண்டும்.

(தொடரும்)

"விசுவாச முள்ளவனாகி ஞானஸ்நானம் பெற்றவன் இரட்சிக்கப்படுவான்" —மாற்கு 16 : 16

# வேத பாடம்

**ஆதி 33 : 1—11**

யாக்கோபு கோபங் கொண்டிருந்த தன் சகோதரனுக்கு வெகுமானங்களை முந்தி அனுப்பிவிட்டு, கனம்பண்ண முந்தி ஓடி முன் ஏழு விசை தரைமட்டும் குனிந்து வணக்கம் செலுத்தினார். இந்த செய்கையால் ஏசா மனமுருகி ஓடிவந்து தன்தம்பியின் கழுத்தைக் கட்டிக் கொண்டு அழுதார். சகோதரர்கள் இருவரும் ஒப்புரவானார்கள், பெரிய சமாதானமுண்டாயிற்று. ஏசா, யாக்கோபிடம் பிள்ளைகளை யார் என்று விசாரித்ததற்கு தேவன் உமது அடியாலுக்கு அருளின பிள்ளைகள் என்றது எவ்வளவு அருமையான வாக்கு. நாமும் தேவன் நமக்கு அருளிய மனைவி, பிள்ளைகள் என்று நாம் நம் குடும்பத்தைப் பற்றி விசாரிக்கிறவர்களிடம் சொல்லுகிறோமா? அப்படிச் சொல்ல வேண்டும்.

**ஆதி 33 : 12**

ஏசா, யாக்கோபைப் பார்த்து, வா போவோம் நான் உனக்கு முன் நடப்பேன் என்றார்.

**ஆதி 33 : 13, 14**

யாக்கோபு ஒரு மேய்ப்பன். ஆடுகளின் நிலைமையை நன்றாய் அறிந்திருந்தார். ஆடுகளில் சிறியகுட்டிகள் உண்டு, சறவை ஆடுமாடுகள் உண்டு, கொழுத்தவைகள் உண்டு, பலவீனமானவைகள் உண்டு. அவைகளையெல்லாம் சேர்த்து பதமாய் ஓட்ட வேண்டும். அப்படியல்லாமல் துரிதமாய் ஒரு நாள் ஓட்டினால் கூட சிலவை மாண்டு போகும். இது தெரியாத சில அவசரக்காரர்கள் மிஞ்சின பரிசுத்தம் பேசி நடப்பார்கள் திருச்சபையானது பலதரப்பட்ட ஆத்துமாக்களை உடையதாகும். மேய்ப்பர்கள் கவனமாய் சபையை நடத்த வேண்டும். இரவும் பகலும் விழித்திருக்க வேண்டும் (ஆதி 31 : 39 - 40). ஆகையால் நீர் முந்திபோம் என்று யாக்கோபு ஏசாவை முந்தி அனுப்பிவிட்டு மந்தையின் நடைக்கு, பிள்ளைகள், முதியோர்கள் நடைக்கு தக்கபடி மெதுவாய் நடத்தி வருவேன் என்றார்.

**ஆதி 33 : 15-20** யாக்கோபு சுக்கோத்துக்கு வந்து தனக்கு ஒரு வீடுகட்டி சுக்கோத்தில் தங்கினார். பின் சாலேமின் அருகே ஒரு நிலத்தை சொந்தமாக ஏமோரின் கையில் நூறு வெள்ளிகாசுக்கு வாங்கி அங்கே தேவனுக்கு ஒரு பலிபீடம் கட்டி அதற்கு எல்எல்லோகே இஸ்ரவேல் என்று பேரிட்டார். அதற்கு தேவனாகிய இஸ்ரவேலின் தேவன் என்றர்த்தம்.

**ஆதி 34 : 1-5** யாக்கோபின் ஒரே குமாரத்தி தீனாள் ஊர் சுற்றப்போய் அந்தப்பட்டணத்தின் பிரபுவாகிய சீகேம் அவளைக் கொண்டுபோய் தீட்டுப்படுத்தினான். இப்படி சுகபோகமாய் வாழ்கிற உயிரோட செத்தவர்கள் உண்டு (1தீமோ 5:6). நல்ல ஸ்திரீகள் சரியான துணையின்றி ஊர் சுற்றிப் பார்க்க போக மாட்டார்கள். இதைக் கேள்விப்பட்ட யாக்கோபு அமைதியாய் பேசாமலிருந்தார். யாக்கோபின் புத்திரர்கள் வெளியே போயிருந்தார்கள்.

(தொடரும்)

"கனம் பண்ணுகிறதிலே ஒருவருக்கொருவர் முந்திக் கொள்ளுங்கள்" —ரோமர் 12 : 10

# தனக்குரிய யாவையும் கொடுத்து விட்டாள்

## பாலர் பகுதி

சுந்தரும், மார்த்தாளும் தேவாலயத்தின் வாசலில் நின்று கொண்டிருந்தார்கள். அப்போது அங்கே வந்த அவர்களது மாமாவை நோக்கி: மாமா, மாமா என்று இருவரும் ஓடி வந்தார்கள். தன்னை நோக்கி ஓடி வந்தவர்களைக் கண்டதும், அவர் நின்று என்னவென்று கேட்டதும், மார்த்தாள், மாமா யாரும் சொந்தக்காரர்கள், தெரிந்தவர்கள் வீட்டுக்கு வந்து போகும்போது எங்களுக்கு காசு கொடுத்தால் அதை மிட்டாய் வாங்கி தின்று விடாமல் சேர்த்து வைத்து ஆண்டவருக்கு காணிக்கையாய் கொடுத்தால் ஆண்டவர் நம்மை ஆசீர்வதிப்பார் அல்லவா? என்றாள். ஆமாம் ஆண்டவர் நிச்சயமாய் ஆசீர்வதிப்பார் என்று பதில் சொன்னதும் சுந்தர் வெட்கப்பட்டு சிரித்தான். சுந்தர் அதுவரை காசு ஏதும் கிடைத்தால் ஓடிப்போய் மிட்டாய் வாங்கி தின்று விடுவான்.

ஆண்டவர் நிச்சயமாய் ஆசீர்வதிப்பார் என்று சொல்லி பைபிளிலிருந்து இயேசு கிறிஸ்துவின் வாழ்க்கையில் நடந்த ஒரு சம்பவத்தை சொல்லுகிறேன் கேளுங்கள் என்று சுந்தரின் மாமா சொல்ல ஆரம்பித்தார். கர்த்தராகிய இயேசுகிறிஸ்து ஒருநாள் தேவாலயத்தில் வந்து "கண்ணேறிட்டுப் பார்த்தபோது ஐசுவரியவான்கள் காணிக்கை பெட்டியிலே தங்கள் காணிக்கைகளைப் போடுகிறதை கண்டார். ஒரு ஏழை விதவை அதிலே இரண்டு காசைப் போடுகிறதையும் கண்டு இந்த ஏழை விதவை மற்றெல்லாரைப் பார்க்கிலும் அதிகமாய் போட்டாள் என்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன். அவர்கள் எல்லாரும் தங்கள் பரிபூரணத்திலிருந்து எடுத்து தேவனுக்கென்று காணிக்கை போட்டார்கள்; இவளோ தன் வறுமையிலிருந்து தன் ஜீவனத்துக்கு உண்டாயிருந்ததெல்லாம் போட்டு விட்டாள் என்றார் [லூக் 21: 1-4].

ஆம், அந்த ஏழை விதவையிடம் இருந்தது எல்லாம் இரண்டே காசுகள்தான். தனக்குரிய யாவையும் அவள் போட்டாள் என்று அவளது காணிக்கையை தேவன் அங்கீகரித்து பாராட்டுகிறார். அப்படியே நீங்களும் உங்களுக்கு அப்பா, அம்மா அல்லது யாராவது காசு கொடுத்தால் அவைகளை மிட்டாய் வாங்க மட்டும் பயன்படுத்தாமல் கொஞ்சம் சேர்த்து ஆலயத்தில் காணிக்கையாய் கொடுங்கள் அப்பொழுது தேவன் ஆசீர்வதிப்பார் என்று சொல்லி அவர்களது மாமா போய் விட்டார்.

அன்றிலிருந்து சுந்தரும் மார்த்தாளும் கிடைக்கிற காசுகளில் கொஞ்சம் சேர்க்க ஆரம்பித்தார்கள். அவர்களுடைய ஆலயத்தில் பெரிய ஆலயம் கட்டுவதற்காக பணம் சேர்த்தார்கள். விசுவாசிகள் எல்லாம் தங்களால் இயன்றதை கொடுத்து தேவனுக்கென்று ஆலயம் கட்ட முன் வந்தார்கள். கஷ்டமில்லாமல் ஆலய நிதி சேர்க்க எல்லா விசுவாசிகளுக்கும் உண்டியல் கொடுக்கப்பட்டது. சுந்தரும் மார்த்தாளும் ஆளுக்கொன்று கேட்டு வாங்கிக் கொண்டார்கள். காசு சேர்த்து உண்டியலில் போட்டார்கள்.

வருடத்தின் கடைசியில் எல்லாரும் தங்களது உண்டியல்களை தேவ சமூகத்தில் கொண்டு வந்து வைத்தார்கள். சின்னப் பிள்ளைகளான மார்த்தாளும், சுந்தரும் ஆளுக்கொரு உண்டியல்களை கொண்டு வந்து வைத்தார்கள். அதைப் பார்த்த அவர்களது சபை போதகர் ஆச்சரியப்பட்டு அந்த சின்னப் பிள்ளைகளின் உண்டியல்களை எடுத்துப் பார்த்தார். அந்த உண்டியல்கள் நிரம்பியிருந்தன. பெரியவர்கள் கொண்டு வந்த உண்டியல்களில் ஒரு சில மட்டும் நிறைந்து இருந்தது. அன்று ஆராதனையில் தேவ செய்தியாய் கொடுங்கள் கொடுக்கப்படும் என்று போதகர் பிரசங்கம் செய்து சின்ன பிள்ளைகளாகிய சுந்தரையும், மார்த்தாளையும் பாராட்டி தேவனுக்கு நன்றி செலுத்தினார். சபையாரும் தேவனை துதித்தார்கள். சபையில் அநேகர் ஏதோ உண்டியல் கொடுத்தார்கள் என்பதற்காக கடைசி நாளில் ஐந்து ரூபாய்களோ, பத்து

ரூபாய்க்கோ சில்லரை மாற்றி உண்டியலில் போட்டு கொண்டு வந்தவர்களும் உண்டு. அவர்கள் எல்லாரும் வெட்கப்பட்டு இனி தங்களது செலவுகளில் கிடைக்கிற சில்லரை காசுகளில் பாரம் இல்லாமல் தேவ ஊழியத் திற்கென சேர்த்து கொடுக்க தீர்மானித்தார்கள்.

இதை வாசிக்கும் சிறுவர், சிறுமிகளே நீங்களும் சுந்தர், மார்த்தாளைப்போல பெரியவர்கள், பெற்றோர்கள், உறவினர்கள் தரும் காசுகளை மிட்டாய் வாங்க மட்டும் பயன்படுத்தாமல் கொஞ்சம் சேர்த்து தேவனுக்கென்று கொடுக்க பழகுங்கள். அப்போது எல்லாம் வல்ல தேவன் உங்களை ஆசீர்வதிப்பார். நல்ல புத்தி, ஞானம், அறிவு மற்றும் ஆசீர்வாதங்களைத் தருவார். நீங்கள் ஆசீர்வதிக்கப்பட்டவர்களாய் இருப்பீர்கள்.

"உற்சாகமாய்க் கொடுக்கிறவனிடத்தில் தேவன் பிரியமாய் இருக்கிறர்" II கொரி 9:7

# குடும்பம்

## மாதர் பகுதி

விவாக நிலைமைக்குட்பட்டிருக்கிற சகோதரிகளெல்லாருக்கும் அவர்கள் விவாகம் நடந்தேறின நாள் அவர்களுடைய வாழ்க்கையில் விசேஷித்த நாளாயிருந்திருக்கும் என்பதில் சந்தேகமில்லை. அன்று அவரவர்கள் மனதில் உண்டான பற்பல எண்ணங்கள் எப்படிப்பட்டவையென்று யாரும் அறியமுடியாது. அவரவர் தங்கள் தங்களுக்கென்று ஒரு ஜீவிய கால துணையை அடைந்தோமென்று அகமகிழ்ந்திருப்பார்கள்.

எல்லோருக்கும் ஒரேவித எண்ணம் உண்டாகாவிட்டாலும், ஒவ்வொரு சகோதரியும் தன் தன் கணவனைப்பற்றி மிக மேன்மையாய் எண்ணியிருக்கலாம். தங்கள் கணவரோடு தங்கள் ஜீவியகாலத்தை இவ்விதமாய் கழிக்கலாம் என்று எண்ணியிருப்பர். தங்கள் கணவர் மற்ற ஆண்களைக் காட்டிலும் இன்னின்ன விஷயத்தில் மேன்மையானவர் ஆதலால் நானே ஸ்திரீகளில் பாக்கியவதி என்று எண்ணியிருக்கலாம். சிலர் இவ்வுலகத்தில் என் கணவர் சகல மனுஷரிலும் விசேஷித்தவர் என்று எண்ணியிருக்கலாம், இது இயல்பான விஷயமே, அவரவர்களுக்கு அவரவர்கள் கணவர் வெகு அருமையாய் தோன்ற வேண்டியது அவசியம்தான். அப்படிப் பட்ட எண்ணம் விவாகத்தன்று அல்லது சிலநாட்கள் அல்லது சிலமாதங்கள் அல்லது சில வருஷங்கள் மாத்திரமிருந்து அப்புறம் மாறிப்போய் விட வேண்டுமா? அல்லது குறைந்து போக வேண்டுமா அல்லது குளிர்ந்து போக வேண்டுமா? அல்ல, அல்ல அப்படி ஆகவே கூடாது.

உன் அன்பு நாளுக்கு நாள் அதிகப் பட்டுக்கொண்டே வர வேண்டும்? அதிகப்பட்டுக் கொண்டே வரவேண்டுமே யொழிய குறைந்து போகக் கூடாது. உன்னுடைய நேசத்தீ வரவர கொழுந்து விட்டெரிய வேண்டும். நீ அவ்விதமாய் உன் கணவனை நேசித்து வந்தால்தான் உன் குடும்பம் பாக்கியமுள்ளதாகும்.

அதினால் உன் வீடு இன்பத்துக்கு உறைவிடமும், சந்தோஷத்துக்கு தாம்வாரமும், சமாதானத்துக்கு வாசஸ்தலமுமாகும். உன் புருஷனை நீ கவர்ந்து கொள்ளாவிடில் "வாய்த்தவிடம் போய் அடுப்பும் நெருப்பு அணைந்தது" என்றது போல் உன் வாலிப பிராயத்தின் சந்தோஷமும் போய் உன் விவாகத்தின் மகிழ்ச்சியும் மாறிப்போம். ஆகையால் உன் குடும்பம் நல்ல ஸ்திதியிலிருக்க நீ விரும்புவாயானால் அதற்கேற்ற விஷயங்களையெல்லாம் சோர்வின்றிச்செய்ய கடமைப்பட்டிருக்கிறாய். அவை என்ன?

[தொடரும்]

"மனைவிகளே, கர்த்தருக்குக் கீழ்ப்படிகிறது போல உங்கள் சொந்த புருஷருக்கும் கீழ்ப்படியுங்கள்"—எபே 5 : 22

# புதிய எருசலேம் சபையின் நடபடிகளில் சில

கர்த்தருடைய பிள்ளைகளே, தேவன் அருளிய சொல்லி முடியாத ஈவுக்காக தேவனை ஸ்துதிக்கிறேன். கடந்த நாட்களில் இலங்கையில் சந்திக்கப்பட்ட மக்களிடமிருந்து கடிதங்கள் வந்து கொண்டிருந்தது. மீண்டும் எப்பொழுது வருவீர்கள் என்று கேட்டு எழுதிக்கொண்டேயிருந்தார்கள். அவர்களுடைய வாஞ்சையை அறிந்த கர்த்தர் மறுபடியும் எங்களை 4-2-81ல் இலங்கைக்குப் புறப்படச் செய்தார். சென்னை ஊழியர் ஹமீதும் எங்களுடன் இலங்கை வந்தார். கடலில் பாதி வழி தூரம் பிரயாணமாய் வந்ததும் கடலில் புயல்காற்று வீச ஆரம்பித்தது. பத்திரிகைகளில் படித்திருக்கிறோம், நமது வேத புத்தகத்திலும் படித்திருக்கிறோம் புயல் அடிக்கும் பொழுது மக்கள் எப்படி இருப்பார்கள் என்று. ஆனால் அனுபவிக்கும் பொழுதுதான் அதன் பயங்கரம் தெரியவரும். இது பெரிய புயலாக இல்லை தான் ஆனாலும் கப்பலில் யாரும் எழுந்து நிற்க முடியாது. தூக்கி கீழே எறிந்துவிடும். கப்பலில் உள்ள ஹோட்டலிலுள்ள கண்ணாடி பாட்டில்கள், பாத்திரங்கள் எல்லாம் கீழே விழுந்து உடைந்து விட்டது. கப்பல் சரிந்து, நிமிர்ந்தது எல்லாருடைய இருதயங்களும் கரைந்து போய்விட்டது. மக்களில் பெரும் பகுதி பேர்கள் வாந்தியெடுத்து வேதனைப்பட்டார்கள்.

நானும் உடன் ஊழியரும் ஆவியில் நிறைந்து ஜெபித்துக் கொண்டே கடலை "இரையாதே அமைதியாயிரு" என்று அதட்டிக் கொண்டிருந்தோம். சிறிது நேரத்துக்குள் நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து கடலின் மேல் நடந்து நாங்கள் பிரயாணம் பண்ணின கப்பலுக்குள் வந்ததாக காட்சியில் கண்டோம். உடனே கடலில் அமைதி ஏற்பட்டது. கப்பலும் தன்னுடைய பாதையில் தொடர்ந்து ஓட ஆரம்பித்தது. (மத் 14:32) கர்த்தருக்கே மகிமையுண்டாவதாக!

கர்த்தருடைய பெலத்தினால் இலங்கை வந்து சேர்ந்தோம், பரிசோதனைகள் முடிந்ததும் பாங்க் மானேஜருடைய வீட்டிற்கு வவுனியாவிற்குச் சென்றோம். இவர்களுடன் கூடிப் பலர் தேவனைத் தேடுகிறதையும் பரிசுத்த ஆவியானவர் அவர்களை நடத்துகின்ற அற்புதச் செயல்களையும் நாங்கள் கேள்விப்பட்டு கர்த்தருக்கு அதிகமாய் நன்றி செலுத்தினோம்.

இந்த மானேஜரின் வயது முதிர்ந்த அப்பா அங்கு இருந்தார். இவர் "யெகோவாவின் சாட்சிகள்" என்ற கூட்டத்தைச் சேர்ந்தவர். இயேசுகிறிஸ்து தேவன் அல்லவென்றும், அவர் ஒரு மனிதன், ஒரு தீர்க்கதரிசி என்றும் சொல்லுகிற கூட்டத்தாரைச் சேர்ந்தவர். நாங்கள் முதல் தடவை போயிருந்த பொழுது எங்களிடம் சுவிசேஷம் கேட்க விரும்பாதவராயிருந்தார். ஆனால் தன்னுடைய வீட்டிலுள்ள தன்னுடைய பிள்ளைகள் பரிசுத்த ஆவியினால் நிரம்பிப் பாடுவதையும், ஜெபிப்பதையும், தேவன் அவர்கள் மத்தியில் கிரியை செய்வதையும் பார்த்த உடனே இவருடைய உள்ளத்தில் மாறுதல் உண்டாகியுள்ளது. மீண்டும் அந்த ஊழியர்கள் வந்தால் இந்த காரியமாகப் பேச வேண்டும் என்ற எண்ணமுடையவராய் காணப்பட்டிருக்கிறார். இவர் ஏற்கனவே புத்த மதத்திலிருந்தவர். புத்த மதத்திலுள்ள 7 கற்பனைகளையும், பைபிளிலுள்ள பத்து கற்பனைகளையும் ஆராய்ந்து அவைகளின்படி நடந்தால் போதும் என்ற எண்ணமுடையவராவர்.

நமக்கு ஏற்கனவே கர்த்தர் தந்த அதிகாரங்களில் ஒன்று ஒரு ஏரியாவுக்குள் பிரவேசிக்கும் பொழுது அந்த ஏரியாவிலுள்ள மக்களை எப்படிப்பட்ட ஆவி தாக்கியிருக்கிறது. அதன் குடியிருப்பு எங்கே இருக்கிறது என்பதை கர்த்தருடைய ஆவியானவரின் துணையுடன் அறிந்து அந்த ஆவியை அந்தப் பிரதேசத்தில் மீண்டும் கிரியை செய்ய விடாதபடி கட்டிவிட்டு வந்து மக்களுக்கு சுவிசேஷம் அறிவிப்பதாகும். (மத் 12:29).

இந்த பிரகாரம நாங்கள் இலங்கை சென்றதும் தேவன் காண்பித்த இடத்துக்கு மறுநாளே போய் குறிக்கப்பட்ட ஆவியைக் கட்டிவரத் தேவன் உதவி செய்தார். கர்த்தருக்கே மகிமையுண்டாவதாக! இவ்விதமாய் ஆவியைக் கட்டிவந்த அன்று மாலையில் இந்த வீட்டிலுள்ள பெரியவர் எங்களுடன் பேச வேண்டும் என்று விரும்பினார். நாங்கள் அதற்குரிய சமயம் கொடுத்து பேசினோம். இயேசுகிறிஸ்துதான் அவர்கள் கூறுகிற யெகோவா என்பதற்குரிய ஒரு வேத பாகத்தை வாசித்துக் காண்பித்ததும் (I கொரி 10:1–4) அவர் அப்படியே ஒத்துக் கொண்டார். முட்செடியில் மோசேக்கு தரிசனமான அதே கர்த்தருடைய தூதன், ஆபிரகாமோடு பேசின அதே கர்த்தருடைய தூதனானவர்தான் இந்த இயேசு கிறிஸ்து என்பதை இதுவரையிலும் நான் அறிந்து கொள்ளவில்லை, இன்றிலிருந்து கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை நான் என்னுடைய சொந்த இரட்சகராக ஏற்றுக் கொள்கிறேன்; எனக்காக ஜெபியுங்கள் என்று கேட்டுக் கொண்டார், அப்படியே தினமும் குடும்ப ஜெபங்களில் கலந்து கர்த்தரை மகிமைப் படுத்தி வந்தார். வீட்டார் அனைவருக்கும் மிகவும் ஆச்சரியமாகி விட்டது. கர்த்தருடைய ஆவியினாலே எல்லாம் ஆகும். அவருக்கே மகிமையுண்டாவதாக.

பின்னர் இங்கிருந்து குளியாபட்டியா என்ற ஓர் இடத்துக்கு முன்பு சந்தித்த ஓர் குடும்பத்தை சந்திக்க கடந்து போனோம் இரவு சுமார் 11 மணியளவில் இலங்கையின் தலைநகரமாகிய கொழும்பு போய் சேர்ந்தோம். எந்த ஒரு விடுதிகளிலும் தங்குவதற்கு இடம் கிடைக்கவில்லை. நாங்கள் ஒவ்வொரு இடமாகப் போய் வருவதை தள்ளிரவில் சில டாக்சி டிரைவர்கள் பார்த்துக் கொண்டே இருந்தார்கள். அவர்களில் ஒருவர் எங்களை அழைத்து இங்கெல்லாம் வாடகைக்கு ரூம் கிடைப்பது கஷ்டம். இங்கிருந்து சுமார் 10. கி.மீட்டர் தொலைவில் பல விடுதிகள் இருக்கிறது. நீங்கள் விரும்பினால் அங்கு கொண்டு விடுகிறோம் என்று கூறி காருக்கு வாடகையும் இவ்வளவு ஆகும் என்று கூறினார். உடனே நாங்களும் சம்மதித்து எங்கள் பெட்டிகளையெல்லாம் காரின் பின் பகுதியில் வைத்து பூட்டிவிட்டுக் காரில் ஏறினோம். குறிக்கப்பட்ட தூரத்தை விட அதிகமான தூரத்தில் கார் சென்றது. எங்கள் மூவருக்கும் கலக்கமாகிவிட்டது. தவறான ஆள்கையில் சிக்கிவிட்டோம் என்கிற உணர்வு உண்டாகிவிட்டது. ஆனாலும் கர்த்தர் நம்மைத் துன்மார்க்கரின் கையில் ஒப்புக் கொடுக்கமாட்டார் என எண்ணி ஸ்தோத்தரித்துக் கொண்டே பிரயாணம் செய்தோம். காரைக் கொண்டு போய் ஒரு ஹோட்டல் முன்பாக நிறுத்தினான். சுமார் 15 பேர்கள் இருக்கும்; நல்ல வாட்ட சாட்டமான மனிதர்கள் காரை வந்து வளைந்து கொண்டார்கள். இவர்களுக்கு ஒரு ரூம் ஆயத்தப்படுத்திக் கொடுக்க வேண்டும் என்று டிரைவர் கூறினார். உடனே அவர்களில் முதன்மையானவன் காருக்குள்ளே எட்டிப் பார்த்தான். எங்களைப் பார்த்து, ஓ! பாதர்மார்களா! இவர்களுக்கு கட்டாயம் ரூம் கொடுக்க வேண்டுமே; முதலில் காப்பி வாங்கி வாருங்கள் என்று அவங்க ஆளிடம் கூறவே ஒருவன் ஹோட்டலுக்குள் ஓடினான். இப்படி ஒருவன் எங்களிடம் பேசிக் கொண்டிருக்கிறான்; ஒருவன் காப்பி வாங்க போகிறான் சிலர் எங்களுக்காக ரூம் பார்க்க போகிறார்கள். இருவர் காரின் பின்னே நின்று எங்கள் பெட்டிகளை களவாடிக் கொண்டு போகப் பிரயாசப்பட்டு டிக்கியைத் திறக்கவும் நான் அவனை எச்சரித்தேன். உடனே நான் : டிரைவர் டிக்கியைப் பூட்டிக் காரை எடும்; நாம் மட்டக் குளியா போகலாம் என்றேன். அப்பொழுது அவர்களில் தலைமையானவன் பாதர் நீங்கள் ஏற்கனவே இலங்கை வந்திருக்கிறீர்களா? மட்டக் குளியா எங்கே இருக்கிறதென்று தெரியுமா? என்று கேட்டான், ஓ! தெரியுமே நாங்கள் இலங்கைக்குப் பழைய ஆட்கள் தான் என்றேன். பின்னே ஏன் இங்கே வந்தீர்கள் என்றான். தள்ளிரவாய் இருப்பதால் கொழும்பில் தங்கிவிட்டு காலையில் போகலாம் என எண்ணி ரூம் தேடினோம். உங்கள் டிரைவர் எங்களை உங்களிடம் கொண்டு வந்து விட்டார் என்றதும் அப்படியானால் பாதர் போகட்டும் விட்டு விடுங்கள் என்று கூறவே டிரைவர் காரை எடுத்து மறுபடியும் எங்களை கொழும்பில் கொண்டுவந்து சேர்த்துவிட்டார்.

அடுத்து இனி என்ன செய்வது? சமயம் நள்ளிரவு 1-மணி வரை ஆகிவிட்டது. ஒரு இரவு ஓட்டலில் போய் டீ குடித்துவிட்டு அந்த ஹோட்டல் உரிமையாளரிடம் எங்கள் பெட்டிகளை உங்கள் கல்லா அருகே வைத்துவிட்டு ஓரிரு மணி நேரம் நாங்கள் இங்கே உட்கார்ந்திருக்கலாமா? எங்களுக்கு தங்குவதற்கு ரூம் கிடைக்கவில்லை என்று கூறினேம். எனக்கு ஆட்சேபனையில்லை ஆனல் உங்கள் பொருட்களை நீங்களே பார்த்துக் கொள்ள வேண்டும் என்று கூறினர். எப்படியும் விழித்திருந்து நீங்களே பொருட்களை பார்த்துக் கொள்ள வேண்டும் என்று கூறினர். எப்படியோ விழித்திருந்து பொருட்களைப் பார்த்துக் கொண்டோம். தேவன் இப்படி இரவு முழுவதும் விழித்திருக்கச் செய்துவிட்டாரே என்ற கலக்கம் ஒரு பக்கம், இருந்தாலும் தேவன் நன்மைக்காகவே செய்வார் என்கிற நம்பிக்கையும் உண்டானது. அதிகாலையில் நாங்கள் பஸ் பிடித்து குளியபாட்டியா என்ற ஊருக்குப் புறப்பட்டுப் போனேம். வழியில் ஒரு வெளிப்பாடு: நாங்கள் சந்திக்கப் போகிற சகோதரர் மிகுந்த சோகமாய் தாடி வளர்த்திருப்பதுபோல் தெரிந்தது. அதிலிருந்து அந்த குடும்பத்தில் கவலைக்கிடமான ஏதோ ஒன்று நடக்கவிருக்கிறது என்று ஆவியில் அறிந்து அதற்காக ஜெபித்துக் கொண்டே குறிக்கப்பட்ட இடம் போய் சேர்ந்தோம்.

(தொடரும்)

Pastor S. Sundar Raj
Vallioor.

---

"உங்களை அழைக்கிறவர் உண்மையுள்ளவர், அவர் அப்படியே செய்வார்"
—I தெச 5 : 24

---

(தொடர்ச்சி)

# சாட்சி

திருமணம் முடித்துக் கொடுத்த மூன்று சகோதரிகளின் ஊருக்கும் சென்று அவர்களிடமும் ஒப்புரவாகி விட்டேன், இப்போதும் வீட்டில் யாவரும் என்னிடத்தில் மிகவும் அன்பாகவும் என்னைக்குறித்து இப்படி திருந்தி விட்டானே என பெருமைப் பட்டுக் கொள்வார்கள்.

கர்த்தரை ஏற்றுக்கொண்டதால் அடியேனுக்கு எண்ணிடலங்கா நன்மைகள் கிடைத்துக் கொண்டே வருகிறது.

முதலில் நான் எப்பொழுதும் சந்தோசத்துடனும் மகிழ்ச்சியுடனும் காணப்படுகிறேன். இரண்டாவதாக எனக்கு இருந்த டாக்டரால் குணப்படுத்த முடியாத மயக்கம் என்ற நோயை தேவன் முற்றிலுமாக என்னை விட்டு நீக்கினர். மூன்று விட முடியாத கெட்ட பழக்க வழக்கங்களை விட கிருபைச் செய்தார். யாவரும் விரும்பும்படி என்னை மாற்றிக் கொண்டு வருகிரர். நான்கு பிசாசின் பிடியிலிருந்து முற்றிலும் பரிபூரண விடுதலை தந்தார். ஐந்து கல்வியிலே நல்ல ஞானத்தை கொடுத்துக் கொண்டு வருகிரர். ஆறு தீய எண்ணங்களையும், துர்சிந்தனைகளையும் மாற்றினர். ஏழு விட்டுவிட முடியாத சினிமா பார்ப்பதை விட்டுவிட கிருபை செய்தார். எட்டு அவ்வப்போது ஏற்படும் தேவைகளை உடனுக்குடன் பூர்த்தி செய்து கொண்டு வருகிரர்.

சகோதரர் சந்திரன் அவர்கள் கல்யாணத்தினத்தன்று தமிழ்நாடு வந்த தலைமை ஞயாவைக் காணும் பேறும், அவர்களால் என் தலையில் கைவைத்து ஜெபிக்கும் பாக்கியத்தைப் பெற்றேன்.

நான் சந்திக்கப்படுவதற்கு எட்டு மாதங்களுக்கு முன்பு தான் என்னுடைய சத்துருவானவனை எப்படியாவது அடிக்க வேண்டுமென நினைத்து என்னிடத்தில் ஆட்கள் இல்லாத காரணத்தினலும், பணமில்லாத காரணத்தினலும், வேறு வழியில்லாது நேரடியாக உடம்பை வைத்து நான் இவர்களை மடக்க முடியும் என்ற கெட்ட எண்ணத்தோடு கலைகள் பயின்றேன். இப்படிப் பட்ட கெட்ட எண்ணத்தோடு முயற்சித்ததை பெரிய பாவமாக அறிக்கை செய்து விட்டு விடுகிறேன்.

கடந்த இருமாதத்திற்கு முன்பு வீட்டிற்கு வைத்தியம் செய்து வந்த மந்திரவாதிக்கு என்னைப்பற்றி தெரிய வந்தது. இனி இவனால் நமக்கு வருமானம் கிடைக்காது எனவும்; இவன் நம்மை விட்டு பிரிந்து விடுவான் எனவும் நினைத்து சாத்தானை என்மீது ஏவி விட்டான். அது ஆந்தை ரூபத்தில் வந்து வீட்டில் உள்ள ஒரு அறையில் நான் படித்துக் கொண்டு இருக்கும் போது என் தலைக்கு எதிரே அடிக்கடி வந்தது. உடனே ஆவியானவரால் உணர்த்தப்பட்டு ஸ்தோத்திரத்தை வேகமாக கூறிக்கொண்டே அதை அடித்துப்போட கிருபை செய்தார். ஆனால் வீட்டில் பெற்றோர்கள் இந்து மதத்தில் இருப்பதால் சகுனம் பார்த்து வீட்டிற்குள்ளாக ஆந்தை வரக்கூடாதே என பயந்தவர்களாக என்ன நடக்கப் போகிறதோ என கூறிவிட்டு, என்னை 1 மணி நேரத்திற்கு ஒரு தடவை வந்து என்னை பார்த்துவிட்டு சென்றார்கள். அப்பொழுது கர்த்தருடைய பிள்ளைகளுக்கு எவ்வித தீங்கும் வராது என அவர்களுக்கு தைரிய மூட்டினேன். காலையில் மீண்டுமாக கல்லூரிக்கு வந்துவிட்டேன்.

ஒருவாரம் கழித்து திரும்ப ஊருக்குச் சென்றதும் எனக்கு கிடைத்த முதல் செய்தி நீ ஆந்தையை அடித்த அதே நாள் இரவு உன்னுடைய பழைய மந்திரவாதி இறந்து விட்டான் என்பதே. அதிலிருந்து தேவனுடைய பிள்ளைகளுக்கு எந்தவித ஆபத்தும் வராதபடி ஆவியானவர் இரவும், பகலும் நம்மைக் காத்து, நம்மை ஆபத்திலிருந்து விடுவிக்கிறார் என்றும் உணர்ந்து கொண்டேன். கர்த்தருக்கு ஸ்தோத்திரம். இன்னும் தேவன் தாமே அடியேனை ஆசீர்வதிக்கவும், M.A படித்துக் கொண்டு இருக்கிற சகோதரிக்கு கல்வியிலே ஞானத்தைத் தரவும்; M.A படித்து வேலையில்லாது 31 வயதாகி சகோதரனுக்கு எப்படியாவது ஒரு உத்தியோகத்தை வாங்கி கொடுக்கவும்; சத்துருவானவனின் ஏவுதலால் உடம்புக்கு பலவீனமாகி கால் வீங்குவதும், வத்துவதுமாக காணப்படுவதால் விட்டுப்போன பட்ட படிப்பை தங்கைக்கு தொடரவும்; என்னுடைய இரண்டாவது சகோதரியின் கணவருக்கு ஏவுதலால் உண்டான பைத்தியம் தெளியவும்; அதன்மூலம் அவர்கள் கர்த்தரைத் தேடவும், நானும் M.Sc படிப்பை முடிக்கவும், கர்த்தருக்குச் சித்தமானால் எனக்கும் ஒரு உத்தியோகத்தை வாங்கித் தரவும்; மேலும் வீட்டில் சந்திக்கப்படாத யாவரும் கர்த்தருக்குச் சித்தமான நேரத்தில் சந்திக்கப்படவும்; அடியேனுடைய ஊரிலே தாகம் தீர்க்கப்படாத படிக்கு அநேக ஆத்துமாக்கள் அழிவின் பாதையை நோக்கி சென்று கொண்டிருக்கிறார்கள் ஆனபடியால் அவற்றை தடுத்து நிறுத்த; அதிவிரைவிலே கர்த்தருக்குச் சித்தமானால் அங்கு புதிய எருசலேம் சபையின் ஆலயம் எழுப்பித் தருமாறும்; நான் இன்னும் அநேக ஆத்துமாக்களுக்கு சாட்சியாக வாழவும், யாவரும் எனக்காகவும், என்னுடைய குடும்பத்திற்காகவும் ஜெபிக்குமாறு கேட்டுக் கொள்ளுகிறேன்.

கர்த்தருக்கே மகிமையுண்டாவதாக!

சகோ : பர்னபாஸ்
வள்ளியூர்.

---

# சாட்சி

## மெய் தேவனைக் கண்டு கொண்டேன்

தேவனுக்கு மகிமை!

வானத்திலேயும் பூமியிலேயும் தேவர்கள் என்னப்படுகிறவர்களும் உண்டு. இப்படி அநேக தேவர்களும், அநேக கர்த்தாக்களும் உண்டாகியிருந்தாலும்

பிதாவாகிய ஒரே தேவன் நமக்குண்டு, அவராலே சகலமும் உண்டாகியிருக்கிறது. அவருக்கென்று நாமும் உண்டாகியிருக்கிறோம். இயேசு கிறிஸ்து என்னும் ஒரே

கர்த்தரும் நமக்குண்டு. அவர் மூலமாய்ச் சகலமும் உண்டாகியிருக்கிறது. அவர் மூலமாய் நாமும் உண்டாயிருக்கிறோம்.

என் பெயர் C. சேவியர். நான் கன்னியாகுமரி மாவட்டத்தில் உள்ள அண்டுகோடு என்ற சிற்றூரில் ஒரு இந்து குடும்பத்தில் பிறந்தேன். பரம்பரைப்படி இந்துக் கடவுள்களை வணங்கி வந்தேன். ஒரு குறிப்பிட்ட வயதிற்குப் பின் என் உள்ளத்தில் பாவ சிந்தனைகள் எழும்பின. திடீரென்று வேலை தேடி பம்பாய் வந்தேன். Navy-ல் சிவில் (Civil) வேலை கிடைக்கக் கர்த்தர் கிருபை செய்தார். அப்பொழுது அநேக சிற்றின்ப புத்தகங்கள் படித்தவனாய் காணப்பட்டேன். அதனால் முகத்தில் வேர்குரு போன்ற கொப்பளங்கள் ஏற்பட்டது. இதற்கு முன்னால் ராஜேந்திரன் என்ற யோசுவ என்ற சகோதரன் Navy-Training முடித்து அதே இடத்தில் வந்திருந்தார். அவர் புதிய ஏற்பாடு படிக்கிறதை அடியேன் முன்னே கவனித்திருந்தேன். அந்த புதிய ஏற்பாட்டை வாங்கிப் படித்தால் என் முகத்தில் உள்ள கொப்பளங்கள் மாறுமென்று மனதில் தோன்றிற்று. அவரிடம் சென்று அதைக் கேட்டு வாங்கி அநேக நாட்கள் படித்தேன். அதிசயமாக கர்த்தர் அவைகளை மாற்றினார்.

பிறகு அந்தச் சகோதரன் இயேசு கிறிஸ்துவைப் பற்றி என்னிடத்தில் சொன்னார்கள். நான் ஐயப்பன் சுவாமி கடவுள் இல்லையா? என்று அவரிடத்தில் தர்க்கம் பண்ணினேன். கடைசியாக அவர்கள் ஒரு நாள் ஞாயிற்றுக்கிழமை பம்பாய் புதிய எருசலேம் சபை பரிசுத்த ஆராதனைக்கு என்னை அழைத்துச் சென்றார்கள். தேவ அன்பு சபையில் கிரியை செய்கின்றதைக் கண்டேன். அந்த அன்பு என்னையும் இழுத்துக் கொண்டது. அது முதல் இயேசு கிறிஸ்துவை ஏற்றுக் கொண்டு என்னுடைய உணர்த்தப்பட்ட பாவங்களை புதிய எருசலேம் சபை தலைமை மெய்ப்பரிடத்தில் அறிக்கையிட்டு அவர்கள் மூலமாய் பிதா, குமாரன், பரிசுத்தாவியின் நாமத்தில் ஞானஸ்நானம் பெற்றேன். அத்தினத்தில் என் உள்ளத்தில் ஏற்பட்ட சந்தோஷத்திற்கு அளவேயில்லை. ஒரு நாள் கூட்டு ஜெபத்தில் அபிஷேகம் பெற்றேன். அதன் பின் இயேசு கிறிஸ்து மெய்யான தேவன் என்று முழுவதுமாய்க் கண்டு கொண்டேன்.

இதற்குப் பின்பு என் உள்ளத்தில் அதிக பாவப் போராட்டம் ஏற்பட்டது. பம்பாய் பட்டணம் முழுவதும் இச்சையாகவே காணப்படுகிறது. உள்திருடன் வெளித்திருடனுக்கு உடந்தை என்றது போல் உள்ளுக்குள் பாவம் இருந்ததால் வெளியிலிருந்து வரும் பாவங்களை எதிர்க்க முடியாமல் அநேக நாட்கள் உபவாசித்து கதறி அழுது என் தேவனை நோக்கி ஓலமிட்டேன். புதிய எருசலேம் சபை தலைமை போதகரிடத்தில் ஆலோசனையும் பெற்றுக் கொண்டேன். கர்த்தர் ஒரு வசனம் உணர்த்தினார்:

'ஆகையால் குமாரன் உங்களை விடுதலையாக்கினால் மெய்யாகவே விடுதலையாவீர்கள்' யோவா 8 : 36. ஒரு நாள் ஜெபிக்கும் போது, 'விடுவிப்பேன்' என்று ஆவியானவர் பேசி எசேக்கியேல் 36 : 37 வசனத்தை உணர்த்தி ஜெபிக்கச் சொன்னார். கர்த்தர் அவைகளின்று விடுவித்தார். என் தேவனை ஸ்தோத்தரிக்கிறேன்.

உன் சுரூபங்களை மூடிய வெள்ளித்தகட்டையும், உன் விக்கிரகங்களின் பொன் ஆடையாபரணத்தையும் தீட்டாக எண்ணி, அவைகளைத் தீட்டுப்பட்ட வஸ்திரம் போல எறிந்து விட்டு, அதைச் சீ! போ என்பாய் (ஏசா 30 : 22).

இப்பொழுது தேவன் தகப்பன் பிள்ளைக்கு போதிக்கிறது போல் ஆவியானவர் பேசுகிறார், உணர்த்துகிறார், ஆலோசனை தந்து வழி நடத்துகிறார்.

நான் சிறுவயது தொடங்கி பயம் உள்ளவனாய் காணப்பட்டேன். இருட்டிவிட்டால் வீட்டுக்குள்ளிருந்து பொருள் எடுத்து வர வீட்டிற்குள் ஏறவும் பயப்பட்டேன். இரட்சிக்கப்பட்டப் பின்பு பயப்படாதே என்று தேவன் சொன்னதுண்டு. ஒருநாள்

ஜெபம் செய்யும் போது நீ சாத்தானுக்குப் பயப்படாதே. அவன் (சாத்தான்) பாதாளத்திற்கு போகிறதை அறிந்து அவனே பயந்து நடுநடுங்கிக் கொண்டிருக்கிறான் என்று உணர்த்தினர்.

பின்பு ஒரு நாள் பாண்டுப் ஆலயத்தில் மாலை ஜெப வேளையில் எல்லோரும் சாம்ராஜ் சகோதரருடைய வீட்டில் ஆசீர்வாத கூட்டத்திற்கு கடந்து சென்றார்கள். நான் தனிமையாய்க் காணப்பட்டேன். அதிகமாக பயந்தவளாகக் காணப்பட்டேன். பாடல் முடித்துவிட்டு கண்மூடி ஜெபிக்கப் பயந்து விழித்திருந்து ஜெபித்தேன். திடீரென்று பரிசுத்த ஆவியானவர் ஆட்கொண்டார். பயம் எல்லாம் ஓடினது. கண்மூடி ஜெபித்தேன். அப்பொழுது ஒரு காட்சி கண்டேன். இதற்கு முன் தலை வாசல் வழியாய் ஒரு கூட்டம் அசுத்தாவிகள் வந்திருக்கிறது. ஆவிக்குள்ளானதும் அவைகள் அடித்து புரண்டு ஓடுவதைக் கண்டேன். தேவனுக்கு மகிமை! அக்கினிக்கு முன் பதர் எம்மாத்திரம். பரிசுத்தாவிக்கு முன் அசுத்தாவிகள் எம்மாத்திரம். பரிசுத்தாவியின் வல்லமைக்கு முன் சாத்தான் நிற்க முடியாது. தேவன் பயத்தை மாற்றினர். என் தேவனை மகிமைப்படுத்துகிறேன்.

நான் முன்பு வணங்கி வந்த இந்து தெய்வங்கள் எல்லாம் பிறந்து மனிதர்களை விட சீர் கெட்ட காமவிகாரமுடையவர்களாய் ஜீவித்து பெண் கொண்டு குழந்தைகள் பிறப்பித்து இறந்து போன இராட்சதர்கள் என்று அறிந்து கொண்டேன். இவர்கள் எப்படி மனுஷர்களை, பாவத்திலிருந்து, காமவிகாரத்திலிருந்து விடுதலையாக்க முடியும்? இது ஒரு போதும் முடியாது. இயேசுகிறிஸ்துவோ அப்படியில்லை. அவர் பாவிகளை இரட்சிக்க உலகத்தில் வந்தார் (1தீமோ 1 : 15). பரிசுத்தமாய் ஜீவித்து மாதிரி காட்டினர். பாவமில்லாதவர் (எபி 4 : 15) அவரிடத்தில் பாவமில்லை (1யோ 3 : 5) இந்த மெய் தேவனை கண்டு கொள்ள எனக்கும் தேவன் அநுக்கிரகம் செய்தார். அன்றியும் ஒரே தரம் மரிப்பதும் பின்பு நியாயத்தீர்ப்படைவதும், மனுஷருக்கு நியமிக்கப்பட்டிருக்கிறது என்றும் அறிந்து கொண்டேன் (எபி 9 : 27).

ஏனென்றால், சரீரத்தில் அவனவன் செய்த நன்மைக்காவது தீமைக்காவது தக்க பலனை அடையும்படிக்கு நாமெல்லாரும் கிறிஸ்துவின் நியாயாசனத்திற்கு முன்பாக வெளிப்பட வேண்டும். இவ்வசனப்படி மனுமக்கள் (சரீரத்தில் இருக்கும் பொழுது) இப்பொழுது இயேசுவை ஏற்றுக் கொண்டு மீட்படையாவிட்டால் நித்திய, நித்திய காலமாய் நரகத்தில் அழியப் போகிறதை நினைத்து மிகவும் என் மனம் வேதனைப்படுகிறது.

ஆதிசபை விழுந்த பின் தேவன் "புதிய எருசலேம் சபை"யை எழுப்பி தமது சித்தத்தை நிறைவேற்றி வருகிறர். வேதத்தில் எழுதியிருக்கிற ஏசா 46 : 11 ; தானி 12 : 1 போன்ற வசனங்கள் 'புதிய எருசலேம் சபையில்' நிறைவேறுகிறதைக் காண்கிறேன். ஏனெனில் சீயோனிலிருந்து வேதமும், எருசலேமிலிருந்து கர்த்தருடைய வசனமும் வெளிப்படும் மீகா 4 : 2ல் சொன்னது போல் தேவன் மறைத்து வைத்த முத்திரிக்கப்பட்ட இரகசியங்களை, தேவஞானங்களை, தேவன் புதிய எருசலேம் சபையில் வெளிப்படுத்துகிறர். உமது ஆலயத்தில் வாசமாயிருக்கும்படி நீர் தெரிந்து கொண்டு சேர்த்து கொள்ளுகிற மனுஷன் பாக்கியவான். உமது வீட்டு நன்மையால் திருப்தியாவோம். இவ்வளவு பெரிதான சிலாக்கியம் எனக்குத் தந்த தேவனை துதிக்கிறேன்.

இப்பத்திரிக்கையை வாசிக்கிற அருமையான வாசகர்களுக்கு அறிவிக்கிறது என்ன வென்றால் தேவன் புதிய எருசலேம் சபைக்கு அநேக வாக்குத்தத்தங்கள் தந்திருக்கிறர். உங்களையும் அழைக்கிறோம். நீங்களும் மெய்யான திருச்சபைக்குள் வந்தால் எங்களுக்கு கிடைக்கும் ஆசீர்வாதத்தில் உங்களுக்கும் பங்கு கிடைக்கும். ஏனென்றால், மெய்யான சபையின்றி பூரணமான இரட்சிப்பு இல்லை. பூரண இரட்சிப்பின்றி கர்த்தருடைய வருகைக்கு எடுத்துக் கொள்ளப்படவோ, மறுரூபப்படவோ முடியாது. அதற்காக இங்கேயே இப்பொழுதே மறுரூபப்பட்டு கொண்டே இருக்க வேண்டும். இயேசுகிறிஸ்து

வரும்போது ஒரு நாள் வெளிப்படையாக மறுரூபம் அடைவோம். ஆவி வளர அந்நியப் பாஷையும், ஆத்துமா வளர வல்லமையும் கொடுக்கப்பட்டுள்ளது. ஆவி வளராவிட்டால் இயேசுகிறிஸ்து வருகையில் சரீரம் மறுரூபம் அடையாது. மணி முதிர்ந்தால் தோல் தானாய் வெடிக்கும். அப்படியே ஆவி முதிர்ச்சி அடைந்தால்தான் மறுரூபம். இதை இப்பொழுதே தேவன் புதிய எருசலேம் சபை மூலம் நிறைவேற்றி வருகிறார்.

நாமெல்லாரும் திறந்த முகமாய்க் கர்த்தருடைய மகிமையைக் கண்ணாடியிலே காண்கிறது போலக் கண்டு ஆவியாயிருக்கிற கர்த்தரால் அந்தச் சாயலாகத் தானே மகிமையின் மேல் மகிமையடைந்து மறுரூபப் படுகிறோம் (II கொரி 3 : 18). இப்பத்திரிக்கையை வாசிக்கும் பிரியமான வாசகர்களுக்கு நான் அறிவிக்கிறது, உங்கள் சபை மூலமும், உங்கள் போதகர்கள் மூலமும் உங்களை விடுதலையாக்க முடியாத பாவங்களை பிரச்சனைகளை இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் புதிய எருசலேம் சபை விடுதலையாக்கும் என சாட்சியாக அறிவிக்கிறேன். ஏனெனில் தேவன் சபையோடு இருக்கிறார். இயேசு ராஜாவின் ஜெயகெம்பீரம் சபையில் காணப்படுகிறது. அக்கிரமங்களினாலும், பாவங்களினாலும் மரித்தவனாய் இருந்த என்னையும் தேவன் உயிர்ப்பித்தார். கிறிஸ்து இயேசுவுக்குள் அவர் என்னிடத்தில் வைத்த தயவினாலே, தம்முடைய கிருபையின் மகாமேன்மையான ஐசுவரியத்தை வருங்காலங்களில் விளங்கச் செய்வதற்காக, கிறிஸ்து இயேசுவுக்குள் என்னையும் அவரோடு கூட எழுப்பி உன்னதங்களிலே அவரோடு உட்காரவும் செய்த என் தேவனை மகிமைப்படுத்துகிறேன் இப்பொழுது என் ஆத்மா கர்த்தரை மகிமைப்படுத்துகிறது. என் ஆவி என் இரட்சகராகிய தேவனில் களி கூறுகிறது. என் தேவனுக்கு சதாகாலங்களிலும் மகிமை உண்டாவதாக! ஆமென் அல்லேலூயா!

சகோ : C. சேவியர்
New Jerusalem church, Bombay.

"...சொல்லி முடியாததும் மகிமையால்
நிறைந்ததுமாயிருக்கிற சந்தோஷம்" —1பேது 1 : 8

# தேவனுடைய பிள்ளைகளாகுங்கள்

"அவருடைய நாமத்தின்மேல் விசுவாசமுள்ளவர்களாய் அவரை ஏற்றுக்கொண்டவர்கள் எத்தனை பேர்களோ, அத்தனை பேர்களும் தேவனுடைய பிள்ளைகளாகும்படி, அவர்களுக்கு அதிகாரம் கொடுத்தார்" (யோவா 1:12).

இந்த வசனத்தை மாத்திரம் பிடித்துக் கொண்டு, சிலர் நான் இயேசுவை விசுவாசிக்கிறேன், ஏற்றுக்கொண்டிருக்கிறேன் ஆகையால் நான் தேவனுடைய பிள்ளை என்று சிலர் தங்களைக்குறித்து எண்ணியுள்ளனர். விசுவாசம் என்றால் என்ன? ஏற்றுக்கொள்ளுதல் என்றால் என்ன? என்பதற்கு விளக்கம் தெரியாமலேயே சாதிக்கின்றனர். அவர் தமக்கு சொந்தமானதிலே வந்தார், அவருக்கு சொந்தமானவர்களோ அவரை [விசுவாசிக்கவில்லை] ஏற்றுக் கொள்ளவில்லை (யோ 1:11). அவரை ஏற்றுக் கொள்ளுகிறவர்கள் தேவனுடைய பிள்ளைகளாகின்றனர். இங்கே அவரை ஏற்றுக் கொள்ளாத கூட்டத்தாரையும், ஏற்றுக் கொண்ட கூட்டத்தாரையும் காண்கிறோம். ஏற்றுக்கொள்ளாதவர்கள் எதை ஏற்றுக் கொள்ளவில்லை என்று முந்தின பகுதியில் எழுதியிருக்கிறது. எந்த மனுஷனையும் பிரகாசிப்பிக்கிற ஒளியைக் குறித்து, தேவனால் அனுப்பப்பட்ட மனுஷனாகிய யோவான் கொடுத்த சாட்சியை ஏற்றுக்கொள்ளவில்லை (யோ 1:6-8). மனுஷனுக்கு ஒளி கொடுக்கிற ஜீவன் அவருக்குள் இருந்தது என்பதை

அவர்கள் ஏற்றுக்கொள்ளவில்லை. (யோ 1: 4-5). அவர் தேவன் என்பதை அவர்கள் ஏற்றுக்கொள்ளவில்லை (யோ 1:1-3).

இயேசுவை தேவன் என்றும், அவருக்குள் ஒளிகொடுக்கிற ஜீவன் உண்டு என்றும், அவரைக் குறித்து யோவான் ஸ்நானகன் கொடுத்த சாட்சியையும் விசுவாசித்து ஏற்றுக் கொண்டவர்கள் எத்தனை பேர்களோ அத்தனை பேர்களும் தேவனுடைய பிள்ளைகளாகும் அதிகாரம் பெறுகின்றனர்.

நாங்கள் இயேசுகிறிஸ்துவின் சீஷர்கள், பிள்ளைகள் என்று இந்நாட்களில் அநேகர் சொல்லுகிற வண்ணம், யூதர்கள் நாங்கள் மோசேயினுடைய சீஷர்கள் என்று சொல்லிக் கொண்டார்கள் [யோ 9:28] இயேசு அதை மறுத்து நீங்கள் மோசேயை விசுவாசிக்கவில்லை, மோசேயை விசுவாசித்தீர்களானால் என்னையும் விசுவாசிப்பீர்கள். அவன் என்னைக்குறித்து எழுதி இருக்கிறானே, அவன் எழுதின வாக்கியங்களை நீங்கள் விசுவாசிக்கவில்லையே என்றார். [யோ 5 46,47]. அப்படியே இயேசுவை விசுவாசிக்கிறேன் என்று சொல்லுகிறவன் அவர் சொன்ன வசனங்களை விசுவாசிக்க வேண்டும். "உன்னைப் போல் ஒரு தீர்க்கதரிசியை நான் அவர்கள் சகோதரரிலிருந்து எழும்பப்பண்ணி, என் வார்த்தைகளை அவர் வாயில் அருளுவேன்; என் நாமத்தினால் அவர் சொல்லும் என் வார்த்தைகளுக்குச் செவி கொடாதவன் எவனோ அவனை நான் விசாரிப்பேன் (உபா 18:18,19) என்று கர்த்தர் மோசேயிடம் சொன்னதை ஜனங்களுக்கு சொன்னார் மோசே. ஆகையால் மோசேயை விசுவாசிக்கிறேன் என்று சொல்கிறவன், இந்த மோசேயுடைய வார்த்தைகளை விசுவாசிக்க வேண்டும், விசுவாசித்து அதற்கு கீழ்ப்படிய வேண்டும். கீழ்ப்படிகிறவனானால் இயேசுகிறிஸ்துவை ஏற்றுக்கொண்டிருக்க வேண்டும். அப்பொழுதான் அவர்கள் மோசேயை விசுவாசிக்கிறவன் என்று அர்த்தம். (தொடரும்)

"7-7-1985 ஞாயிறு அன்று பெங்களூரில் (Bangalore) புதிய எருசலேம் சபையின் கிளை எழுப்பப்பட்டதற்காக கர்த்தரை ஸ்தோத்தரிப்போம்.

11-8-85 அன்று கொடைக்கானலில் புதிய எருசலேம் சபை கிளை எழுப்பப்பட்டது. அதற்காக கர்த்தரை ஸ்தோத்தரிப்போம். அன்றைய தினமே எட்டு பேர் ஞானஸ்நானம் பெற்று திருச்சபையில் சேர்க்கப்பட்டனர். அதற்காகவும் கர்த்தரை ஸ்தோத்தரிப்போம்.

18-8-85 ஞாயிறு அன்று மதுரையில் புதிய எருசலேம் சபை கிளை எழுப்பப்பட்டதற்காகவும் தேவாதி தேவனை ஸ்தோத்தரிப்போம்.

அல்லேலூயா!

# புதிய எருசலேம் செய்தி

# PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம்-23 ★ NOVEMBER 1985




"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ, நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள்.... விழித்திருங்கள்... உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லோருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்..."

மாற்கு 13 : 35-37

**EDITOR: CHIEF PASTOR N. LAZAR**

BOMBAY, INDIA

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லோரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒருமனப்பட்டு கிறிஸ்துவுக்கேற்பான பூரண வளர்ச்சியடையும் படியாகவும் தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய்க் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும்; சபையானது வஞ்சக போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும் படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது. (எபே.4:11-16)

எக்காளசத்தம் - 23 ❋ *NOVEMBER 1985*

## இதழின் உள்ளே



## வாசகர்கள் கவனிக்க

பத்திரிக்கை கிடைத்தவுடனே படிக்காமல், அமைதியுடன் ஒரு இடத்தில் போய் அமர்ந்து உங்கள் வேதாகமத்தையும் பக்கத்தில் வைத்துக் கொண்டு, ஜெபம் பண்ணிவிட்டு, அதற்கப்புறம் பத்திரிக்கையை திறந்து வாசிக்கவும். வாசிக்கும் பொழுது செய்தியில் காணப்படுகிற வேத வசனங்களை உடனுக்குடன் உங்கள் வேதாகமத்தை திறந்து அவ்வசனத்தை வாசித்து ஒத்துப்பார்த்து பின் தொடர்ந்து வாசிக்கவும். இப்படி செய்தால் பூரண பலனையும் தேவ ஆசீர்வாதத்தையும் பெறுவீர்கள்.

# ஆசிரியர் உரை

ஆதி சபையின் வீழ்ச்சியினால் ரோமன் சபையும், புராட்டஸ்டண்ட் சபைகளும் எழும்பின. நாம் எல்லோரும் ஒரே நம்பிக்கைக்கு அழைக்கப்பட்டிருக்கிறோம் அந்த நம்பிக்கையாவது நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்து வருவார். கிறிஸ்துவுக்குள் மரித்தவர்கள் மகிமையான உயிர்த்தெழுதலை அடைவார்கள். உயிரோடு ஆயத்தமாயிருக்கிற பரிசுத்தவான்கள் மறுரூபமடைந்து கர்த்தருக்கு எதிர்கொண்டுபோக மேகங்கள் மேல் ஆகாயத்தில் எடுத்துக் கொள்ளப்பட்டு இவ்விதமாய் எப்பொழுதும் கர்த்தருடனே கூட இருப்போம் என்பதே (1தெச 4:16,17 ; பிலி 3:20,21 ; I கொரி 15:51-54).

இப்படி ஒரே நம்பிக்கைக்கு அழைக்கப்பட்டதுபோல, ஒரே சரீரமும் (ஒரே சபை), ஒரே ஆவியும் உண்டு. ஒரே கர்த்தரும், ஒரே விசுவாசமும், ஒரே ஞானஸ்நானமும், எல்லாருக்கும் ஒரே தேவனும், பிதாவும் உண்டு (எபே 4:4,5) என்று வேதம் திட்டமாய் சொல்லியிருந்தும் பற்பல சபைப் பிரிவுகளையும், கூட்டாய்மைகளையும், பல ஆவிகளையும், பல கர்த்தாக்களையும், பல்வேறுபட்ட விசுவாசங்களையும் (கொள்கைகள், உபதேசங்கள்) பற்பல ஞானஸ்நான முறைகளையும், ஞானஸ்நானமே வேண்டாம் என்போரும், பல ஆண்டவமார்களையும், பல பிதாக்களையும் உடையவர்களாயிருந்தும் அந்த நம்பிக்கை தங்களில் நிறைவேறும் என்று நம்புவோரும், நம்பச் செய்வோரையும் நாம் பார்க்கிறோம்.

சாத்தான் தன்னுடைய கையாட்களை கிறிஸ்தவ ஊழியர்கள் வேஷத்தில் உலகில் அனுப்பியுள்ளான். இவர்கள் நீங்கள் எங்கேயும் இருந்து கொள்ளுங்கள்; எந்த விசுவாசத்தைக் கைக்கொண்டாலும் சரி, மோட்சம் போவீர்கள் என்று போதித்து மக்களை பாவத்தில் நிடப்படுத்தி வருகின்றனர். போதாதென்று 1973 ல் கர்த்தர் வருகிறார் என்றும்; 1983ல் வருகிறாரென்றும்; 1985ல் வரப்போகிறார் என்றும் இப்போ தூதன் ஆசிரியரென்பவர் என் மகள் சொப்பனம் கண்டாள் இன்னும் ஒரு வருஷம் கூட்டப்பட்டிருக்கிறது என்றும் பிதற்றி வருகின்றனர். இந்த பொய்யர்களுடைய வார்த்தைகளினிமித்தம் தேவனுடைய மக்கள் கலங்க வேண்டாம். நீங்கள் எப்பொழுதும் தேவனை சந்திக்க ஆயத்தமாயிருங்கள்.

"எவ்விதத்தினாலும் ஒருவனும் உங்களை மோசம் போக்காதபடிக்கு எச்சரிக்கையாயிருங்கள். ஏனெனில் விசுவாச துரோகம் முந்தி நேரிட்டு கேட்டின் மகனாகிய பாவ மனுஷன் வெளிப்பட்டாலொழிய அந்நாள் வராது" (II தெச 2 : 2, 3). இறைவனுடைய வருகை அவருடைய சரீரமான சபைக்கே வெளிப்படுத்தப்படும். "அந்த பிரசன்னமாகுதலை தேவன் தம்முடைய காலங்களில் வெளிப்படுத்துவார்..." (I தீமோ 6 : 15). "கர்த்தராகிய ஆண்டவர் தீர்க்கதரிசிகளாகிய தம்முடைய ஊழியக்காரருக்குத் தமது இரகசியத்தை வெளிப்படுத்தாமல் ஒரு காரியத்தையும் செய்யார்" (ஆமோ 3 : 7). தேவன் தம்முடைய தீர்க்கதரிசிகளாகிய ஊழியருக்கே வெளிப்படுத்துவார். கள்ளத் தீர்க்கதரிசிகளுக்கு அல்ல, அவர்கள் சொல்லுவது நிறைவேறாது. அவர்களுக்கு பயப்பட வேண்டாம் நீ "உன் தேவனை சந்திக்கும்படி ஆயத்தப்படு." நீ ஆயத்தமா?

கிறிஸ்துவுக்குள்,

N. Yesu [signature]

Chief Pastor N. LAZAR

# நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவினுடைய இரண்டாம் வருகை

(தொடர்ச்சி)

அவர் திரும்பவும் வந்து நம்மை முற்றுமுடிய இரட்சிக்கப் போகிறார், விடுவிக்கப் போகிறார், பரம இராஜ்யத்தில் சேர்த்துக் கொள்ளப்போகிறார் என்ற இந்த மகாப் பெரிய சத்தியம் நம்மை எவ்வளவாய் ஊக்குவிக்கிறது. இது எவ்வளவு பெரிய உன்னதமான வாக்கு! இதுவே தேவனுடைய பிள்ளைகளின் நம்பிக்கையாகும்.

துன்ப துக்கங்களிலிருக்கிற ஒருவரைத் தேற்றுவதும், நம்பிக்கையற்ற நேரங்களில் உற்சாகத்தைக் கொடுப்பதும், சோர்ந்து போகும்போது மிகுந்த பெலனை அருளுவதும் இதுவே. இந்த அறிவு ஒரு விசுவாசி தேவனுக்காய் பாடுபடவும், தேவனுடைய பிள்ளைகள் பாவத்தைவிட்டுவிலகி தங்களைப் பரிசுத்தப்படுத்திக் கொண்டு ஆயத்தத்தோடு காத்திருக்கவும் ஊக்குவிக்கிறது. ஒரு பாவியை கல்வாரி சிலுவையண்டைக் கவர்ந்து கொள்வதும் இதன்றி வேறல்ல.

எதிர்ப்புகள் மத்தியிலும், பயங்கரமான மிருகங்கள் முன்னிலையிலும், பயங்கரமான கொடிய ஆயுதங்கள் முன்னிலையிலும், காவலறைகளிலும், கொழுந்துவிட்டெரியும் அக்கினி சூளையிலும், அநேக பரிசுத்தவான்களைத் தைரியத்தோடு நிற்கச்செய்ததும் இந்த நம்பிக்கையாகும். பசி, பட்டினி, வியாதி, மரணம் இவற்றால் வாதிக்கப்படும்போதும் தைரியமாய் நிலைநிற்க ஊன்றுகோலாய் இருப்பதும் இந்த சத்தியமே.

ஆம், கிறிஸ்தவ மார்க்கத்தின் அஸ்திபாரமே இந்த உபதேசத்திலுள்தான் அடங்கியிருக்கிறது. வேறெந்த மதத்திலும் காணப்படாத இந்த விலையேறப் பெற்ற சத்தியம் ஒவ்வொரு தேவனுடைய பிள்ளைகளுக்கும் ஜீவனுள்ள நம்பிக்கையும் எதிர்பார்ப்புமாகும்.

**இயேசு கிறிஸ்து திரும்ப வராவிடில்?**

1. வேதத்தில் எழுதப்பட்ட. தீர்க்கதரிசனங்களும், இயேசுவானவர் உங்களை என்னிடத்தில் சேர்த்துக்கொள்ள திரும்ப வருவேன் என்றுரைத்ததும், அப்போஸ்தலர்கள் பிரசங்கமும் பொய் என்று கூற வேண்டும். வேதம் முழுவதுமே பொய், கிறிஸ்தவம் தப்பான கற்பனையின்மேல் நிற்கிறது என்று சொல்ல வேண்டியதாகும்.

2. இயேசு திரும்பவராவிடில் அவர் மேலுள்ள விசுவாசத்தோடும், நம்பிக்கையோடும் மரித்தவர்கள், இரத்தசாட்சிகளாய் மரித்தவர்களும், இப்பொழுதும் பாடனுபவிப்பவர்கள், விசுவாசிப்பவர்கள் எல்லோரும் அழிந்தே போனார்கள் என்றாகும்.

3. இயேசு வராவிடில் நம்முடைய பிரசங்கமும் வீண்; விசுவாசமும், தன்னை ஒறுத்தலும் வீண், நாம் முட்டாள்கள் என்றாகும்.

4. இயேசு திரும்ப வராவிட்டால் இவ்வுலகில் அநுதினமும் பெருகிக்கொண்டிருக்கும் அநீதி, அக்கிரமங்களுக்கு முடிவே இராது. ஜனங்கள் எல்லோரும் வாஞ்சிக்கிற சமாதானமும் சௌக்கியமும் ஒருபோதும் வராது.

5. இயேசு வராவிடில் துன்மார்க்கர்கள் அநீதியும், அக்கிரமமும் நடப்பித்து, ஏழைகளை உபத்திரப்படுத்தி, கொள்ளையடித்து பரிசுத்தவான்களைத் துன்பப்படுத்தி, கொலை செய்து, அட்டகாசம் செய்த ஜனங்களுக்கு ஒரு நியாயத்தீர்ப்பும் இல்லை என்றாகும்.

6. இயேசு திரும்பவராவிடில் யூத ஜனங்களின் எதிர்காலம் ஏமாற்றமானதாய் முடியும். தேவன் அவர்களுக்கு அருளிய வாக்குகள் வீணாகும்.

7. மேலும் தேவனுடைய புத்திரர் வெளிப்படுவதற்குச் சிருஷ்டியானது மிகுந்த ஆவலோடே காத்துக் கொண்டிருக்கிறது. (ரோம 8: 19). சர்வ சிருஷ்டியும் ஏகமாய்த் தவித்துப் பிரசவ வேதனைப்படுகிறது (ரோம 8: 23). இயேசு வராவிடில் மனிதர்களுக்கு மட்டுமல்ல சர்வசிருஷ்டிக்கும் வேதனை தீராது. விடுதலை இல்லை.

நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்து வருகிறார் என்று கேள்விப்படும் போதே அதற்காக ஆயத்தமாக இருக்கிறேனா என்ற கேள்வி இயற்கையாகவே நமக்குள் எழுந்து நம்மை ஆட்கொள்ளுகிறது ஆயத்தப்படாதவனில் ஒரு 'திகில்' ஏற்படுகிறது. ஒருவன் அவருடைய வருகையை விசுவாசித்தால் அவன் அதற்கென்று ஆயத்தப்பட்டே ஆகவேண்டும். தன் சுயவிருப்பப்படி ஜீவிக்கவோ, பாவத்தில் ஜீவிக்கவும் முடியாது. தன் சுய விருப்பப்படி ஜீவிக்கவும், பாவத்தில் ஜீவிக்கவும் விரும்புகிறவர்கள் இவ்வுண்மையை அவிசுவாசிக்கவும், புறக்கணிக்கவும் தூண்டப்படுகின்றனர். இவர்கள் சாத்தானின் விருப்பத்திற்கு தங்களைக் கையளிக்கின்றனர்.

யார் வெறுத்தாலும், மறுத்தாலும், நம்பாவிட்டாலும் இயேசு வருவார். தீர்க்கதரிசனங்களெல்லாம் நிறைவேறித் தீரும். ஆம், இயேசுகிறிஸ்து வரப்போகிறார்.

"உங்களைத் திக்கற்றவர்களாகக் கைவிடேன்; திரும்பவும் உங்களிடத்தில் வருவேன்" என்றவர் தம்முடைய ஆத்தும வருத்தத்தின் பலனைச் சேர்க்கும்படி வரப்போகிறார். தாம் ஆயத்தம் பண்ணின இடத்தில் நம்மை அழைத்துக் கொண்டு போக இயேசு வரப்போகிறார்.

எப்படி வருவார்? "ஏனெனில் கர்த்தர் தாமே ஆரவாரத்தோடும், பிரதான தூதனுடைய சத்தத்தோடும், தேவ எக்காளசத்தத்தோடும் வானத்திலிருந்து இறங்கி வருவார்" (I தெச 4 : 16).

"அவர் போகிறபோது அவர்கள் வானத்தை அண்ணாந்து பார்த்துக் கொண்டிருக்கையில், இதோ, வெண்மையான வஸ்திரந்தரித்தவர்கள் இரண்டுபேர் அவர்களருகே நின்று: கலிலேயராகிய மனுஷரே, நீங்கள் ஏன் வானத்தை அண்ணாந்துபார்த்து நிற்கிறீர்கள்? உங்களிடத்திலிருந்து வானத்துக்கு எடுத்துக் கொள்ளப்பட்ட இந்த இயேசுவானவர் எப்படி உங்கள் கண்களுக்கு முன்பாக வானத்துக்கு எழுந்தருளிப் போனாரோ, அப்படியே மறுபடியும் வருவார் என்றார்கள்" (அப் 1 : 10, 11).

"ஆதாமுக்கு ஏழாந்தலைமுறையான ஏனோக்கும் இவர்களைக் குறித்து: இதோ எல்லாருக்கும் நியாயத்தீர்ப்பு கொடுக்கிறதற்கும், அவர்களில் அவபக்தியுள்ளவர்கள் யாவரும் அவபக்தியாய்ச் செய்துவந்த சகல அவபக்தியான கிரியைகளினிமித்தமும், தமக்கு விரோதமாய் அவபக்தியுள்ள பாவிகள் பேசின கடின வார்த்தைகள் எல்லாவற்றினிமித்தமும், அவர்களைக் கண்டிக்கிறதற்கும், ஆயிரமாயிரமான தமது பரிசுத்தவான்களோடுங் கூடக் கர்த்தர் வருகிறார் என்று முன்னறிவித்தான்" (யூதா 14, 15).

அவர் வரப்போகிறார் அவருடைய மெய் தரிசனம் நமக்குப் பந்தய பொருளாக வைக்கப்பட்டுள்ளது. சரியான ஆயத்தத்தோடு இருக்கிறவர்கள் அவரைச் சந்திக்கப் போகிறார்கள் "அவர் வெளிப்படும் போது அவர் இருக்கிற வண்ணமாகவே நாம் அவரைத் தரிசிப்பதினால் அவருக்கு ஒப்பாயிருப்போம்..." "அவர் மேல் இப்படிப்பட்ட நம்பிக்கை வைத்திருக்கிறவனெவனும் அவர் சுத்தமுள்ளவராயிருக்கிறது போல தன்னையும் சுத்திகரித்துக் கொள்கிறான்." (Iயோவா 3: 2, 3).

அவர் வரும் காலங்களையும், வேளைகளையும் அறிவது அக்காலத்திலிருந்த சபைக்கு அடுத்த காரியமல்லாவிட்டாலும் "பிதாவானவர் தம்முடைய ஆதீனத்தில் வைத்திருக்கிற காலங்களையும், வேளைகளையும் அறிகிறது உங்களுக்கு அடுத்ததல்ல" (அப் 1:7) என்று சொன்னாலும் நம்முடைய கர்த்தராகிய

இயேசு கிறிஸ்துவின் வருகையைக் குறித்து அறிவில்லாதிருக்கிறது தேவனுடைய சித்தமல்ல. அந்த நாளையும்-நாழிகையும் நாம் இப்பொழுது அறியாவிட்டாலும், "உம்முடைய வருகைக்கும், உலகத்தின் முடிவுக்கும் அடையாளம் என்ன? (மத் 24:3) என்று சீஷர்கள் கேட்டதற்கு இயேசு பதிலளித்ததினால் நாம் இயேசு கிறிஸ்துவின் வருகைக்கும் உலக முடிவுக்குமுரிய அடையாளங்களையும் கடைசிகால சம்பவங்களையும் ஏராளம் வேதாகமத்தில் காணலாம். அவைகளில் சில நடந்தேறிவிட்டன. சில நடந்தேறி முடியும். கர்த்தர் வருவார்.

"உலகத் தோற்ற முதல் தேவன் தம்முடைய பரிசுத்த தீர்க்கதரிசிகளெல்லாருடைய வாக்கினாலும் உரைத்தவைகள் எல்லாம் நிறைவேறித் தீருங்காலங்கள் வருமளவும், பரலோகம் அவரை ஏற்றுக் கொள்ள வேண்டும்" (அப் 3:21) நிறைவேறித் தீரும் கர்த்தர் வருவார்.

சில அடையாளங்கள்:-

1 அத்திமரத்தினால் ஒரு உவமையைக் கற்றுக் கொள்ளுங்கள்; அதிலே இளங்கிளை தோன்றி துளிர்விடும்போது, வசந்த காலம் சமீபமாயிற்று என்று அறிவீர்கள்". (மத் 24:32 ; லூக் 21:29). யூதர்களின் முன்னேற்றம் (எசேக் 36 ம் அதி). யூதரும் மற்ற அநேக நாடுகளும் சுதந்திரமடைதல் 1948.

2 சோவியத் ரஷ்யாவின் தோற்றம் (எசேக் 39 ஆம் அதி).

3 வேகமான வாகனங்களின் உற்பத்தி: அவைகள் தீவட்டிகளைப்போல் விளங்கி மின்னல்களைப் போல் வேகமாய்ப் பறக்கும் என்பதை இரதங்கள் தெருக்களில் கடகடவென்றோடி; வீதிகளில் இடதுசாரி, வலது சாரி வரும் அவைகள் தீவட்டிகளைப்போல விளங்கி, மின்னலைப் போல வேகமாய் பறக்கும்" (நாகூம் 2:4).

4 பிரயாண வசதியும் அறிவின் பெருக்கமும் ...அப்பொழுது அநேகர் இங்கும் அங்கும் ஓடி ஆராய்வார்கள், அறிவும் பெருகிப்போம்" (தானி 12:4) எக்காலத்தைக் காட்டிலும் இக்காலத்தில் எல்லா துறைகளிலும் அறிவு அதிகமாய் பெருகியுள்ளதைக் காணுகிறோம். வேத அறிவும் அப்படியே.

5 செல்வந்திரட்சி, ஆதார திரட்சி, ஏழைகள் ஒடுக்கப்படுதலும், ஐசுவரியம் குவிக்கப்படுதலும் (யாக் 5:3,4,5).

6 ஐசுவரியவான்கள் மேல் சாபம் (யாக் 5:1-3).

7 அரசியல் மாற்றங்கள் (எசேக் 21· 26,27.)

8 சில ராஜ்யங்கள் இரும்பைப் போல் வலுவாகவும் சில இராஜ்யங்கள் களிமண்ணைப் போல் உறுதியற்றதாயுமிருக்கும் (தானி 2:41).

9 ஜனத்துக்கு விரோதமாய் ஜனம், ராஜ்யத்துக்கு விரோதமாய் ராஜ்யம், ஜாதிக்கு விரோதமாய் ஜாதி (மத் 24:7 ; லூக் 21:10).

10 யுத்தங்களும், யுத்தங்களின் செய்திகளும் (மத் 24:6).

11 பஞ்சம் (மத் 24:7 ; லூக் 21:11).

12 மகா பூமியதிர்ச்சிகள் (லூக் 21:11 ; மத் 24:7).

13 ஜனங்களுக்குப் பிற்காலத்தைப் பற்றிய நம்பிக்கை இருக்காது. திகைப்பும், கலக்கமும், இடுக்கமும் உண்டாகும். (லூக் 21:26, 25).

14 பரியாசக்காரர் தோன்றுதல் (யூதா 17, 18).

15 பொல்லாத கிரியைகளின் பெருக்கம் (IIதீமோ 3:1-5, 13),

16 அக்கிரமப் பெருக்கமும், அன்பு குறைந்துபோதலும் (மத் 24:12; II தெச 2:7).

17 மெய் தேவபக்தியற்ற உலகம் (மத் 24 : 36 – 39).

18 பிசாசுகளின் உபதேசங்கள் (I தீமோ 4:1).

19 இயேசு திரும்பவரமாட்டார் என்று கூறும் பரியாசக்காரர்கள் எழும்புவர் (IIபேது3:3,4).

20 சபைகளில் கள்ளப்போதகர்கள், கள்ள தீர்க்க தரிசிகள் தோன்றுதல் (II பேது 2:1).

21 விசுவாச துரோகம் (II தெச 2:3).

22 ஆவிக்குரிய மந்த நிலை (வெளி 3:15 ; மத் 25:1–13).

23 தேவ பக்தியின் வேஷத்தைத் தரித்துக் கொண்டு அலையும் துன்மார்க்கர், மாய பக்தி காரர்கள் (II தீமோ 3:5).

24 எலியா தீர்க்கதரிசியை தேவன் அனுப்புதல் (மல்கி 4:6 ; மத் 17:11 ; தானி 12:1).

25 ஆண்பிள்ளை பரலோகத்துக்கு எடுத்துக் கொள்ளப்படுதல் (வெளி12:1-5 ; எஸ்தரின் புத்தகம்).

26 தடை அகற்றப்படுதல் (வலுசர்ப்பம் மத்திய ஆகாயத்திலிருந்து தள்ளப்படுதல்) (IIதெச 2:7 ; வெளி 12:7–9).

27 அந்திக்கிறிஸ்து தோன்றுதல் (II தெச 2:5-8).

28 சபை (பரிசுத்தவான்கள்) ஒன்றுதல் (யோவ 17:21-23 ; 10:16 ; எசேக் 37:15–22 ; எபேசி 4:4, 5).

29 சபை 3½ வருஷம் வனாந்தரத்தில் போஷிக்கப்படுதல் (வெளி 12:6,14).

30 சபை நிறைவடைதல் (I கொரி 13:10 ; எபேசி 5:26,27).

31 சபை ஆயத்தப்படுத்தல் (எபி 9:28).

32 சபை எடுத்துக் கொள்ளப்படுதல், முதலாம் உயிர்த் தெழுதல் (Iதெச 4:17 ; Iகொரி 15:31,32).

இவைகள் சம்பவிக்கத் தொடங்கும் போது உங்கள் மீட்பு சமீபமாயிருப்பதால் நீங்கள் நிமிர்ந்து பார்த்து உங்கள் தலைகளை உயர்த்துங்கள் என்றார். (லூக் 21:28). சம்பவித்து முடிந்த பின் என்று காத்திருக்காமல் தலைகளை உயர்த்தி நிமிர்ந்து பார்த்து உஷாராகி ஆயத்தப் பட வேண்டும் என்கிறார் தேவன்.

"...கர்த்தர் வருகிறார்"

— Iகொரி 16:22

CONTD

# கர்த்தருடைய ஜெபம்

கர்த்தருடைய ஜெபம் : மத் 6: 9–13; லூக் 11 : 1-4. மனிதனுடைய ஜெபமல்ல கர்த்தருடைய ஜெபம். பூமண்டல ஜெபமல்ல, பரமண்டல ஜெபம். உலகில் அநேகர் ஜெபம் செய்திருக்கின்றனர். ஜெபம் சொல்லிக் கொடுத்திருக்கின்றனர். அவர்களெல்லாரும் பாவ குறையுள்ள மனிதர்களாகும். இந்த ஜெபத்தைச் சொல்லிக் கொடுத்தவர் பூரண மனிதனும், தேவனுமாகிய தேவகுமாரனும். இந்த

ஜெபத்தினுடைய ஆழமும், அர்த்தமும் சரிவர அறிந்தோர் யார்?

கிறிஸ்தவ உபதேசத்தின் மணிகள் பசும் பொன் சங்கிலிகளில் பொருத்தப்பட்டிருக்கிறதற்கு ஒப்பாகும் இச்ஜெபம். நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து முதலாவது மலைப்பிரசங்கத்திலும் (மத் 6 : 9-13). மற்றொரு முறை சீஷர்கள் தங்களுக்கு ஜெபம் பண்ண கற்றுத்தரக்கேட்ட போதும் கர்த்தர் அதே ஜெபத்தைதான் மறுபடியும் படிப்பித்தார் (லூக் 11 : 1-4).

இந்நாட்களில் கர்த்தருடைய சீஷர்களென்று தம்மை அழைத்துக் கொள்ளும் அநேகர் அவர் சொல்லிக் கொடுத்ததை அற்பமாயெண்ணி பாவத்தின் கடினத்தினால் அதை சொல்லாதது மட்டுமல்ல, சொல்லுகிற மற்றவர்களையும் பகைக்கின்றனர், பரிகசிக்கின்றனர். சொல்லிக் கொடுத்ததும் காட்டியதும் (செய்ததும்) செய்யும்படிக்கே (யோவா 13 : 17).

ஜெபம் :-

1. பரமண்டலங்களிலிருக்கிற எங்கள் பிதாவே!
2. உம்முடைய நாமம் பரிசுத்தப்படுவதாக!
3. உம்முடைய ராஜ்யம் வருவதாக!
4. உம்முடைய சித்தம் பரமண்டலத்திலே செய்யப்படுவது போல பூமியிலேயும் செய்யப்படுவதாக!
5. அன்றன்றுள்ள எங்கள் அப்பத்தை இன்று எங்களுக்குத் தாரும்!
6. எங்கள் கடனாளிகளுக்கு நாங்கள் மன்னிக்கிறதுபோல எங்கள் கடன்களை எங்களுக்கு மன்னியும்!
7. எங்களைச் சோதனைக்குட்படப் பண்ணாமல் தீமையினின்று எங்களை இரட்சித்துக் கொள்ளும்!
8. இராஜ்யமும், வல்லமையும், மகிமையும் என்றென்றைக்கும் உம்முடையவைகளே ஆமென்.

1. பரமண்டலங்களிலிருக்கிற எங்கள் பிதாவே!

இது உறவைக் காட்டுகிறது நாங்கள் எல்லோரும் சகோதரர்கள். நீர் எங்கள் பிதா என்று உண்மையாய் சொல்லக்கூடியவனே இந்த ஜெபத்தைச் சொல்ல அருகதையுடையவன். தேவனால் பிறந்த எல்லோரும் (யோ 1 : 13) என் சகோதரர்கள் என்று ஒப்புக் கொள்ளுகிறேன் என்பது ஜெபத்தின் முதல் வாசகமாகும். நான் வேறே ஜாதி, அவன் வேறே ஜாதி அவனும் நானும் ஒன்றல்ல. அவன் கீழ் ஜாதி மேல் ஜாதி என்பவனும் கொள்வினை கொடுப்பினையில் என் ஜாதியை விடமாட்டேன் என்கிற புதுசிருஷ்டியாகாத (II கொரி 5 : 17) ஜென்மசுபாவமுள்ள மனிதனும்; தேவனை எங்கள் பிதாவே என்று அழைக்க அருகதையற்றவனாகும். அப்படி அழைத்தால் குற்றவாளியாவான். நியாயத்தீர்ப்பு நாளில் நியாயந்தீர்க்கப்படுவான்.

தேவனை, மனுமக்களின் பிதாவாக இயேசுகிறிஸ்து வந்து வெளிப்படுத்தி சொல்லிக் கொடுத்தார். இந்த உயர்ந்த உண்மை போதனை கிறிஸ்தவ மதத்தில்தான் உண்டு. மற்ற மதங்கள் இறைவனை பயங்கரமான நியாயாதிபதியாகவும், சர்வாதிகாரமுள்ள இராஜனாகவும், வெகு தூரமிருப்பவராகவும், வேறுபட்டவராகவும் (தமக்கு சம்பந்தமில்லாதவராகவும்) காட்டுகின்றன. கர்த்தர் வந்து இறைவனை அன்புள்ள பிதாவே! என்றழையுங்கள் என்றார். ஒப்பிடுக : மத் 5 : 45, 48; 6 : 1, 4, 6, 8, 14, 15, 26, 32 + எபி 12 : 5—10. ஆனபடியால் அவரால் மறுபடி பிறந்த அனுபவத்தோடே எங்கள் பிதாவே! என்று உண்மையாய் நாம் அழைத்து ஜெபிப்போமாக.(கலாத் 4:6).

2. உம்முடைய நாமம் பரிசுத்தப்படுவதாக !

இது ஸ்துதியாகும். கர்த்தருடைய நாமத்தை ஸ்துதிக்கிறோம். நாம் ஜெபிக்கும் போதும் அவரை ஆராதிக்கும் போதும் அவருடைய அன்பை எண்ணி ஸ்துதிக்க வேண்டும். ஸ்தோத்திரமில்லாத எந்த ஜெபமும், விண்ணப்பமும் ஏறெடுக்கப்படாது (பிலி 4:6).

அவருடைய நாமத்தின் பரிசுத்தத்தை எண்ணி ஸ்துதிக்கிறோம் (லூக் 1 : 49). இஸ்ரவேலின் தேவன் பரிசுத்தமுள்ளவர். தேவன் மகா பரிசுத்த ஸ்தலத்தில் வாசம் பண்ணுகிற மகா பரிசுத்தர் அவரை நோக்கி ஜெபிக்கிற நாம் அவருடைய நாமத்துக்கு இழுக்குண்டாக்குகிற பாவ அசுத்தங்களை விட்டு அவருடைய நாமம் மகிமைப்படும் (I கொரி 10 : 31). அவருடைய நாமம் எப்படி பரிசுத்தப்படும்? அவருடைய வசனம் சத்தியமாய் பிரசங்கிக்கப்படுவதாலும், கைகொள்ளப்படுவதாலும் அவருடைய நாமம் பரிசுத்தப்படும். அவருடைய நாமமகிமைக்கென்று ஜீவித்து ஜெபிப்போமாக (கலாத் 2 : 20; II கொரி 5 : 9).

3. உம்முடைய இராஜ்யம் வருவதாக!

தேவனுடைய இராஜ்யம் என்பது தேவ ஆளுகையைக் குறிக்கும். தேவ ஆளுகை, தேவனால் ஆளப்படல், ஆவியினால் நடத்தப்படல் (ரோம 8 : 14, 4, 5); ஜீவித்தல் (கலா 6 : 15, 17). தானியேலில் நேபுகாத்நேச்சார் கண்ட தரிசனத்தில் பொன்னும், வெள்ளியும், வெண்கலமும் இரும்பும்+களிமண்ணுமான சிலையை மனுஷர் கையினால் பெயர்க்கப்படாத கல் வந்து மோதி அதை (சிலையை) நொறுக்கி தூளாக்கிப் போட்டு பெரிய பர்வதமாகி பூமி முழுவதையும் மூடிற்று (தானி 2 : 31-45). தேவனுடைய இராஜ்யம் 1000 வருஷம் பூமியில் ஆளுகை செய்யப்போவதையும், நாம் எல்லோரும் (இரட்சிக்கப்பட்ட மக்கள்) அதில் ஆளுநராக நியமிக்கப்படப் போவதையும் அறிவோமாக (மத் 25 : 14-23; லூக் 19 : 12-19). அந்த இராஜ்யம், ஆளுகை முதலில் என்னிலும் பின் இப்பூமியிலும் வருவதாக என்று பிரார்த்திக்கிறோம், எதிர்பார்க்கிறோம்.

தேவனுடைய இராஜ்யத்தில் துன்பமில்லை, துக்கமில்லை, வியாதியில்லை, மரணமில்லை (தேவ ஜனங்களுக்கு) என்பதை இயேசு நிரூபித்து (நடத்தி) காண்பித்தார் (மத் 12 : 22, 28). தேவனுடைய இராஜ்யம் வர எதிர் பார்க்கிற நாம் ஒவ்வொருவரும் அதுவர, அது பரவ தீவிரமாய் பாடுபடுவோமாக. தாலந்துகளை உபயோகிப்போமாக, தேவனுடைய இராஜ்யத்திற்கு நம்மோடு கூட ஆட்களைச் சேர்ப்போமாக. தேவனுடைய இராஜ்யம் (சபை) பரவ நாம் என்ன செய்கிறோம்? ஆதலால் தேவனுடைய இராஜ்யத்தையும் அவருடைய நீதியையும் தேடி உம்முடைய இராஜ்யம் (வரட்டும்) வருவதாக! என்று ஜெபிப்போமாக! நாம் எவ்வளவுதான் முயற்சித்தாலும் தேவனுடைய இராஜ்யம் தேவனால்தான் வரப்போகிறது (தானி 2 : 34, 44) ஆனால் நம்பிரயாசம், தியாகத்துக்குத் தக்க (பலன்) ஸ்தானம் பெறுவோம் (மத் 25 : 14-23).

4. உம்முடைய சித்தம் பரமண்டலத்திலே செய்யப்படுவதுபோல பூமியிலேயும் செய்யப்படுவதாக!

பரலோகத்திலே தேவனுடைய சித்தம் ஒன்றே செய்யப் படுகிறது. பூமியிலே அப்படியில்லை. (விசுவாசிகளிலும் கூட). "அப்பா! பிதாவே! இந்தப் பாத்திரம் என்னை விட்டு நீங்கக்கூடுமானால் நீங்கும் படி செய்யும். ஆனால் என் சித்தத்தின்படியல்ல (மத் 26:39) ஆகக் கடவது." என்றார் இயேசு. இதுவே சரி.

ஆண்டவரே உம்முடைய சித்தம் முதலாவது என்னிலும், பின் இப்பூமி முழுவதிலும் ஆவதாக என்பதே ஒரு விசுவாசியினுடைய ஜெபமாயிருக்க வேண்டும். எவ்வளவோ பேர் தேவசித்தம் வேறு என்று அறிந்த காரியத்திலும் "அப்படியல்ல ஆண்டவரே" என்று ஜெபித்து தேவ சித்தத்தை எதிர்த்து நிற்கின்றனர். அவருடைய சித்தம் எப்பொழுதும் நமக்கு நன்மையாகவே இருக்கும் (ரோமர் 8:28). அவர் நல்லவரும் நன்மை செய்கிற வருமாயிருக்கிறார் (சங் 119:68).

அவருடைய சித்தம் என் வாஞ்சை.

உம்முடைய சித்தம் என்னிலேயும், இந்த உலகத்திலேயும் நிறைவேறுவதாக என்று கண்டிப்பாய் ஜெபிக்க வேண்டும். ஒப்புக் கொடுக்க வேண்டும். தேவன் தம்முடைய தயவுள்ள சித்தம் முழுவதையும் நம்மில் நிறைவேற்றுவாராக.

மேற்கண்ட மூன்று விண்ணப்பங்களும் தேவகாரியத்திற்காய் ஜெபித்தல் ஆகும். ஆனபடியால் ஜெபிப்போர் முதலாவது தேவனைத் துதித்து தேவனுடையகாரியங்களுக்காய் ஜெபிக்க வேண்டும் என்பதை கிறிஸ்துநமக்குப் போதிக்கிறார் பின்நமக்காக ஜெபிக்கலாம்.

பொதுவாக மனிதனுடைய மனம் தன்னையே பிரதானமாக்கித் தனக்காக, தன்னுடைய குடும்பத்திற்காகக் கவலைப்படுவதும் முதலாவது தன்னுடைய கஷ்டங்களுக்காகவே ஜெபிப்பது வழக்கம். அதை அடக்கி தேவனுடைய காரியங்களுக்காக முதலாவது ஜெபிப்போம்.

**5. எங்களுக்கு வேண்டிய ஆகாரத்தை இன்று எங்களுக்குத் தாரும்!**

ஆங்கிலத்தில் அப்பம் (Bread) என்றுள்ளது. இது வயிற்றுக்குரிய போஜனமாகிய அப்பமல்ல. அதற்காக ஜெபிக்க வேண்டாம். கவலைப்படவேண்டாம் என்று இறைவன் சொல்லியுள்ளார் (மத் 6:25-32). மேலும் நாளைக்கு, வாரத்திற்கு ஒரு மாதத்திற்கு ரேஷன் நிரப்பியுள்ளோர் அன்றன்றுள்ள ஆகாரத்தை எங்களுக்கு இன்று தாரும் என்று ஜெபிப்பது ஒருவகை பொய் போலாகும். ஆனபடியால் ஆத்மீக மன்னாவாகிய (தேவ அப்பமாகிய) ஆகாரத்துக்காகவே ஜெபிக்கச் சொல்கிறார். இஸ்ரவேலர்கள் அதிகாலையில் எழுந்து மன்னா சேகரித்தனர். அது பூரணமான அப்பமாயிருந்தது. தேனிட்ட பணியாரம் போன்ற ருசியுள்ளதாயும் புதிய ஒலிவ எண்ணெய் மணமுள்ளதாயும் முத்தைப்போல் வெண்மை (சுத்தம்) யாயுமிருந்தது வெயிலேறினால் உருகிப்போம். தினம், தினம் சேகரித்தனர (யாத் 16:14-21, 31; எண் 11:7-8).

புதிய ஏற்பாட்டில் நம்முடைய ஆத்துமாவைப் பிழைப்பிக்கும் ஜீவ அப்பமாக தேவனுடைய வார்த்தையை, இயேசுவைப் பார்க்கிறோம் (யோவா 6:48-51). ஞான போஜனம். நம்முடைய சரீரம் பூமிக்குரியது. மண்ணினால் ஆனது. பூமிக்குரிய ஆகாரத்தினால், தண்ணீரினால் பிழைக்கிறது. சரியான ஆகாரமும் தண்ணீரும் கிடையாவிட்டால் மெலிந்து நோய்வாய்ப்பட்டு மரித்துவிடும். தேவ வசனமாகிய ஜீவ அப்பம் (லூக் 4:4) நம்முடைய ஆத்துமாவின் போஜனமாகும். சரியான ஆத்தும போதனை கிடையாத ஆத்துமாவும் மெலிந்து புஷ்டியற்று, நோய்பட்டு மரணமடையும். ஆனபடியால் அன்றன்றுள்ள எங்கள் ஆகாரத்தை (இன்றைக்குள்ள ஜீவ வசனத்தை) இன்று எங்களுக்குத் தாரும் என்று ஜெபித்து அதிகாலையில் வேதம் வாசித்து உட்கொள்ளுவோமாக. ஆகாரமில்லாதோர் ஆகாரத்துக்காகவும் ஜெபிக்கலாம்.

ஆண்டவரே அன்றன்றுள்ள அப்பத்தை இன்று எங்களுக்குத் தாரும் என்று ஜெபிப்போமாக. வாஞ்சித்து ஜெபிக்கிறவர்களுக்கு சத்தியம் கிடைக்கும் (யோ 17:17).

**6. "எங்கள் கடனாளிகளுக்கு நாங்கள் மன்னிக்கிறது போல எங்கள் கடன்களை எங்களுக்கு மன்னியும்."**

ஜெப புஸ்தகத்தில் :- "எங்களுக்கு விரோதமாய்க் குற்றம் செய்கிறவர்களுக்கு நாங்கள் மன்னிக்கிறது போல, எங்கள் குற்றங்களை எங்களுக்கு மன்னியும்". பாவ மன்னிப்புக்காக ஜெபித்தல் பாவத்தை இயேசுகிறிஸ்து கடன் என்கிறார். "கடன்" "கடன்" கடன் பட்டார் நெஞ்சம் கலங்கித் தவிக்கும். வழியில் நடக்கும் போதும், கடைத்தெருவில் போகும் போதும் கடன் தந்தவன் வந்திடக் கூடாதே, அவன் வழிமறித்து கையைப்பிடித்து கடத்திற்கு வழிசொல் என்பானே, கடன்காரன் பார்த்திடக் கூடாதே என்கிற கவலை கடன் பட்டவனை வாட்டி வதைக்கும். கடனை கொடுத்து (கட்டி) தீரும்வரை நிம்மதியே இல்லை.

பாவத்தை கடன் என்கிறார் இயேசு கிறிஸ்து நாம் ஒவ்வொருவருக்கும் செய்ய வேண்டிய கடமையுண்டு. பெற்றோர்க்கு

செய்ய வேண்டிய கடமை, சகோதரர்களுக்கு செய்ய வேண்டிய கடமை, பிறர்க்கு செய்ய வேண்டிய கடமையுண்டு. அவ்வண்ணம் பிதாவாகிய கடவுளிடமிருந்து நாம் ஜீவனையும், சுவாசத்தையும், சீரத்தையும், காற்று. தண்ணீர் இன்னும் பற்பலவிதமான உபகாரங்களைப் பெறுகிறோம். அதற்கீடாக நாம் அவருடைய கற்பனைகளின்படி நடக்க (கடமை) கடன்பட்டிருக்கிறோம். கடனைச் செலுத்தித் தீர்க்க நமக்கு நிர்வாகமில்லை. அவருடைய விருப்பத்தை நிறைவேற்ற மனுக்குலம் அவருடைய உலகத்தை அனுபவிக்கிறதற்கு ஓர் நாள் கணக்குச் சொல்லியாக வேண்டும்.

ஆனபடியால் உண்டாக்கிக் கொண்ட கடனை (பாவத்தை) தீர்க்க ஒரே ஒரு வழி தான் உண்டு. இறைவனிடம் மன்னிப்பு கேட்டலாகும். பின் கடன் (பாவம்) படலாகாது (மத் 18 : 23 – 35 ஐ வாசிக்க). ஒரு ராஜா தன்னிடத்தில் கோடிக் கணக்காய் கடன் பட்டிருந்த ஒரு ஊழியக்காரனை மன்னித்துவிட, அவன் புறப்பட்டுபோகையில் தன்னிடம் கடன்பட்டிருந்த (சிறிய கடன்) உடன் வேலைக்காரனைக் கழுத்தை நெரித்து. அவன் கெஞ்சியும் கேளாமல் சிறையில் தள்ளினான். இதைக் கேள்விப் பட்ட இராஜா அந்த பொல்லாத ஊழியக்காரனை அழைத்து "பொல்லாத ஊழியக்காரனே நான் உனக்கு இரங்கி உன் கடன் முழுவதையும் மன்னித்து விட்டேன். அப்படியிருக்க நீயும் உன் உடன் சகோதரனுக்கு மன்னிக்க கடமைபட்டிருக்க மன்னியாமல் இப்படி செய்தபடியால், நானும் உன் கடனை நீ செலுத்தி தீருமட்டும் உன்னைத் தண்டிக்கிறவன் கையில் ஒப்புக் கொடுக்கிறேன்" என்றான். அப்படிப் போல நீங்களும் உங்கள் உடன் சகோதரன் பாவங்களை மனப்பூர்வமாய் மன்னியாமல் போனால் உங்கள் பரமபிதாவும் உங்களுக்கு அப்படியே செய்வார் என்றார். இயேசு கிறிஸ்து (மத் 18 : 21- 35). ஆகையால் பாவ மன்னிப்பு பெற நமக்கு விரோதமாய்க் குற்றம் செய்தவர்களுக்கு நாம் மன்னிக்க வேண்டும்.

மன்னிக்காவிட்டால் மன்னிப்பு இல்லை. "எங்கள் கடனாளிகளுக்கு நாங்கள் மன்னிக்கிறது போல எங்கள் கடன்களை எங்களுக்கு மன்னியும். என்று ஜெபிப்போம். மன்னிப்போம் (எபேசி 4 : 32) கடனை மன்னிப்பது என்றால் லேசான காரியமல்ல. விதவை ஒருவள் கஷ்டப்பட்டு பணம்சேகரித்து வாயை அடக்கி வயிற்றை அடக்கி, நல்ல வஸ்திரம் உடுக்காமல், கண்விழித்து சேர்த்து கொடுத்து வைத்திருந்த பணத்தை வைத்திருந்தவன் ஊதாரித்தனமாய் செலவழித்துப் போட்டு (வஞ்சனை செய்து) கேட்கும்போது இல்லை எனக்குக் கொடுக்க நிர்வாகமில்லை மன்னித்திடுங்களம்மா என்று மன்னிப்பு கேட்பது (கேட்பவனுக்கு) இலேசாக இருக்கலாம்; மன்னிப்பவருக்கோ அது மிகவும் கஷ்டமும், வியாகுலமும் ஆகும். உன்னிடத்தில் Rs. 10, 000 கடன்பட்டவன் நான் ரொம்ப ஏழை என்னை மன்னித்துவிடுங்கள் என்றால் மன்னித்துவிடுகிற நீ நஷ்டப்படாமல், கஷ்டப்படாமல் வேதனைப்படாமல் இருக்க முடியாது. பின் அந்த பணத்தைச் சேர்க்க நீ எவ்வளவு நிந்தையும், அவமானமும், கஷ்டமும் அடைய வேண்டிய (நாகலாம்) நிருக்கும்.

ஆம்! நமக்கு பாவமன்னிப்பு அருள தேவகுமாரன் கசை அடியும் குட்டுதலும், நிந்தையும், அவமானமும், ஆணிகள் கடாவப்படுவதினாலுண்டாகும் வேதனையும், ஈட்டியின் குத்தும், முள்முடியின் அழுத்தமும் அடைய வேண்டும். கல்வாரிகஸ்தியில்லாவிட்டால் பாவமன்னிப்பும் இல்லை. மறுபடியும், மறுபடியும் பாவம் செய்து விட்டு மன்னிப்பு கேட்பது உனக்கு இலேசாக இருக்கலாம். உனக்கு மன்னிப்பருள கடனை மன்னிக்க இறைவன் தண்டனையடையாவிட்டால் (கர்த்தராகிய இயேசு கிறிஸ்து) நீயும், நானும் தண்டனையடைய வேண்டும். பாவம் தண்டனையினால் தான் நீக்கப்படும். பாவத்தின் சம்பளம் மரணம் (இரண்டாம் மரணம் நரகம்) (ரோம 6 : 23). தேவன் நீதியுள்ள நியாதிபதி பாவத்தின் தண்டனையை நீ ஏற்றுக்கொள்ள வேண்டும். (பாவம் செய்த மனிதன் -எசேக்

19 : 4) அல்லது உனக்கு பிணையாளியாக முன் வந்த கிறிஸ்து (யோபு 9 : 33; 15 : 21; 33 : 24; I தீமோ 2 : 5, 6; மத் 20 : 28) ஏற்றுக் கொள்ள வேண்டும்.

இயேசு உன்னில் அன்பு கூர்ந்து, பிள்ளையாகிய நீ வேதனையைத் தாங்கிக் கொள்ள மாட்டாய் வேதனையடையக் கூடாது, ஆக்கினையடைந்து நரகத்தில் விழக்கூடாது என்று; தானே உனக்குவரும் தண்டனையை தம்மேல் ஏற்றுக்கொண்டார். வேதனையுற்றார், பிதாவினால் கைவிடப்பட்டார், வேதனையுற்றார், பிதாவினால் கைவிடப்பட்டார், மரித்தார் (ஏசா 53 : 5, 6; மத் 27 : 46 ; II கொரி 5 : 14, 15; I பேது 2: 24, 25) உன்னுடைய பாவம் அவரை வேதனைப் படுத்துகிறது. நீ போ இனிமேல் பாவம் செய்யாதே" (யோ 8 : 11).

நீ எப்போதாவது கல்வாரிக்குப் போயிருக்கிறாயா? (நியானித்திருக்கிறாயா) சிலுவையில் ஆணிகளாலுண்டான காயத்தின் வேதனை தெரியுமா? நான் ஒரு முறை ஒரு சிற்றோடையைத் தாண்ட வேண்டியதாயிற்று. ஓடையில் சேறும், சகதியும், தண்ணீரும், முட்களுமாய் கலந்திருந்தன; ஓடையின் மறுபுறம் ஓர் புளிய மரமிருந்தது. ஓடையைத் தாண்டும் போது தாங்கலுக்காக மரத்தில் கையை ஊன்றினேன். மரத்தில் (கம்பி வேலி) முள்வேலியடைத்து பிய்த்து எடுத்திருக்கின்றனர். தப்பியிருந்த சிறுகம்பி ஒன்று என் உள்ளங்கையில் பாய்ந்தது. இரத்தம் வந்தது. கையைப் பின்னுக்கு இழுத்துக் கொண்டேன். வேதனையோ சுமார் ஒரு வாரம் தாங்க முடியவில்லை. இந்த சின்ன ஆணிபட்டதற்கு இந்த வேதனை இத்தனை நாள்?

என் நேசரின் (இயேசுநாதர்) கைகளிலும், கால்களிலும் ஊடுருவ அறையப்பட்ட ஆணிகள். ஆணிகளாலுண்டான காயம், காயத்தின் வேதனை காரணம் என் பாவம். அழுதேன் என் பாவத்திற்காக என் பாவம் எவ்வளவு வேதனையுண்டாக்குகிறது என் தேவனே. தேவனே (இயேசுவே) இனி பாவம் செய்து பாவத்தினால் உண்டாகும் அற்பசந்தோஷத்தை நான் அநுபவிப்பதைக் காட்டிலும் பாவஞ்செய்யாதிருப்பதே நலம் என்றேன்.

சகோதரனே, சகோதரியே, தாய்மார்களே, தகப்பன்மார்களே மறுபடியும், மறுபடியும் பாவம் செய்து நீ இன்புற வேண்டுமோ? உனது மீட்பரின் (இயேசு இரட்சகர்) காயத்தை கீண்டி கிளறுகிறாயா? இப்படியா நீ சந்தோசமடைய வேண்டும்? வேண்டாம் சகோதரனே; அப்படி செய்யாதே. கெஞ்சுகிறேன். பாவம் செய்யாதே!

அறியாமல் பாவம் செய்து விட்டால் அவர் மன்னிக்கிறதற்குத் தயையுள்ளவராயிருக்கிறார் (சங் 130 :3, 4). தவறிருந்தால் வெட்கத்தோடும் அழுகையோடும் வா. பாவ அறிக்கை செய், மன்னிப்புகேள். ஒரு தீர்மானம் செய். உன் தீர்மானத்தின்படி நடக்க விரும்பி பாவம் செய்யாதே. அப்படி செய்யமாட்டாய் என்று நம்புகிறேன்.

பிறருக்கு மன்னி, நீயும் மன்னிப்புக்கேள் மன்னிக்காதவனுக்கு மன்னிப்பு இல்லை.

"பிதாவே! எங்கள் கடனாளிகளுக்கு நாங்கள் மன்னிக்கிறது போல எங்கள் கடன்களை எங்களுக்கு மன்னியும்.

7. எங்களை சோதனைக்குட்படப் பண்ணாமல் தீமையினின்று எங்களை இரட்சித்துக் கொள்ளும்.

தீமையினின்று, தீயோனின்று இரட்சியும் நாம் உலகத்தில் இருக்கிறோம். வானமும் பூமியும், பூமியும் அதின் நிறைவும், குடிகளும் கர்த்தருடையவர்களாயிருந்தாலும் தற்காலத்தில் இந்த உலகத்தின் அதிபதி பிசாசே (யோவா 14 : 30; 12 : 31). அவன் தேவனுடைய பிள்ளைகளை விழத்தட்டும்படி சோதனையை உண்டாக்குவான். தேவன் சோதித்தல் (பரீட்சித்தல்) வேறே; தீயோனுடைய சோதனை வேறே. தேவன் நம்மில் தேறினவர்கள் யார் என்றறியவும், பயிற்சிக்காகவும், சிட்சையாகவும் (பாவம் செய்யும் போது) நம்முடைய நன்மைக்கென்றே சிட்சிக்கிறார் (யாத் 16: 4, 5; எபி 12: 5-11; I கொரி 10:13; யாக் 5:11; II பேது 2: 9.)

ஆனால் சாத்தானோ நாம் விழுந்து போகும்படிக்கே சோதிக்கிறான் (லூக் 22:31) நமக்குச் சோதனை சாத்தானாலும், தீயவர்களாலும், சொந்தமானவர்களாலும், நம்முடைய சொந்த மாம்சத்தினாலும் வரும். இயற்கையாகவும் (துன்ப துக்கங்கள்) வரலாம்; அவைகளினின்று இரட்சிக்கப்படும்படி ஜெபிக்கிறோம். நாம் இப்பூமியில் இருக்கும் வரை அப்படி ஜெபிக்கணும் (ஆதி 48:15,16, II தீமோ 4:18; II பேது 2:9; I கொரி 10:13.) சோதனை ஏற்படும். ஏற்படக் கூடாது என்று ஜெபிக்கும்படி சொல்லவில்லை. பரிசுத்தவான்கள் எல்லோருக்கும் சோதனையுண்டாயிற்று; ஆனால், சோதனையில் சிக்கிக் கொள்ளவில்லை. சோதனையை ஜெயித்தார்கள். நம்முடைய கர்த்தருக்கும் ஆரம்பத்தில் மாத்திரமல்ல (லூக் 4: 1-13) ஜீவிய முழுவதிலும் சகோதரர்களாலும், மற்றவர்களாலும், உறவினர்களாலும், சொந்த சீஷர்களாலும் சோதனைகளுண்டாயிற்று (லூக் 22:28). ஆனால் நம்மைப் போல் அல்ல மனிதர்களுக்குண்டாகும் சோதனையில் பெரும்பாலும் அவனவனுடைய இருதயத்திலுள்ள பாவத்தினால் உண்டாகிறது (யாக் 1:12-15) (தேவன் பாவத்தினால் சோதிப்பவரல்ல) இயேசுவோ பாவமற்ற பரிசுத்தர் (யோவா 8:46) அவருக்கு சோதனை வெளியேயிருந்துண்டாயிற்று.

சோதனையினின்று இரட்சிக்கும்படி ஜெபிக்கிறோம் (II தீமோ 4:18). பிதாவே, எங்களைச் சோதனைக்குட்படப்பண்ணாமல் (விழுந்து போகாமல்) தீமையின்று, (பாவத்திலிருந்து, தீயோனின்று, தீயவர்களினின்று) எங்களை இரட்சித்துக் கொள்ளும்! என்ற மூன்று மன்றாட்டுகளும் நமக்காக ஜெபிக்கிறோம்.

**8. கடைசியில் இராஜ்யமும் வல்லமையும் மகிமையும் உம்முடையவைகளே என்று ஸ்துதியுடன் ஜெபத்தை முடிக்கிறோம் ஆமென்!**

இச் ஜெபம் ஸ்துதியுடன் ஆரம்பமாகி ஸ்துதியுடன் முடிகிறது. அவ்வாறே எச் ஜெபத்தையும் ஸ்துதியுடன் ஆரம்பித்து ஸ்துதியுடன் முடிக்கவேண்டும். நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்து நம்முடைய பிரசித்திபெற்ற மலைப்பிரசங்கத்தில் மட்டுமல்ல சீஷர்களில் ஒருவர் ஜெபம் பண்ண போதிக்கும்படி கேட்டபோது நீங்கள் ஜெபம் பண்ணும்போது பரமண்டலங்களிலிருக்கிற எங்கள் பிதாவே!... என்று சொல்லுங்கள் என்றார் (லூக் 11:1-4). மத்தேயுவில் சீஷர்களை வீண்வார்த்தைகளை (ஜெபத்தில்) அலப்பாதேயுங்கள் என்று எச்சரித்து ஜெபம் பண்ண வேண்டியவிதம் என்றார் (மத் 6:5-8). இவ்விதம் சொல்லுங்கள் என்றார் (லூக் 11:2).

கர்த்தர் செய்து காட்டியவைகளெல்லாம் அந்தபடி செய்வதற்கே. இவைகளைச் செய்வீர்களானால் பாக்கியவான்கள் (யோவா 3:12-17). திருவிருந்தின் போதும் கர்த்தர் சொல்லிய அதே வார்த்தைகளையே உபயோகிக்கிறோம். ஏனென்றால் அது கர்த்தருடைய வார்த்தை (லூக் 22:19) ஒப்பிடுக (I கொரி 11: 23-25).

இப்படியிருக்க சிலர் இச் ஜெபத்தை சொல்லுவது கிடையாது. அதற்கு அவர்கள் சொல்லும் காரணங்கள். 1 கர்த்தர் மாதிரி காண்பித்தார் அதை சொல்லும்படியல்ல என்கின்றனர். குரு சொல்லிய ஜெபத்தை சொல்லாத சீஷர்கள்; சரி, அந்த மாதிரிபடி ஜீவித்து, அந்தமாதிரிபடியாவது ஜெபிக்கின்றனரா என்றால் அதுவும் இல்லை. அவர்களுடைய ஜெபங்களில் இந்த எல்லா அம்சங்களும் அடங்கியிருப்பதில்லை.

2 வது கிளிப்பிள்ளை போல் சொல்வது என்கின்றனர் கிளிப்பிள்ளைகள் போலல்ல அர்த்தம் அறிந்து கருத்தோடுதான் சொல்ல வேண்டும். (சொல்லுகிறோம்).

3 வது அது குழந்தைகள் ஜெபம் என்கின்றனர். ஆதி அப்போஸ்தலர்களை குழந்தைகள் என்று பரிகசிக்கின்றவர்கள் நம்மை விட்டு வைப்பார்களா? அவர்கள் தங்களுக்கு அறியாதவைகளைத் தூஷிக்கிறார்கள் அறிந்தவைகளிலே தங்களைக் கெடுத்துக் கொள்ளுகிறார்கள் யூதா 10ம் வசனம்.

 பரமண்டல ஜெபத்தைச் சொல்லக் கூடாது என்கின்றனர் சொல்லக் கூடாது என்று எந்த வசனம் சொல்லுகிறது. சொல்ல வேண்டும் என்று கர்த்தர் எங்களுக்கு வெளிப்படுத்தினர். வசன ஆதாரமும் காட்டுனர்; (மத் 6:9;10; லூக் 11:1-4) என்று சொல்லுங்கள்.

ஆனபடியால் நம்முடைய குறைவுள்ள ஜெபத்தின் முடிவில் கர்த்தருடைய ஜெபத்தைச் சொல்லுவதினல் நம்முடைய ஜெபம் முழுமை பெறும்.

சொல்லுவோம் பரமண்டலங்களிலிருக்கிற எங்கள் பிதாவே...ஆமென்!

---

"நீங்கள் இவைகளை அறிந்திருக்கிறபடியினல், இவைகளைச் செய்வீர்களானல் பாக்கியவான்களாயிருப்பீர்கள்" (யோவா 13:17)

---

# மோட்ச வழி

## குரு–சிஷ்ய உரையாடல்

**சிஷ்யன்:-** ஞானஸ்நானம் பெற்று எந்த சபையில் சேர வேண்டும்?

**குரு :-** ஞானஸ்நானமே சபையில் அதிகாரமுள்ள ஊழியர்களிடம் பெறவேண்டுமேயொழிய வழிப்பிரசங்கிகளிடம் பெறக்கூடாது. ஏனெனில் கர்த்தரும் சீஷர்களுக்கு கட்டளையிடும் போது நீங்கள் உலகமெங்கும் புறப்பட்டுபோய் சகல ஜாதிகளையும் சீஷராக்கி, பிதா, குமாரன், பரிசுத்த ஆவியின் நாமத்திலே அவர்களுக்கு ஞானஸ்நானம் கொடுத்து, நான் உங்களுக்குக் கட்டளையிட்ட (யாவையும்) யாவற்றையும், அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள். இதோ, உலகத்தின் முடிவு பரியந்தம் சகல நாட்களிலும் நான் உங்க (ளுடனே கூட இருக்கிறேன்) ளோடிருக்கிறேன் என்றார் (ஆமென்) (மத் 28:18-20). ஆகையால் சபையில்லாத எல்லா உபதேசத்துக்குள்ளும் உங்களை வழி நடத்தாத பொறுப்பில்லாத பிரசங்கிகளிடம் ஞானஸ்நானம் எடுக்காதிருங்கள். அப்படி கொடுப்பதும், எடுப்பதும் தவறே. அதில் முழுசத்தியமும் நிறைவேறாது அந்த ஞானஸ்நான உடன்படிக்கையை காத்துக் கொள்ளவோ, கடைபிடிக்கவோ, விளங்கிக் கொள்ளவோ மாட்டார்கள். சிலர் ஞானஸ்நானம் எடுப்பது ஒரு இடத்தில், ஐக்கியப்படுவது ஒரு இடத்தில் என்று மாய்மாலமாய் மறைந்து இருப்பார்கள். இவர்களும் இப்படிப்பட்ட ஞானஸ்நானங்களும் தவறு. திருச்சபையாய் அல்லாத ஓடுகால் பிரசங்கிகளிடம் ஞானஸ்நானம் எடுக்கக் கூடாது. விசுவாசிகளும் ஒருவருக்கொருவர் ஞானஸ்நானம் கொடுக்கக்கூடாது. அது திருச்சபையின் வேலை, சரியான முறையில் ஞானஸ்நானம் பெற்று ஐக்கியப்படவும்.

**சிஷ்யன்:-** ஞானஸ்நானம் பெற்றபின் நான் அடைய வேண்டிய தகுதி என்ன?

**குரு :-** பரிசுத்த ஆவியின் அபிஷேகத்தைப் பெற்றுக் கொண்டு கர்த்தர் வரும்வரை திருவிருந்தை (நற்கருணை) ஆசரி

**சிஷ்யன்:-** பரிசுத்த ஆவியின் அபிஷேகம் என்றால் என்ன? நான் விசுவாசித்த போதே பரிசுத்த ஆவியைப் பெற்றுக் கொள்ள வில்லையா?

**குரு :-** இல்லை. விசுவாசித்த பின்பு ஞானஸ்நானத்துக்கு முன்போ, பின்போ பரிசுத்த ஆவியின் அபிஷேகத்தை அந்நியபாஷை அடையாளத்துடனும் வல்லமையோடும் பெற்றுக் கொள்ள வேண்டும்.

**சிஷ்யன்:-** பரிசுத்த ஆவியின் அபிஷேகத்துக்கு அந்நியபாஷை அடையாளம் கண்டிப்பாய் தேவையா? அந்நியபாஷை இல்லாமலும் அபிஷேகம் பெற்றுக் கொள்ள முடியாதா?

**குரு :-** முடியாது. பழைய ஏற்பாட்டின் விசுவாசியிலிருந்து புதிய ஏற்பாட்டின் விசுவாசியை வித்தியாசப்படுத்திக் காட்டுவது இந்த அடையாளமே.

**சிஷ்யன்:-** சிலர் நாங்கள் தீர்க்க தரிசனம் சொல்லுகிறோம், அற்புத அடையாளங்கள் நடத்துகிறோம், ஆத்தும சேவை செய்கிறோம், நாங்கள் பரிசுத்த ஆவியின் அபிஷேகம் பெறவில்லையா? என்கின்றனர்.

**குரு :-** இல்லை. அபிஷேகம் என்பது காணத்தக்கதாகவும் (வல்லமை) கேட்கத் தக்கதாகவும் இருக்கும் (அந்நிய பாஷை, பரியாச உதடு) [அப் 2:33 ; 8:15-15 ; 10:44-48 ; 19:5,6]

**சிஷ்யன்:-** அந்நிய பாஷையாவது என்ன? பேசுகிற அர்த்தம் பிறருக்கு விளங்க வில்லையே அதனால் என்ன பிரயோஜனம்?

**குரு :-** முதலாவது புதிய ஏற்பாட்டின் அபிஷேகத்தை விளங்கிக் கொள்ள வேண்டும். பின் அந்நியபாஷை யாவது என்ன என்பதை நீர் விளங்கிக் கொள்ள முடியும்.

**சிஷ்யன்:-** ஐயா, தயவு செய்து புதிய ஏற்பாட்டின் அபிஷேகத்தை விளக்கித் தரும்படி கேட்டுக் கொள்கிறேன்.

(தொடரும்)

"ஒரே சரீரமும்,...ஒரே ஞானஸ்நானமும்"
உண்டு (எபே 4:4,5)

# வேத பாடம்

**ஆதி 34:6-12** இந்தச் செய்தி யாக்கோபின் புத்திரருக்குத் தெரிய வந்தது. அவர்கள் கோபதாபமாக வெளியிலிருந்து வந்தார்கள். சீகேமின் தகப்பனாகிய ஏமோர் தீனாளை பெண் கேட்ட யாக்கோபினிடம் வந்தான். பரிசமும் வெகுமதியும் தருவதாகவும் அந்த தேசத்தாரோடே கலந்து சுயாதீனமாய் அத்தேசத்தில் தங்கி இருக்கலாம் என்றான். தீனாள் சீகேமின் வீட்டில் இருத்தப்பட்டிருந்தாள்.

**ஆதி 34:13-31** யாக்கோபின் புத்திரர் பழிவாங்க தீர்மானித்து வஞ்சகமான உத்தரவு கொடுத்து நாங்கள் விருத்த சேதனமுள்ளவர்கள் (நுனித்தோல் நீக்கப்படுதல் – சுன்னத்து) நீங்களும் ஆண் மக்கள் எல்லோரும் விருத்த சேதனம் பண்ணிக் கொண்டால் உங்களோடு சம்பந்தம் கலப்போம் என்று சொன்னார்கள். அதற்கு உடன்பட்டு சீகேம் பட்டணத்தின் ஆண் மக்கள் எல்லோரும் விருத்த சேதனம் பண்ணிக் கொண்ட மூன்றும் நாளில் அவர்களுக்கு காயத்தினால் நோவெடுத்த போது லேவியும், சிமியோனும் பட்டணத்துக்குள் பாய்ந்து சீகேம் பட்டணத்தின் ஆண் மக்கள் எல்லோரையும் சீகேமை யும், அவன் தகப்பனையும் கொன்று போட்டு ஸ்திரீகள், குழந்தைகள், ஆடுமாடுகள் ஆகிய மிருக ஜீவன்களையும் சிறைபிடித்து பட்டணத்தையும் கொள்ளையிட்டு தீனாளையும் சீகேம் வீட்டிலிருந்து திரும்ப அழைத்துக் கொண்டு போய்விட்டார்கள். யாக்கோபு இதற்காக மன வருத்த மடைந்தார்.

ஆதி 35:1-7 தேவன் யாக்கோபுக்கு ஞாபகமூட்டி அவர் ஏசாவுக்குப் பயந்து ஓடிப்போன போது பெத்தேலில் செய்த பொருத்தனையை (ஆதி 28:10-22) நிறைவேற்றும்படி சொல்லுகிறார். அந்தப்படி யாக்கோபு பெத்தேலுக்குப் போய் தானும் தன் குடும்பத்தாரும் சுத்திகரணம் செய்து கொண்டு அந்நிய தெய்வங்கள் (அந்நிய தேவனின் பிள்ளைகள் அணியும் ஆபரணாதிகள்) கடுக்கன்கள் எல்லாவற்றையும் கழற்றச் செய்து கர்வாலி மரத்தினடியில் குழி தோண்டி புதைத்து விட்டு போய் மெய்த் தேவனுக்கு பலிபீடம் கட்டி ஆராதித்தார்கள். இந்நாளில் கிறிஸ்தவர்கள் புறஜாதிகளின் மார்க்கத்தின்படி தங்களை அலங்கரித்துக் கொண்டு சுத்திகரணம் இல்லாமல் குற்றமனசாட்சியோடு தேவனை ஆராதிக்கிறது ஆச்சரியமாயிருக்கிறது. நகைகள் அணிகிறவர்களுக்கு பரிசுத்தம், சுத்த மனசாட்சி கிடைக்காது. இதை அவரவர்கள் தங்கள் அநுபவத்தில் கண்டு கொள்ளலாம். தேவ ஆவியினால் போதிக்கப்படுகிற ஒருவரும் உலகத்துக்கு ஒத்த வேஷம் போட முடியாது (ரோம 12:2). கள்ள சபைகளும் பிரசங்கிகளும் மக்களுக்கு இதைப் போதிப்பதில்லை. கைக் கொள்வதில்லை. நாமோ யாக்கோபைப் போல செய்வோமாக. (1தீமோ 3.9,10 ; 1பேது3: 3-5; யாத் 33:5,6 ; ஏசா 30:22).

(தொடரும்)

> “...மனுஷன் எதை விதைக்கிறானோ அதையே அறுப்பான்” (கலா 6:7)

# குடும்பம்

## மாதர் பகுதி

நல்ல மனைவி தன்புருஷன் சுவையற்ற அல்லது கெட்டுப் போன ஆகாரத்தை சாப்பிடும் படி விட்டுவிட்டு, அண்டை வீட்டுப் பெண்களோடு பேசி வீண் காலம் கழிக்கக்கூடாது.

கணவன் கஷ்டப்பட்டு வேலை செய்து விட்டு வரும் போது தன் சொந்த சௌகரியத்தைக் கருதி ஆகாரங்கள் ஆயத்தம் பண்ணாமல் இருப்பதும்; அல்லது தம் இனத்தார் வீட்டுக்கு ஓடிப்போய்விடுவது, சூரியோதயமட்டும் படுக்கையில் புரண்டு கொண்டிருந்து தன் புருஷன் அதிகாலையில் வேலைக்குப் போகும்போது அவனுக்கு சரியான காலை போஜனம் ஆயத்தம் பண்ணி கொடுக்காத மனைவியை யாரும் நல்ல மனைவி என்று சொல்ல மாட்டார்கள்.

பிள்ளைகள் அழுக்கு வஸ்திரம் தரித்துக் கொண்டு ஆளுவாரின்றித் தெருக்களில் ஆடிப்பாடிக் கொண்டிருக்க தன்னை மாத்திரம் அலங்கரித்து கொண்டு இருப்பது சரியில்லை. கணவனுடைய வருமானத்தைவிட அதிகமாய்ச் செலவு செய்பவள் குடிகெடுப்பவளாகும்.

புருஷன் வீட்டுச் செலவுக்கு கொடுக்கும் பணங்களை தன் புருஷனுக்கும், பிள்ளைகளுக்கும் சௌகரியத்தை உண்டாக்கும் காரியங்களுக்காகச் செலவழிக்காமல்; பிரயோஜனமற்ற வேறு காரியங்களுக்கு செலவு செய்பவள் நாசகாரியான மனைவியேயாகும்.

தானும், தன் பிள்ளைகளும், வீடுவாசலும் சுத்தமாயிருக்கச் செய்வதற்குப் பதிலாக அசுத்தமும், அலங்கோலமுமாய் வைத்துக் கொள்ளும் மனையாளை மனுஷ பிறப்பல்ல, மிருகப் பிறப்பென்றால் என்ன தோஷம் என்கிறார் ஒருவர்.

இப்படிப்பட்ட மனைவிகள், அவர்களுடைய குடும்பங்கள் ஒழுங்கற்றதும், சுக

மற்றதும், நிர்ப்பாக்கியமுள்ளதும், சந்தோஷ மற்றதுமாயிருக்கும்.

ஆகையால் சகோதரிகள், தாய்மார்கள் தங்கள் கடமைகளைச் சோர்வின்றி உற்சாகமாய் நிறைவேற்றினால் மாத்திரம் தன் குடும்பத்தில் சந்தோஷத்தையும், சமாதானத்தையும் அனுபவிக்கலாம். ஒவ்வொரு ஸ்திரீயும் ஒவ்வொரு புருஷனும் சந்தோஷத்தையும், சமாதானத்தையும் அளிக்கக்கூடிய இடம் அவர்களுடைய குடும்பமே. அவரவர்கள் தங்கள் தங்கள் குடும்பத்தை இன்பம் நிறைந்த ஏதேன் தோட்டமாக்கும்படி பாருங்கள். குடும்பம்தான் இம்மைக்குரிய சந்தோஷங்களை அனுபவிக்கவும் மறுமைக்குரிய சந்தோஷங்களைத் தேடிக் கொள்ளவும் ஏற்ற இடம். (தொடரும்)

"புருஷன் தன் மனைவிக்குச் செய்ய வேண்டிய கடமையைச் செய்யக் கடவன்; அப்படியே மனைவியும் தன் புருஷனுக்குச் செய்யக்கடவள்" I கொரி 7:3

# புதிய எருசலேம் சபை நடபடிகளில் சில

வீட்டில் போனதும் சகோதரர் இல்லை. சகோதரி மிகுந்த சிரமத்துடன் வந்து கதவைத் திறந்தது. அதற்கு 8 மாதம் கர்ப்பமாய் இருப்பதாகவும், மிகுந்த வயிற்று வேதனை உண்டாகிவிட்டதால் மருத்துவமனைக்குக் கொண்டுபோக கார் கூப்பிட போயிருக்கிறார் என்று சகோதரி கூறினதோடு எத்தனையோ நாட்கள் உங்களை நாங்கள் எதிர்பார்த்திருந்தோம் இன்றைக்கு வந்திருக்கிறீர்களே என்று மிகவும் வருத்தத்தோடு சகோதரி கூறினது. நாங்கள் உட்கார்ந்து ஜெபித்துக்கொண்டிருந்தோம். "சிறிது எண்ணெய் ஜெபித்துக்கொடு. அவள் வயிற்றில் பூசிக்கொள்ளட்டும். குழந்தை பிறந்து இறந்துவிடும். அவளுக்கு ஆபத்து வராமல் நான் காத்துக்கொள்வேன். அதற்காகவே இந்த வேளையில் உங்களை அழைத்து வந்தேன். இதற்காகவே இரவில் உங்களைத் தூங்கவிடவில்லை. சிறிது நேரம் நீங்கள் பிந்திவந்தால் அவளுக்கும் ஆபத்து நேரிடும்" என்று கர்த்தர் பேசினார். எத்தனை ஆச்சரியம் பாருங்கள், தம்மை உண்மையாய் தேடுகிற தம்முடையவர்களை மரணத்துக்கு விலக்கிகாக்க கர்த்தர் எத்தனை கரிசனையுடையவராய் இருக்கிறார் என்பதை உணர்ந்து கொண்டோம்.

சகோதரர் காருடன் வந்தார். அதிகமாய் ஒன்றும் பேசிக்கொள்ள சமயம் இல்லை. கொஞ்சம் எண்ணெய் வாங்கி ஜெபித்துக்கொடுத்து, சகோதரிக்கும் ஜெபித்து அனுப்பினோம். நாங்கள் அவரைத் தனியாய் அழைத்து, "சகோதரரே! குழந்தை பிறந்து இறந்து போகும். சகோதரிக்கு எவ்வித ஆபத்தும் வராது. குழந்தை இறந்து போவதற்காக வருந்த வேண்டாம்" என்று கூறி அனுப்பினோம். அவர் அதை தேவ வார்த்தையாக எடுத்துக் கொள்ளவில்லை. சாதாரணமாய் சூழ்நிலையைப் பார்த்துக் கூறுவதாக எண்ணிக்கொண்டார். சுமார் அரைமணிநேரம்தான் ஆகியிருக்கும். அதே காரில் சகோதரர் மிகவும் சந்தோஷமாக வந்தார் ஐயா, சகோதரிக்குப் பெண் குழந்தை பிறந்து விட்டது. தாயும் சேயும் நன்றாயிருக்கிறார்கள் என்று கூறினார். அப்படியா மிகவும் சந்தோஷம் என்றேன். மீண்டும்போய் கவனித்துவிட்டு வருகிறேன் என்று கூறி கடந்து போனார். மீண்டும் அரைமணி நேரங்கழித்து வந்தார். சோர்ந்த முகத்தோடு ஐயா, நீங்கள் சொன்னது போல் குழந்தை இறந்துவிட்டது. உங்களுக்கு இது முன்னதாக எப்படித் தெரியும்? நீங்கள் எனக்கு விளக்கமாகச் சொல்ல வேண்டும் என்றார்.

அதன் பிறகுதான் தேவன் எங்களோடு பேசுகிறதையும், எதற்காக இந்த குழந்தை இறந்து விட்டது என்பதையும் கூறினோம்.

அவருக்கு மிகவும் ஆச்சரியமாகிவிட்டது. மறுபடியும் கடந்துபோய் சகோதரியிடமும் தேவசெய்தியை கூறி அவர்களுக்கு ஆறுதல் கூறிவிட்டு வந்து விட்டோம். இனித் தேவ ஆலோசனையின்படியே எங்கள் வாழ்க்கையை அமைத்துக் கொள்வோம். நீங்கள் எங்களுக்கு ஆலோசனைத் தரவேண்டும். சகோதரி விட்டுக்கு வந்த பிறகு தான் நீங்கள் போக வேண்டும் என்பதாகக் கூறினர். அதன்படியே மூன்று தினங்கள் அங்கே தங்கியிருந்து சகோதரிக்கும் ஆலோசனைக் கொடுத்துக் கடந்து வந்தோம். இப்பொழுது இரு குழந்தைகளைத் தேவன் அவர்களுக்கு கொடுத்திருக்கிறர். கர்த்தருக்குள் வாஞ்சையாய் இருக்கிறர்கள். கர்த்தருக்கே மகிமையுண்டாதவாக!

மீண்டும் லக்கி லேண்ட், உடபபுசலா, மட்டக்குளியா போன்ற இடங்களுக்கும் சென்று ஆத்துமாக்களைச் சந்தித்து கர்த்தரிடமாய் சேர்த்து விட தேவன் இரக்கம் செய்தார்.

குருங்கண்டல் என்ற ஊரில் மாவட்ட விவசாய அதிகாரியாக வேலைபார்க்கும் ஸ்காந்தா என்பவர் பேங்க் மானேஜருடைய நண்பராயிருந்தபடியால் இவருடைய வீட்டிற்கு சிறப்பு விருந்ினராக எங்களை அழைத்திருந்தார்கள். வெளிநாட்டிலுள்ள விவசாய அதிகாரிகள் பலர் இவரைப் பேட்டி காண அடிக்கடி வந்து போகிறர்கள். இவருடைய வீட்டிலும் இருதினங்கள் தங்கியிருந்தோம். இவர் ஒரு கம்யூனிலவாதி. வீட்டில் யாரும் எந்த தெய்வத்தையும் வணங்குவதில்லை. இரண்டாம் நாள் மாலையில் தன் வீட்டார் அனைவருக்கும் இயேசுகிறிஸ்துவைப் பற்றிச் சொல்லவேண்டும் என்று கேட்டுக் கொண்டார்.

அப்படி பேசிக்கொண்டிருக்கும் பொழுது Mr. ஸ்காந்தா கேட்டார். "நீங்கள் இறைவனைப் பற்றியும், அவருடைய வழிமுறைகளைப் பற்றியும், அதை மீறினல் தண்டனை உண்டு என்பது பற்றியும் அறிந்திருக்கிறீர்கள். எங்களைப் போன்றவர்கள் அதை அறியாதிருக்கிறபடியால் எங்களை இறைவன் தண்டிக்கமாட்டார்தானே?" என்று கேட்டார். அப்படியல்ல, ஒவ்வொரு மனிதனுக்குள்ளும் மனசாட்சி என்றதோர் பிரமாணத்தை இறைவன் வைத்திருக்கிறர். அந்தப் பிரமாணத்தை நாம் மீறி நடந்தால் அதற்குரிய தண்டனை உண்டு என்று சொன்னேம். அப்படியா? சரி "ஒரு ஐசுவரியவானிடம் அவனுடைய தேவைக்குப் போக ஏராளமான செல்வம் இருக்கிறதென்று வைத்துக் கொள்ளுங்கள். நான் ஒரு ஏழை. சாப்பிட ஒன்றுமில்லாதவன். இப்பொழுது என்னுடைய தேவைக்காக அந்த ஐசுவரியவானிடம் செல்வத்தில் கொஞ்சம் எடுத்துக்கொண்டால் அது தவறு அல்லவென்று என்னுடைய மனசாட்சி கூறினல் அது சரிதானே? அதற்காக ஆண்டவர் தண்டிக்கமாட்டாரே?" என்று கேட்டார்.

அப்படியல்ல. நம்முடைய பொருளை இன்னெருவர் நம்முடைய அனுமதியின்றி எடுத்துக் கொண்டால் அல்லது திருடினல் அது தவறல்ல என்று நம்முடைய மனசாட்சி சொல்லாதே. அதுபோலவேதான் எல்லாருடைய மனதும் இருக்கும். அதனல் பிறருடைய மனதை வேதனைப்படுத்தினேமானல் அதற்கும் தண்டனையுண்டு என்று கூறவே, ஒத்துக்கொண்டு குடும்பமாய் முழங்காலிட்டு ஜெபித்தார்கள். இவ்விதமாய் ஊழியம் செய்து முடித்து 19.2.81ல் மீண்டும் இந்தியாவுக்கு கடல் மார்க்கமாய் கடந்துவர தேவன் உதவி செய்தார். அவருக்கே மகிமையுண்டாவதாக.

(தொடரும்)

Pastor S. SUNDARRAJ
Vallioor.

---

"கர்த்தராகிய ஆண்டவர் தீர்க்கதரிசிகளாகிய தம்முடைய ஊழியக்காரருக்குத் தமது இரகசியத்தை வெளிப்படுத்தாமல் ஒரு காரியத்தையும் செய்யார்" (ஆமோ 3:7.)

---

"கொடுங்கள் அப்பொழுது உங்களுக்கும் கொடுக்கப்படும்..."

லூக் 6:38

---

"கிறிஸ்துவுக்குள் அன்பான தேவனுடைய பிள்ளைகளுக்கு புதிய எருசலேம் செய்தி Printing Press (அச்சுக்கூடம்) க்கான தேவைகள்"

| | | Rs. Ps. |
|---|---|---|
| 1. | 13×19 Printing Machine | 19000.00 |
| 2. | 32" Paper cutting Machine | 11000.00 |
| 3. | Proof Machine 13"×22" | 800.00 |
| 4 | Perforating Machine 18" | 1000.00 |
| 5. | English Type Cabinets | 1900.00 |
| 6. | Tamil Type Cabinets | 10000.00 |
| 7. | Locking plate 18"×24" | 400.00 |

+ Tax 10%
without Electric Motor.

ஒரு சிறிய Printing Press (அச்சுக்கூடம்) அமைப்பதற்கு மேற்கண்ட Machine-களும் பொருட்களும் தேவைப்படுகிறது. உதவி செய்வோர் இயேசுவின் நாமத்தில் உதவி செய்யும்படி அன்புடன் கேட்டுக் கொள்ளுகிறோம்.

புதிய எருசலேம் சபை

# புதிய எருசலேம் செய்தி

# PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம்-24 ★ DECEMBER 1985




"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ, நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள்.... விழித்திருங்கள்... உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லோருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்..."

மாற்கு 13 : 35-37

**EDITOR: CHIEF PASTOR N. LAZAR**

BOMBAY, INDIA

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லோரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒருமனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும் படியாகவும் தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய்க் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும்; சபையானது வஞ்சக போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும் படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது. (எபே.4:11-16)

## இதழின் உள்ளே



"கொடுங்கள் அப்பொழுது உங்களுக்குக் கொடுக்கப்படும்..." லூக் 6:38

"கிறிஸ்துவுக்குள் அன்பான தேவனுடைய பிள்ளைகளுக்கு புதிய எருசலேம் செய்தி Printing Press(அச்சுக்கூடம்)க்கான தேவைகள்"

| | | Rs. Ps. |
|---|---|---|
| 1. | 13 × 19 Printing Machine | 19000.00 |
| 2. | 32" Paper cutting Machine | 11000.00 |
| 3. | Proof Machine 13" × 22" | 800.00 |
| 4. | Perforating Machine 18" | 1000.00 |
| 5. | English Type Cabinets | 1900.00 |
| 6. | Tamil Type Cabinets | 10000.00 |
| 7. | Locking Plate 18" × 24" | 400.00 |
| | Total Rs. | 44100.00 |

+ Tax 10%
without Electric Motor

ஒரு சிறிய Printing Press (அச்சுக்கூடம்) அமைப்பதற்கு வேண்டிய Machine-களும் பொருட்களும் தேவைப்படுகிறது. உதவி செய்வோர் இயேசுவின் நாமத்தில் உதவி செய்யும்படி அன்புடன் கேட்டுக் கொள்ளுகிறோம்.

புதிய எருசலேம் சபை

# ஆசிரியர் உரை

ஓர் ஆண்டு முடியப்போகிறது. இயேசுவுக்காய் நாம் செய்தது என்ன என்று திரும்பிப் பார்த்தோமானால் அது சாரமற்றதாய்க் காணப்படும். கர்த்தருடைய வருகைக்கு இருந்த நாட்களில் இதோ ஒரு வருஷம் குறைந்து விட்டது. ஒரு புதிய ஆண்டை சந்திக்க நாம் ஆயத்தப்பட வேண்டும். திட்டமிட்ட ஜீவியம் செய்ய வேண்டும். கடந்த ஆண்டில் நம்மில் ஏற்பட்ட பலஹீனங்கள், தவறுகள், இயலாமைகள், கடமை மீறுதல்கள், கீழ்ப்படியாமைகளை ஞாபகப்படுத்திப் பார்த்து புத்தாண்டில் இவ்வித சம்பவங்கள் நிகழாதபடி தீர்மானிப்போமாக! ஒரு வெற்றியுள்ள வாழ்க்கை புத்தாண்டில் வாழ்வோம். நம்மால் இயன்ற மட்டும், இயேசுவுக்காய் ஏதாவது நிரந்தரமாக செய்துமுடிப்போம்.

புத்தாண்டில் தேவனை சந்திக்க ஆயத்தப்படுவோம். நம்முடைய வாழ்க்கையில் ஓர் ஆண்டு கடந்து போகிறதையும், ஒரு புத்தாண்டு தோன்றுகிறதையும் காண்கிறோம். இது மிகவும் ஆச்சரியமான காரியம். கடந்த ஆண்டிலே அல்லது (சென்று போகிற ஆண்டிலே) தேவன் நமக்கு செய்த எல்லா தயவுக்காகவும், வழி நடத்துதல்களுக்காகவும், கிருபைக்காகவும், பாதுகாப்புக்காகவும் அவர் நமக்கு அருளிய ஆகாரத்துக்காகவும், தெய்வீக ஐக்கியத்திற்காகவும், நிலைநிற்க தேவன் அருளிய கிருபைக்காகவும் நாம் தேவனைத் துதிப்போம்.

தேவன் அருளிய சொல்லிமுடியாத ஈவுக்காக அவருக்கு ஸ்தோத்திரம்! இந்த ஒரு ஆண்டும் தவறாமல் 'புதிய எருசலேம் செய்தி'யை வெளியிட நமக்கு அநுக்கிரகம் செய்த பிதாவாகிய தேவனுக்கு ஸ்தோத்திரம்! இதற்காக உழைத்த, பிழைத்த, ஜெபித்த, தங்கள் நன்கொடைகளினாலும், காணிக்கைகளினாலும் பத்திரிகை ஊழியத்தை தாங்கின எல்லா பரிசுத்தவான்களையும் கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் நாமத்தில் வாழ்த்துகிறோம். இன்னும் இந்த 'புதிய எருசலேம் செய்தி' அநேக பாஷைகளில் வெளிவர யாவரும் ஜெபிக்கும் படியும், உதவும்படியும், உடன் சேர்ந்து உழைக்கும்படியும் இயேசுவின் நாமத்தில் கேட்டுக் கொள்ளுகிறேன்.

கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் நாமத்தினால் 1985-ம் ஆண்டு கிறிஸ்மஸ் வாழ்த்துக்களையும், 1986-புதுவருட வாழ்த்துக்களையும் புதிய எருசலேம் சபையாய் கூறிக் கொள்ளுகிறோம். கர்த்தர் உங்களை ஆசீர்வதித்துக் காக்கக் கடவர்!

கிறிஸ்துவுக்குள்,

N. Lazar

Chief Pastor N. LAZAR

# நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் இரண்டாம் வருகை

(தொடர்ச்சி)

இரண்டாம் வருகைக்கான சில அடையாளங்கள் கடந்த இதழில் எழுதியிருப்பதை வாசகர்கள் கவனித்திருப்பீர்கள். அவைகளில் 23ம் குறிப்பு வரை உள்ள சம்பவங்கள் வாசகர்களுக்கு தெளிவாய் அறிந்த காரியங்களாகும். 24ல் இருந்து 32 வரை உள்ள குறிப்புகளை தேவனுடைய ஜனங்களுக்கு விளக்கிக் காட்ட முற்படுகிறோம்.

24. தேவன் எலியா தீர்க்கதரிசியை அனுப்புதல்:

தீர்க்கதரிசியாகிய எலியா தீர்க்கதரிசனத்துக்கு முன்னடையாளமாய் இருக்கிறார். நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து இந்த உலகத்திற்கு இரட்சகராய் வருமுன் எலியாவின் ஆவியும் பெலனும் உடையவராய் யோவான் ஸ்நானகனை தேவன் அனுப்பினார். எலியாவினிடத்தில் தங்கி கிரியை செய்த தேவ ஆவியானவர் யோவான் ஸ்நானகனை ஆட்கொண்டிருந்தார் (லூக் 1:17) முன் ஒரு முறை எலியாவின் ஆவி அல்லது எலியாவினிடத்தில் தங்கி கிரியை செய்த ஆவியானவர் இரட்டிப்பான மடங்கு எலிசாவின் மேல் இறங்கினார் என்று வேதாகமத்தில் வாசிக்கிறோம் (II இராஜா 2:15). அவ்விதமே யோவான் ஸ்நானகனில் கிரியை செய்த ஆவியை எலியாவின் ஆவி என்று வேதாகமம் குறிப்பிட்டுள்ளது. இதோ கர்த்தருடைய பெரிதும், பயங்கரமான நாள் வருகிறதற்கு முன்னே நான் உங்களிடத்திற்கு எலியா தீர்க்கதரிசியை அனுப்புகிறேன். நான் வந்து பூமியை சங்காரத்தால் அடிக்காதபடிக்கு அவன் பிதாக்களுடைய இருதயத்தை பிள்ளைகளிடத்திற்கும், பிள்ளைகளுடைய இருதயத்தை அவர்கள் பிதாக்களிடத்திற்கும் திருப்புவான் (மல் 4:5,6).

இந்த தீர்க்கதரிசன வாக்கியத்தின் ஒரு பகுதி யோவான் ஸ்நானகனில் நிறைவேறிற்று. அதாவது யோவான் ஸ்நானகனின் தகப்பனாகிய ஆசாரியனாகிய சகரியாவுக்கு தூபபீடத்தின் வலது பக்கத்தில் தரிசனமான காபிரியேல் பிறக்கப் போகிற குழந்தையாகிய யோவான் ஸ்நானகனைப் பற்றி சொல்லும் போது அவன் இஸ்ரவேல் சந்ததியாரில் அநேகரை அவர்கள் தேவனாகிய கர்த்தரிடத்தில் திருப்புவான்; "பிதாக்களுடைய இருதயத்தை பிள்ளைகளிடத்திற்கும் கீழ்ப்படியாதவர்களை நீதிமான்களுடைய ஞானத்திற்கும் திருப்பி உத்தமமான ஜனத்தை கர்த்தருக்கு ஆயத்தப்படுத்தும் படியாக அவன் எலியாவின் ஆவியும், பலமும் உடையவனாய் அவருக்கு முன்னே நடப்பான் என்றார்" (லூக் 1:16,17).

இங்கே மல்கியா தீர்க்கதரிசனத்தில் சொல்லப் பட்டிருக்கிற அவன் பிதாக்களுடைய இருதயத்தை பிள்ளைகளிடத்திற்குத் திருப்புவான் என்கிற ஒரு பகுதி தீர்க்கதரிசனம் மாத்திரம் நிறைவேறிற்று. மல்கியா தீர்க்கதரிசனத்தின் இன்னொரு பகுதியான பிள்ளைகளுடைய இருதயத்தை அவர்களுடைய பிதாக்களிடத்திற்கு திருப்பும் வேலை மீதியாக விடப்பட்டிருக்கிறது.

யோவான் ஸ்நானகன் மேசியாவை சந்திக்க இஸ்ரவேலில் ஒரு கூட்டத்தை ஆயத்தப்படுத்தினார். கட்டியக்காரனாக இதோ வருகிறார் என்று முன்னறிவிப்புக் கொடுத்தார். அவர் மூலமாய் ஞானஸ்நானம் பெற்று பாவ மன்னிப்பாகிய இரட்சிப்பைப் பெற்ற ஒரு கூட்டத்தை ஆயத்தம் பண்ணவும், கர்த்தருக்கு வழியை ஆயத்தம் பண்ணவும் கர்த்தருக்கு முன்னாக யோவான் ஸ்நானகன் முன் நடந்தார். 'யானைவரும் பின்னே மணி ஓசை வரும் முன்னே' என்ற முதுமொழியின் படியும் ராஜாவினுடைய வருகைக்கு முன்னால் இராஜா வருகிறார், வருகிறார் என்று முன்னறிவித்து செல்லுகிற கட்டியக்காரனின் ஊழியம் போன்று யோவான் ஸ்நானகனுடைய வேலை இருந்தது (லூக் 1:76,77). இவரால் ஆயத்தப் படுத்தப்பட்ட ஒரு சிறு கூட்டமே இயேசுவை மேசியாவாக ஏற்றுக் கொண்டது. யோவான் ஸ்நானகனிடத்தில் வந்து மனந்திரும்பி தங்கள்

பாவங்களை அறிக்கையிட்டு, பாவ மன்னிப்பு பெற்றுக் கொண்ட சீஷர்களே இயேசு கிறிஸ்துவுக்கு சீஷர்களானுர்கள். அப்போஸ்தலர்கள் எல்லோரும் யோவான் ஸ்நானகனுடைய ஞானஸ்நானத்தைப் பெற்றவர்களாகும். அப்படிப்போல உலகமெங்குமுள்ள தேவனுடைய பிள்ளைகளுடைய இருதயத்தை அவர்கள் பிதாக்களிடத்திற்கு அதாவது ஆதி அப்போஸ்தலர்களும், மூப்பர்களும், சபையுமானவர்களுடைய விசுவாசத்திற்கு திருப்பும் படியான ஒரு வேலை இந்தக் கடைசிக் காலத்தில் நடைபெறும். இயேசு கிறிஸ்துவினுடைய இரண்டாம் வருகையில் அவரைச் சந்திக்க ஒரு உத்தமமான ஜனத்தை கர்த்தருக்கு ஆயத்தப்படுத்தும்படி எலியா தீர்க்கதரிசி இந்தக் கடைசி காலத்தில் அனுப்பப்படுகிருர்.

கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் முந்தின வருகைக்கு முன் எலியாவின் ஆவியும் பலமும் உடையவனுய் யோவான் ஸ்நானகன் அனுப்பப்பட்டது போல (லூக். 1:16, 17), இந்த இரண்டாம் வருகைக்கு முன்னும் எலியாவின் ஆவியும் பலமும் உடைய ஒருவர் அனுப்பப்படவேண்டும். விழுந்து போன யூத சமுதாயத்தை சீர்படுத்தி மேசியாவை சந்திக்க ஒரு கூட்ட மக்களை யோவான் ஸ்நானகன் ஆயத்தப்படுத்தினது போலவும் "இதோ ஒருவர் வருகிருர், அவர் என்னிலும் பெரியவர் அவருடைய பாதரட்சையை அவிழ்க்கிறதற்கும் நான் பாத்திரன் அல்ல என்றும், அவர் இவர்தான் என்று சுட்டிக் காட்டி அவரண்டை ஜனங்களை சேர்த்தது போன்று" (யோ. 1:27-30) இந்த கடைசிக்காலத்திலும் விழுந்து போன கிறிஸ்தவ சமுதாயத்தை சீர்திருத்தி தேவனுடைய பிள்ளைகளை இயேசுகிறிஸ்துவினுடைய இரண்டாம் வருகைக்கு ஆயத்தப் படுத்தும் படியாகவும், தேவன் நீதியைச் சரிக்கட்டும் நாளை கூறி அறிவிக்கவும் எலியா தீர்க்கதரிசியை தேவன் அனுப்புகிருர்.

நாசரேத்தூர் ஜெப ஆலயத்தில் இயேசு வாசிக்க எழுந்து நின்றபோது அவரிடத்தில் ஏசாயா தீர்க்கதரிசனத்தின் புஸ்தகம் கொடுக்கப்பட்டது. அவர் அதை திறந்து, கர்த்தருடைய ஆவியானவர் என்மேல் இருக்கிருர், தரித்திரருக்கு சுவிசேஷத்தை பிரசங்கிக்கும்படி என்னை அபிஷேகம் பண்ணினர், இருதயம் நருங்குண்டவர்களைக் குணமாக்கவும், சிறைப்பட்டவர்களுக்கு விடுதலையையும், குருடருக்குப் பார்வையையும் பிரசித்தப்படுத்தவும், நொறுங்குண்டவர்களை விடுதலையாக்கவும், கர்த்தருடைய அநுக்கிரக வருஷத்தை பிரசித்தப்படுத்தவும் என்னை அனுப்பினர் என்று வாசித்து உட்கார்ந்தார் (லூக். 4: 16-20) இந்த பாகம் ஏசாயா தீர்க்கதரிசியின் புஸ்தகம் அதிகாரம் 61, 1-3 வரை உள்ள வசனங்கள் ஆகும். அங்கே, "கர்த்தராகிய தேவனுடைய ஆவியானவர் என்மேல் இருக்கிருர், சிறுமைப்பட்டவர்களுக்கு சுவிசேஷத்தை அறிவிக்க கர்த்தர் என்னை அபிஷேகம் பண்ணினர்......கர்த்தருடைய அநுக்கிரக வருஷத்தையும் நம்முடைய தேவன் நீதியைச் சரிக்கட்டும் நாளைக் கூறவும், துயரப்பட்ட அனைவருக்கும் ஆறுதல் செய்யவும், சீயோனிலே துயரப்பட்டவர்களை சீர்படுத்தவும், அவர்களுக்குச் சாம்பலுக்கு பதிலாகச் சிங்காரத்தையும், துயரத்துக்குப் பதிலாக ஆனந்த தைலத்தையும், ஒடுங்கின ஆவிக்குப் பதிலாக துதியின் உடையையும் கொடுக்கவும் அவர் என்னை அனுப்பினர்" என்று உள்ளது. இதில், இயேசுகிறிஸ்து நாசரேத்தூர் ஜெப ஆலயத்தில் வாசிக்கும் பொழுது கர்த்தருடைய அநுக்ரக வருஷத்தைப் பிரசித்தப்படுத்தவும் என்னை அனுப்பினார் என்ற பாகத்தை மாத்திரம் வாசித்து; உங்கள் காதுகள் கேட்க இந்த வேதவாக்கியம் இன்றைய தினம் நிறைவேறிற்று என்றுர்.

நம்முடைய தேவன், நீதியை சரிக்கட்டுகிற நாளைக் கூறி அறிவிக்கிற வேலை பாக்கியாக இருக்கிறது. இதற்காக எலியா தீர்க்கதரிசியின் ஆவியும், பலமும் உடையவராய் ஒருவர் வர வேண்டியது அவசியமாயிருக்கிறது. "இதோ கர்த்தருடைய பெரிதும் பயங்கரமுமான நாள் வருகிறதற்கு முன்னே நான் உங்களிடத்திற்கு எலியா தீர்க்கதரிசியை அனுப்புகிறேன். நான் வந்து பூமியை சங்காரத்தால் அடிக்காதபடிக்கு, அவன் பிள்ளைகளுடைய இருதயத்தை அவர்கள்

பிதாக்களிடத்திற்கும் திருப்புவான் என்கிற தீர்க்கதரிசன வேத வாக்கியம் நிறைவேறும்.

எலியாவின் ஊழியம் இஸ்ரவேலரின் மிகவும் நெருக்கடியான காலத்தில் நிகழ்ந்தது. மக்கள் ஒரே தேவ வணக்கத்தை விட்டு பின்மாறி பாகாலையும் தம்மூசையும் வணங்கி, விக்கிரக ஆராதனைக்காரர்களாய், விபச்சாரமும் வேசித்தனமும் நிறைந்தவர்களாய் சீர்கெட்டுப்போய் இருந்தார்கள். பாகாலின், பிரதான பூஜாரியான, சீதோனின் ராஜாவாகிய ஏத்பாகால் என்னும் அரசனின் மகள் யேசபேல், இஸ்ரவேலின் ராஜாவாகிய ஆகாபுக்கு மனைவியாகி தேசத்தை விக்கிரக ஆராதனையினால் நிரப்பிக் கொண்டிருந்தாள். எங்கும் அக்கிரமமும், அநியாயமும், அசுத்தமும் காணப்பட்டது. யேகோவாவின் (ஒரே தேவனுடைய) வணக்கத்தை ஒழித்துப் போடும்படியாய் யேசபேல் பூமியிலே கிரியை செய்தாள். தேவ ஜனங்கள் வேசித்தனம் பண்ணவும், விக்கிரகங்களுக்குப் படைத்தவைகளைப் புசிக்கவும் யேசபேல் ஜனங்களின் மத்தியில் இடறலை உண்டாக்கினாள். இந்த உபதேசத்திற்கு யேசபேலின் உபதேசம் என்றும்; பிலேயாமின் உபதேசம் என்றும் வேதாகமம் சுட்டிக் காட்டியுள்ளது (வெளி 2: 20, 14).

இன்றைய கிறிஸ்தவ சபைகளில் அநேகரும், ஊழியர்களும் இந்த யேசபேலின் உபதேசம் உடையவர்களாய் இருக்கிறார்கள். எலியா வந்து ஜனங்களைக் கூட்டி யேகோவா தெய்வம் என்றால் அவரை வணங்குங்கள். பாகால் தெய்வம் என்றால் அவனை வணங்குங்கள். நீங்கள் எந்த மட்டும் இரண்டு நினைவுகளால் குந்தி குந்தி நடப்பீர்கள்? என்று கேள்வி கேட்டு பந்தயமிட்டு ஜெயித்து எதிரிகளை சங்கரித்து ஒரே தேவ வணக்கத்தை பூமியிலே நிலைநாட்டினார். எலியா யேசபேலின் பாவத்தைக் கண்டித்தார். அப்படியே யோவான்ஸ்நானகன் ஏரோது, ஏரோதியாளின் பாவத்தைக் கண்டித்தார். யேசபேல் எலியாவைக் கொலை செய்ய முற்பட்டாள். யோவான்ஸ்நானகன் ஏரோதியாளால் கொலை செய்யப்பட்டான். அந்தபடியே இந்த கடைசி கால ஊழியமும் இருக்கும். இன்றைய கிறிஸ்தவ பிரசங்கிகளும், பெரும்பாலான சபைகளும் இரண்டு நினைவுகளினால் குந்திக் குந்தி நடக்கிறார்கள். மக்களில் யேசபேலின் உபதேசம் பரவலாகக் காணப்படுகிறது. ஏழாம் கற்பனையில் இச்சபைகள் எல்லாம் விழுந்திருக்கிறது என்று கர்த்தர் சொல்லுகிறார். பிரசங்கிகள் விபச்சாரப் பாவத்துக்கு விரோதமாக பேசப் பயப்படுகிறார்கள். ஆனால் கடைசி காலத்து எலியா தோன்றி யேசபேலுக்கு விரோதமாகவும், யேசபேலின் உபதேசத்திற்கு விரோதமாகவும் பிரசங்கிப்பார். ஸ்திரீகளின் பாவங்களை கடிந்து கொள்வார் சீர்கெட்டுப்போன கிறிஸ்தவ சமுதாயத்தை சீர்படுத்தி, ஒரு உத்தமமான ஜனத்தை (சபையை) கர்த்தருக்கு ஆயத்தப்படுத்துவார். இவர் ஆதி உபதேசத்தையும், தேவனுடைய சித்தத்தையும் பூமியில் நிறைவேற்ற பிரயாசப்படுவதாலும், விபச்சார பாவத்தைக் கண்டிப்பதினாலும் பரிசுத்தத்தை வெறுக்கிற ஜாதிகள் இவரைப் பகைப்பார்கள்.

முன் எழும்பிய போலிகளினால் மக்கள் இடறல் அடைந்திருக்கிறார்கள். இப்படி கடைசி காலத்தில் தேவனால் அனுப்பப்படுகிற தூதனைப் பற்றிய செய்தி வெளியாகி விட்டபடியினால் சாத்தான் அநேக போலிகளை புதிய எருசலேமுக்கு முன்னே எழுப்பி தாங்கள் தான் அந்த ஆள் என்று விளம்பரப்படுத்தவாரம்பித்து விட்டான் அவர்கள் விழுந்து போனார்கள். இவர்களுடைய பொய்யான அற்புத அடையாளங்களினால் மக்கள் இடறல் அடைந்து போய் இருக்கிறார்கள். அவர்களை நம்பினவர்களும் சிதறடிக்கப்பட்டு போனார்கள். மேசியா தோன்றும்முன் சாத்தான் சில போலி மேசியாக்களை எழுப்பினான். அவர்களை நம்பி அநேகர் பின் தொடர்ந்தனர். அந்த போலிகள் மரித்தார்கள். அவர்களை நம்பினவர்களும் சிதறடிக்கப்பட்டுப் போனார்கள்.

கடைசியில் நசரேயனாகிய இயேசு எழும்பினார். உண்மையான மேசியா வந்தார். ஜனங்களோ அவரை ஏற்றுக் கொள்ளவில்லை. அவரைப் பிடித்து அடித்து சிலுவையிலறைந்து கொலை செய்தார்கள். அவர் மரித்து, அடக்கம் பண்ணப்பட்டு மூன்றாம் நாள் உயிரோடெழுந்தார். அது முதற்கொண்டு தெய்வீக மார்க்கம் (கிறிஸ்தவம்)

பரவ ஆரம்பித்தது. அப்பொழுது இருந்த மதவாதிகள் அப்போஸ்தலர்களைப் பிடித்து கொலை செய்ய முயற்சித்தார்கள். கமாலியேல் என்னும் ஞானி எழும்பி அப்போஸ்தலரை கொஞ்ச நேரம் வெளியே கொண்டு போகச் சொல்லி, சங்கத்தாரை நோக்கி, "இஸ்ரவேலரே, இந்த மனுஷருக்கு நீங்கள் செய்யப் போகிறதைக் குறித்து எச்சரிக்கையாயிருங்கள். ஏனென்றால் இந்நாட்களுக்கு முன்னே தெயுதாஸ் என்பவன் எழும்பி தன்னை ஒரு பெரியவனாகப் பாராட்டினான், ஏறக்குறைய நானூறு பேர் அவனைச் சேர்ந்தார்கள். அவன் மடிந்து போனான், அவனை நம்பின அனைவரும் சிதறி அவமாய்ப் போனார்கள். அவனுக்குப் பின்பு குடிமதிப்பின் நாட்களிலே கலிலேயனாகிய யூதாஸ் என்பவன் எழும்பி தன்னை பின்பற்றும்படி அநேக ஜனங்களை இழுத்தான். அவனும் அழிந்து போனான். அவனை நம்பியிருந்த அனைவரும் சிதறடிக்கப்பட்டார்கள். இப்பொழுது நான் உங்களுக்குச் சொல்லுகிறதென்னவென்றால், இந்த மனுஷருக்கு ஒன்றுஞ் செய்யாமல் இவர்களை விட்டு விடுங்கள். இந்த யோசனையும், இந்த கிரியையும் மனுஷரால் உண்டாயிருந்தால் ஒழிந்துபோம், தேவனால் உண்டாயிருந்ததேயானால் அதை ஒழித்து விட உங்களால் கூடாது தேவனோடே போர் செய்கிறவர்களாய்க் காணப்படாதபடிக்குப் பாருங்கள் என்றான்" (அப் 5:35-39). இந்த வசனங்களைக் காட்டி தேவன் ஏற்கனவே நமக்கு செய்தி கொடுத்துள்ளார். அதன்படி, போலிகளை போலிகள் என்று எச்சரித்தும், ஜனங்களுக்குச் சொல்லியும் வருகிறோம். அவர்களுடைய வேலைகள் போலியானவைகளாகும். அவர்கள் மக்களை ஆதி சபையின் விசுவாசத்திற்கு வழி நடத்தவில்லை. உபதேசத் தவறுகளும், குறைபாடுகளும், தவறான வழி நடத்துதலும், போதிப்பிலும் தவறுகள் அவர்களிடத்தில் உண்டு அவர்கள் விழுந்து போனார்கள், விழுந்து போவார்கள். அவர்கள் மக்களை கர்த்தருடைய வருகைக்கு ஆயத்தப்படுத்த முடியாது.

கர்த்தருடைய நாளை அவர்கள் அறியார்கள். கர்த்தருடைய வருகையைப் பற்றிய அவர்களுடைய கணிப்புகளும் தவறு என்றும், அவர்கள் சொல்லுகிற நாளில் அல்லது காலத்தில் கர்த்தர் வரப் போவதில்லை என்றும் ஏற்கனவே எச்சரித்தோம். நாங்கள் சொன்னபடியே ஆயிற்று. புதிய எருசலேம் சபையினுடைய வேலை கடைசிக் கால வேலையாகும். முத்திரிக்கப்பட்டும் புதைபொருளாகவும் வைக்கப்பட்டிருந்த முத்திரைகள் உடைக்கப்பட்டு புதிய எருசலேம் சபையின் மூலமாய் வெளிப்படுத்தப்படுகிறது. அநேகர் சுத்தமும் வெண்மையுமாக்கப்பட்டு புடமிடப்பட்டவர்களாய் விளங்குவார்கள். (இவைகளில் பாவ மன்னிப்பு உபதேசமும் ஒன்றாகும்) துன்மார்க்கரோ துன்மார்க்கமாய் நடப்பார்கள். துன்மார்க்கரில் ஒருவனும் உணரான். ஞானவான்களோ உணர்ந்து கொள்வார்கள் (தானி. 12: 9, 10).

(தொடரும்)

"இதோ கர்த்தர் வருகிறார்" —யூதா 14

# அப்போஸ்தல உபதேசம்

1983 ஆகஸ்டு மாத இதழில் அப்போஸ்தல உபதேசம் என்ற செய்தியைப் படித்து விட்டு அநேகர் ஐயா அப்போஸ்தல உபதேசம் என்றால் என்னவென்பதைத் தெளிவாய் தயவு செய்து எழுதி அனுப்புங்கள் என்று கேட்டு லெட்டர் (Letters) எழுதியிருக்கிறார்கள்.

அப்போஸ்தல உபதேசம் என்றும் அப்போஸ்தலனின் ஆலோசனையே என்று எழுதியிருக்கிறோம். ஆம் திருச்சபைக்கு அப்போஸ்தலர் தேவை (அப் 2:1-42). ஆதிச் சபையின் உன்னத மாதிரியாகும். பெந்தெகோஸ்தே பண்டிகைக்காக தேவ பக்தியுள்ள யூதர்கள் எல்லோரும் எருச

லேமில் கூடி வந்தார்கள் (அப் 2: 6). கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் சீஷர்கள் மேல் பரிசுத்த ஆவியானவர் பொழிந்தருளப்பட்ட போது ஆவியானவர் தங்களுக்குத் தந்தருளிய வரத்தின்படியே அந்த சீஷர் கூட்டத்தார் வெவ்வேறு பாஷைகளிலே பேசத் தொடங்கினார்கள். அந்தச் சத்தம் உண்டான போது திரளான ஜனங்கள் கூடி வந்து கேட்டார்கள். அவர்களில் ஒரு கூட்டம் மக்களுக்கு அவர்கள் தங்கள், தங்கள் பாஷைகளில் பேசுகிறதாக கேட்டது ஆச்சரியப்பட்டார்கள். இவர்கள் தேவனால் முன் குறிக்கப்பட்ட தேவனால் தெரிந்து கொள்ளப்பட்ட மக்கள். மற்றவர்களோ இவர்கள் மதுபானத்தினால் நிறைந்து தள்ளாடுகிறார்கள், குலுங்குகிறார்கள், குளறுபடியாய் உளறுகிறார்கள் என்று பரியாசம் பண்ணினார்கள். இன்றும் தேவ பக்தியுள்ளவர்களாய்க் காணப்படுகிற சில கிறிஸ்தவர்கள் இருக்கிறார்கள், கோடா கோடி ஸ்தோத்திரம் ஏறெடுப்போம் என்று பாடுவார்கள் யாராவது மெய்க் கிறிஸ்தவர்கள் பத்தோ, பன்னிரண்டோ ஸ்தோத்திரம் தேவனுக்குச் சொல்லி விட்டால் இவன் பெந்தெகோஸ்துகாரன். இது பெந்தெகோஸ்தே உபதேசம் என்று தூஷிக்கவும் பரியாசம் பண்ணவும் ஆரம்பித்து விடுவார்கள். பாட்டு பாடுவதோ கோடா கோடி ஸ்தோத்திரம் ஏறெடுப்போம் என்று எவ்வளவு மாய்மாலம்.

இரட்சிப்பின் சுவிசேஷம் திருவசன ஆதாரத்துடன் மேடையில் பிரசங்கிக்கப்பட்டது. கூட்டம் முடிவடைந்ததும் ஒருவர் வந்தார். ஐயா சில சந்தேகம் என்று சொல்லிக் கொண்டு. சரி, அது இருக்கட்டும் நீங்கள் இரட்சிக்கப்பட்டிருக்கிறீர்களா என்று அவரிடம் கேட்கப்பட்டது. நீங்கள் பிரசங்கித்த வசனப் பிரகாரம் இல்லை. எங்கள் சபைப்போதகத்தின்படி இரட்சிக்கப்பட்டிருக்கிறேன் என்றார் அந்த மெதடிஸ்காரர்(புன்னையடி, K. K. Dist). ~~C.S.I இரட்சிப்பு~~ C.S.I கன்வென்ஷன்பிரசங்கியார் பேசுகிறார். "என்னை ஒரு சபையார் அவர்கள் சபைக்கு அழைத்தார். நான் கேட்டேன் எதற்கு என்று. அந்தச் சபையைச் சேர்ந்தவர் சொன்னார். சத்தியத்தை அறிந்து கொள்ள வந்து நான் சொன்னேன் என் கையிலிருந்த (Bible) பைபிளைக் காட்டி சத்தியம் என் கையில் இருக்கிறது. நான் ஏன் அங்கு வர வேண்டும்? என்று ஒரே கரகோஷம். இது C. S. I இரட்சிப்பு. பாருங்கள் சத்திய வேதப்புஸ்தகம்தான் பெரும்பாலான கிறிஸ்தவர்கள் கையிலுண்டே பிறகு ஏன் கன்வென்ஷன் பிரசங்கம். ரேடியோ பிரசங்கம், டெலிவிஷன் பிரசங்கம், சபைக் கூட்டம், பத்திரிக்கை ஊழியம், துண்டு பிரதி ஊழியம் தேவையில்லையே. ஆளுக்கொரு வேதப் புஸ்தகத்தைக் கொடுத்து விட்டு விடலாமே. அவர்கள் கையில் தான் சத்தியம் இருக்கிறதே. இரட்சிக்கப்பட்டுக்கொள்வார்கள். நீ பேசாதே உன் ஊழியத்தையும், சபைக் கூட்டத்தையும், ஆராதனையையும் நிறுத்து என்று சொல்லலாமல்லவா? இப்படியே ஒவ்வொரு சபையாரும் தங்கள், தங்கள் சபைக்கென்று வேறு வேறு வேதபாடங்களும், உபதேசங்களும் கொள்கைகளும் வகுத்துக் கொண்டு தங்களுடைய உபதேசத்துக்கு மாறானவர்களை பிசாசின் மக்கள் என்றும் பிசாசின் உபதேசம் என்றும் வசைபாடித் திரிகின்றனர். இவர்கள் எல்லோருமே தவறுள்ளவர்கள் என்பதை நாம் திருஷ்டாந்தப் படுத்துவோம். எப்படியென்றால் இவர்களில் அப்போஸ்தலனில்லை. ஆதலால் அப்போஸ்தலனுடைய உபதேசமுமில்லை. இங்கே அப்போஸ்தலனுடைய வார்த்தையைச் சந்தோஷமாக ஏற்றுக் கொண்டவர்கள் ஞானஸ்நானம் பெற்று அப்போஸ்தலரோடு சேர்த்துக்கொள்ளப்பட்டுள்ளார்கள். இப்படி சேர்த்துக்கொள்ளப்பட்டவர்கள் (மனந்திரும்பி, கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவை விசுவாசித்து. தங்கள் பாவங்களை அறிக்கையிட்டு முழுகி ஞானஸ்நானம் பெற்று பரிசுத்த ஆவியின் அபிஷேகத்தையும் பெற்றுச் சபையுடன் சேர்த்துக்கொள்ளப்பட்ட) அந்த மூவாயிரம் பேரும் அப்போஸ்தல உபதேசத்தில் அப்போஸ்தலருடைய அந்நியோந்நிய ஐக்கியத்தில் அப்போஸ்தலருடன் சேர்ந்து அப்பம் பிட்குதலிலும் (திருவிருந்து, நற்கருணை) அப்போஸ்தலருடன் சேர்ந்து ஜெபம் பண்ணுவதிலும் (ஆராதிப்பதிலும்) தொடர்ந்து நிலைத்திருந்தார்கள் என்று சத்திய வேதம் மாதிரி காட்டுகிறது.

ஆம். மனந்திரும்புதல், விசுவாசம், ஞானஸ்நானம், பரிசுத்த ஆவியைப் பெறுதல் ஆகிய உபதேசங்கள் யோவான்ஸ்நானகனாலும் (மத் 3 : 1-12; மாற். 1 : 4-8; லூக். 3 : 6-17). நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவினாலும் (மாற். 1 : 15). கர்த்தருடைய மரணத்திற்கு முன் சீஷர்களாலும் பிரசங்கிக்கப்பட்ட உபதேசங்களாகும் (மத். 10 : 5-15). இங்கே அப்போஸ்தல உபதேசமென்பது இதோடு கூட அப்போஸ்தலருடைய அவ்வப்போது ஆலோசனையையே அப்போஸ்தல உபதேசம் என்று வேதம் கூறுகிறது. இந்த அப்போஸ்தல உபதேசத்திற்கு அப்போஸ்தலன் வேண்டும். இன்னும் அநேக வார்த்தைகளாலும் சாட்சி கூறி மாறுபாடுள்ள இந்தச் சந்ததியை விட்டு உங்களை இரட்சித்துக் கொள்ளுங்கள் என்றாரே அப். பேதுரு. இது அப்போஸ்தல உபதேசமாகும்.

நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து மூன்றரை வருடங்கள் நமக்காக ஊழியம் செய்தார். அவர் பகலில் பிரசங்கம் பண்ணுவதற்காக உணவை மறந்தார். இரவில் ஜெபம் பண்ணுவதற்காக உறக்கத்தை மறந்தார். ஆனால் நான்கு சுவிசேஷங்களிலும் கர்த்தர் உபதேசித்ததாகப் பார்க்கிற வார்த்தைகள். அவர் 7 பிரசங்கங்கள் செய்திருந்தால் எவ்வளவு வார்த்தைகள் உண்டோ அவ்வளவே நான்கு சுவிசேஷங்களிலும் காணப்படுகின்றன. மற்றவைகள் சொல்லப்படவில்லை. அவைகளெல்லாம் அப்போஸ்தலருக்கே தெரியும். புதிய ஏற்பாட்டின் சபைக்கு முதன்மையானவர்கள் அப்போஸ்தலர்களே (1 கொரி 12 : 28; எபே 4 : 11-13). அப்போஸ்தலன் இல்லை என்றால் அது சபையே இல்லை. அப்போஸ்தலனால் கட்டப்படாதது (எழுப்பப்படாதது) சபையே இல்லை (மத். 16 : 18, 19; 18 : 18). பூலோகத்தில் நீங்கள் எவைகள் கட்டுவீர்களோ அவைகள் பரலோகத்திலும் கட்டப்பட்டிருக்கும். வேதாகமத்தில் காணப்படும் அநேக வாக்குத் தத்தங்கள் அப்போஸ்தலருக்கு மாத்திரம் கொடுக்கப்பட்டது. உதாரணமாக "என் நாமத்தினாலே பிதா அனுப்பப் போகிற தேற்றரவாளனே எல்லாவற்றையும் உங்களுக்குப் போதித்து நான் உங்களுக்கு சொன்ன எல்லாவற்றையும் உங்களுக்கு நினைப்பூட்டுவார்" என்றும் (யோவா 14:26). "சத்திய ஆவியாகிய அவர் வரும் போது சகல சத்தியத்திற்குள்ளும் உங்களை நடத்துவார். அவர் தம் சுயமாய் பேசாமல் தாம் கேள்விப்பட்டவைகள் யாவையும் சொல்லி வரப்போகிற காரியங்களை உங்களுக்கு அறிவிப்பார்" என்றெல்லாம் இயேசுகிறிஸ்து வாக்கருளியிருக்கிறார். இவ்விதமான வாக்குத் தத்தங்கள் அப்போஸ்தலர்களுக்கு மாத்திரம் அருளப்பட்டது. அவர்களைத் தவிர அவர்களைப் போல அப்போஸ்தலர்களாக அழைக்கப்பட்டவர்கள் தவிர வேறு ஒருவரும் பரிசுத்த ஆவி பெற்றிருக்கிறோம், அபிஷேகம் பெற்றிருக்கிறோம் என்று சொல்லுகிறவர்கள் நாங்கள் சகல சத்தியத்திற்குள்ளும் நடத்தப் படுகிறோம். சகல சத்தியமும் எங்களுக்குத் தெரியும், வரப்போகிற காரியங்களையும் நாங்கள் அறிவோம் என்று சொல்ல முடியுமா? முடியாது! அது அப்போஸ்தலருக்குரியது. ஆனபடியினால் தேவனுடைய பிள்ளைகள் அறிய வேண்டியது வேதாமத்தைப் போல பரிசுத்த ஆவியும் அப்போஸ்தலனும் தேவை. அப்போஸ்தல உபதேசமில்லாதோர் (அப்போஸ்தலனுடைய ஆலோசனை, மாதிரி காட்டுதல்) ஒருவரும் பூரணப்பட முடியாது. ஆகையால் சகோதரரே வார்த்தையினாலாவது, நிருபத்தினாலாவது நாங்கள் உங்களுக்கு உபதேசித்த முறைமைகளைக் கைக் கொள்ளுங்கள் (IIதெச 2:15). அப்போஸ்தலர்கள் நிருபத்தினால் எழுதினவைகள் வேதாகமத்தில் உள்ளது. அதைப் போல அவர்களுடைய வார்த்தைகளும் நம்முடைய இரட்சிப்புக்கு மிகவும் அவசியம் (பிலி2:12).

நீங்கள் என்னிடத்தில் கற்றும், அடைந்தும், கேட்டும், கண்டும் இருக்கிறவைகள் எவைகளோ அவைகளையே செய்யுங்கள் அப்பொழுது சமாதானத்தின் தேவன் உங்களோடிருப்பார் (பிலி 4:9). திருச்சபையின் பிரச்சனைகளுக்கு தீர்வு அப்போஸ்தலனே. மேலும் இந்த நிருபத்தில் சொல்லிய எங்கள் வசனத்திற்கு ஒருவன் கீழ்ப்படியா

மல் போனால் அவனைக் குறித்துக் கொண்டு அவனோடு கலவாதிருங்கள் (IIதெச.3:14). உங்கள் முகத்தைக் கண்டு உங்கள் குறைவுகளை நீக்கும் பொருட்டு இரவும் பகலும் உங்களுக்காக ஜெபம் பண்ண அப்போஸ்தலன் தேவை (Iதெச3:10).

உங்களை ஸ்திரப்படுத்தவும், ஆவிக்குரிய சில வரங்களை உங்களுக்கு கொடுக்கவும் அப்போஸ்தலர்கள் தேவை (ரோம1:10). உங்களுக்காக ஜெபம் பண்ணவும் வேத வசனத்தை போதிக்கவும் அப்போஸ்தலன் தேவை (அப்6:2,4:11தீமோ3:14). உபதேசக் குழப்பங்களும், சந்தேகங்களும் உண்டாகும் பொழுதும் இது இப்படித்தான் என்று தீர்வு சொல்ல அப்போஸ்தலன் தேவை. (அப்:அதி15).

உனக்கு ஒரு அப்போஸ்தலன் தேவை. அப்போஸ்தல உபதேசம் இல்லாதோர் நிலை தடுமாறி போவர். பூரணப்பட மாட்டார்கள். தேவன் தம்முடைய மெய்யான திருச்சபைக்கு அப்போஸ்தலர்களைக் கொடுக்கிறார். (Iகொரி12:28; எபே4:11—13)

---

நான் அப்போஸ்தலனல்லவா? நான் சுயாதீனனல்லவா? நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை தரிசிக்கவில்லையா? கர்த்தருக்குள் நீங்கள் என் கிரியைகளாயிருக்கிறீர்களல்லவா? (Iகொரி 9:1)

---

# வேத பாடம்

ஆதி 35: 7, 8 பெத்தேலுக்கு எல்பெத்தேல் என்று பெயரிட்டார் யாக்கோபு. எல்பெத்தேல் = பெத்தேலின் தேவன் என்று அர்த்தம். ரெபெக்காளின் தாதியாகிய தெபொராள் மரித்து இந்த இடத்திற்கு சமீபமான கர்வாலி மரத்தின் கீழ் அடக்கம் பண்ணப்பட்டாள்.

ஆதி 35: 9-15 யாக்கோபு பக்தனுக்கு மறுபடியும் பெத்தேலில் தேவன் தரிசனமாகி அவரை ஆசீர்வதித்து, ஆபிரகாமுக்கு தாம் அருளிய வாக்குத்தத்தமான ஆசீர்வாதங்களை மறுபடியும் அருளுகிறார். இது தேவனுடைய உன்னதமான சந்திப்பாகும். யாக்கோபு பெத்தேலை முக்கியப்படுத்தி ஒரு கற்றூணை அடையாளமாக நிறுத்தினார்.

ஆதி 35: 16-20 அவர்கள் பெத்தேலை விட்டுப் பிரயாணப்பட்டு சென்று கொண்டிருக்கும் போது ராகேலுக்குப் பிரசவ காலமாயிருந்தது. பிரசவத்தில் கடும் வேதனையாயிருந்து ஆண் பிள்ளையைப் பெற்றாள். ராகேலோ மரித்துப் போனாள். குழந்தைக்குப் பென்யமீன் என்று பெயரிடப்பட்டது. எப்பிராத்தாவுக்குப் போகும் வழியில் ராகேல் மரித்துப் போனாள். கல்லறையில் ஒரு தூண் அடையாளமாக நிறுத்தப்பட்டது.

ஆதி 35: 21-22 யாக்கோபு அவ்விடம்விட்டு பிரயாணப்பட்டு வந்து ஏதேர் என்கிற கோபுரத்தின் சமீபமாய் கூடாரம் போட்டார். அங்கே தங்கியிருக்கும் போது யாக்கோபின் மூத்த மகனாகிய ரூபன் தன் தகப்பனுடைய மஞ்சத்தின் மேல் ஏறினான். சீர்கெட்ட ரூபன், நிலையான புத்தியில்லாத தண்ணீரைப்போல் தளம்பினவனாகிய ரூபன் தன் தகப்பனுடைய மறுமனையாட்டியாகிய பில்காளோடே சயனித்தான். காண் :- ஆதி 49: 3,4; 1 நாளா 5:1. இது யாக்கோபுக்குத் தெரிய வந்தது. இதினிமித்தம் ரூபன் மேல் தேவசாபம் இறங்கிற்று.

ஆதி 36: 1-21 ஏசாவினுடைய வம்ச வரலாறும் இராஜ்ஜியவிர்த்தியும் எழுதப்பட்டிருக்கிறது. ஏசாவுக்கு மூன்று மனைவிமார்கள். எல்லோரும் கானானியரும் இஸ்மவேலியருமாவர். அப்படிச் செய்தது தாய் தகப்பனுக்கு மிகுந்த சஞ்சலமுண்டாக்கிற்று. (ஆதி 26:34) ஏசாவின் சந்ததிக்கு ஏதோமியர் என்று பெயர்.

**ஆதி 36: 23-26** யாக்கோபின் குமாரர் 12 பேர். அவர்களுடைய நாமங்கள்; ரூபன், சிமியோன், லேவி, யூதா, இசக்கார், செபுலோன், யோசேப்பு, பென்யமீன், தாண், நப்தலி, காத், ஆசேர் என்பவைகளாகும்.

**ஆதி 37: 1-4** யோசேப்பின் வரலாறு யோசேப்பு நல்ல ரூபமும், குணமுடையவராயிருந்தார். அவருடைய தகப்பன் அவரை நேசித்து நல்ல வர்ணங்களுடைய ஒரு விசேஷித்த அங்கியொன்றை அவருக்குத் தைத்து கொடுத்திருந்தார். அதினாலேயும், சகோதரர்களுடைய தவறுகளை அவர் தகப்பனுக்கு அறிவித்து வந்ததினாலும் யோசேப்பின் சகோதரர் யோசேப்பை பகைத்தார்கள்.

(தொடரும்)

நீ உன் பொருத்தனையை நிறைவேற்று—நாகூ 1:15

# மோட்ச வழி

## குரு - சிஷ்ய உரையாடல்

குரு: பரிசுத்த ஆவியானவரைப் பற்றி தவறான உபதேசங்களும், பாரம்பரியங்களும் காணப்படுகின்றன. பழைய புதிய ஏற்பாடுகளில் பரிசுத்த ஆவியானவரைப் பற்றி தெளிவாய் அறிந்து கொள்ள வேண்டும். பழைய ஏற்பாட்டின் விசுவாசிகளிலும் சிலர் பரிசுத்த ஆவி பெற்றிருந்தார்கள். புதிய ஏற்பாட்டு விசுவாசிகளும் பரிசுத்தாவி பெற்றிருந்தார்கள். பழைய ஏற்பாட்டின் விசுவாசிகளும் அற்புத அடையாளங்கள், அதிசயங்களைச் செய்தார்கள். ஆவிக்குரிய வரங்களை உடையவர்களாய் இருந்தார்கள். புதிய ஏற்பாட்டின் விசுவாசிகள் எல்லாரும் பரிசுத்த ஆவி பெற்றிருந்தார்கள். அற்புத அடையாளங்கள் செய்தார்கள். அதிசயங்களை நடப்பித்தார்கள். ஆவிக்குரிய வரங்களையுடையவர்களாய் இருந்தார்கள். உதாரணமாக, பழைய ஏற்பாட்டின் விசுவாசிகள் ஆவிக்குரிய வரங்களாகிய ஆவியினாலே ஞானத்தைப் போதிக்கும் வசனமும், அறிவை உணர்த்தும் வசனமும், விசுவாச வரமும், குணமாக்கும் வரங்களும், அற்புதங்களைச் செய்யும் சக்தியும், தீர்க்கத் தரிசன வரமும், ஆவிகளை பகுத்தறியும் வரமும் பாஷைகளை வியாக்கியானம் பண்ணும் வரமும் உடையவர்களாய் இருந்தார்கள். புதிய ஏற்பாட்டின் விசுவாசிகளோ ஆவியினாலே ஞானத்தைப் போதிக்கும் வசனமும், அறிவை உணர்த்தும் வசனமும், விசுவாசமும், குணமாக்கும் வரங்களும், அற்புதங்களைச் செய்யும் சக்தியும், தீர்க்கத் தரிசனம் உரைத்தலும், ஆவிகளைப் பகுத்தறிதலும், பற்பல பாஷைகளைப் பேசுதலும், பாஷைகளை வியாக்கியானம் பண்ணுகிற வரமும் உடையவர்களாய் இருந்தார்கள் (I கொரி 12: 7-10). இவைகளில் பழைய ஏற்பாட்டின் விசுவாசிகளிலிருந்து புதிய ஏற்பாட்டின் விசுவாசிகளை வித்தியாசப்படுத்திக் காட்டுகிறது ஒன்றே ஒன்றுதான். பழைய ஏற்பாட்டின் விசுவாசிகள் ஆவிக்குரிய வரங்களில் 8 வரங்களையுடையவர்களாய் இருந்தார்கள். புதிய ஏற்பாட்டின் சபையோ ஆவியினாலுண்டாகும் 9 வரங்களையுடையவர்களாய் இருக்கிறார்கள். நம்முடைய கர்த்தர்ரகிய இயேசுகிறிஸ்து சொன்னது போல் அவரை விசுவாசிக்கிறவர்களால் நடக்கும் அடையாளங்களாவன: என் நாமத்தினாலே பிசாசுகளைத் துரத்துவார்கள், நவமான பாஷைகளைப் பேசுவார்கள் என்ற திருவசனத்தின்படி மாற் 16:17. நவ நாவுகள் அவரை விசுவாசிக்கிறவர்களுக்கு அருளப்படுகிறது. நவமான பாஷைகள் என்றால் நவ நாவுகள் அல்லது பரவசப் பேச்சுக்கள் என்று அர்த்தம். புதிய ஏற்பாட்டின் விசுவாசியை வேறு

வரமேயாகும் பேசுகிற இந்த நவ நாவுகளின் படுத்திக் காட்டுவது பற்பல பாஷைகளை நிரப்பப்படுத் (1 கொரி 12:10; ஏசா 28:11, 12). ஆனபடியினால் பரிசுத்த ஆவியானவரால் வித்தியாசம் உண்டு. தலுக்கும் புதிய ஏற்பாட்டின் பரிசுத்த ஆவியின் அபிஷேகத்திற்கும் நிரப்பப்பட்டிருந்தார். யோவான் ஸ்நானகன் தன் தாயின் வயிற்றிலே பரிசுத்த ஆவியால் சகரியா, எலிசபெத்து, மரியாள், சிமியோன், அன்னாள் போன்றோர்கள் பரிசுத்த ஆவியினால் நிரப்பப்பட்டிருந்தார்கள். ஆனால் அது புதிய ஏற்பாட்டின் அபிஷேகம் அல்ல. புதிய ஏற்பாட்டின் அபிஷேகம் அன்னிய பாஷை அடையாளத்தோடும், தீர்க்கதரிசனம், பரியாச உதடுகளோடும் வல்லமையோடுங்கூட உண்டாகும். இதுவே ஆதிச் சபையின் உபதேசம்.

(தொடரும்)

> நீங்கள் பரிசுத்தராலே அபிஷேகம் பெற்று சகலத்தையும் அறிந்திருக்கிறீர்கள்- I யோவா 2:20

# குடும்பம்

## மாதர் பகுதி :

அநேக சகோதரிகளுக்கு சமையல் பண்ணத் தெரியாமல் இருப்பது வருந்தத் தக்க காரியம். நல்ல மனைவி தனக்குத் தெரியாதவைகளை பிற ஸ்திரீகளிடம் கேட்டுக் கற்றுக் கொள்வாள். என் புருஷன் நிறைய சம்பளம் வாங்குகிறார், எங்களுக்கு வசதி இருக்கிறது நன்றாய் சமையல் செய்யும் ஒரு வேலைக்காரனை அல்லது வேலைக்காரியை சம்பளத்துக்கு வைத்துக் கொள்வேன் என்று நீ சொல்லாதே. சகோதரியே நீ உன் கடமையை ஆற்ற படித்துக் கொள். ஒரு வாலிபமான இளைஞன் இருந்தான். அவன் ஒரு டாம்பீகமான ஸ்திரீயை விவாகம் முடித்துக் கொண்டான். அவளோ நன்றாய் சமைக்கத் தெரியாதவளாய் இருந்தாள். அதனாலே வீண் பணவிரயம் ஆகிக் கொண்டிருந்தது. அவன் தன்னுடைய நண்பர்களுக்கு ஒரு நல்ல விருந்து வைக்க நினைத்தான். அதற்கான சகல சாமான்களுடனே கூட ஒரு நல்ல கொழுத்த கோழியையும் மார்க்கட்டிலிருந்து வாங்கி வந்தான். அவனுடைய மனைவி இந்தக் கோழியையும் நான் சமையல் செய்ய வேண்டுமோ? என்று கேட்டாள். ஆம் இந்த கோழியைப் பொரித்து என் நண்பர்களுக்கு விருந்து கொடுக்க வேண்டும் என்று சொன்னான். ஐயோ! நான் கோழி கறி சாப்பிட்டிருக்கிறேன் ஆனால் கோழியைப் பொரிக்கத் தெரியாதே என்றாள். அந்த வாலிபனோ நாம் எப்படியாவது இரண்டு பேரும் சேர்ந்து அதை சமையல் செய்வோம் என்றான். அதற்கு என்னென்ன மசாலா சாமான்களும் வைக்கலாம் என்று இரண்டு பேர்களும் யோசித்தார்கள். அப்படி இப்படியுமாய் பேசிக் கொண்டார்கள். அவன் சொன்னான் எங்கள் வீட்டில் எங்க அம்மா கோழி பொரிக்கும் பொழுது நான் பார்த்திருக்கிறேன். அந்த கோழிக்குள் வைத்த மசாலா பச்சை நிறமாக இருந்தது என்றான். இவள் உடனே, ஆமா! எனக்கு இப்பொழுதுதான் ஞாபகம் வந்தது, என்று சொல்லிவிட்டு மார்க்கெட்டுக்குப் போனாள். சில பச்சைக் கீரைவகைகளை வாங்கிக் கொண்டு வீடு திரும்பினாள். கோழியை சுத்தம்பண்ணி அதற்குள்ளே கீரையையும், பச்சை மிளகாயையும் அரைத்து வைத்து பொதித்து பொரித்து எடுத்தார்கள். கீரை பொதிந்து பொரித்த கோழி எப்படி ருசியாயிருக்குமென்று உங்களுக்குத்தான் தெரியுமே. நண்பர்களும் வந்து விட்டார்கள். கடைசியில் விருந்து சாப்பிடத்தகாத

தாய் ஆகிவிட்டது. நண்பர்கள் நிலைமையைப் புரிந்து கொண்டு பரவாயில்லை என்று சொல்லிவிட்டு போய் விட்டார்கள். குடும்பத்தில் மிகுந்த எரிச்சலும் வருத்தமும் தாண்டவமாடிற்று. ஒரு நல்ல மனைவி தன்னுடைய புருஷனுக்கும், பிள்ளைகளுக்கும், சுகத்தையும், பெலத்தையும், ஆரோக்கியத்தையும் கொடுக்கத் தக்க ருசியுள்ள ஆகாரத்தை சமைத்துக் கொடுக்க அறிந்திருப்பாள். சாராள் அம்மாள் அப்படி செய்தார்கள் (ஆதி. 18 : 6-8).

(தொடரும்)

---

அவளுடைய விலை முத்துக்களைப் பார்க்கிலும் உயர்ந்தது- நீதி 31 : 10

---

# புதிய எருசலேம் சபை நடபடிகளில் சில

நாம் ஆராதிக்கும் தேவன் சர்வ வல்லமையுள்ளவர். அவர் தம்முடைய வாயிலிருந்து புறப்பட்ட வார்த்தையினாலே நாம் வாழுகின்ற இந்த பூமியையும், மேலே காணுகின்ற இந்த வானத்தையும், அதில் உலாவுகின்ற சூரியனையும், சந்திரனையும், விண்மீன்களையும், பூமியில் வாழும் சகல ஜீவராசிகளையும், சமுத்திரத்தையும், அண்ட சராசரங்களையும் படைத்தார் என்று வேதத்தின் மூலமாய் அறிகிறோம்.

அவர் தம்முடைய வாயிலிருந்து புறப்பட்ட எல்லா வார்த்தைகளிலும், ஒன்றையாகிலும் தரையிலே விழுந்து போகவிடவில்லை (1 சாமு 3 : 19) அவருக்கே மகிமையுண்டாவதாக.

1962-ம் வருஷம் ஜனவரி மாதத்தில் நாங்கள் கர்த்தருடைய வேலைக்காக கொடைக்கானல் சென்றிருந்தோம். ஒரு நாள் இரவில் நானும் தீர்க்கதரிசியுமாய் சேர்ந்து ஜெபித்துக் கொண்டிருந்த பொழுது: "நீங்கள் சீக்கிரமாய் மலேசியாவுக்குப் போகவேண்டும், அங்கே உங்களைக் கொண்டு நான் செய்யவேண்டிய வேலைகள் ஏராளம் உண்டு. நீங்கள் இங்கிருந்து கீழே கொடைரோடு செல்லும் பொழுது, மலேஷியாவிலிருந்து வந்த ஒரு சகோதரனைக் காணுவீர்கள்; அவர் மூலமாக நீங்கள் மலேஷியா செல்லும் வாசல் திறக்கப்படும் நான் உங்களுக்குச் சொன்னதை செய்து முடிப்பேன்" என்று கர்த்தருடைய ஆவியானவர் பேசினார்.

கர்த்தருடைய ஆவியானவர் தம்முடைய தீர்க்கதரிசியைக் கொண்டு பேசும் பொழுது அது சீக்கிரமாய் சம்பவிக்கப் போகிற ஒரு காரியமாய் என் உள்ளத்தில் பட்டது. நாங்கள் இருதினங்களில் கொடைக்கானல் ஊழியத்தை முடித்துவிட்டு, நாங்கள் பள்ளப்பட்டி சபைக்கு வந்து, எங்கள் உடைமைகளை அங்கே வைத்துவிட்டு கொடைரோட்டிலுள்ள நமது ஊழியர் D. ஜோசப் அவர்களுடைய வீட்டிற்கு போயிருந்தோம். அங்கே புதிதாக நாங்கள் ஒருவரை சந்தித்தோம். அவர் நமது ஊழியர் ஜோசப் அவர்களின் உறவினர் என்றும், அவர் பெயர் மாணிக்கம் என்றும், மலேஷியாவில் Hospital-Assistant in Charge ஆக பணிபுரிந்து வருகிறார், என்றும் எங்களுக்கு அவரை அறிமுகப்படுத்தி வைத்தார்கள்.

ஆஹா! கர்த்தர் சொன்னவார்த்தை சீக்கிரமாய் நிறைவேறுவதை அறிந்து என் தேவனை உள்ளத்தில் ஸ்தோத்தரித்தேன். அவர் ஒரு டேப்ரிக்கார்டர் வைத்து கிறிஸ்தவ பாடல்களை கேட்டுக் கொண்டேயிருந்தார். நமது ஊழியர் ஜோசப் அவர்களும் இந்த மாணிக்கம் என்பவரும் நெருங்கிய உறவினர்கள். இவர்கள் இருவரும் லூத்தரன் சபைக்காக அதிகமாய் உழைத்தவர்கள். Mr. மாணிக்கம் அவர்கள் மலேஷியாவிலிருந்து நன்கொடை வசூல் செய்து அனுப்பி கொடைரோட்டில் D. ஜோசப் அவர்கள் லூத்தரன் சபைக்கு ஒரு பெரிய தேவாலயம் கட்டியிருக்கிறார். இப்படி லூத்தரன் சபையில் பக்தியாய் இருந்த ஜோசப் என்பவர் "புதிய எருசலேம் சபை"யில் ஒரு அங்கமாகி அதில் பூர் ஊழியக்காரனுமாகிவிட்

டாரே என்று மலேஷியாவிலிருந்து வந்தவருக்கு மிகுந்த ஆச்சரியம்.

ஆகையால் சபையின் நடபடிகள் பற்றி ஜோசப் அவர்களிடம் கேட்டார். அவர் அறிந்து கொண்ட காரியங்களை அவரிடம் கூறிக் கொண்டேயிருக்கும் பொழுது இந்த மலேஷியாக்காரரைப் பார்ப்பதற்காக பக்கத்து ஊரிலிருந்து ஒரு அம்மா வந்தார்கள். அவர்கள் பெயர் அருள்மணி. இந்த மலேஷியா உறவினருக்கும் அவர்களுக்கும் அந்த அம்மா ஸ்தோத்திரம் சொன்னார்கள். மலேஷியாக்காரர் அந்த அம்மாவைப் பார்த்து இப்பொழுது என்ன தொழில் செய்கிறீர்கள்? குடும்பம் எப்படி இருக்கிறது என்று விசாரித்தார். அதற்கு அந்த அம்மா "நான் என்னுடைய பழைய சாராயம் காய்ச்சும் தொழிலை விட்டு விட்டேன். நான் இரட்சிக்கப்பட்டு தேவனுடைய பிள்ளையாய் இருக்கிறேன். நானும் என் கணவர் பிள்ளைகள் எல்லாம் இரட்சிக்கப்பட்டு 'புதிய எருசலேம் சபை'யில், இருக்கிறோம். கர்த்தர் எங்களை ஆச்சரியமாய் நடத்துகிறார்" என்று அந்த அருள்மணி அம்மா கூறினதும், என்ன ஜோசப் உண்மையா!! இவர்கள் கூடவா இரட்சிக்கப்பட்டு விட்டார்கள் என்று ஆச்சரியத்துடன் கேட்டார். நான் சிறிது நேரத்துக்கு முன்னால் சபையைப் பற்றிக்கூறும்பொழுது, கொடிய துன்மார்க்கர்களும், சாராயம் காய்ச்சுபவர்களும், கொலைகாரரும் மனந்திரும்பி தேவனுடைய சபையுடன் சேர்ந்திருக்கிறார்கள் என்று சொன்னேனே. அவர்களில் இந்த அம்மாவும் ஒன்று என்று ஜோசப் அவர்கள் அவரிடம் கூறினார். மலேஷியாக்காரர் ரொம்ப ஆச்சரியப்பட்டார். மனிதர்களால் திருத்தமுடியாத தனது சமுதாயத்தைச் சேர்ந்த மக்களை தேவன் இவ்வளவு அற்புதமாக மாற்றியிருக்கிறாரே என்று தேவனுக்கு ஸ்தோத்திரம் செலுத்தினார்.

எங்களுடைய தலைமை மேய்ப்பர் 'பரிசுத்தம்' என்ற தலைப்பில் பேசிய ஒலி நாடா (cassete) ஒன்று எங்களிடமிருந்தது. அதை அவருடைய டேப்பில் போட்டு கேட்கும்படி கொடுத்தோம். சுமார் ஒரு மணி நேரமாக அவருடன் சேர்ந்து எல்லோரும் அந்த செய்தியைக் கேட்டோம். அந்த செய்தி இன்னும் கொஞ்சம் அதிகமாய் புதிய எருசலேம் சபையைப்பற்றி அவர் புரிந்து கொள்வதற்கு ஏதுவாய் இருந்தது.

இதன் பின்பு தேவன் எங்களுக்கு: மலேஷியா செல்ல வேண்டும், ஒரு மனிதன் அங்கிருந்து கொடையோடு வந்திருக்கிறார். அவர் மூலமாய் நீங்கள் மலேஷியா சென்று என்னுடைய சித்தம் செய்து வர வேண்டும் என்று தேவன் வெளிப்படுத்திய செய்தியை அவரிடம் வாசித்து காண்பித்தோம். அது இன்னமும் அவருக்கு ஆச்சரியத்தைக் கொடுத்தது. நீங்கள் மலேஷியா வந்தால் கர்த்தருடைய ஊழியத்திற்காக என்னால் இயன்ற உதவிகளைச் செய்வேன். என்னிடம் கார் இருக்கிறது. கர்த்தர் உங்களை அனுப்புகிற இடத்திற்கு அழைத்துச் செல்வேன் என்று கூறினார். நாங்களும் அங்கே ஒரு ஜெபம் செய்து விட்டு கர்த்தர் அனுப்பிய அடுத்த கிளை சபைக்கு நாங்கள் கடந்து போய் விட்டோம். ஜனவரி இறுதியில் வள்ளியூர் வந்து சேர்ந்தோம்.

(தொடரும்)

Pastor S. Sundarraj,
Vallioor.

# தேவனுடைய பிள்ளைகளாகுங்கள்

(அக்டோபர் இதழ் தொடர்ச்சி)

**இயேசு கிறிஸ்து தேவன்:**

இந்நாட்களில் அநேகர் எழும்பி இயேசு கிறிஸ்து தேவன் (God) அல்ல, அவர் தேவனுடைய குமாரர்களில் ஒருவர், அவரும் ஒரு சிருஷ்டி, சிருஷ்டிகர் அல்ல, மரித்தோரிலிருந்து உயிர்த்தெழுந்ததினாலேயே அவர் தேவனுடைய குமாரனாக கருதப்படுகிறார் என்றெல்லாம் சொல்லி இயேசு தெய்வம் அல்ல

என சாதிக்கின்றனர். இவர்கள் வஞ்சகர்களும் அந்திக் கிறிஸ்தவர்களுமாயிருக்கிறார்கள் [II யோ 7].

ஆதியிலே வார்த்தை இருந்தது, அந்த வார்த்தை தேவனிடத்திலிருந்தது அந்த வார்த்தை தேவனாயிருந்தது [யோ 1 : 1]. அந்த வார்த்தை மாம்சமாகி, கிருபையினாலும், சத்தியத்தினாலும் நிறைந்தவராய், நமக்குள்ளே வாசம் பண்ணினார் [யோ 1 : 14]. தேவன் மாம்சத்தில் வெளிப்பட்டார் [I தீமோ 3 : 16]. அதரிசனமான தேவனுடைய தற்சுருபமும், சர்வ சிருஷ்டிக்கும் முந்தின பேறுமானவர் [கொலோ 1 : 15]. இந்த வசனத்தை ஒரு கூட்டத்தார் காண்பித்து, சிருஷ்டிகளில் அவர் முதல் சிருஷ்டி என வஞ்சிக்கின்றனர். அதற்கு அடுத்த வசனத்தில் முந்தின பேறுமானவர் என்றால் என்ன அர்த்தம், முந்தின பேறுமானவர் என்று ஏன் அழைக்கப்படுகிறார் என்று எழுதப்பட்டுள்ளது. "ஏனென்றால் அவருக்குள் சகலமும் சிருஷ்டிக்கப்பட்டது,... சகலமும் அவரைக் கொண்டு, அவருக்கென்றே சிருஷ்டிக்கப்பட்டது. அவர் எல்லாவற்றிற்கும் முந்தினவர் [கொலோ 1 : 16, 17]. சகலமும் அவர் மூலமாய் உண்டாயிற்று. சிருஷ்டிக்கப் பட்டதொன்றும்] அவராலேயல்லாமல் உண்டாகவில்லை [யோ 1 : 3].

சிருஷ்டிக்கப்பட்ட சகலமும் அவரைக் கொண்டு சிருஷ்டிக்கப்பட்டிருக்க, அவர் எப்படி ஒரு சிருஷ்டி என்று சொல்ல முடியும். சிருஷ்டிக்கப்பட்ட யாவற்றிற்கும் முன்பே இருக்கிறவர் [முந்தின பேறானவர்] இறைவனேயல்லாமல் யார்? இயேசுகிறிஸ்து தேவனே. இதை யூதர்கள் விசுவாசித்து, அவரைத் தேவனாக ஏற்றுக் கொள்ளவில்லை. தேவனுடைய பிள்ளையாகும் அதிகாரத்தைப் பெற அவரை தேவன் என்று விசுவாசித்து, தனக்கு தேவனாயிருக்கும்படி அதாவது அவரே ஆண்டு நடத்தும் ஆண்டவராக, ஒரு ஸ்திரீ ஒரு புருஷனை தனது விவாகக் கணவனாய் ஏற்றுக் கொள்ளும் வண்ணம் அவரை ஏற்றுக் கொள்ள வேண்டும்.

**இயேசு கிறிஸ்து ஒளி:**

ஆதியிலே மனிதன் தேவனுடைய வார்த்தையை தள்ளிப் போட்டதால், ஜீவனை இழந்தான். மரண இருளுக்குட்பட்டான். தேவனுடைய வார்த்தை ஒரு மனுஷனுக்குள் பிரவேசிக்கும் போது அவன் ஜீவனடைகிறான் [எசே 37 : 10]. தேவனால் அனுப்பப்பட்டவர் (இயேசு) தேவனுடைய வார்த்தைகளைப் பேசுகிறார் [யோ 3 : 34]. அவருடைய வசனங்கள் ஆவியாயும், ஜீவனுமாயும் இருக்கிறது. ஆவியாகிய அவ்வசனம் மரித்த மனிதனை உயிர்ப்பிக்கிறது [யோவா 6: 63]. இருள் பூமியையும் காரிருள் ஜனங்களையும் மூடும். ஆனாலும் உன் மேல் கர்த்தர் உதிப்பார்... உன் வெளிச்சத்தினிடத்திற்கு ஜாதிகளும், உதிக்கிற உன் ஒளியினிடத்திற்கு ராஜாக்களும் நடந்து வருவார்கள் [ஏசா 60 :2, 3].

சீயோனிலிருந்து வேதமும், எருசலேமிலிருந்து கர்த்தரின் வசனமும் வெளிப்படுவதால், ஆலோசனை, நடக்க வேண்டிய வழியைக் கற்றுக் கொள்ளும் படி திரளான ஜனங்கள், யாக்கோபின் ஆலயத்திற்கு வருவார்கள் [ஏசா 2 : 3]. கர்த்தரின் வசனமே ஒளியாயிருக்கிறது.

தேவனுடைய பிள்ளையாக வேண்டுமானால், அவருக்குள் ஒளிதரும் ஜீவன் இருக்கிறது என்று விசுவாசிக்க வேண்டும் [யோவா 1 : 4] அந்த ஜீவனால் ஜீவனடைவோம் என்று அறிந்து ஒளியாகிய அவருடைய வார்த்தைகளை ஏற்றுக் கொள்ள வேண்டும், அதாவது கீழ்ப்படிய வேண்டும். யூதர்களோ அவருடைய வார்த்தைகளைத் தள்ளிப் போட்டார்கள்.

**யோவான் ஸ்நானகன் கொடுத்த சாட்சி:**

தேவனால் அனுப்பப்பட்ட ஒரு மனுஷன் இருந்தான், அவன் பேர் யோவான். அவன் தன்னால் விசுவாசிக்கும்படி அந்த ஒளியைக்குறித்து சாட்சி கொடுக்க வந்தான் [யோவா 1 : 6, 7]. இந்த யோவான் கர்த்தருக்கு வழியை ஆயத்தப்படுத்தும்படி ஒரு பைலட் [Pilot] கடந்து போவது போல் அவருக்குமுன் கடந்து போய், அவர் செய்யப் போகிற காரியத்தை தான் செய்து ஜனங்களுக்கு பிரசித்தப்படுத்தும்படி அனுப்பப் பட்டான் [லூக் 1 : 76, 77].

இவன் பிரசித்தப் படுத்தினது. இரட்சிப்பை, அதாவது பாவமன்னிப்பை, பாவமன்னிப்பு பெறுவதே இரட்சிப்பு [லூக் 1 : 77]. இந்த பாவமன்னிப்புக்கென்று மனந்திரும்புதலுக்கேற்ற ஞான ஸ்நானத்தைக்குறித்து பிரசங்கம் பண்ணி, தன்னிடம் பாவங்களை அறிக்கை செய்கிறவர்களுக்கு ஞானஸ்நானம் கொடுத்துக் கொண்டிருந்தான் [மாற் 1 : 4, 5]. இயேசு தன்னை உலகத்துக்கு வெளிப்படுத்தி யோவான் கொடுத்த வண்ணம் ஞானஸ்நானம் கொடுத்து வந்தார். (யோவா 3 : 22) யோவான் இவரைக் குறித்து இவர் என்னிலும் பெரியவர். இவர் இஸ்ரவேலருக்கு வெளிப்படும் பொருட்டாக நான் ஜலத்தினால் ஞானஸ்நானம் கொடுக்கிறேன், அவரோ [இயேசு] பரிசுத்தாவியினால் ஞானஸ்நானம் கொடுப்பார் என்று சாட்சியிட்டு சொன்னான் [யோவா 1 : 15-36]. யோவானுடைய சாட்சியை [உபதேசத்தை] கேட்டு விசுவாசித்து ஏற்றுக் கொண்டவர்கள் அவனால் ஞானஸ்நானம் பெற்றார்கள். ஏற்றுக் கொள்ளாதோர் தங்களுக்கு கேடுண்டாக தேவனுடைய ஆலோசனையைத் தள்ளிப் போட்டார்கள் [லூக் 7 : 29, 30].

தேவனுடைய பிள்ளையாக வேண்டுமானால் யோவான்ஸ்நானகன் கொடுத்த சாட்சியின்படி பாவமன்னிப்புக்கென்று ஞானஸ்நானம் பெற்று, வாக்குத்தத்தத்தின்படி பரிசுத்தாவியைப் பெற்றுக் கொள்ள வேண்டும்.

அவர் நாமத்தின் மேல் விசுவாசமுள்ளவர்களாகி அவரை ஏற்றுக் கொள்ள மனதாயிருக்கிறவர்களே, இயேசுவை தேவன் என்று விசுவாசித்து, அவரை உங்கள் தேவனாய் ஏற்றுக் கொள்ளுங்கள். அவருடைய கிருபையுள்ள வசனங்களால் ஜீவன் உண்டென விசுவாசித்து, அதற்கு கீழ்படிய ஒப்புக் கொடுங்கள். யோவான் அவரைக் குறித்து கொடுத்த சாட்சியை ஏற்று ஞானஸ்நானம் பெற்று, பரிசுத்தாவியின் அபிஷேகத்தைப் பெற்றுக் கொள்ளுங்கள் (மத் 3 : 11) தேவன் உங்களை தனது பிள்ளைகளாக அதிகாரப்படுத்துவார். நீங்கள் இப்போது தேவனாலே பிறந்தவர்கள் எனப்படுவீர்கள் [யோவா 1 : 13].

---

"அவருடைய நாமத்தின்மேல் விசுவாசமுள்ளவர்களாய் அவரை ஏற்றுக் கொண்டவர்கள் எத்தனை பேர்களோ, அத்தனை பேர்களும் தேவனுடைய பிள்ளைகளாகும்படி, அவர்களுக்கு அதிகாரங் கொடுத்தார்" (யோ 1 : 12)

---

# கிறிஸ்துமஸ் செய்தி

## பிறந்தார்! பிறந்தார்!

தேவன் மானிடனாய் பிறந்தார். உலகத்தில் எவ்வளவோ பிள்ளைகள் பிறக்கிறார்கள், இறக்கிறார்கள். ஆனால் இயேசு கிறிஸ்துவினுடைய பிறப்பு அவதாரமாகும். பொதுவாக பிற மதங்களிலேயும் அவர்கள் தெய்வங்கள் அவதாரம் எடுத்து வந்ததாக எழுதப்பட்டுள்ளது. அவைகள் தெய்வீக அவதாரம்தானா? அங்கே தெய்வீகம் உண்டா? தெய்வீக லட்சணம் உண்டா? உயரிய நோக்கம் உண்டா? என்று பார்த்தால் கிடையாது. தேவன் மனிதனாக அவதாரம் எடுத்து பூமிக்கு வரப்போகிறார் என்கிற செய்தி எல்லா மதங்கள், நூல்களிலும் காணப்படுகிறது. தேவனோ அல்லது தேவனால் அனுப்பப்பட்ட ஒரு பிரதிநிதியோ வருகிறதாக, வந்ததாக எழுதப்பட்டுள்ளது. தேவனே மனுமக்களுக்காக அவதாரம் எடுத்து வருவார் என்பது இந்து மத கொள்கைகளில் ஒன்றாகும். ஆனால் தெய்வமல்லாதவைகளையே அவர்கள் தெய்வமாக பாவித்து மதி மயங்கிப் போனார்கள்.

அவதாரக் கொள்கை உண்டு. பல அவதாரங்கள் அல்ல, ஒரே ஒரு அவதாரம் தான் உண்டு. இந்து மதத்தில் யாராவது ஒருவருடைய சாபத்தினால் அல்லது தன்னுடைய பாவத்தினால் மறுபடியும் மறுபடி

யும் பிறப்பது ஏற்படுகிறது என்று எழுதப்பட்டுள்ளது. அப்படிப் பார்த்தால் அவதாரப் பிறவிகளாக வந்தவர்களில் அநேகர் பாவிகளாகவே ஜீவித்திருக்கிறார்கள். ஆனபடியினால் அவர்கள் மறுபடியும் பிறந்து தங்கள் பாவத்திற்கு விமோசனம் தேட வேண்டியதாக இருக்கிறது. இந்து மதங்களிலும், பிறமதங்களிலும் காணப்படுகிற அவதார புருஷர்கள் இறைவனுடைய லட்சணத்தை வெளிப்படுத்தினதாக அல்லது இறைவனுடைய லட்சணம் அவர்களில் காணப்பட்டதாக நாம் பார்க்கிறதில்லை. அவர்கள் எல்லாம் மரித்துப் போன மனிதர்கள். இயேசுவானவரோ அப்படியல்ல.

இறைவன் ஒருவரே, அவதாரமும் ஒன்றே. முக்தி அடைய வழியும் ஒன்றே. இயேசுவானவரின் சரித்திரத்தை கவனித்தால் (மத்தேயு, மாற்கு, லூக்கா, யோவான் ஆகிய நான்கு சுவிசேஷங்கள்) இவரே மெய்யான இறைவன் என்பதை அவருடைய ஜீவியத்தில் இருந்து நாம் அறிந்து கொள்ளலாம். அவருடைய பரிசுத்த பிறப்பு, அவருடைய பரிசுத்த ஜீவியம், அவர் மனுக்களில் நடப்பித்த அன்பின் கிரியைகள், அவருடைய நன்மைக்காய் அதிசய அற்புதங்கள், அடையாளங்கள் செய்தல், அவருடைய பிராயச்சித்தமான பலி, மரணம், அடக்கம் பண்ணப்படுதல், மூன்றாம் நாள் உயிர்த்தெழுதல் தொடர்ந்து அவர் தம் பக்தர்களுக்கு அருளும் ஆத்தும சாந்தியும், வெற்றி வாழ்க்கையும், நன்மைகளும் அவரோடு உண்டாயிருக்கிற ஐக்கியமும் இவரே தேவன் வேறொருவர் இல்லை என்பதை நிரூபிக்கும்.

அகஸ்திய முனிவருடைய கவியின் படியும்—

"வணங்குவாய் ஜெகஜோதி ஒருவனாகி
மானிலத்தை ஒரு நொடியில் படைத்தே—
மண்ணில்
குணமான மனிதனையும் படைத்தபின்பு
குவலையத்தில் தான் உதித்து குருவாய்—
வந்து
ஜனமான சம்சாரமொன்றில்லாமல்
சந்நியாசி போலிருந்து தவத்தைக் காட்டி
அன்பான சித்தர்களை இருத்திப் போட்டு
அகண்ட தலஞ்சென்றவரை அண்டுவாயே
(அகஸ்தியர்)

இது இயேசு கிறிஸ்து ஒருவருக்கே பொருந்தும். எல்லா மதங்களும் சுட்டிக் காட்டுவதும், எதிர்பார்ப்பதும், இயேசு கிறிஸ்துவில் நிறைவேறிற்று. இதோ யூதேயாவிலுள்ள பெத்லகேம் ஊரிலே மரியாளின் மைந்தனாக இயேசு பிறந்தார்.

இயேசுவில் தேவனைப் பார், தேவன் இயேசுவைப் போல் இருப்பார். இயேசுவே தேவன். அவரை அண்டிக்கொள்ளுகிறவர்களுக்கு நித்திய மோட்சம் கிட்டும். "இன்று கர்த்தராகிய கிறிஸ்து என்னும் இரட்சகர் உங்களுக்குத் தாவீதின் ஊரிலே பிறந்திருக்கிறார்" லூக் 2:11.

---

"...அவருக்கு இயேசு என்று பேரிடுவாயாக ஏனெனில் அவர் தமது ஜனங்களின் பாவங்களை நீக்கி அவர்களை இரட்சிப்பார்..." (மத் 1:21.)

---

## பாலர் பகுதி

சாலமோன் ஒரு ஜெப ஜீவியம் உடைய நல்ல பையன். பள்ளியில் படிக்கும் எல்லா மாணவர்களை விடவும், எல்லோராலும் போற்றப்படத்தக்க நன்மதிப்பு உடையவன். அவன் அதிகமாக ஜெபிக்கும் பையனாக் காணப்பட்டான். அவனது அப்பா அம்மாவே ஆச்சரியப் பட்டனர். அவன் கிறிஸ்துவின் மீது கொண்டுள்ள அன்பிற்கு.

ஒரு நாள் அவனது பள்ளியில் இருந்து வெளியூர் செல்ல Picnic ஏற்பாடுகள் செய்திருந்தனர். நாற்பது மாணவ, மாணவிகளும், ஆசிரியர்களும், செல்ல பஸ் ஒன்றும் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. பஸ் காலை

9 மணியளவில் பள்ளியிலிருந்து புறப்பட்டு
அரைநாள் தூரத்தில் உள்ள கோடைவாசஸ்
தலமான இடத்திற்கு செல்ல ஏற்பாடுகள்
செய்யப் பட்டிருந்தன.

எல்லோரும் சரியாக 8.45க்குள் பள்ளிக்
கூடம் வரவேண்டும் எனவும், 9.00 மணிக்கு
பஸ்புறப்படும் எனவும் அறிக்கப்பட்டிருந்
தது. வழக்கம் போல சாலமோன் காலை 5
மணிக்கு எழுந்து காலை கடனை முடித்து
விட்டு ஜெபித்துக் கொண்டிருந்தான்.
அன்றைய தினத்தின் Picnicக்கிற்காக இப்
படியாக ஜெபிக்க ஆரம்பித்தான். கர்த்
தாவே இன்றும் நீர் உமது சித்தத்தின்படி
நடத்தும். எனது சித்தமோ, சாத்தானின்
சித்தமோ நிறைவேறுதபடி தடுத்து ஆட்
கொள்ளும் என்று.

வீட்டிலிருந்து பள்ளி செல்ல சுமார்
அரைமணி நேரம் ஆகும் என்ற காரணத்
தால் புறப்பட ஆயத்தமாகி 8 மணியளவில்
வீட்டை விட்டு புறப்பட்டான். தந்தை
யாரும் கூடவே புறப்பட்டு இருவருமாக
பஸ்ஸிற்காக காத்திருந்தனர். பஸ்லோ
கிடைக்கவில்லை. எந்த ஒரு வாகனமும்
கிடைக்காத காரணத்தால் அவனது தந்தை
யார் நேரமும் 8.45 ஆகின்றது பொறு நான்
சைக்கிள் எடுத்து வருகிறேன் என்று சொல்லி
விட்டு சைக்கிள் எடுத்து வந்தார். தகப்
பனுடன் சைக்கிளில் புறப்பட்டான்.

பள்ளியில் எல்லாமாணவர்களும், மாண
விகளும் ஆசிரியர்களும் சரியான நேரத்தில்
வந்து விட்டனர். பஸ்ஸும் தயார் ஆகி
விட்டது. ஆனால், சாலமோன் வராத
காரணத்தால் மற்றவர்களுக்கு ஆத்திரமும்,
கோபமுமாக இருந்தது. பதினைந்து நிமிடம்
வரை பார்த்துவிட்டு எல்லோரும்
சாலமோனை திட்டிவிட்டு பஸ் 9.15க்கு புறப்
பட்டு சென்று விட்டது.

சாலமோன் தகப்பனுடன் 9.20க்கு
பள்ளி வந்து சேர்ந்தான். பஸ் போய்
விட்டது என மற்றவர்கள் கூறினர். உனக்
காக பதினைந்து நிமிடம் காத்திருந்தார்கள்,நீ
வர பிந்தி விட்டது என மற்றவர்களும்
இவன் மீது கோபப்பட்டனர். தகப்பனும்
ஆத்திரப்பட்டார். ஏன் ஒரு ஐந்து நிமிடம்
பொறுக்கக்கூடாதா என மற்ற ஆசிரியர்
களுடன் சண்டையிட்டார். அப்பொழுது
சாலமோன் அப்பா தான் Picnic போவதை
கர்த்தர் தடுத்து விட்டார். ஏதேனும்
காரணம் இருக்கும் என்றான். அப்பொழும்
சாலமோனைப் பார்த்து, நீ Picnic போவது
கர்த்தருக்கு விருப்பமில்லையோ, முட்டாள்
மாதிரி பேசாதே என்றார். தகப்பனும்,
மகனும் வீடு திரும்பினர்.

மாலை ஐந்து மணியளவில் ஊரில் ஒரு
செய்தி பரவியது. Picnic சென்ற பஸ் மலை
யில் உள்ள (Pin point) வளைவில் திரும்பும்
போது பஸ் சரிந்து பள்ளத்தில் விழுந்து
விட்டது எனவும், சிலர் மரித்து விட்டார்கள்.
சிலர் அருகிலுள்ள பெரிய ஆஸ்பத்திரியில்
சேர்க்கப்பட்டிருக்கின்றனர். சிலரது உடல்
நிலை கவலைக்கிடமாகவும் உள்ளது என
செய்தி தாளிலும் செய்தி வந்திருந்தது.

அப்பொழுது சாலமோன் தனது கர்...
ஜெபத்தை நினைவு கூர்ந்தான். ...
என்னை பாதுகாத்துக் கொண்டார் ...
நன்றி செலுத்தினான். அவனது தகப்ப...
தாம் காலையில் மகனை திட்டியதற்கு...
மகனிடத்தில் மன்னிப்பு கேட்டுக் கொ...
டார்.

அப்பொழுது சாலமோன் கர்த்...
தன்னை நோக்கி கூப்பிடுகிறவர்களை ...
ரர் என்றும், சகலமும் நன்மைக்கு ஏது...
நடக்கிறது என்றும் கூறினான். தகப்பனு...
மிகவும் வருத்தப்பட்டார். சாலமோன் குடு...
பத்தினர் கர்த்தரை அதிகமாக துதித்தன...
சாலமோன் இப்பொழுது ஆஸ்பத்திரியில்
அனுமதிக்கப்பட்டிருக்கும் எல்லாருக்காக
வும் ஜெபிக்கப் புறப்பட்டான்.

ஆம். பிள்ளைகளே தேவனிடத்தில்
அன்பு கூறுகிறவர்களுக்கு சகலமும் நன்
மைக்கு ஏதுவாக நடக்கிறபடியால், அவரது
சித்தத்திற்கு, நாம் நம்மை ஒப்புக் கொடுப்
போம். "அன்றியும் அவருடைய தீர்மானத்
தின்படி அழைக்கப் பட்டவர்களாய் தேவ
னிடத்தில் அன்பு கூறுகிறவர்களுக்கு
சகலமும் நன்மைக்கு ஏதுவாக நடக்கிற
தென்று அறிந்திருக்கிறோம்" (ரோம 8 : 28)

---

தேவன் தம்மை நம்புகிறவர்களுக்கு
கேடகமாயிருக்கிறார். (சங் 18 : 30.)

---